THE STORY OF

# NALA.

# நளன் சரிதம்.



BY

***T. P. NARAYANASWAMI PILLAI,***
*Asst Chattram Secondary School,*
Urttanad Chattram, Tanjore Dt.

Printed and Published by
**T. KRISHNASWAMI AIYAR.**
**Hindu Educational Trading Co.,**
AT THE
SRI KRISHNA VILASA PRESS,
KUMBAKONAM.



Wrapper Bound Re. 1.] [Stiff Bound Rs. 1-4-0.

1917

# முகவுரை

இத் தமிழ்நாட்டின்கண் கல்வியிற்சிறந்த பல பெரியோரால் நளச்சக்கரவர்த்தியின் சரித்திரம் பல கோட்பாடுகளுடன் வசனமாக எழுதப்பட்டு கற்றோரேயன்றி மற்றோரும் கேட்டானந்திக்குமாறு நவரசத்தோடு வழங்கிவருகிறது. அவ்வாறாக, நளசரித்திரமென்னும் இந்நூல் எழுதப்பட்டதற்குக் காரணம் என்னவெனில், கும்பகோணம் ஸ்ரீநந்து எடுகேஷனல் டிரேடிங் கம்பெனி ப்ரொப்ரைட்டர் பிரமஸ்ரீ டி. கிருஷ்ணசாமி ஐயரவர்கள் சில வருஷங்களுக்கு முன் நைடதம், நளவெண்பா, என்னும் சிறந்த நூல்களின் செய்யுட்களை இடையிடையே அமைக்கப் பெற்ற நளச்சரித்திரவசனம் ஒன்று எழுதப்பட வேண்டுமென்று என்னிடத்தில் தெரிவித்ததும், நூலெழுதிப் பழகவேண்டுமென எனக்குண்டான வேணவாவுமேயன்றி வேறல்ல.

இந்நூலை அச்சிடுங்கால்: கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல் அஸிஸ்டெண்ட் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ வேங்கடராமையர் அவர்கள் அச்சுப்பிரதிகளை அப்போதைக்கப்போது உற்றவாறு திருத்தி காரிய தாழ்ச்சியில்லாமல் அச்சு இயற்றுவதற்குக்கொடுத்து வந்த அவரது நன்றி என்றும் மறக்கற்பாலதன்று.

இதுகாறும் நூல் எழுதும் பழக்கமின்மையால் இந்நூலுள் சொற்குற்றம் பொருட்குற்றம் முதலியவற்றைப் பலவிடங்களில் பார்க்கக் காணலாம். அக்குற்றங்களைக் கருணைகூர்ந்து எனக்கறிவித்து அவற்றைத் திருத்திக்கொள்ளுமாறு செய்யும் சான்றோர்க்கு என் வணக்கமான வந்தனமுரித்து.

இந்நூல் பொதுமணமுடைய புனிதரின் ஆதரிப்பால் இடையூறின்றி என்றும் நிலவுமாறு திருவருளைச் சிந்திக்கின்றனன்.

கும்பகோணம்.
25—[illegible]—17

T. P. N.

உ

கடவுள் துணை.

# நளன் சரிதம்.

:(o):

## நூன்முகம்.

நீர்வளமும் நிலவளமும் சிறப்புற்றோங்கிய இப் பரதகண்டத்தில் சந்திரகுலத்திற் றோன்றிய குருவம்சத்தரசர்கட்குத் திருநகராகிய ஹஸ்தினாபுரத்தில் திருதராஷ்டிரன் என்றோர் அரசன் செங்கோல் நடாத்திவந்தான். அவனுக்குக் கொடுமையே உருவெடுத்தாற்போல நூறு குமாரர்கள் பிறந்தார்கள். அவர்களுக்குக் கௌரவர் என்று பெயர். அவர்களில் மூத்தவன் துரியோதனன். அவ்வரசனுக்குப் பாண்டு என்னும் பெயருடைய ஒரு சகோதரன் இருந்தான். அவனுக்குத் தரும சொரூபிகளான மைந்தர்கள் ஐவர் பிறந்தனர். அவர்களுக்குப் பாண்டவர் என்று பெயர். அவர்களில் மூத்தவன் தருமன். அந்தக் கௌரவர்கள் தமது சிற்றப்பன் குமாரராகிய பாண்டவரிடத்தில் நீங்காத பொறாமைகொண்டு இவர்களுடைய செல்வப் பெருக்கையும் பெருமையையும் வீரத்தன்மையையுங் கண்டு வெறுப்புற்று இவர்களை எப்படியாவது ஆண்டிகளாக்கிக் காட்டுக்குத் துரத்தவேண்டுமென்று எண்ணங்கொண்டார்கள். அதனால் கௌரவர்கள் அப்பாண்டவர்களை வலிய அழைத்து வஞ்சனைச் சூதாடி நாடு நகரம் முதலிய எல்லாவற்றையுந் தோற்கச் செய்து காட்டுக்குத் துரத்திவிட்டார்கள்.

அப்பாண்டவர்களிடத்தில் சத்தியம், தர்மம், பெரியோர்ப் பேணல் முதலிய நற்குணங்கள் குடிகொண்டிருந்தன. ஆகையால் அவர்களை விட்டுப்பிரிய மனமில்லாத அநேக உத்தமப்பிராமணர்கள் அவர்களோடுகூடவே காட்டில் வாசஞ்செய்துகொண்டிருந்தார்கள்.

இவ்வாறிருக்கையில் அப்பாண்டவர்களில் மூன்றாவதவனான அர்ச்சுனன் கடுந்தவம் செய்து பரமசிவனிடத்திலிருந்து பாசுபதாஸ்திரம் பெறக்கருதிக் காட்டுக்குச் செல்லத் தமையனான தர்மராஜனிடத்தில் விடைபெற்றுச் சென்றான்.

உடல்மாத்திரம் ஐந்தாகவும் உயிர் ஒன்றாகவும் ஒருமைப்பட்டுத் தன்னையே எப்போதும் நீங்காது சூழ்ந்துகொண்டிருக்கும் தம்பியர்களில் சிரேஷ்டனான அர்ச்சுனனது பிரிவால் தர்மராஜன் மனமுருகி முகவாட்டமுற்றிருக்கையில் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் முக்காலத்தையுமுணர்ந்த தெய்வத்தன்மைவாய்ந்த வேதமூர்த்தியாகிய வியாசபகவான் அவ்விடத்துக்கு எழுந்தருளினார். அவருடைய வரவைக்கண்ட தர்மராஜன், மனமகிழ்ந்து எதிர்சென்றுவணங்கி அவருக்குச் செய்யவேண்டிய உபசாரங்களை முறையே செய்துமுடித்து ஓர் ஆசனத்திருத்தித் தம்பியரோடு அருகில் நின்றுகொண்டிருந்தான்.

அப்போது அறிவே உருவெடுத்தாற்போன்ற வியாசபகவான் தர்மராஜனது முகத்தைப்பார்த்து,

மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர்வந் துற்றாலு
மொத்திருக்கு முள்ளத் துரவோனே—சித்தம்
வருந்தியவா றென்னென்றான் மாமறையா லுள்ளந்
திருந்தியவா மெய்த்தவத்தோன் றேர்ந்து

அதற்கு தர்மராஜன், தன் தம்பியாகிய அர்ச்சுனனுடைய பிரிவையும், தான் தாயாதிகளுடைய வஞ்சனையால் இராஜரீகம் முதலியவெல்லாம் இழந்ததையும், அதனால் தனக்கு நேரிட்ட கஷ்டத்தைத் தன் அருமைத் தம்பிமார்களும் தர்மபத்தினியாகிய திரோபதையுங்கூட அனுபவிக்க நேரிட்டதே என்பதையும் தெரிவித்து மனக்கிலேசமடைகையில் முனிசிரேஷ்டர் தர்மராஜனைப்

பலவாறு தேற்றி அவருடைய துக்கத்தை மாற்றினர். அப்போது தர்மராஜன் முனிவரை வணங்கி "இப்பூவுலகில் என்னைப்போற் சூதாட்டத்தில் நாட்டை இழந்து காட்டை அடைந்த அரசர்கள் யாராவது உண்டா" என்று கேட்டார். அதற்கு முனிவர் பெருமான், தர்மராஜனைப்பார்த்து "அரச, உன்னைப்போலவே சந்திர குலத்தில், சூதாட்டத்தில் நாடு நகரம் எல்லாவற்றையும் இழந்து காடே கதியாகச் சென்று வருந்திப் பின் நாட்டையடைந்த அரசன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் நளன், அவனுடைய சரித்திரத்தைச் சுருக்கிச் சொல்லுகிறேன், அதை நீ கவனித்துக் கேட்பாயாக" என்றார்.

## நூல்.

## சுயம்வர காண்டம்.

### நாடு.

கேளும் தர்மராஜனே, பூவுலகத்திலுள்ள நாடுகளில் முதன்மையுற்று, எங்கணும் பருவமழை குன்றாது, பலவளங்களும் சிறந்து, பலவேறு நாட்டாருடைய விருப்பத்துக்கு இருப்பிடமாகி, மத்திய இந்தியாவின் தென்கீழ்ப் பாகத்தையடுத்து அனேக யோசனை (100 மைல்) தூரம் விஸ்தீரணமுள்ள நாடொன்று இருந்தது. அதன் பெயர் நிடதநாடெனப்படும். அது பூமகளுக்கு முகமென விளங்கும் பெருமை வாய்ந்தது. அந்நாட்டில் மலைபடுபொருள் முதலாக கடற்படு பொருள் ஈறாக எவ்வகைப் பொருளும் நிறைந்திருந்தது. அந் நாட்டு மாந்தர் குறைபாடென்பதே அறியாதவராய்த் தத்தம் தொழிலைக் குறைவறச் செய்துவந்தனர்.

### நகரம்.

இத்துணை வளப்பமுள்ள நாட்டுக்குத் தலைநகர் மாவிந்த நகரம். அது பூமடந்தையின் திருமுகத்துத்

திலகம் போன்றது. அதன் வெளிப்புறத்தில் அதைச்சுற்றி நாக லோகம வரையில் ஆழ்ந்து நீர்நிறைந்த அகழி ஒன்று இருந்தது. அது தன்னை அடைந்தோர் மீளாவண்ணம கொல்லுந தன்மையுடைய கொடிய முதலைகளையுடையது. அவ்வகழியை அடுத்து ஒன்றுக்கும் அலையாது ஆகாயம் வரையில எட்டிய மதிலுண்டு. அம்மதில் அந்த நகருக்கு உற்ற அரணாக எப்பககததிலும் சூழ்ந்து பகைவர் கிட்டிய காலததுத்தானே யுததம் செய்யும்படியாக இயந்திர சக்தியால் அமைககப்பட்ட மதிலுறுப்புகளையுடையது. இவை அம்பு முதலிய அஸ்திரஙகளையும, கத்தி, கோடரி முதலிய சஸ்திரஙகளையும் முறையே எய்யவும எறியவும அமைநதவை. இவ்வரண் நான்குபககஙகளிலும காவலையுடைய வாயில்களையுடையது.

அந்த நகரத்தின் உட்புறததில் சுண்ணாமசாநது பூசப்பட்ட கொடிகள கட்டிய அலஙகாரமான மாடமாளிகைகளையுடைய அனேக வீதிகள நிறைநதிருநதன. அவைகள் அவ்வவ்வருணத்தார்க்குத தனித்தனியே ஏற்பட்டவை. அந்நகரமாநதர் தத்தம் ஒழுககததினின்று வழுவாது தநதொழிலைச செய்துவநதமையால் மாதமும்மாரி பெய்து அந்நகரில் எஙகே பார்த்தாலும உற்சாகமே மேலிட்டிருநதது.

ஒருபககத்தில கடைவீதிகள், நீர்ப்படுபொருளும் நிலப்படு பொருளும் நிறைநது பாரப்பவர் மனததைக் கவரும் இயல்புடையனவாய விளஙகின. வணிகமாககள பல்வேறு தேசஙகளிலுள்ள பொருள்களை வரவழைததுத் தம் நாட்டிலுள்ளோர்க்கு அதிக இலாபமின்றி விற்றுப் பெரும்பொருள் படைப்பார்கள்.

மற்றொருபக்கத்தில் ஆயுதப் பயிற்சி செயயும் சாலைகளும் மல்யுத்தம் பழகும் கெருடிகளும அமைநதிருநதன. இவறறில் க்ஷத்திரியர்கள தஙகள் குலதர்மத்துககுத தகுநதபடி தமது குமாரர்களுக்கு ஐந்து வயதளவில் ஒரு வேலாயுதத்தை வடித்துக்கொடுத்து அச்சாலைகளுக்கனுப்பி யுத்தப்பயிற்சியைத் துவக்குவிப்பார்கள். இச்சாலைகளில் ஆயுதஙகள் ஒன்றோடொன்று மோதும் ஓசையும், வீதிகளில் விடர்கள் கடா கோழி கௌதாரி முதலிய பிராணிகளைச் சண்டையிட்டுக் களிக்கும ஓசையும், புறம்பே உழவர்கள் ஆற்றில் புதுவெள்ளம் வநதவுடனே அதை ஏரி குளஙக

ளில் சிறைப்படுத்தி வயல்களிற் பாய்ச்சி உழுது நாற்றிட்டுக் களை பிடுங்கிப் பயிர்பலிக்கத் தெய்வம் பராவும் ஓசையும், முதிர்ந்த பிறகு பயிரை அறுத்து அரிக்கட்டுகளைக் களத்தில் சேர்த்து அடித்து மிதியலிட்டுத் தானியத்தை வண்டிகளிலேற்றி வீட்டுக்குக்கொண்டுபோய்த் தெய்வம் தானம் தென்புலத்தார் விருந்து சுற்றம் அரசன் எனும் அறுவகையினருக்கும் அறுகூறாக்கிப் போரிட்டுத் திருவிழா நடத்தும் ஓசையும், வீடுகளில் பெண்கள் கற்புபுஷ்பமாகிய முல்லை மலர்ந்ததுடன் அதற்குச் செய்யும் திருவிழாவின் ஓசையும் சேர்ந்து கடலின் முழக்கத்தை ஒயச் செய்யும்.

காமக் குரோத உலோப மோக மத மாச்சரியம் என்னும் அறுவகைக் குறும்புகளையும் அடக்கி ஐம்புலன்களையும் களைந்து மனத்தைத் தம்வசப்படுத்திய முதுமறை அந்தணாளர் காலந்தவறாது ஔபாஸனம், அக்கினிட்டோமம் யாகம் முதலியவற்றைச் செய்வதால் உண்டாகும் புகையும், பெண்கள் தங்கள் வீடுகளில் நாற்றமுண்டாக்குவதற்குப் புகைக்கும் அகிற்புகையும் கலந்து மேகபடலங்கள்போல ஆகாயத்திற்றங்கி ஆதவன் ஒளியை மறைக்கும்.

இவ்விதச் சிறப்புற்ற அந்நகரின் நடுவண் அந்நாட்டைப் பரிபாலிக்கும் அரசனுடைய அரண்மனை நடுநாயகமென விளங்கிற்று. அதில் ஒருபக்கத்தில் ஐராவதத்தையும் திசையானைகளையும் வெருண்டோடச் செய்யும் வன்மை மிகுந்த யானைகளைக் கட்டுங் கூடங்களும், மல்லகதி மயூரகதி குரக்குக்கதி முயற்கதி அம்புக்கதி என்னும் ஐங்கதி வாய்ந்த குதிரைகட்டும் பந்திகளும், அவ்வரசனுக்குப் பகைவரின்மையால் நெய்யிட்டு அலங்கரித்து வைக்கப்பட்ட ஆயுதச் சாலைகளும், உலகிலுள்ள மலைகளை ஒருங்கே ஓரிடத்தில் சேர்த்துவைத்தாற் போன்ற தேர்ச்சாலைகளும் நிரம்பி இருந்தன. மற்றொரு பக்கத்தில் அரசர் கொண்டுவரும் திறையளக்கும் மண்டபமும், வித்துவான்கள் ஆராய்ச்சிமண்டபமும், ஆடரங்குகளும் நிறைந்திருந்தன.

இதன் நடுவிலுள்ள சபாமண்டபம், சலவைக்கல் தளமும் மரகதப்படிக்கட்டுகளும் பொற்றூண்களும் பவளஉத்திரங்களும் நீலக்கொடுங்கைகளும் உடையது. சுவர்களெல்லாம் பொற்சுண்ணம்

பூசப்பட்டு முகம்பார்க்கும் கண்ணாடியோவெனச் சந்தேகிக்கும்படி ஒளியுடையதாய அனேக அழகிய சித்திரங்கள் வரையப்பட்டிருந்தன.

இம்மண்டபத்தில் பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர் இராஜாக்கள் மகாராஜாக்கள் முதலியோர் சூழ, அறிவான் முதிர்ந்த மந்திரிகள் போற்ற, வந்தியர் கட்டியங்கூற, தோற்கருவி துளைக்கருவி நரம்புக்கருவி மிடற்றுக்கருவி கஞ்சக்கருவி எனனும் பஞ்சவாத்தியங்களுமுழங்க, அரம்பையர்போலும் மாதராட, நவரத்னங்களிழைத்த ஆண்சிங்கங்களால் சுமக்கப்பட்ட சிம்மாசனத்தில் அமர்ந்து, குறுநில மன்னரைத் தனக்குள்ளாக்கித் தண்ணளியாற் காத்த புகழே தன்மேற் பரந்தாற்போல வெள்ளொளி வீசும் சந்திர வட்டக்குடையின் கீழிருந்து அரசு செலுத்தி வந்த அரசன் ஒருவன் இருந்தான். அவன்,

வளமலி யிந்நகர் மன்னர் மன்னவன்
தலையவிழ் நறுமலர்த் தண்ணந் தாரினன்
களைகணு யுலகோரு மூன்றுங் காத்தரு
ளாளனெனப் பெயரிய நாம வேலினன்.

அந்நளன் புயவலியில் மலையையும், போர்முகத்தில் சிங்கத்தையும், அழகில் மன்மதனையும், வீரத்தில் சுப்பிரமணியக் கடவுளையும், அறிவில் ஆதிசேஷனையும், செங்கோன்மையில் மனுவையும் போன்றவன். அவனுடைய அரண்மனை வாயிலில் படைமுரசு, மங்கலமுரசு, தியாகமுரசு எனனும் மும்முரசுகளில் பின்னிரண்டும் இடைவிடாது ஒலிக்கப்பெற்றவன். எழுகடலும் ஒரிடத்திற் சேர்ந்தாற்போல அளவற்ற இரத கஜ துரக பதாதி என்னும் சதுரங்க சேனைகளுமுடையவன். ஆதுலர்சாலை ஆதியாக ஆவுறிஞ்சு தறி ஈறாக உள்ள முப்பத்திரண்டு தர்மங்களும் குறைவுறாது நடைபெறச் செய்தவன்.

சீதமதிக் குடைக்கீழ்ச் செம்மை யறங்கிடப்பத்
தாதவிழ்பூந் தாரான் றனிக்காத்தான்—மாதர்
அருகூட்டும் பைங்கிளியு மாடற் பருந்து
மொருகூட்டில் வாழ வுலகு.

இயற்கையான பகைமையுடைய பிராணிகளும் தத்தம் பகைமையொழிந்து நட்புமிகுந்து வாழச்செய்த ஆக்கினைச்சக்கரத்தை உடையவன். அசுவசாஸ்திரத்தில கைதேர்ந்தவன். தான், தன் சுற்றம், பகை, வெள்ளம், பஞ்சமெனும ஐவகைப பயமும் தன் குடிகளுக்கு எக்காலத்திலும் உண்டாகாதபடி தன்னுயிரேபோல் பிறனுயிரைக் காக்கும அளி சுரந்தவன். அவன் நாட்டில் அதர்மம் முதலான அவகேடுகள் ஒருபோதும் உண்டானதில்லை.

வெஞ்சிலையே கோடுவன மென்குழலே சோருவன
அஞ்சிலம்பே வாயவிட் டரற்றுவன—கஞ்சம்
கலங்குவன மாளிகைமேற் காரிகையார் கண்ணே
விலங்குவன மெய்ந்நெறியை விட்டு

---

## அன்னத்தைக் கண்ணுற்ற படலம்.

---

இவ்வாறு ஆண்பெருமையில் இளவேனிற் காலத்தில் ஒருநாள் நளன தன்னுடன அனேகர் சூழ்ந்துவர அழகிய தேரிலேறிக்கொண்டு மிக உல்லாசமாகத் தன்னுடைய சிங்காரச் சோலைக்குச் சென்றான்.

அச்சோலை இந்திரனது தருவனமோ அல்லது குபேரனது பாரிஜாதவனமோ என்று சந்தேகிக்கக்கூடிய வனப்பு மிகுந்திருந்தது. அதில் தென்னை, கமுகு, வாழை, பலா, மா, நாரத்தை எலுமிச்சை முதலிய பலந்தரும மரங்களும், வேங்கை, தேக்கு, கருங்காலி, அசோகு, வன்னி, தான்றி, ஆல், அரசு முதலிய உயர்ந்த விருக்ஷங்களும, சண்பகம், கோங்கு, பாரிஜாதம, மகிழ், குரவம், புன்னை, பாதிரி, கொன்றை, சரககொன்றை முதலிய புஷ்பந்தரு தருக்களும்; மல்லிகை, முல்லை, இருவாக்ஷி, ரோஜா, செருந்தி, செமபங்கி, பிடவம் முதலிய செடி கொடிகளும் எங்கணும் நிறைந்து சூரியன் ஒளியை உள்ளேவிடாது தடுத்துப் பகலையும் இராவாக்கும் தன்மையோடு நெருங்கி இருந்தன. அச்சோலையில்

புஷ்பங்களிலிருந்து தேன் துளிப்பதும் அழகிய மான்கள் துள்ளியோடுவதும் குயில் முதலிய பக்ஷிகள் பாடுவதும் அதற்குச் சரியாக மயில்களாடுவதும் இவற்றைக் கண்டுகளித்தோர பொன் பரிசு கொடுப்பதுபோல புன்னைமரங்கள் புஷ்பங்களைச் சொரிவதும பார்ப்பவர் கண்களுக்குப் புதிய காக்ஷியை உண்டுபண்ணும்.

அருகே பல ஆவிகளும இயந்திரவாவிகளும் பொய்கைகளும் தடாகங்களும எங்கும் நிறைந்திருந்தன. அவற்றில் சிறந்த தடாகம் ஒன்று இருந்தது. அது, சுற்றிலும் கத்தரித்துவிட்டாற் போன்ற ஒரே அளவுள்ள மரங்களும், நான்கு பக்கங்களிலும் வழியமைந்த கைப்பிடி சுவர்களும் தண்ணீருக்குக்கீழேயும் செல்லும் சலவைக்கற் படிக்கட்டுகளும் நடுவில் படிகம்போலும் களங்கமற்ற ஜலமும் பொருந்தி மானஸ தீர்த்தம்போல் விளங்கியது. அதில் அனேக நீர்வாழும பக்ஷிகள் ஸ்நானஞ்செய்து தமது இறகுகளைக் கரையிலாவது புஷ்பங்களிலாவது ஒவ்வொரு புறமாக உலரவைத்துக்கொண்டிருக்கும். மீன்கள் அசதியின்றித் துள்ளிக் குதிக்கும. இவ்வரிய நீரபபிராணிகளாலும், இடைவிடாது வீசும் மனோரம்மியமான இளந்தென்றலாலும் அத்தடாகநீர் அலைப்புண்டு சிறுசிறு அலைகளாக அப்படிகளை மோதிக்கொண்டே இருக்கும். கம்மியன் நெருப்புசசட்டியில் எரிகிற நெருப்பின் மேல் கரியைத் தூவினாற்போல அததடாகத்தில் அலர்ந்த செந்தாமரை புஷ்பங்களில் வண்டுகள் மொய்த்துத் தேனையுண்டு ஜ்காந்தாரம் பாடும். அலைகளால் தாமரைக் கொடிகள் ஊசல் போல் மெதுவாக அசைந்து அப்புஷ்பங்களிற் றங்கிய பக்ஷிகளையும் வண்டுகளையும் உறங்கச் செயயும். இவ்வளவு அலங்காரமான காக்ஷியையுடைய தடாகததுக்கருகில் அரசனுக்கென்று சந்திரகாந்தக் கல்லால் நிருமிக்கப்பட்ட சிங்கார மண்டபம் ஒன்றிருந்தது.

நளன் அசசோலையினுட் புகுந்து இளந்தென்றல்வீசப்புஷ்பங்கள் புதுமணம் நாற பக்ஷிஜாலங்கள்பாட வசந்தகாலத்தின் மாண்பெல்லாம் அசசோலையினிடத்தே கண்டுகளித்துத் தன் பரிவாரங்கள் சூழவந்து அததடாகத்தின் அருகிலிருந்த சிங்காரமண்டபத்தில் ஒரு திவ்ய ஆசனத்தில் வீற்றிருந்தான்.

அப்போது, நளன் அத்தடாகத்தின் அழகையும் அங்குள்ள

தாமரைபுஷ்பங்களிற் றங்கியிருந்த அன்னபக்ஷிகளின் திவ்யவனப் பையுங் கண்ணுற்றுப் பல வாறு புகழ்ந்துகொண்டிருக்கையில், அவ்வன்னங்களிற் சிறந்ததும நூதன வனப்பு வாய்ந்ததுமான ஒரு அரச அன்னத்தைக கண்டு வேணவா (மிகுந்த ஆசை)வுற்று அதைப் பிடித்துக் கொடுக்கும்படியாகத் தன்னருகிலிருந்தவர்க ளிடத்தில் சொன்னான். அவர்களும் மிகவும ஜாக்கிரதையாகச சந்தடி செய்யாமல் அப்பக்ஷிகள் காணவண்ணம சென்று அவ் வன்னத்தைப் பிடித்துவந்து அரசன கையில் கொடுத்தார்கள்.

அதைக் கைக்கொண்ட அரசன் அதன் வெண்மையான நிறத்தையும், கழுத்தடியிலுள்ள மிருதுவான தூவியையும், மஞ்ச ளான வரம்பையுடைய சிவந்த கண்களையும், பவளம் போன்ற அலகையும பாரகருந்தோறும் வியப்புற்று அதைவிட்டுவிட மன மில்லாதவனாகத் தன்கையிலேயே வைததுக்கொணடிருந்தான்.

அன்னபக்ஷியானது பிடிபட்டவுடனே தன்னுயிருககபாயம் நேரிடுமோ அல்லது அரசன் சிறைப்படுததுவானோ என்றுபயந்து சுற்றிசசுற்றிப் பார்க்கையில் தான் பிடிபட்டவுடனே தன்னோடி ருந்த மற்ற அன்னங்கள் பறந்துபோயினமையால் அவற்றைக் காண்பதுவும் அவற்றோடு சேர்ந்து வாழ்வதுவும் எப்போதெனக் கருதி எங்கிக கண்ணீருகுத்தது.

கிருபையே உருவெடுத்தாற்போன்ற அரசன், தன்னாட்டில் யானை முதல் எறும்பு கடையாக எந்தப்பிராணியும் வருந்திக் கண் ணீர்விட்டதை அன்றுவரையில் கண்டிராதவனாகையால் அன் னத்தின் கண்ணீரைக்கண்டு அடங்காத்துயரங்கொண்டு "ஏ, அன்னமே, உன்னை நான் கொல்லமாட்டேன். நீ ஒன்றுக்கும அஞ்சவேண்டாம். என்னாலாவது பிறராலாவது உனக்கு ஒரு வித துன்பமும் உண்டாகாவண்ணம் உன்னை நான் காப்பாற்று வேன். நீ இந்நாட்டில் இருக்கும் வரையில் உனக்குண்டாகக் கூடிய எவ்வகைத்தான அபாயங்களும் இந்நாட்டுக்குப் புறம்பே சென்றுவிட்டன என்று உறுதியாகக்கொள். உன் அரிய அழ கைக்கண்ணால் பார்த்தது மாத்திரம் போதாமல் உன்னைப் பரிசித் துப் பரிச உணர்ச்சியையும் திருப்தி செய்வதற்காகப் பிடிக்கச் சொல்லியதேயன்றி உன்னை நான் வருத்துவதற்காக நினைத்தவ

னல்ல. இன்னும் என்னிடத்தில் உனக்குச் சந்தேகம் இருக்கு
மாயின், இதோ உன்னை விட்டுவிடுகிறேன்; நீ உன் மனத்தின்
படி எங்கேயாவது போகலாம்" என்று சொல்லி அதைத் தன்
கையினின்றும் அரசன் விட்டுவிட்டான்.

அந்தக்ஷணமே அன்னபக்ஷியானது தனக்குண்டான துக்
கம் முழுதும் நீங்கி அவ்வளவுக்கவ்வளவு சந்தோஷமடைந்து
அரசனது செங்கோன்மையையும் அதற்கு முதற்காரணமாகிய
தயையையும் மெச்சிப் புகழ்ந்தது. பின்பு அன்னம், அரசன் தனக்
குச்செய்த நன்றியைமறப்பது நன்றன்று என்றும் அதற்குக்கைம்
மாறு எவ்விதத்திலும் செய்யவேண்டுமெனவும் நினைத்து அரச
னைப்பார்த்து; "இராஜமார்த்தாண்டனே, கருணாலயமே, என
னுயிருக்கு ஊறுண்டாகாவண்ணம் என்னைக் காத்து என் துக்கத்
தைமாற்றிய பேருபகாரியே; தமக்கு நான் செய்யக்கூடிய அற்ப
உதவி ஒன்றுண்டு. அதாவது தமது அழகுக்கும் கிருபைக்கும்,
பொறுமைக்கும் பெருமைக்கும் தகுந்த சிற்றிடையாள் ஒருத்தி
இருக்கிறாள். அவள் பெயர் தமயந்தி. அவள் விதர்ப்ப நாட்
டரசனாகிய வீமராஜன் புத்திரி. அவளைப்போன்ற அழகிற் சிறந்த
மடமங்கை இப்போது எவ்வுலகத்திலுமில்லை. தாம் என்னைப்
பூவுலகப் பக்ஷியென நினைக்கவேண்டாம். நான் விண்ணாடு முதல்
எந்நாட்டிலும் வாசஞ்செய்கிறேன். ஆனால் தம்மையொத்த
ஆடவனும் தமயந்தியை ஒத்த பெண்மணியும் எவ்வுலகிலு
மில்லை. உங்களிருவருக்கும் நீங்களே உவமையன்றி வேறொ
ருவமை சொல்லவுங் கூடுமோ. அவளை உச்சி முதல் உள்ளங்கால்
வரையில் வர்ணிக்க ஆயிர நாக்களையுடைய ஆதிசேஷனாலு
மாகாது. அவளைப்படைத்த பிரமன் இந்திராணி முதலிய தெய்வ
மகளிரைப் படைத்துக் கைதேர்ந்த பிறகு இவளைப் படைத்
தானோ என்று சந்தேகிக்கும்படியான அழகுவாய்ந்தவள். உலகி
லுள்ள பொருள்கள் ஒவ்வொன்றும் குற்றமுடையனவாகையால்
அவளது குற்றமற்ற அவயவங்களுக்கு அவை உவமையாகமாட்டா.
சுருக்கிச் சொல்லுமிடத்துச் செந்தாமரையில்வதியும் திருமகளே
ஒரு சிறிது அவளை ஒத்திருப்பாளென்றால் மற்றெவரை அவ
ளுக்கு ஒப்பாகச் சொல்லக்கூடும். இத்துணை அழகு நிறைந்

மங்கைக்குத் தக்க கணவனை அவள் தகப்பன் இன்னும் தேடிக் கொண்டிருக்கிறான். ஆதலால் இதுவரையில் அவளுக்குக் கலியாணம் ஆகவில்லை. அம்மங்கையை எவ்விதத்திலாயினும் தம்மையே கலியாணம் செய்துகொள்ளச் செய்கிறேன். என்னை என் வார்த்தையால் நான் துதித்துக்கொள்வதிலும் மேற்கொண்ட காரியத்தைச்செய்து முடிப்பதே மேலானது. ஆகையால் நான் இப்போதே வீமன் நகருக்குச் செல்கின்றேன்" என்று சொல்லி ஆகாயத்திற் பறந்துபோயவிட்டது.

## அன்னத்தைத் தூதுவிட்ட படலம்.

பின்பு நளன் அசசோலையை விட்டுத் தன் அரண்மனைக்குச் சென்று அன்னம் சொல்லியதை நினைக்குந்தோறும் காதல் அதிகரிக்க, "அவ்வன்னம்,

இவ்வளவிற் செல்லுங்கொ லிவ்வளவிற் காணுங்கொ
லிவ்வளவிற் காத லியம்புங்கோ—லிவ்வளவில்
மீளுங்கோ லென்றுரையா விம்மினான் மும்மதநின்
றூளுங்கோல் யானை யரசு.

இதுகாறும் அன்னபக்ஷியைக் காணாமையால், அது என்னிடத்தில் சொல்லியதெல்லாம் உண்மையோ; அல்லது என்னிடத்தினின்று தப்பிப்போவதற்காகக் கண்ட உபாயமோ. ஒருவேளை அது போகும் வழியில் தாமரைத் தடாகங்களிலுள்ள புஷ்பவிருப்பத்தினால் தான் சொல்லியதை மறந்து அப்புஷ்பத்திற் றங்கி நித்திரை போயிற்றோ" என்று நினைத்து மனங்கவன்று ஊணுறக்கமின்றி அன்னம் சென்ற வழியைப் பார்த்த வண்ணமாகவே இருந்தான்.

நளனிடத்திலிருந்து விடைபெற்றுப்போன அன்னம் அதி விரைவாக ஆகாயத்தில் வெகுதூரம் பறந்து சென்று அனேக நாடுகளையும் மலைகளையும் வனங்களையும் கடந்து விதர்ப்ப நாட்டை

யடைந்தது. அந்நாட்டின் வளப்பத்தைக் கண்டபோது, இந்நாட்டுக்கு இவ்வளவு வனப்பும் செழிப்பும் உண்டானதற்குக் காரணம் தமையந்தி இந்நாட்டிற் பிறந்ததோ அல்லது வீமராஜனுடைய செங்கோன்மையோ என அன்னம் சந்தேகப்பட்டது. ஏனெனில் எங்கே பார்த்தாலும் செழித்த சோலைகளும் புன்செய் நன்செய் நிலங்களும் தோட்டக்கால்களும் நிரம்பி இருந்தன. அந் நிலங்களைச் சுற்றிக் கரும்பு தென்னை மா பலா முதலிய பயன்றரு மரங்கள் நிறைந்த சோலைகளே வேலிகளாக் அமைந்திருந்தன. அந்நாட்டு உழவர்கள் தமது நிலங்களை உழுத கடாக்களை அருகி லுள்ள கருப்பஞ்சோலைகளில் ஓட்டிவிடுவார்கள். அவைகள் அங் குள்ள கரும்புகளைக் குதட்டும்போது அவற்றின் கடைவாயி னின்று வழியும் சாறே அந்நிலங்களுக்குப்பாய்ந்து சேறு செய்யும். இன்னும் சில இடங்களில் மாங்கனிகளும் பலாக்கனிகளும் அவற்றை விரும்பிக்கொள்வா ரின்மையால், தாமே உதிர்ந்து மிதிபட்டுப் பிழிபடுவதால் அவற்றினின்றொழுகும் சாறுகளும் காலெடுத்தோடி நிலங்களிற் பாய்ந்து மிக்க செழிப்புண்டாக்கும். இங்கே விளையும் நெல் தாள்கள் கரும்பு போலவும் கரும்பு வாழை யைப் போலவும் வாழை தென்னையைப் போலவும் தென்னை ஆகாயமாகிய பந்தலுக்கு நாட்டிய தூண்கள் போலவும் பருத் துயர்ந்திருக்கும். இந்நாட்டிலுள்ள நகரங்கள் மனு நீதியிற் சொல் லிய அங்கங்களால் முற்றுப்பெற்றவை. அந்நகரவாசிகள் சுவர்க்க போகத்தையு மிகழ்வார்கள். ஏனெனில் சுவர்க்கமடைந்தோர் இப்பூவுலகத்தில் செய்த நல்வினைக்குக் கூலியாக போகங்களை அளவிட்டு அனுபவிப்பார்களே யன்றித் தம்மை அடைந்தோரை ஆதரித்து மகிழும் வள்ளல்களின் வண்மைக்கிடமே இல்லை. ஆகையால் தாம் வசிக்கும் நகரங்களைப் பூலோக வைகுந்த மெனவும் கைலாசமெனவும் நினைத்து அவற்றின் வளப்பங்களைப் பாராட்டி அவரவர் அரசர்களைத் திருமாலே என நினைத்து அவர் களைக் கொண்டாடுவார்கள். குடிகளின் தன்மைக்குத் தக்கவாறு அரசும் ஆளுகையும் ஏற்படுவது இயற்கையாகையால் அக்குடிகளு டைய அடக்கம், பொறுமை, நாகரீகம், இராஜவிசுவாசத்துக்குத் தக்கபடி அரசின் கோலும் செங்கோலாகிச் சிறப்புற்றோங்கியது.

இவற்றைக் கண்டு, அன்னபக்ஷி மகிழ்வுற்று வீமன் நகராகிய குண்டினபுரத்தை அடைந்தது. அந்நகரத்துட் புகுந்த அளவில் அன்னபக்ஷிக்கு அதுவரையிலில்லாத ஆனந்தம் மேலிட்டு வழிச் செலவாலுண்டான களைப்பும் நீங்கியது. அதனால் அன்னபக்ஷியானது அதி உல்லாசமாக அந்நகரைச் சுற்றிப் பார்த்தது. அங்குள்ள மாளிகைகளெல்லாம் தெய்வத் தச்சனாகிய மயனால் நிருமிக்கப்பட்டனவோ என ஆசங்கிக்கும்படியாகச் சிற்ப சாஸ்திரக் கூறுகள் முற்றிலுமமைந்தவை. அவைகள் ஆகாயத்தின் உயரத்தை அளக்கப் புகுந்தவை போல உயர்ந்திருந்தன. அதனால் அன்னபக்ஷியானது, ஓயாது ஆகாய வீதியில சஞ்சரித்துக்கொண்டிருக்கும் சூரிய சந்திரர் இந்நகரை எந்த வழியாகக் கடந்து செல்கிறார்களென்று உற்றுநோக்கும்போது, அம்மாளிகைகளின் சாளரங்களைக் கண்டு இவைகள் தாம் அவர்கள் செல்வதற்குத் திறந்த வாயில்கள் போலும் எனத்தீர்மானித்தது. அவைகளிற் கட்டிய கொடிகள் ஆகாயத்தை யளாவி நாலாபக்கங்களிலும் பறந்துகொண்டிருந்த தோற்றமானது அந்நகரத்துக் குதிரைகளின் குளம்பு பட்டுண்டாகிய புழுதிப்படலங்கள் ஆகாயத்திற் கிளம்பி, விண்ணுலகிற் சென்று இமையா நாட்டத்தையுடைய விண்ணோர் கண்களுக்கு ஊறுண்டாக்காவண்ணம் அவற்றை அப்பாற் படுக்கச் செய்யும் பான்மையை ஒத்திருந்தது. அங்கேயுள்ள வீதிகள் அனேகவகைக் கற்களால் அமைக்கப்பட்டு ஒழுங்கு செய்யப்பட்டவை. இவ்வீதிகள் உச்சிக் காலந்தவிர மற்ற நேரத்தில் சூரியனைக் கண்டறியாதவைகள். ஆயினும் அந்நகரத்தார் விலக்கிய முத்து முதலிய மணிகள் அவ்வீதிகளில் ஒளியையுண்டாக்கி இரவையும் பகலாக்கும். இராஜ வீதிகளெல்லாம் நித்திய விழாக்களையுடையனவாகையால் தினந்தோறும் புதிதான தோரணங்கள் கட்டப்பட்டுக் காவிபூசி முத்துப் பொடியால் கோலமிட்டலங்கரிக்கப்பட்டவை.

அன்னம், இவற்றின் அழகையும் அலங்காரங்களையும் பார்த்துக்கொண்டே தமையந்தி இருக்குமிடத்தைத் தேடிச்செல்லுகையில் அங்கே மேருகிரியே அந்நகரத்தில் வந்து தங்கினாற் போன்ற காக்ஷியையுடைய அரண்மனையைக் கண்டது. அதிற்

கட்டிய கொடிகள், அன்னத்தைப் பார்த்து "நீ தேடிவரும் தமை யந்தி இவ்விடத்தில் தான் இருக்கிறாள், அவளுக்காக நீ வேறெங் கும் அலையவேண்டாம். இங்கே வா" என்று அழைப்பதுபோல் அசைந்துகொண்டிருந்தன. அதிலுள்ள கோபுரங்களும் மாட மாளிகைகளும் அண்டமுகட்டை முட்டிக்கொண்டிருந்தமையால் தேவர்கள் வீமராஜனுடைய கொலுவீற்றிருக்கையைக் கண்டு களிக்க இறங்கிவரும் சோபானங்களை ஒத்திருந்தன. இவ்வாறு அவ்வரண்மனையின் ஒவ்வொரு பாகமும் புதிது புதிதான காக்ஷி களை உண்டுபண்ணியதால், அன்னபக்ஷிக்கு அதைவிட்டு அப்பாற் போவதற்கு மனம் எழாவிட்டாலும் தமையந்தியைக் காணவேண் டும் என்ற எண்ணமானது பின்னிருந்து தள்ள அவ்விடத்தை விட்டுத் தமையந்தியைத் தேடிக்கொண்டே அங்குள்ள ஒரு அழகிய சோலைக்கு வந்து சேர்ந்தது. அன்னபக்ஷி அச்சோலை யைக் கண்டவுடன் மனந்திகைத்துத் தான் பூலோகத்தைவிட் டுத் தவறித் தெய்வலோகத்துக்கு வந்துவிட்டதோ என்று சந்தே கித்துப் பின்பு சற்று நிதானித்துப் பார்க்கையில் "மகரந்தமில் லாத பொன்மலரையுடைய கற்பகக்காட்டை அருவிபோல் தேனொழுகப் புதுமணம் வீசுகின்ற இவ்வரிய சோலையாக நினைப் பது மதியீனம் அல்லவா" என்று தனக்குள்ளே தெளிந்தது. "மேலும் இத்துணை அழகு வாய்ந்த சோலை விண்ணுலகிலிருந்தா லும் இதில் வதியத் தக்க அத்துணைச் சிறப்புற்ற மகளிர் அங்கே யாவர் உளர். எவரெவர் எவ்வெவற்றை யாதரித்தல் பொருந்து மோ அவ்வவற்றை விட்டுத் தகாத மற்றொன்றை ஆதரித்தல் இருதிறத்தார்க்கும் இகழ்ச்சி உண்டாக்குமன்றோ. தமையந்தி யைத்தவிர வேறொருவர் இச்சோலைக்கு உரிமை பாராட்டினால் இதனழகு பாழாகுமன்றோ? தமையந்தி இந்நகரத்தில் இருக்கி றாளென்பதற்கு இச்சோலையே போதுமான அத்தாக்ஷி. அதி நுட்பபுத்தியுள்ள பிரமன் தமையந்திக்கென்றே ஒவ்வொன்றையும் நிகரற்றதாய்ச் சிருஷ்டித்ததைப்போல இச்சோலையையும் அவளுக் கென்றே நிருமித்தானோ? அவளது அலர்ந்த முகத்தானும் குளிர்ந்த பார்வையானும் ஆம்பல் போன்ற வாயானும் காந்தள் போலுங் கையானும் செம்பஞ்சு ஊட்டிய பாதத்தானும் இச

சோலை இவ்வளவு விமரிசையோடு செழித்து வளர்ந்திருக்க வேண்டுமேயன்றி வேறெவ்வகையானும் ஆகாது" என்று அன்ன பக்ஷி வியந்து, ஆகாயத்திலிருந்தபடியே அதனுட் செல்வதற்குரிய வழியைத் தேடிச் சுற்றிச் சுற்றிப் பார்த்தது. அச்சோலையிலுள்ள மரங்களெல்லாம் இடைவெளியின்றி நெருங்கி உயர்ந்தோங்கி இருந்தமையால் மேலே இருந்தபடியே உட்செல்லுவதற்கு வழி தென்படவில்லை. அதனால் அன்னபக்ஷி வியப்புற்று, "இதென்ன ஆச்சரியம், இச்சோலைக்கு இலைகளால் கூரை வேயப்பட்டிருக்கிறதோ, அல்லது இச்சோலையிலுள்ள புஷ்ப விருப்பத்தினால் தேவர்கள் கற்பகம் பாரிஜாதம் மந்தாரம் ஹரிசந்தனம் முதலிய புஷ்பங்களை இகழ்ந்து ஆகாயத்தினின்றிழிந்து இப்புஷ்பங்களைக் கொள்ளைகொள்ளாதபடி ஏற்படுத்திய சாகசத்தடையோ. இச்சோலைக்கு இவ்வளவு விமரிசை உண்டு பண்ணின தமயந்தியின் திவ்ய தேகம் சந்திரனது குளிர்ந்த ஒளிபட்டாலும் வேதனை அடையும் தன்மையுடையதாதலால் இயல்பாகவே உஷ்ணம் பொருந்திய சூரியனது ஒளி பட்டால் அத்திவ்ய தேகத்திற்கு என்ன நேரிடுமோ எனப் பயந்து அங்கிருந்த விருக்ஷங்கள் அதன் ஒளியை உள்ளேவிடாமல் தடுக்கத் தமது கிளைகளாகிய கரங்களை நீட்டிப் பந்தரிட்டாற்போல் கவிந்தனவோ" எனப் பலவாறு புகழ்ந்து அச்சோலையின் ஒரு பக்கமாக இறங்கி அப்பக்கத்தில் யாதேனும் ஒரு வழியாக உள்ளே புகுவதற்கு இடம் பார்த்தது. அவ்விடத்திலும் சுலபமாக உட்புகுவது அசாத்தியமாக இருந்தபடியால் தனது சிறிய தேகத்தை ஒடுக்கிக்கொண்டு அச்சோலைக்குட் புகவேண்டும் என்னும் எண்ணம் முன்னே இழுக்க மிக்க சிரமத்துடன் உள்ளே சென்றது. அங்கே தரை முழுவதும் மெதுவான மணல் பரப்பப்பட்டிருந்தது. அதன்மேல் காய்ந்த சருகாவது பழுத்த இலையாவது ஒன்றுகூடக் காணப்படவில்லை. அம்மணலில் தங்கினால், மிகுந்த குளிர்ச்சியாக இருப்பதால் அதிற்றங்கினவரை அதைவிட்டு அப்பாற் போக மனம் எழாமல் அங்கேயே தங்கச்செய்யும். அங்கிருக்கும் விருக்ஷங்கள் வகை வகையாக ஒன்றன்பின் ஒன்றாகப் பயிர் செய்யப்பட்டிருந்தன. அங்கே பல் வேறு நிறங்களையுடைய புஷ்பங்கள் வரையறுத்துத்

தெளிந்தாற்போல ஒன்றினருகே ஒன்றாகச் சிந்திக்கிடக்கும், அவற்றைப் பார்க்குமபோது பலவகை இரத்தினங்களை வேறு வேறாகப் பிரித்துப் பரப்பியதைப்போல் தோன்றும். அப்புஷ்பங்களெல்லாம் அப்போதுமலர்ந்த புஷ்பங்களே. அவைகளினின்றுண்டாகும வெவ்வேறு மணங்கள் ஒன்றாகச சேர்ந்து புதிதான மிகச சிறந்த மணத்தை உண்டுபண்ணும. அதை முகர்ந்தோர் வேறெவ்வித இனிய வாசனையையும் அன்றுமுதல் இகழ்வார்கள். அப்புஷ்பங்களிலுள்ள தேனை உண்டு மயங்கிக் களித்துப் பாடும் வண்டுகளின் தொகுதி அங்கிருக்கும் மணலினும் மிகுதி. அவைகள் உண்டு மீதியான தேன் அனேக அருவிகளாக ஓடி ஓரிடத்திற்றங்கி ஒரு சிறிய கடலாகும. இவ்வாறே கருப்பஞ்சாறு தெங்கஞ்சாறு முதலியவைகளும் சிறுசிறு கடல்கள் போல் தேங்கி நின்று சப்த சமுத்திரங்களில் அவசியமான சிலவற்றைத் தமையந்தியின் மொழியின் இனிமைக்குத் தோற்றமையால் அச்சோலையில் சிறைப்படுத்திய காக்ஷியை உண்டுபண்ணும், புஷ்பங்களிலுள்ள மகரந்தப் பொடிகளை வண்டுகள் தமது கால் விரல்களால் கிண்டி உதறுவதால் அவை கீழே உதிர்ந்து கிடக்கும் புஷ்பங்களுக்கிடையில் தங்கியிருக்கும் காக்ஷியானது பொனதளத்தில் இரத்தினங்களை அமைத்து அவை இறுகும பொருட்டு அவற்றைச் சுற்றித தங்கரேக்கை வைததுச செதுக்கினதை ஒக்கும். அங்கே கரும்பு, கதலி, பூகம, மூங்கில், கொககு, சஙகு, இப்பி, மீன் றலை முதலிய இன்னும் மற்றவைகளினின்றும் வெளிப்பட்ட முத்துக்கள் கீழே சிதறிக்கிடநது ஒளி செயயும். அவ்வொளியானது, தன்னைவிடாது துரத்திக்கொண்டே வரும் சூரியனுக்குப்பயநது அச்சோலையில் மறைநதிருக்கிற இருட்டை "எங்கள் நாயகியின் குலாதிபனுக்குப் பொருநதாரை நாஙகள் காக்கமாட்டோம" என வெளியே 'துரத்தியடிப்பதுபோல் எங்கணும் பரந்து பகல் வெளிச்சத்தை எப்போதுங குறைவற உண்டுபண்ணும். அங்குள்ள மரங்கள் செழுமை மிகுதியால் தத்தமக்குரிய காலமும் பருவமுமின்றி எப்போதும் பழுக்கும் இயல்புடையவாகையால் பலவகையான கனிகள் நிறைந்திருந்தன. அக்கனிகளை

உண்டவர்கள் பால், தேன், பாகு இம்மூன்றையுங்கலந்து கொடுத்தாலும் இவற்றை இகழ்ந்து பரிகசிப்பார்கள். அச்சோலையில் என்றும் வற்றாமல் படிகம்போலும் தெளிந்த நீர் நிறைந்த தடாகங்களும், சலவைக் கற்களால கட்டப்பட்ட மண்டபங்களும் நிறைந்திருந்தன.

தமயந்தி தன் தோழிகளோடு விளையாடுவதற்காக மண் மேடுகள்போல் ஆங்காங்கு இரத்தினக்குவியலால் செய்யப்பட்ட செய்ம்மணிக்குன்றுகளும் இருந்தன. அதை அனேக நிறம்பொருந்திய இலைச்செடிகளும் படர் கொடிகளும் சூழ்ந்திருந்தன. அங்கே தடாகங்களிலெல்லாம் சிறப்புற்றதாகிய ஒரு அழகிய தடாகம் இருந்தது. அத்தடாகத்தில் நீர் வேண்டியபோது நிறைக்கவும் வேண்டாதபோது இறைக்கவும் சக்தியுள்ள இயந்திரம் அமைக்கப்பட்டிருந்தது. அந்த இலவந்திகை அல்லது யந்திரவாவி என்றும் சொல்வதுண்டு. அதனருகில் சிறந்த சந்திரகாந்த கல்லாலாகிய ஒரு சிங்காரமண்டபம் இருந்தது, அதற்கு நான்கு பக்கங்களிலும் வெள்ளிப்படிகளமைத்து மரகதத்தால் தளவரிசை இடப்பட்டிருந்தது. அதன்மேல பவளத்தாலும், பொன்னாலும பலவகைக் கற்களாலும், தூண் விட்டம் உத்திரம் கொடுங்கை முதலியன அமைக்கப்பட்டிருந்தன. அஃது அதன்மேல் சந்திரகாந்தக் கல்லால் வேயப்பட்ட மேல்பாகத்தையுடையது. இந்த மண்டபத்தைச் சுற்றிலும் மூங்கில் தட்டிகளைப்போல முத்துச் சரங்கள் தொங்கவிடப்பட்டிருந்தன. இதனடுவில் தேவேந்திரனது சிம்மாசனம் போல அனேக இரத்தினங்களால் அலங்கரித்துச் செய்யப்பட்ட ஒருமேடை இருந்தது. அதற்குமேல் பொற்சரிகைகளால் செய்யப்பட்ட பலநிறம் பொருந்திய விதானமும் கட்டப்பட்டிருந்தது.

அன்னம் இக்காட்சிகளைக் கண்ணுற்று அங்குள்ள விதம் விதமான பக்ஷிகளையும் பார்த்துக்கொண்டே வந்தது. அங்குள்ள மயில்களெல்லாம் தமயந்தியின் திவ்விய சாயலைக்கண்டு 'இச் சாயல் நமக்கில்லையே' என வெட்கித் தலைகுனிந்து ஆட்டமின்றிச் செய்குன்றின்மேல் தங்கியிருந்தன. அன்னங்கள் தமயந்தியின் நடையைக்கண்டு நமக்கு இதுவரையிலும் நடையால் ஏற்

பட்ட பெருமை இன்றோடே போய்விட்டதென்று மனநொந்தாற் போல நடமாட்டமின்றிப் பொய்கைகளிலுள்ள தாமரையிலுறங்கித் தலைமறைவாக இருந்தன. மரங்களின் மீதுள்ள குயில்களும் கிள்ளைகளும் தமயந்தியின் இனிய குரலையும் குதலைச் சொற்களையுங்கேட்டு "இத்தன்மையை இனி எக்காலத்து நாம் அடையப் போகிறோம்? அவ்விதமாக அடைந்தாலும் அவற்றின் இயற்கைக்குணம் நமக்கு வருமோ" என மரங்களின் மேலுட்கார்ந்து அக்குரலோசையைப் பழகுவனபோல மெதுவாகப் பாடிப்பேசி இலைமறைவாக இருந்தன. இவ்வாறு ஒவ்வொரு ஜாதி பக்ஷிகளும் தமயந்தியினால் தங்கள் பெருமை குறைந்ததே என்று வருந்தி அச்சோலையில் சுற்றிச் சுற்றித் திரிந்துகொண்டிருந்தன. தமயந்தியால் வளர்க்கப்பட்ட கிள்ளையையும் நாகணவாய்ப் பட்சியையும் பார்த்து "இப்பறவைகள் தமயந்தியால் வளர்க்கப்பட்டு அவள் அருமை பாராட்டி அவள் கையால் கொடுக்கும் உணவை உண்பதற்கு என்ன தவஞ்செய்தனவோ? எனத் தம்மை வெறுத்து மனம் புழுங்கிய அவ்வன்னப்பறவைகள் தமது சிறகுகளாகிய கைகளால் தம்மை அடித்துக்கொண்டே பறக்கும். அங்குள்ள மான்கள், மன்மதனது காய்ச்சி வடித்த பாணங்கள்போல் காதளவோடி நீண்டிருக்கும் தமயந்தியின் கண்களைக்கண்டு வியப்புற்று "இவைகளுக்குரிய பார்வை நமக்கில்லையே" என வருந்தி "ஒருவேளை ஒன்றுக்கும் பற்றாத நம்மை அவள் தோழிமார் இகழ்ந்து வெருட்டுவார்களோ" என மருண்டு மருண்டு விழித்துக்கொண்டிருந்தன.

அன்னபக்ஷியானது இவைகளைப்போன்ற பல காக்ஷிகளைக் கண்டு களித்து "இவற்றில் ஒவ்வொன்றையும் முற்றிலும் பார்த்துத் திருப்தி அடைவதற்கு அநேக யுகங்கள் செல்லும்போலிருக்கிறதே. இவற்றைவிட்டுப்போகவும் மனம் வரவில்லையே. நான் வந்த காரியம் முடிவு பெறாமலிருக்கிறதே" என்று மனங்கலங்கிப் பிறகு ஒருவாறு திடப்பட்டுத் "தமயந்தி இருக்கும் இடத்தை எப்படி அறிவேன்? இச்சோலை அநேக காவதங்கள் அகன்றிருக்கின்றதே. இதில் எந்தப் பகுதி அளவற்ற புண்ணியம் செய்ததோ. அவ்விடத்தை அறிந்து அங்கே போவதற்கு நாளும்

அநேக காலம் ஒருகாற் பீடத்திருந்து ஒற்றைக்காலால் தவஞ் செய்யவேண்டுமோ" எனத்துக்கித்து நாலாபக்கங்களிலும் சுற்றிப்பார்த்தது. அப்போது ஒரு பெரிய சண்பகப் பூஞ்சோலையிலுள்ள மணம் முழுதும் அவ்விடத்தைவிட்டுப் பெயர்ந்து வந்தாற்போல் தனக்கு எதிர் முகமாக ஒரு இயற்கை மணம் வீசியது. அவ்வகையான மணம் பஞ்ச தருக்களினின்றும் உண்டாவதில்லை. அதை அறிந்த அன்னம், அப்புதுமணம் எவ்விடத்திலிருந்து வந்திருக்கலாம், அதை எப்படியாவது தெரிந்துகொள்ள வேண்டுமென்று அந்நறுமணம் வந்த வழியைப் பற்றிச்சென்றது. அப்போது அங்கே ஓரிடத்தில் பலவகையான புஷ்பந்தரும் மரங்களில் அப்போதலர்ந்த புஷ்பங்கள் பூப்பந்தரிட்டாற்போல மேலே குலுங்க, அவற்றினின்றும் தரையில் உதிர்ந்த மலர்களால் ஆகிய விரிப்பின்மீதில் தன் மிருதுவான இரண்டு கால்களும் நோவ ஒரு பூங்கொம்பு போன்று, அநேக நக்ஷத்திரக்கூட்டங்கள் சூழ ஒரு களங்கமற்ற பூரணசந்திரன் உதித்தாற்போல அநேக தோழிமார்களுக்கும் செவிலித்தாயர்களுக்கும் மத்தியில், தனது இரண்டு கண்களையும் இரண்டு வண்டுகளென நினைத்து தன் கண்களில் வந்து உறவாடி மோதும் அநேக வண்டுகளைத் துரத்திக்கொண்டே தன் பல வரிசைக்கிணையாகாத முதிர்ந்த அரிய முல்லை அரும்புகளைப் பறித்து விளையாடிக்கொண்டிருந்த வீமராஜன் தவப்பயனாகிய தமயந்தியைத் தன் கண்ணும் மனமுங் குளிரக்கண்டு அன்னபக்ஷியானது மகிழ்வுற்று ஆனந்தக்கடலில் மூழ்கிற்று. தமயந்தியின் மேலான வனப்பையும், மேனி ஒளியையும், இயற்கை மணத்தையுங் கண்டறிந்து அன்னம், தமயந்தியானவள் முதல்வகுப்புப் பெண்டிருள்ளும் முதன்மையானவளாகையால் அவளுக்குச் சண்பகப்பூ நிறமும், அநேக காவதங்கள் வரையில் நாறும் இயற்கை மணமும் உரியதே எனத் தெளிந்தது.

பின்பு அன்னபக்ஷியானது "இத்துணை மேம்பாடுடைய தமயந்தியை நான் எவ்வாறு அணுகுவேன். நன்றி மறவேன் என்று நான் நாமவேல் அண்ணலாகிய நளனிடத்தில் சொல்லிய உறுதிமொழி பொய்க்குமோ என்ற ஏக்கம் அதிகரிக்கின்றதே. அவ

ளும் நானும் மலையும் மடுவும்போல் இருக்கின்றோமே, நான்
அவளுக்கு எந்தவிதத்தில் சமானமாவேன். ஆராய்ந்துபார்க்குமி
டத்து நானோ ஒரு பக்ஷி. அவள் உத்தமப்பிறவியில் உத்தமத்
தன்மையே உருவெடுத்தாற்போன்ற இராஜகுமாரி. நான் பூவு
லக பக்ஷிகளில் சிறந்துளேன். அவள் தெய்வ மகளிரினும் சிறந்து
அவர்களை ஏவல்கொள்ளுந் தன்மையுடையவள், என்னை விண்
ணும் மண்ணும் புகழும். அவளைச் சுவர்க்க மத்திய பாதாளமென்
னும் திரிலோகங்களிலும் புகழ்வார்கள். ஆகையால் அவளுக்
குரிய சிறப்புக்களில் ஒன்றாவது எனக்கில்லை. ஐயோ, பாவம்!
எனக்கும் என் இனத்துக்கும் அவளைப்போல நடக்கக்கூடத்
தெரியவில்லையே. தவிர, தூதாகச் செல்லுகிறவர்கள் கல்வி
அறிவு ஒழுக்கங்களிற் சிறந்த பெருமை வாய்ந்திருக்கவேண்டும்,
அவர்கள் எவரிடத்தில் தூது போகிறார்களோ அவர்களால் மதிக்
கப்படும் தன்மையுடையவர்களாக இருத்தல் வேண்டும். "வார்த்
தை பதினாயிரத்தொருவன்" என்றபடி அவர்களுக்குப் பேசுவ
தில் விசேஷ சாமர்த்தியம் இருக்கவேண்டும். அவர்கள் பேசும்
வார்த்தைகளும் பலநாள் பழக்கத்தால் நயப்பட்டுக் கேட்பவர்க்கு
இனிமையை உண்டாக்கி அவர் மனங்கரையச் செய்யவேண்டும்,
"வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம்" என்ற முது
மொழியை அவர்கள் என்றும் மறக்கலாகாது ஒருவருக்காகத்
தூது செல்பவர் அவருடையகுணத்தையே பேசவேண்டுமே யன்
றித் தோஷத்தை எடுத்துப் பேசுவது மதியீனம். தூதுபோகிற
வர்கள் சுயநயம் பாராட்டுதலையும் பிரதிப்பயனையும் தூதுசென்ற
வர்களிடத்தில் அபிமானத்தையும் ஒழித்து நடுநிலைமையைக்
கைக்கொள்ளவேண்டும். இவ்வாறு தாம் மேற்கொண்ட தூதை
நிறைவேற்றுபவர் இம்மை மறுமைப் பயன்களை எளிதில் அடைந்
தின்புறுவார்கள் என்பதற்கையமில்லை. மேற்சொல்லிய தன்மை
யால் மாக்ஷிமைப்பட்டார் செய்துமுடிக்கும் அரிய காரியத்தை
நானும் செய்யத்துணிந்தேனே. ஆயினும் குற்றமற்ற கருணாக
ரனாகிய நளனுடைய தூதாக நான் வந்திருக்கிறபடியால் அக்காரி
யத்துக்கு ஒருவித இடையூறும் உண்டாகாது. சத்தியத்தையே
விழுப்பொருளாகக் கொண்ட உத்தமர்களுடைய காரியம் நிறை

வேறுவிடின் வேறெந்தக்காரியம் நிறைவேறும். ஆகையால் நான் சமீபத்தில் சென்று, வந்த காரியத்தைப் பூர்த்திசெய்கிறேன்" என்று சமீபித்துத் தமையந்தி தன்னையே நோக்கும்படியாக அதி உல்லாசத்துடன் அவளுக்கெதிரே மெதுவாக நடந்து திரிந்தது.

அப்போது தமையந்தி தனக்கெதிரில் தோன்றிய அன்னத்தைக் கண்ணுற்று வியப்படைந்து "இவ்வளவு அழகான பக்ஷி இச்சோலையில் இதுவரையில் காணப்பட்டதே இல்லை. இதைப் பார்க்குந்தோறும் விருப்பம் மேலிடுகிறதேயன்றி இதைவிட்டு அப்பாற்போக மனம் எழவில்லை. இதன் இருப்பிடம் இவ்வுலகோ அல்லது விண்ணுலகோ என்பது தெரியவில்லை. இதைப்பிடித்து சற்று நேரமாயினும் வைத்து விளையாடினால் தான் இதனிடத்துண்டாகிய விருப்பம் சற்று குறையும்" என்று தன் விளையாட்டைமறந்து அதைப்பிடிக்க எத்தனித்தாள். அப்போது அன்னம் தமையந்தியின் விருப்பத்தையே துணையாகக்கொண்டு அவளை அவள் தோழிமாரைவிட்டுப் பிரித்துத் தனியே கொண்டு போக வேண்டுமென்ற எண்ணங்கொண்டு தமையந்தி தன்னைச் சுலபமாக எட்டிப்பிடித்துவிடலாமென்று நினைக்கும்படியாகச் சமீபித்து உலாவிக்கொண்டிருந்தது. தமையந்தி தான் நடக்கும் போது தன் காலில் அணிந்திருந்த பொற்சிலம்பு முதலியன ஒலித்தால், அந்தச் சத்தங்கேட்டு அன்னம் பறந்து போய் விடுமென நினைத்துத் தன் ஆபரணங்களும் அனேகமணிகள் கோத்து நெய்யப்பட்ட ஆடையும் ஒலிக்காமல் அடக்கிக்கொண்டு அவ்வன்னத்தைப்பிடிக்கப் போனாள். அவள் வருவதை அறிந்தும் அன்னபக்ஷியானது அவ்விடத்தைவிட்டு ஓடிப்போகாமல் மெதுவாக அவள் கைக்கெட்டாமல் அப்பாற் போயிற்று. இதைக்கண்ட தோழிமார் தமையந்தியைப்பார்த்து "மணல் திட்டுகளில் தங்கி இருப்பதற்காகப் போகும் இவ்வன்னம் நமது கைக்கு அகப்படுமோ? அதைப்பிடிக்க எத்தனிப்பதும் தகுதியா" என்று கைகொட்டி நகைத்தார்கள். தமையந்தி மனம் புழுங்கி "நீங்கள் எல்லோரும் கைகொட்டி நகைத்ததனால் அல்லவா என் கையில் அகப்படுவதற்கிருந்த அன்னம் தப்பி ஓடிவிட்டது. நீங்கள் என்னிடத்தில்

வைத்திருக்கும் அன்பினால் நான் அடையும் பலன் இதுதான். பைத்தியக்காரியாகிய நான் இதுவரையிலும் உங்களை உற்ற தோழிகள் என்று நினைத்திருந்தேனே. நீங்கள் என்னோடு வந்து எனக்குச் செய்த உதவி போதுமானது, இனி என் பின்னால் வரவேண்டாம். இங்கேயே நின்றுவிடலாம். நான் தனியாகப் போய் அந்த அன்னத்தைப்பிடித்து வருகிறேன்" என்று தன் தோழிமார்களைக் கடிந்து சொல்லிவிட்டுத் தான் மாத்திரம் அன்னத்தைப் பின்தொடர்ந்து சென்றாள். அன்னமானது, தன்னைப்பிடிப்பதில் தமயந்திகொண்டுள்ள பிடிவாதத்தையும் அவள் தன்னைப்பிடிப்பதற்காக நிழலோடு நிழலாய் மறைந்து வருவதையும் கண்டு தான் அவளுக்கு முன்னால் அசைந்து அசைந்து நடந்து கொண்டே போயிற்று. தோழிமார்கள், தமயந்தியின் மெலிவை நோக்கி "அம்மணீ, இந்த ஒரு அன்னத்துக்காக தாங்கள் இவ்வளவு துன்பம் அடையவேண்டியதில்லை. தங்களுக்கு வேண்டுமானால் இதைப்போன்ற அனேக அன்னங்களை வருவித்துக் கொடுக்கத் தங்கள் தந்தை வல்லவரன்றோ. வீணாக, தாமரை போன்ற தங்களுடைய இரண்டு பாதங்களும் நோவ அங்குமிங்கும் அலைவதிற் பயனென்ன" என்று சொல்லியும், அதற்குக் காது கொடாமல் அவர்கள் வார்த்தையை மறுத்து மறுபடியும் அன்னத்தைத் தொடர்ந்து சென்றாள். அன்னமானது அவள் கைக்கு அகப்படுவதுபோல நெருங்கியும் விலகியும் போய்க்கொண்டே இருக்கத், தமயந்தி, எப்படியும் அதைப்பிடித்துவிடலாமென்று நினைத்து அதை விடாமல் பின்பற்றிச் சென்று கடைசியில் தன் எண்ணம் நிறைவேறாமல் களைத்து ஒரு குருக்கத்தி மரத்தினடியில் வந்து தங்கினாள்.

அப்போது அன்னம், தன்னைத் தொடர்ந்து வந்ததால் முகம் வியர்த்துக் கால் வருந்தக்களைப்படைந்து நிற்கின்ற தமயந்தியை நோக்கி அவள் களைப்புத் தீரும்படியாக அவளுக்கினிமையான சில வார்த்தைகள் சொல்லத் தொடங்கிற்று. "பேதைமை பொருந்திய பெண்ணே, நீ என்னைப் பிடிக்க வேண்டும் என்று மிக்க ஆவல்கொண்டு உன் தேகம் வாடத் தொடர்ந்தாலும் நான் உன் கையில் அகப்படுவேனோ? ஆகாயத்தில் பறக்கிற பக்ஷியாகிய

ன்னை, மிருதுவான தரையில் நடைபழகுவதுபோல் நடக்கிற நீ பி க்கவல்லையோ. நீ உன் சோலையில தினந்தோறும் பார்தது வருகிற சாமானியபக்ஷிகளைப்போல என்னையும் நினைத்துக்கொண்டாயபோலிருககிறது. இதைக கண்டு யார் தான் சிரிக்கமாட்டார்கள். ஆயினும் என விருததாநததைச சுருககமாகச சொல்லுகிறேன். சற்று கவனிததுக கேட்பாயாக. ஏ, மாதர்திலகமே நான இவ்வுலகத்துப் பக்ஷியலல. நான விண்ணுலகததில வாசஞ் செயகிறேன். பிரமனுககு வாகனமாக இருககிற அன்னப்புள எனககு நெருஙகிய உறவு. நான அநேக நாட்களாக பிரமனுடைய உலகமாகிய சததியலோகததிலுளள மானசவாவியில் உள்ள பொனமயமான தாமரை இலைச் சுருளகளைத தின்று வநதமையால் எனக்கு இநதப் பொனனிறம வாயததது. இநது எப்போதும் என்னைவிட்டு நீஙகாது. இவவளவு பெருமைவாயநத நான் இப்பூமியை நாடி வநததறகு காரணம் ஒனறுணடு. அதாவது, இமமண்ணுலும் அரசர்களில் மனமதனைபபோல அழகுவாயநத நளசசக்கரவாததியினுடைய சிறநத நகரில் அன்றலாநத புஷ்பங்கள் நிறைநத திவய தடாகததின விளப்பததைக் கண்டுகளிக்க வேண்டுமென்பதேயன்றி வேறலல நான திரிலோகஙகளிலும சஞ்சரித்தாலும எனககு எவவித துன்பமும் உண்டாகாதவண்ணம கருணைக்கடலாகிய பிரமன் வரங்கொடுத்திருக்கின்றான். ஆகையால எனக்கு எப்படிபட்டவராலும் எவவிதததுன்பமும் நேரிடாது. ஆனால் இககடல் சூழ்நத பூமியில தெயவத்தன்மை பொருநதிய நளன என்னைப பிடிகக எண்ணங்கொண்டால் நான பிடிபடுவேனே யலலது வேறெவராயினும் எநத எநத விதமாகப் பிடிக்க முயன்றாலும அவர்கள் கையில் அகப்படமாட்டேன, அநத நளனும பிரமனும யாதேனும் ஒரு காரியத்தைச செய்யச சொன்னால் மனமகிழ்நது செயவேனேயல்லது அவர்களைத் தவிர சுவர்ககாதிபதியாகிய தேவேநதிரனே ஒரு காரியத்தைச செய்யச சொன்னபோதிலும செயயாது மறுத்துவிடுவேன். நளனுக்காகச சிரமப்பட்டதினமே சுதினமென்றும் அவனேவலைச செய்கிற புண்ணியமே பெரும்புண்ணியம் என்றும் நான் நினைத்திருக்கிறேன். அவன் மீதிருக்கும் விருப்

மிகுதியால் நான் தினந்தோறும் ஆகாய கங்கையிற்குளித்து அக் குளிர்ந்தஜலத்தை என் சிறகுகள் நிரம்பக் கொண்டுவந்து அவன் திவ்யதேகத்தில் தெளித்து அவனுக்கு எவ்வித தாபமும் உண்டாகாதபடிசெயவேன். கரும்புபோலும் சொல்லையுடையபெண்ணே, எனக்கு அவனிடத்தில் அவ்வளவு விருப்பம் உண்டாகக் காரணம் என்னவெனில் இப்பூவுலகத்தில் அவனைப்போல அழகில் சிறந்தோர் ஒருவருமில்லை. அவன் அரண்மனை வாயிலில் மங்கல முரசும்தியாகமுரசும் ஒலிக்காதநேரமில்லை. அவனுக்குப் பகையே யில்லை. அவனுடைய பகைவரெல்லாம் அவனை வணங்கி அவனுக்கு அடங்கி நடக்கும்படியாக அச்சத்தை உண்டுபண்ணுகிற வேலாயுதத்தையுடையவன. தெய்வலோகத்திலும் அவனுடைய அழகையும் பெருமையையும் புகழாதார் ஒருவருமில்லை.

அறங்கிடந்த நெஞ்சு மருளொழுகும் கண்ணு
மறங்கிடந்த திண்டோள் வலியுந்—திறங்கிடந்த
செங்கண்மா லல்லனேற் றேர்வேந்த ரொப்பரோ
அங்கண்மா ஞாலத் தவர்க்கு.

தவிர, அவன் சங்கீதத்திலும் அசுவ சாஸ்திரத்திலும் மிகுதியான் தேர்ச்சியுள்ளவன். ஒருநாள் நளனது பாடலைத தேவேந்திரன் சபையில் நான் சொல்லியபோது அவன் அதைக்கேட்டு மனமகிழ்ந்து தனனிடத்தில் வீணை வாசிப்பதில் வல்லவனுகிய ஒரு கந்துருவனைப் பார்த்து "இந்த அருமையான பாடல் உனக்குப் பாடவருமோ" எனக்கேட்டபோது நாங்கள் அவனை இகழ்ந்து ஹாஹா என்று சொல்லியதால் அன்றுமுதல் அவனுக்கு ஹாஹா எனப் பெயரிடப்பட்டிருக்கிறது. நாம் பார்த்துவருகிற பூரண சந்திரன் நளனது அழகியமுகத்துக்கு ஒருவாற்றானும் ஒவ்வாமையால் அவன் முகத்தைப் போன்ற ஒரு சந்திரனை உண்டுபண்ண வேண்டுமென்று பிரமன் அமாவாசைதோறும் புதிது புதிதான ஒவ்வொரு சந்திரனைச் செய்து பார்த்தும் தன் எண்ணம் நிறைவேருமையால் இன்னும் கைவருந்தி வாடுகிறான்; பொறுமையிலோ அவனுக்கு மிஞ்சினவர் ஒருவருமில்லை. பொறுமையே உருவெடுத்த மன்னன் யாரெனில் நளனையன்றி வேறெவரைச்

சொல்லக்கூடும். பிறர் செய்த குற்றத்தைப் பொறுத்துக்கொள்ளுதில் பூமிதேவியையும் பூபாரந் தாங்குவதில் ஆதிசேஷனையும் இணையாகச் சொல்லலாமேயன்றி வேறுவமையே கிடையாது. வன்மையில் அவனுக்கு ஒப்பாரில்லை. வண்மையும் அவனை அடைந்து நீங்காதிருக்கின்றபடியால் அதுவும் பெருமை அடைந்திருக்கிறது. புறநாட்டிலுள்ள பெண்கள் அவன் நகரத்துப் பெண்களின் நடையழகுக்குக்கூடச் சமானமாகமாட்டார்கள். நளனிடத்தில் குற்றேவல் செய்கிற பெண்களின் நடையைக்கண்டு ஆசைப்பட்டு நான் அதைக் கற்றுக்கொண்டு தெய்வலோகத்துக்குப் போனேன். அங்கே இந்நடையைக் கண்டு ஆசைப்படாதார் ஒருவருமில்லை. அவர்களில் அரம்பை மனம் மிகக்கவன்று என் நடையைப்போல் தானும் நடக்க வேண்டுமென்று என்னை கெஞ்சிக் கேட்டுக்கொண்டபடியால் மனமிரங்கி அவளுக்கு மாத்திரம் கற்றுக் கொடுத்தேன். அந்நகரத்திலுள்ள பெண்களுக்கு என்னிடத்தில் விசேஷ நம்பிக்கையுண்டு. அவர்கள் தங்களுக்கு மிகவும் ஆப்தமானவர்களிடத்திலும் சொல்லத் தகாதென நினைத்து மறைத்துவைத்திருக்கும் பரம இரகசியமான விஷயங்களையும் என்னிடத்தில் சொல்லாமல் இருக்கமாட்டார்கள். நான் அந்நகரத்தைவிட்டு எப்போதும் அகல விரும்புவதில்லை. இவ்விதமாக எல்லாவற்றிலும் சிறந்த நளனுக்குத் தகுதியான ஒரு பெண்மணி அகப்படாமையால் அவனுக்கு இதுவரையிலும் விவாகம் நடக்கவில்லை. அந்தத் திவ்விய புருஷனுக்கு மனைவியாவதற்குரிய பெண்ணணங்கைத் தேடிக்கொண்டு ஒவ்வொரு உலகமாகச் சுற்றிவருகிறேன். இதுவரையில் ஒருவரும் காணப்படாமையால் இந்நகரை அடைந்தேன். இங்கு உன்னைக் கண்டபிறகுஎன்மனம் ஒருவாறு ஆறுதலுற்றது. அவன் அழகுக்குத் தகுந்தவள் நீயே அன்றி வேறொருவருமில்லை. நீ அவனைக் கலியாணம் செய்துகொள்ளாவிட்டால் உன் அழகுக்குக் கௌரவமில்லை. ஆயினும் விதி என்பது ஒன்று தனியாக இருக்கிறது. அதன்படியே தான் எதுவும் நடக்குமேயன்றி அதற்கு மாறாக ஒன்றும் நடவாது. ஆனால் எதையும் விதிக்கும் பிரமன் சேர்க்கத் தகுதியானவற்றையே சேர்ப்பனேயல்லது தகாதவற்றைச் சேர்ப்பதில்லை. இக்

வுண்மை அறியாத்தார் சிலர் உலகில் அனேக காரியங்கள் தகாத் விதமாகவே நடக்கிறதென நினைத்து அதற்குக் காரணமான கடவுளின் சக்தியைப் பரிகசித்து இகழ்கிறார்கள். நிற்க, நான் ஒரு தடவை பிரமனை நமஸ்கரித்துப் "பூலோக மன்மதனான நளனுக்குத் தகுதியான பெண்யாராக இருக்கலாம்" என்றுகேட்டபோது அப்பிதாமகன் உன் பெயரையே சொன்னதுபோல என்காதிற் பட்டது. அவ்வார்த்தை முற்றிலும் என்காதில் படுவதற்குமுன் ஒரு தேர் அப்பக்கமாக ஓடியது. அதனால் உண்டான ஓசையில் அச்சொல் முற்றிலும் எனகாதில்படாமல் அரைகுறையாகப் பட்டபடியால் நான் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. ஆனால் உன்னையன்றி நளனுக்கு வேறு மனைவியும், நளனையன்றி உனக்கு வேறு கணவனும் ஏற்பட்டால் பிரமன் ஒத்த இயல்புடையவரையே கூட்டுவான் என்று தொன்றுதொட்டு வழங்கிவரும் புகழ்மொழி அந்த முட்டாள் தாமரையோனைவிட்டு அனேகமாய் ஒழிந்து பழமொழி நிலைக்கும் என்பதற்கையமில்லை. ஏ, தமையந்தி, நான் நெடுநேரமாக உன் பெருமையையும் அவயவ நுட்பத்தையும் மறந்து உன்னிடத்தில் தகாத வார்த்தைகளைப் பேசி உன்னையும் கால நோவ நிறுத்திவைத்துவிட்டேன். நீ என்னிடத்தில் சற்று அன்புற்று என்னைப் பின்பற்றி வந்தமையால் எனக்கும் உன்னோடு சற்றுநேரம் சம்பாஷிக்க வேண்டும் என்ற ஆவலுண்டாயிற்று. அந்த அவா மிகுதியால் உன சிரமத்தைக் கொஞ்சங்கூடக் கவனியாது வீணகாலம் போக்கி அபராதியானேன். அதை நீ மன்னிப்பாயாக. ஆயினும் நான் உனக்குச் செய்த அபராதத்துக்காக நீ என்னை என்ன செய்யச் சொன்ன போதிலும் அதை இப்போதே முழுமனதுடன் செய்துமுடித்து நான் உனக்குச்செய்த பிழையினின்றும் என்னைக் காத்துக்கொள்ளுகிறேன்" என்று சொல்லிவிட்டுத் தமையந்தியின் மனத்தைத் தெரிந்துகொள்வதற்காகச் சற்றுநேரம் சும்மா இருந்தது.

அப்போது தமையந்தி, அன்னம் சொல்லியவற்றை எல்லாம் கேட்டு மனமகிழ்ந்து அவ்வன்னத்தை நோக்கி மிக்க நாணத்துடன் சொல்லத் தொடங்கினாள். "அரச அன்னமே, நீ எனக்கு ஒருவித அபராதமும் செய்யவில்லை. நீ பேசிய வார்த்தைகள் என்

காதுக்கு இதுவரையிலில்லாத இனிமையை உண்டுபண்ணின படியால் உனக்குக் காலதாமதமாகிறதே என்பதையும் மறந்து உன்னையும் நிறுத்திவைத்ததாகிய பெருமடமையை நான் செய்து விட்டேன். நுண்ணறிவுடையோர் நூலோடு பழகினும், பெண் ணறிவென்பது பெரும்பேதைமைத்தே, என்பது நீ அறியாத தல்ல. பிறர் தமக்குச் செய்த பிழையைத் தம்முடைய தெனச் சொல்வது உத்தமர்களுடைய கொள்கையாதலால் அத்தன்மை வாய்ந்த நீயும் நான் செய்த பிழையை உன்னுடையதெனச் சொல் லிக் கொள்ளுகிறாய். தவிர எனக்கு ஏதாவது ஆகவேண்டியிருந் தால் அதைச் செய்வதாகவும் சொன்னாய். நான் உன்னைக்கண்டு களிப்படைந்ததைத் தவிர வேறே எனக்கு ஆகவேண்டியது என்ன இருக்கிறது. அப்படியே பெண்களுக்கு ஏதேனும் ஒன் றில் விருப்பம் இருக்குமாயின் அதையவர்கள் தம்மனத்தைவிட்டு வெளியே சொல்வதுமுண்டோ. இந்நிலவுலகத்தில் பெண் ணாகப் பிறந்தவள் எவளாக இருந்தாலும் கற்பகத் தருவின் கொழு நனை எனக்குக் கொண்டுவந்து கொடுக்கவேண்டும், என்று சொல் லுகிறவளுமுண்டோ. எல்லாம் தெரிந்த உனக்கு நான் அதிக மாகச் சொல்வது என்ன இருக்கிறது. எல்லாவற்றையும் நீயே கருதிப் பார்த்துக்கொள்'' என்றாள்.

அன்னம் சற்று ஆலோசித்து பெண்களுக்கு இயல்பாக உள்ள நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் நான்கினுள் சிறந்த காவலாகிய நாணம் தமயந்திக்கு அதிகமாக இருப்பதால் தன் மனத்திலுள்ளதை வெளிப்படுத்த வெட்கப்படுகிறாள். அவளுக்கு இன்னும் விருப்பத்தைத் தரத்தக்க இனிய வார்த்தைகளைப்பேசி அவளது உட்கருத்தை வெளிப்படுத்தவேண்டுமென்று தீர்மா னித்துத் தமயந்தியை நோக்கி "நங்காய், கற்பகத் தருவின் கொழுநனை என்று நீ சொல்லியதின் கருத்து எனக்கு வெளிப் படவில்லை. எம்மனில கற்பகத், தருவின், கொழு, நனை என்றால் கற்பகத் தருவிலுண்டாகிய மலரும் தன்மை வாய்ந்த அரும்புகள் என்றும், கற்பகத், தருவின், கொழுநனை, என்றால் கற்பகத் தரு வைப்போலக் கேட்டதெல்லாம் கொடுக்கும் திறமையுள்ள கண வன் என்றும் இரண்டு பொருள்படுவதால் நீ எதை விரும்பினாய்

என்று நான் தெரிந்துகொள்ளக் கூடவில்லை. ஆகையால் உன் மனத்திலுள்ளதை ஒளிக்காமல் வெளிப்படையாகச்சொல். அத ணல் உனக்கு யாதொரு தீங்கும் நேரிடாது. ஒருவேளை, நீ சொல்லப்போகிற காரியம் என்னுல் முடியுமோ முடியாதோ என சந்தேகிக்கிருயோ. அந்தச் சந்தேகம் நீ கொள்ளவேண்டாம். ஏனெனில் எந்தக்காரியமாக இருந்தபோதிலும் அதைச் செய்து முடிப்பதாகத் தீர்மானிப்பேனேயானுல் அக்காரியம் இதுவரை யில் முடியாமற் போனதில்லை. என்னுலாகாத காரியம் எவரா லும் ஆகாது. ஒருகால் நீ சொல்லுங்காரியம் மாத்திரம் என்னு லேயும முடியாதபடி அவ்வளவு பெரிய காரியம் போலிருக்கிறது. ஆயினும் அதுவும் நடுநிலைமை தவருத உத்தமியாகிய நீ நினைத்த காரியமாகையால் அவசியம் பூர்த்தியாக வேண்டுமேயல்லது வீணுகப் போகக்கூடாதே. அப்படி வீண்போகுமாயின் உலகில் உத்தமத் தன்மைக்குப் பெருமை என்ன இருக்கிறது. நான் ஏதோ பொய் சொல்லி உன்னை ஏமாற்றி உன் மனத்தில் உள்ளதை வெளிப்படுத்தப் பார்க்கிறதாக நீ நினைப்பாய். ஆனுல் நான் ஒருபோதும் பொய சொல்லமாட்டேன். என் வாயிலிருந்து வருவதெல்லாம் உண்மையே. என் மனம் பொய் பேச விரும்பின் போதிலும், நான் வேதாப்பியாசம் செய்திருக்கின்றபடியால் என் நாவினின்று உண்மைதான் வருமேயல்லது என் மனம் நினைத்த படி பொய் வராது. எல்லா உலகங்களையும் படைத்த கடவுளாகிய பிரமனை 'இவ்வுலகங்களில் உண்மையே பேசுபவர் யார் யார்' என்று கேட்டால் அவர் முதலில் எங்களைச சொன்னபிறகு தான் மறறவர் பெயரைக் கூறுவார். ஆகையால் நீ கொஞ்சமேனும் என்னைப்பற்றிச் சந்தேகப்படவேண்டாம். நீ விரும்பியதை இப் போதே சொல்லுவாயானுல் நான் அதை மிகவும் விரைவாக முடித்துக்கொண்டு வருகிறேன்" என்று மிகவும் பரிவுடன் அன்னம் சொல்லிற்று.

தமையந்தி "பொன்னிறம் வாய்ந்த அன்னமே, இவ்வளவு நாழிகை என்னேடு பழகியும் என் நிலைமை உனக்குத் தெரிய வில்லையா? இத்தமையந்தி 'யாழிசை கேட்டுநகி னளன்பால்

வேட்கையுற்றனள்' என்று உனக்கு நன்றாகத் தெரிந்திருக்கலாமே, இதை நான் சொல்லித்தானா நீ தெரிந்துகொள்ள வேண்டுமே? மனங்கலங்கித் தெளிய வகையறியாது திகைக்கின்ற என்னை, என் மனத்திலுள்ள விருப்பத்தை வெளிப்படையாகச் சொல்லும்படி வற்புறுத்துவது உன்னைப்போன்ற முதிர்ந்த அறிவுடையோர்க்கு அழகா'' என்று சொன்னாள்.

இதைக்கேட்ட அன்னம் தமையந்தியின் மனக்கருத்தை நன்றாக அறிந்திருந்தும் ஒன்றும் அறியாதது போலத் தமையந்தியை நோக்கி "வேலபோலுங் கண்ணையுடைய மாதே, நீ 'இத்தமையந்தி, யாழிசை கேட்டுருகி னளன்பால் வேட்கையுற்றனள்' என்று சொன்னாயல்லவா? அதாவது (யாழ் இசை கேட்டு உருகினள் அன்பால் வேட்கை உற்றனள்) இததமையந்தி, வீணையின் நாதம் போலக் கேட்பவர் காதுக்கினிமையை உண்டுபண்ணுகிற நின் வார்த்தையைகேட்டு உருகி, அதனிடத்துண்டாகிய அன்பின் மிகுதியால் அவ்வார்த்தையை மறுபடியும் கேட்க விரும்பினாள் என்றும், (யாழ் இசைகேட்டு உருகு இன் நளன்பால் வேட்கையுற்றனள்) இத்தமையந்தி, அன்னத்தால் புகழ்ந்துரைக்கப்பட்ட நளனது பெருமையை வீணையின் இனிமையான ஓசை போலக் காதிற்கொண்டு அதனால் தமையந்தி உருகி வாடும்படியாகச் செய்த இனிமை பொருந்திய நளனிடத்தே மிகுந்த விருப்பமுற்றனள் என்றும் இரண்டு பொருள்படுவதால் இவற்றில் நீ குறித்துச் சொல்லுவது எது என்று நான் தெரிந்துகொள்ள முடியவில்லை, நான் அனேக நூல்களைக் கற்றறிந்த புலமையினாலே நீ நளனையே விரும்பியதாயச சொன்னதாக வைத்துக் கொள்வேன்; அது அறிவுடையோர் கொள்கையல்ல. ஏனெனில் பெண்களுக்குரிய பயிர்ப்பு என்ற தன்மையினால், அவர்கள் ஒரு விஷயத்தில் பற்றுடையவர்களாக இருந்தபோதிலும் உடனே அதைவிட்டு மாறும் இயல்புடையவர்கள் என்று அறிவான் முதிர்ந்த பெரியோர் கூறுகின்றமையால் நீ குறிப்பாகச் சொல்லும் வார்த்தைகளை நான் அறிந்தும் அறியாது போல் சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. தவிர, உலகமெல்லாம் ஜயித்து ஏக சக்கிரேச்வரனாகத் தருமந் தவறாது அரசுபுரியும் சக்கரவர்த்தியாகிய

நளனுடைய சபையில் நான் போவேனானால் அவனுக்கு என்னி
டத்திலுள்ள அன்பின் மிகுதியால் என்னை அருகிருத்தி நான் எங்
கெங்கு சென்றேனென்றும் ஆங்காங்குள்ள விசேஷ மென்ன
வென்றும் அவன் என்னைக் கேட்குங்கால் நான் போன இடங்
களையும் அவ்விடங்களிலுள்ள விசேஷங்களையும் சொல்லும்போது
இந்நகரத்தையும் உன்னையும் பற்றிச் சொல்லத்தான் வேண்டும்.
அப்போது நீ மிக்க நாணத்தோடு சந்தேகமாகச் சிலவார்த்தைகள்
சொன்னதாக நான் சொல்லுவது தகுதியா? அதைச் சொல்லக்
கொண்டு அம்பலம் ஏறலாமா? இராஜ சபையில் கேள்வி உத்தே
சம் அபிப்பிராயம் என்னும் ஊனமும் நீங்கிய நிச்சயமான விஷயங்
களையே தெரிவிக்க வேண்டும். நிச்சயமாகத் தெரியாதவரையில்
அவ்விஷயங்களை அந்த இடத்தில் சொல்லாமல் முற்றிலும் விட
வேண்டும். நீ இராஜ குமாரியாகையால் மேற்சொல்லியவை
கள் உனக்குத் தெரியாதனவல்ல. மேலும் நீ சொல்லிய வார்த்
தைகளின் தன்மையையும் அவற்றின் குறையையும் உனக்குத்
தெரிவிக்காமல் மௌனமாக நான் உன்னிடத்தில் உத்தரவு
பெற்றுப் போவேனானால், நீ என்னிடத்தில் நளனுக்குத் தெரி
விக்கவேண்டிய விஷயங்களைச் சொல்லி யிருப்பதாகவும், நான்
அவற்றில் ஒன்றுவிடாது நளனிடத்தில் சொல்லி அதற்கு ஆக
வேண்டிய விதமாக முடித்துவிடுவேன் என்றும் நீ நம்பி இருக்க
லாம். ஆனால் நான் எவ்வளவு மன்றாடிக் கேட்டும் நீ சொல்லிய
வார்த்தைகளெல்லாம் பிறர் சந்தேகிக்கும்படியாகவே இருக்
கின்றபடியால் இவற்றை ஒருநாளும் நான் நளனிடத்திற் சொல்ல
மாட்டேன். தவிர, ஸ்திரீகளுக்கு எப்போதும் சுவேச்சை என்ப
தில்லை. அவர்கள் எப்போதும் பிறர் பாதுகாப்புக்குட்பட்டவர்கள்,
அதாவது இளமையில் பிதாவினாலும் வயதில் கணவனாலும்
விருத்தாப்பியத்தில் குமாரராலும் காப்பாற்றப்படுகிறார்கள். அவ்
வாறே, நீ இப்போது மடந்தைப் பருவமுடையவளாகையால் உன்
தந்தைக்குட்பட்டவள். உன் தந்தை உன்னை வேறுயாருக்காவது
விவாகம் செய்து கொடுக்கத் தீர்மானித்தால் நீயும் அதற்குட்பட
வேண்டுமேயல்லது அதற்கு மாறாக நடப்பது உனக்குரிய தர்ம
மல்ல. அப்போது நான் நளனிடத்தில் உன்னைப்பற்றி உத்தேச

மாகச் சொல்லும் வார்த்தைகள் பொய்யாகப்போகுமே, ஒருக்கால் நீயும் இதை மனத்தில் வைத்துக்கொண்டு தான் உன் கருத்தை வெளிப்படுத்தாமல் குறிப்பாகச் சொல்லுகிறாயோ? இப்போது தான் நீ நுட்ப புத்தியுடையவள் என்றும் உன் வார்த்தைகள் விபக்ஷதர்க்கனென்றும் தெரிந்துகொண்டேன். நம்மிருவருக்கும் ஒரே விதமான சந்தேகமிருப்பதால் இந்த விஷயத்தில் நான் முயற்சி செய்வதில் யாது பயன்? ஆகையால் இதைவிட்டு நீ வேறு எதாவது செய்யச் சொன்னால் அதை இப்போதே செய்து முடிக்கிறேன்" என்று தமயந்தியின் மனத்தை ஆராய்வதற்காக வினயமாகச் சொல்லிற்று.

அப்போது தமயந்தி தன் உள்ளக்கருத்தை வெளிப்படுத்தாவிட்டால் அவள் எண்ணம் நிறைவேறாமற் போய்விடுமெனக் கருதி அவளை அதுவரையில் காத்துக்கொண்டிருந்த நாணத்தைச் சற்று விட்டுச் சிறிது புன்னகை செய்து முகத்தை ஒரு புறமாகத் திருப்பிக்கொண்டு பின் வருமாறு சொல்லலுற்றாள். "எல்லாம் அறிந்த அன்னமே, உன் வார்த்தையை வேதவாக்கியமென நம்புகிறேன். உலகில் எனக்குத் தகுதியான கணவன் நளசக்கரவர்த்தியென்றும், நாங்களிருவரும் விவாகம் செய்துகொள்வது தான் தகுதியென்றும், விதி பொருந்தாதாரைக் கூட்டாதென்றும் சொன்னாய். நிற்க, என் தந்தை, எல்லாவற்றிலும் சிறந்து ஒப்புயர்வில்லாத உத்தம குணங்கள் வாய்ந்த இராஜகுமாரனையே எனக்குக் கணவனாகத் தேடுவாரேயன்றி மனம்போன போக்காகச் செய்யமாட்டார். அப்போது, அவர், நீ சொல்லிய நளசக்கரவர்த்தியையே தேர்ந்தெடுக்கவேண்டும். அதனால் நீ நளசக்கரவர்த்தியிடத்தில் என்னைப்பற்றிச் சொல்லும் விஷயம் பொய்யாகாது. விதியும், தன் இயற்கை மாறாமல் இருக்கவேண்டுமானால், நளசக்கரவர்த்திக்கு மனைவியாகத் தகுந்தவளென்று நீ சொல்லிய என்னையே அவரோடு கூட்டவேண்டும். அப்போதும் உன் வார்த்தை வீண்போகாது. ஒருவேளை விதியும் தன் இயற்கைமாறி என் தந்தையும் அதன் வசத்தராய் எனக்கு வேறொரு கணவனைத் தேடி நான் அவனை மணஞ்செய்துகொள்ளுமாறு வற்புறுத்துவாராயின், நான்,

ஐயமுறே னளன்மார்பி லணியலணி ஆவனன்றி
மையல்புரி வேள்வரினு மன்றலந்தார் சூட்டேனே
நெய்யொழுகு வேற்றுதை பிறர்க்களிப்ப நேர்குவனேல்
வெய்யதழற் புகுந்தாவி விட்டேனுரை நிறுத்துவனால்.

எதையும் இடையறாமல் செய்துமுடிக்கும் சதுரப்பாடுடைய அன்னமே! நான் நளனையன்றி வேறொருவரையும் கலியாணஞ் செயதுகொள்வதாக என் மனத்தில் நினைக்கவே இல்லை. அவருக்கு மனைவியாகி அவருககே ஊழியம் செய்யவேண்டும் என்னும் அவாவே மிகுநதிருப்பதால் நீ எனனை எப்படியாவது அவருக்கே மனைவியாகும்படி செயயவேண்டும். இஃது உனக்கு ஒரு பெரிய காரியமல்ல. இதை நீ செயதுமுடிகக வேண்டுமென்று எண்ணஙகொண்டால் இது முடிவுபெறும ஏன்பதற்குச சநதேகமில்லை. வீணாக எனனைப் பரிக்ஷிபபதில் உனக்கு என்ன இலாபம். இச்சமயததில உன்னைததவிர எனக்கு உற்றதுணை யாரிருக்கிறார்கள். இதை நான் வேறு யாரிடததில் தான் சொல்லுவேன. நீ எவ்விதத்திலாவது என்னை நளசசக்கரவர்ததி கலியாணம் செய்துகொள்ளும்படி செய்தால் நான் உயிரோடிருப்பேன். இல்லாவிடில் உலகமுழுதும் அறியும்படியாகத் தீமூட்டி அதில் விழுநது இறநதுவிடுவேன். இவ்விரண்டினுள நான் எதைச செய்வது உனக்குத் தகுதி எனத தோற்றுகிறதோ அதைச செயவதற்குட்படுவேன். அருளின் தனமையை அறிநத உனக்கு நான் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை. உலகததில உயிருக்குச சமானமான உதவி செய்தவர்ககு யாதேனும் ஒனறு சமபவிக்குமாயின் மற்றவர் தம் உயிரையே கொடுததுத் தமக்குச செய்த நன்றிக் கடனைக் கழிப்பா. இப்போது எனனுடைய உயிரைப் பார்க்கிலும் சிறந்த நளச்சக்கரவர்த்தியை நான் கலியாணம் செய்துகொள்ளும்படியாக நீ செயதால் உனக்கு நான் செயயும் பிரதி உபகாரம் யாதுளது? எதைச செயதபோதிலும் நீ செய்வதற்கு ஈடாகுமா? ஆனால் நீ செயயும் நன்றியை மறககாமல் என் ஆயுள்வரையில் உன்னை மறவாது உன் புகழைப் பாடிக்கொண்டே இருப்பேன். ஆகையால் அதிக விரைவாக அச்சக்கரவர்த்தியி

னிடம் சென்று என் எண்ணம் நிறைவேறும்படியாகச் செய்தால் என் உயிர் நிலைக்கும். ஆனால் இன்னும் நான் உன்னைக் கேட்டுக் கொள்வது ஒன்று உண்டு. அதாவது, நீ அவரிடத்தில் என்னைப் பற்றிச் சொல்லும்போது தகுந்த சமயம் பார்த்துச் சொல்ல வேண்டும். அன்னிய அரசர்கள் தாம் செலுத்தவேண்டிய திறையை அளக்கும்போதாவது, அவர்கள் செய்த தவறுதலுக்காக அவர்களைக் கோபிக்கும்போதாவது, இராஜாங்க சம்பந்தமுள்ள ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி மிகவும் நுட்ப புத்தியுள்ள மந்திரி முதலிய பிரதானிகளோடு ஆலோசனை செய்யும்போதாவது, மிகவும் நுட்பமான பொருளமைந்துள்ள நூல்களை ஆராயும்போதாவது, இவைபோன்ற இன்னும் மற்ற எந்தச் சமயத்திலாவது அரசர்களிடத்தில் வேறு விஷயங்களைப் பற்றிப் பேசக்கூடாது. அப்படிப் பேசுவது பெரும்பிசகு. அக் காரியமும் முடிவுபெறாது. அரசர்கள், தம்மிடத்து எவ்வளவு நெருங்கிய அன்புடையவரையும், அவர் ஒரு சிறிது தவறுவாராயின் முன்பு அவரிடத்திலுள்ள அன்பை முற்றிலும் மறந்து அவருக்குக் கடுந்தண்டனை வி[illegible] டுத்து விலக்குவார்கள். அரசர் கேண்மை ஒரு கூரிய வாளின் மேல் நகருவது போலாகும். ஆகையால் அச்ச[illegible]த்தில் வேறு கவலையின்றிச் சந்தோஷமாகத் தனியே உன்னோடு வேறுபாடின்றி வார்த்தையாடும் சமயமறிந்து என்னைப்பற்றி அவர்மனம் இரங்குமாறு தெரிவிக்கவேண்டும். உனக்கு நான் அதிகமாகச் சொல்லவேண்டியதில்லை. தூதுபோகிறவர்கள் அதிக நுட்ப புத்தியுடையவர்களாகவே இருப்பார்கள். அவர் பிறர் மனத்திலுள்ளவற்றை அவர்கள் வெளிப்படுத்துவதற்கு முன்னமே மெய்க் குறிப்பாலுணர்ந்து அவற்றை முற்றிலும் சொல்லுந்திறமை யுடையவரே ஆவர். அப்படியே நீயும் என் நிலைமையை முற்றிலும் அறிந்திருப்பாய். ஆகவே,

வாவி யுறையு மடவனமே யென்னுடைய
ஆவி யுவந்தளித்தா யாதியால்—காவினிடைத்
தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி யென்
பார்வேந்தன் பாவை பதைத்து. [றுரைந்தாள்

அவரிடத்தில் அதிக விரைவாகச் சென்று என் நிலைமையை முற்றிலும் தெரிவிக்கவேண்டியது உன் கடமை' என்றாள்.

அன்னம் தமயந்தி பேசிய இனியவார்த்தைகளைக்கேட்டு மனந் திடப்பட்டு மகிழ்ச்சியடைந்து அவளைப் பார்த்துச் சில வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கிற்று. "தமயந்தி, உலகத்தில் அபூர்வமான அழகுடையவர் எவராயினும் அவர்களிருவருள் இயற்கையாகவே ஒருமித்த மனஒற்றுமை உண்டு என்று சொல்வதுண்டு. அதாவது ஒரு சமயத்தில் ஒருவர் மனத்தில் தோற்றும் விஷயங்கள் அப்படியே மற்றொருவர் மனத்திலும் கண்ணாடியில் வஸ்துக்கள் பிரதிபிம்பிப்பது போலத் தோன்றும். அதுபோல நீ உண்மையாகவே நளனை விரும்புவதாக இருந்தால் நளனுக்கும் உன்னிடத்தில் உண்மையான விருப்பம் இயற்கையாகவே உண்டாகும். இதற்காக நம்மில் ஒருவர் தூதுபோக வேண்டுமென்பதே அவசியமில்லை. தவிர, நீ உன் மனத்தில் உள்ளவைகளை மறைக்காமல் என்னிடத்தில் சொல்லியபடியால் நானும் உன்னிடத்தில் கபடமின்றிப் பேசுகிறேன். ஒருநாள் நளன் எம்மை நோக்கித் 'திரிலோகங்களிலும் அழகாற் சிறந்த பெண்ணரசி யாராக இருக்கலாம்' என்று கேட்டபோது நாங்களெல்லோரும் ஒரே மனதாய் உன் பெயரையே சொன்னோம். அன்றுமுதல் அவனுக்கு உன் ஞாபகமே அதிகரித்து உன்னையே அவனுடைய உயிரென்றும் அவனுக்கு உற்ற துணையென்றும் அவனுக்கு அழியாத் தன்மையைக் கொடுக்கும் அமிர்தமென்றும் நினைக்குந்தோறும் மனமகிழ்ந்து உன்னை அடையப் பெருமையால் துக்கித்து வெளியிற் சொல்லவும் வெட்கித் தன் மனத்திலேயே வைத்து மறுகுகிறான். இதுமட்டோ, மும்மதமும் பொழிய உத்தம இலக்ஷணங்கள் வாய்ந்து வெற்றிபெற்ற பட்டத்து யானையின் மேல் உலா வரும்போது ஆடவரும் பெண்மை விரும்பும்படியான அழகுவாய்ந்த நளனுக்கு இதுகாறும் கிட்டாத பொருளும் அது கிடைக்கப் பெருமையால் உண்டாகும் கவலையோடு கூடிய விருப்பமும் உண்டாகாதபடி எல்லாம் நிறைந்திருந்தும் நீ இல்லாத ஒரு குறையால் தினந்தோறும் உடல் வாடிப் புதிதுபுதிதான மெலிவோடு தோற்றுகிறான். உன் உருவெளித்தோற்றம் தோற்

அன்னம் தன்னைவிட்டுப் பிரிந்தவுடன் தமயந்தி மனம் வருந்தித் தன் கண்ணுங் கருத்தும் அதனைப் பின் தொடர்ந்து செல்ல அதைப் பார்த்தவண்ணமாகவே அனலிலிட்ட பொற் பாவை போலுருகித் துக்ககடலில் மூழ்கினவளாய்த் தத்தளிக்கும்போது அவளுடைய தோழிமார்களும் செவிலித் தாயரும் அவளைத் தேடிக்கொண்டே வந்து அம்மரத்தடியிற் கண்டார்கள். அப்போது தமயந்தி மிகவும் வாட்டமடைந்திருப்பதைக் கண்டு அவர்கள் "எம் குலதெய்வமே, மிருதுவான புஷ்பங்களின்மேல் நடக்கும்போதும் சிவந்து கனிந்து போகும்படியான மென்மை வாய்ந்த பாதத்தாலே வெறுந்தரையில் ஒரு சாமானிய அன்ன பக்ஷியைத்தொடர்ந்துவந்தது தமக்குத் தகுதியா. தம்மை எம்மைப் போன்ற சாமானிய ஸ்திரீகளோடொத்து எண்ணுதல் கூடுமோ. தாம் எமது ஐயன் வீமராஜன் அனேக காலமாகச்செய்த தவத் தாலடைந்த வரத்தால்பெற்ற இலக்ஷ்மீயல்லவோ. தாம் இவ் வித வாட்டத்தையடையக் காரணம் என்ன? தம்முடைய கை, முகம், கண்கள் இவற்றைத் தாமரைமலர்களோ என வழக்கமாக வந்துவிழும் வண்டுகளை ஓட்டினதினாலேயோ அல்லது இவ்வளவு தூரம் நடந்துவந்த களைப்பினாலேயோ தமது தேகம் இவ்வளவு வாட்டத்தை அடைந்திருக்கிறது" என்று மனம் கலங்கிக் கேட்டார்கள்.

அதற்குத் தமயந்தி ஒன்றும் பேசாமலிருந்தபடியால் அவ்ளுடைய செவிலித்தாயார் மனம் நடுங்கி அவளுக்குச் சித்தந்தெளிய விபூதியணிந்து, ஒருவேளை வனதேவதைகளின் சேட்டையோ என நினைத்து மஞ்சள்நீர் ஆலத்தி எடுத்து அவளை ஒருவித தோஷமும் அணுகாமற் காக்கும்படி அவரவர் குலதெய்வங்களைப் பரவித் துதித்துத் தமயந்தியைத் தாமே அரண்மனைக்கு அழைத்துப் போய் இலக்குமியைத் தாமரைப்புஷ்பத்தில் சேர்ப்பதுபோல் அழகிய கட்டிலின்மேல் பஞ்சணைகளைப்பரப்பி அப்படுக்கையின்மேல் மிருதுவான புஷ்பங்களைத் தெளித்து அவள்தேகத்துக்கு எவ்வித துன்பமும் உண்டாகாதபடி அவளையதிற் படுக்கச்செய்தார்கள். தமயந்தி அதிற்படுத்துத் தன்னை முற்றிலுமறந்து அன்னம் சொல்லிய வார்த்தைகளையே சிந்தித்துக்கொண்டிருந்தாள்.

இங்கு இவ்வாறிருக்கத் தமயந்தியிடத்தில் உத்தரவு பெற்றுப் போன அன்னம் தான் மேற்கொண்ட காரியம் கைகூடிற்றே என்றும், அரசன் தனக்கு உயிர்ப்பிச்சை கொடுத்ததற்குப் பதிலாக அவன் தன் உயிராகவே நினைத்திருக்கும் தமயந்தியை அவனுக்கு மனைவியாகும்படி செய்து தன் நன்றிக் கடனைக் கழித்துவிட்டதாகவும் மனமகிழ்ந்து தான் கடக்கவேண்டிய தூரத்தைக் கூப்பிடு தூரமாக நினைத்துச் சிரமம் கொஞ்சங்கூடத் தோன்றாமல் நளனை எப்போது பார்த்து இந்தச் சந்தோஷமான சமாசாரத்தைத் தெரிவித்து அவன் மனத்தைத் தேற்றுவதென்று அதிவிரைவாக ஆகாயமென்னும் கருமையான கடலில் போன இலைந்தாற்போல நிடதநாட்டை நோக்கிப் பறந்து வந்துகொண்டிருந்தது.

அன்னம் தன்னைவிட்டுப் பிரிந்து போனபிறகு நளன் தனது ஆப்த நண்பரையுந் துறந்து கண்ணுறக்கமின்றித் தான் தூதாக அனுப்பிய அன்னம் அதுவரையில் வராமலிருக்கக் காரணம் என்னவென்று ஆகாயத்தில் மின்னற்கொடியைக் காணுந்தோறும் அன்னந்தான் வருகிறதோ என்று அவசரமாக எழுந்து எதிர்கொண்டழைப்பவன்போலப் பார்ப்பதும் பின்பு அவ்வொளி ஆகாயத்திற்றோன்றும் மின்னற்கொடி என்று அறிந்து அயர்ந்து படுப்பதுமாக அன்னம் வருமவழியைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

வழிமேல் விழிவைத்து வாணுதலா ளூம
மொழிமேற் செவிவைத்து மோகச்—சுழிமேற்றன்
நெஞ்சோட வைத்தயர்வான் கண்டா னெவோனில்
மஞ்சோட வன்னம் வர.

அப்போது ஆகாயத்தில் மிகவும் விரைவாக வந்துகொண்டிருந்த அன்னபக்ஷியைக் கண்டவுடன் அதைத் தன் இரண்டு கண்களாலும் உட்கொள்ளுபவன் போலப் பார்த்துப் பின்வருமாறு கருதலுற்றான். “இவ்வன்னம், என்னிடம் வந்தவுடன், தான் தமயந்தியைக் கண்டதாகச்சொல்லி என் உயிரைக் காக்குமோ அல்லது வேறுவிதமாகச்சொல்லி என் உயிரைப் போக்குமோ. ஒருக்கால் அநேக காவலோடு கூடிய அந்தப்புரத்திற் சென்று

தமயந்தியைத் தன்னிடம் சேரமுடியவில்லை என்று மொழியுமோ. ஒருவேளை, தமயந்தியானவள் கனவிற் கண்டபடி அவளவர விலையில்லா வைரவுருமணியை அடைக்கப்பட்ட வேறொரு அரசனுக்குக் கொடுப்பதாக நடத்தி, ஏனைப்பகுதியையும் வைத்தாகி விட்டதாக நினைத்துப் பேசியபடி அப்படிச் செல்லாமல் திரும்பிவிட்டதாமோ என்று ஏதோ எனை விஷயமென்ற தீயும் சொல்லப்பட்டதோ அதனுக்குத்தும் தகுந்த மணவாளனை அலகையாய தமயந்தி என்னை வெறுத்ததாக விளம்புமோ; அந்தத் தமயந்தி வேறொரு புருஷனைக் கணவனாகக் கொள்ளதாக மனத்தில் நினைத்துப் பட்டப்படியால் என்னும் ஒருவரை நினைப்பதா பதிவிரதைக்கு அழகல்லவென்று அவள் சொன்னாளாய் நவிலுமோ; அந்த அன்னப்பறவையே தன் பெட்டையை நினைத்து நினைத்துப் பாடிப் பறந்து திரும்பித் திரும்பி வந்து கொண்டிருக்கிறதோ, அது தமயந்தியிடம் போயிருந்தால் இவ்வளவு நேரம் திரும்பி வருமோ" என்று பலவாறாக மனம் பதைபதைக்க அன்னம் வருமாகையில் காத்துக்கொண்டிருந்தான்.

அன்னமானது நளனுடைய அரண்மனைக்கு நேரேவந்து கீழே இறங்கி நளனிடத்தில் நெருங்கியபோது, அவன் "அன்னமே, தமயந்தியை முடிவு செய்து கொண்டு வந்தாயோ?" எனக் கேட்டான்.

அப்போது அன்னமானது "அரசே, நீ வருந்தவே வேண்டாம். உன் பொருட்டுச் சொல்லிக்கொண்டு போனால் எந்தக்காரியம் முடியாமற்போகும். உன்னைப்பற்றிச் சொன்னவுடனே தமயந்தி பூரண சந்தோஷத்துடன் சம்மதித்து உன்னைத்தவிர வேறொருவரையும் விவாகம் செய்து கொள்வதில்லையென்று உறுதியாகச் சொல்லியிருக்கிறாள். இனிச் சந்திரசூரியர்கள் தமது கதிமாறித் தெற்கு வடக்காக ஓடினபோதிலும் அவள் வார்த்தையும் மனமும் மாறா. நீ சிறிதும் கவலை கொள்ளவேண்டாம். உன்னிலுஞ் சிறந்தவன் ஒருவன் உலகத்திலிருந்தாலல்லவோ சந்தேகப்பட வேண்டும். தமயந்தி உன் மனைவியாகிவிட்டாளென்று உறுதியாக நினைத்துக்கொள்" என்று சொல்லிற்று.

இதைக்கேட்ட நளன், இழந்தபொருளை அடைந்தவனைப்போலவும், கரிய நீர்க்கடல் பெரும்புயலால் அலைப்புண்டு கரைகாணாது தத்தளிக்கும் ஒரு கப்பலோட்டி கருத்த தரை தோற்றினாற்போலவும், உதவியின்றி வழுக்கிவிழும் ஒருவனுக்கு ஒரு ஊன்றுகோல் கிடைத்தாற்போலவும், மனமகிழ்ந்து பூரசனை தெரிந்து இவ்வையில் ஒருவரும் உண்டிராத அமுதத்தை உண்டவனைப்போலக் களிப்புற்று முகமலர்ச்சியடைந்தான். பின்னும் அன்னமானது அவளது பிறந்த அழகையும் அவளுக்கு இப்போது நளனால் ஏற்பட்டிருக்கும் துக்கத்தையும் சொல்லச் சொல்லக் காதல் மிகுந்து, ஐயோ! அன்னமானது அவளைப்பற்றிச் சொல்லுவதைச் சீக்கிரமாக முடித்துவிடுமோ என்று மேலும் மேலும் கேட்டதையே கேட்டுக்கொண்டிருந்தாலும் அவற்றைக் கேட்குந்தோறும் உண்டாகும் காதல் மிகுதியால் ஆனந்தம் மேலிட்டுத் தன்னை விட்டுத் தமயந்தியிடத்தில் சென்ற உயிரும் கொஞ்சம் கொஞ்சமாகத் தன்னை வந்தடையக் கடைசியில் முற்றிலும் உயிர் பெற்றவனாய் மேல் நடக்கவேண்டியவற்றை ஆலோசித்துக் கொண்டிருந்தான்.

இங்ஙனம் இவ்வாறிருக்கத் தமயந்தி தன் மலரணையில் போய்ப்படுத்தும் உறக்கமின்றி, ஆகாரத்தை வெறுத்து நளன் எப்போது தன்னை வந்து கலியாணம் செய்வானோ என்று கவலை மேலிட்டு மனத்துக்கு இனிமையை உண்டாக்கும் சந்திரன் முதலியவற்றை வெறுத்துத் தோழியரோடு விளையாட்டையொழித்து, ஐம்புலன்களையும் அடக்கிப் புறப்பற்றை நீக்கிப் பொருளை ஒன்றையே கருதித் தியானத்தைப் பிரமத்தினிடத்தே செலுத்தும் யோகியைப்போலத் தன் மனத்தையும் உயிரையும் நளனிடத்தே விடுத்து வெறுங்கட்டைபோல மனங்கலங்கிக் கிடந்தாள்.

தமயந்திக்கு உண்டான இவ்வகையான மாறுபாடுகள் ஆச்சரியத்தையாவது அவளுக்கு இகழ்ச்சியையாவது உண்டுபண்ணக் கூடியனவல்ல. ஏனெனில் உத்தமஸ்திரீகளுக்கு உத்தமத் தன்மையென்பது அவரோடு கூடவே பிறந்ததாகும். ஆதலால் அவர்கள் கன்னிகைகளாக இருக்கும்போது அவர்களுக்கு ஒரு ஆடவனிடத்தில் பற்றுண்டாகுமேயானால் அப்பற்று அவனை விட்டு வேறிடத்திற் செல்லாது. அப்பற்றும் நன்னெறியினின்

றம் புருஷர்களெல்லாராகையால் தன் குலத்துக்குரிய பெருமை,
சீலம் முதலியவற்றிற் குறையாத தன்மையுடைய ஆடவனையே
நாடும். அவ்வுத்தமக் கன்னிகைகள் ஒருமுறை தங்களுக்குக் கண
வனை நினைத்துவிட்டால் பிறகு வேறொருவரையும் மனத்தால்
நினைக்கவுமாட்டார்கள். விளையாட்டாகக்கூட வாயால் சொல்லவு
மாட்டார்கள். ஏனெனில் மனம் வாக்கு காயம் என்னும் மூன்ற
னுள் எதேனும் ஒன்றிலும் ஒரு குற்றம் செய்தாலும் அது
குற்றமேயாகுமல்லவா? அவர்கள் அப்பருவத்தில் தமக்குச்
சிறந்த நாயகன் கிடைக்கவேண்டுமென்று பிறைச்சந்திரனையும்
மற்றத் தெய்வங்களையும் வணங்குவதுண்டு. ஆயினும், புஷ்
பங்களிற் சிறந்த தாமரையைப் பக்ஷிகளிற் சிறந்த அன்னம் அடை
வதுபோலவும், அதமப் பறவையாகிய காக்கை யாரும் கசந்து நீக்கு
கின்ற வேம்பை அடைவதுபோலவும் அவரவர் நிலைமைக்கேற்ற
படி விதியானது நிதியும் கணவனையும் நேர்படச்செய்யும். அது
எவ்வாற்றாலும் மாற்றப்படச் செய்யவல்லதில்லை. ஆதலால் விதியே எதை
யும் செய்வதானால் கடவுள் வணக்கம் எதற்காகவெனில், விதி
கடவுள் திருவுள்ளம் பகவத்தாக்ஞை முதலியனவெல்லாம் ஒரே
பொருளைக்குறிக்கும் பலபெயர்களன்றி வேறல்ல. ஆகையால்
கடவுள் வணக்கம் இன்றியமையாததே. இவ்வாறு ஒரு கணவன்
ஏற்பட்டால் அதுவே கடவுளின் திருவுளமென நினைத்து முழு
மனத்துடன் ஏற்றுக்கொண்டு அவனையே தெய்வமுதலிய எல்லா
மென நினைத்து அன்றுமுதல் கடவுள் வணக்கமும் நீங்கும். அத
னால் அவர்கள் மேம்பாடு குறையாது.

தமயந்தியும் உத்தம கன்னிகையாகையால் அதுவரையில்
தான் வழிபட்ட கடவுளின் அனுக்கிரகப்படி நளனையே தன் கண
வனை நினைத்தபடியால் அப்புருஷனைத் தான் அடையும் வரை
யில் எவ்வித சுகத்தையும் நீக்கினாள். அவளுக்கு அதுவரையில்
இனிமையைக் கொடுத்துவந்த புஷ்பங்கள் அப்போது அவளு
டைய தனிமையையும் மனோபாவத்தையும் அறியாமல் இயற்கை
யாகவே விளங்கினமையால் அவற்றை வெறுக்கத் தொடங்கினாள்.
கணவனை வரித்தபின் பிறரை வணங்குவது உத்தமத்தன்
மைக்கு மாறுவுண்டாக்குமென நினைத்து அதையும், தன் கணவன்

இல்லாத காலத்திலும் வித்தியாசமின்றித் தேகத்துக்குக் குளிர்மையைக் கொடுத்து மனதுக்கு உற்சாகத்தைக் கொண்டுபண்ணக்கூடிய பூரணசந்திரனையும் ஒருநாளும் இதுவரையில் அவள் தன் தகப்பன் பாதுகாப்பில் இருந்ததைப்போல தன்னைக் குழந்தையாகவே நினைத்துத் தன் தோழிமாரோடு ஆடலும் பாடலுமாகக் காலங் கழித்தவள். இப்போது தனக்குக் கலியாணப்பருவம் வந்ததால் தான் ஒரு கணவனையும் நிச்சயப்படுத்திவிட்டபடியால் இனி தான் தன் கணவன் வீட்டில் நடந்துகொள்ளவேண்டிய முறையையும் தான் வகிக்கப்போகிற குடும்பத்தை நடத்தவேண்டிய விதத்தையும் நினைத்துத் தன்னை உத்தமமனைவியாகச் செய்துகொள்ளும் விஷயத்தில் கருத்துடையவளாக இருந்தமையால் தன் தோழியரோடு வீண்பேச்சுகளையும் விளையாட்டையும் ஒழித்தாள். தான் நினைத்த கணவனையே கலியாணம் செய்துகொள்ளவேண்டும் என்றும் அதற்கு எவ்வித இடையூறும் நேரிடாமல் மிகவும் துரிதமாக அக்காரியம் நிறைவேறவேண்டுமென அவள் தன் குலதெய்வத்தைத் துதித்து மோனமிருந்தவளைப்போல ஒருவரோடும் பேசாமல் தனியே இருக்கவிரும்பினாள். தான் கணவனாகக்கொள்ள நினைத்திருந்த நளனையே தியானித்துக்கொண்டு அவன் சீரையே சொல்லிக்கொண்டிருப்பதுதான் தனக்கும் தன் குலத்துக்கும் பெருமையுடையதென அறிந்த தமயந்தி அவ்வாறே செய்துகொண்டு வந்தமையால் கனவிலும் அவனுடைய உருவமே அவளுக்கு முன் நிற்கும். அவனைப்பற்றிய புகழ்மொழிகள் இயற்கையாகவே அவள் நாவினின்று பிறக்கும். அவன்பெயரையும் புகழையும்கேட்பதேதான் காதுபடைத்ததின் பயனாகுமென நினைத்துத் தான் வளர்த்த கிள்ளைக்கும் பூவைக்கும் நளனது பெயரையும், நாடுநகர முதலியவற்றையும் நளன் வருகிறானென்றும் சொல்லிக்கொடுத்து அவை அவற்றைச் சொல்லக்கேட்டு ஆனந்தமடைவாள். அவையொழிந்தவையாவும் அவளுக்குக் களிப்புண்டாக்குவதே இல்லை.

உத்தமஸ்திரீகள் தம் கணவரோடு சேர்ந்துவாழுங் காலத்தில் அவர்கள் எதைக்கண்டாலும் அது அவர்களுக்கு இன்பந்தரும். அக்கணவரில்லாத காலத்து இயல்பாகவே கண்ணுக்கினிமையானவைகளும் அவர்களுக்குத் துன்பமுண்டாக்கும்.

அதுமுதல் தமயந்திக்குக் கணவனை ஏற்படுத்தும் தான் அநேகமா
ய்த் தடையாத காலமானபடியால் அவள் கணவருக்குத் தோற்றிய
மேன்மையை அவருக்கு வெளிப்படுத்துகிறாள். அதனால் அவள்
எல்லாவற்றையும் நீக்கினாள். இத்துணையாகத் தமயந்தியிடத்தில்
காணப்பட்டவிட்டால் அவள் உத்தம குணமுடையவளென்றும்
தான் தேர்ந்த கணவனே மேன்மையானவனென்றும் அவளுடைய
நினைப்பவர்களெல்லாம் வேறு எதனால் விளங்கும்.

---

## சுயம்வரப்படலம்.

---

இவற்றை அறியாத தோழிமார் தமயந்திக்கு வேறு
ஏதோ சாபவிசேஷமென்று நினைத்து அவளுக்கு மே
லும் மேலும் குளிர்ச்சியையும் உற்சாகத்தையும் சாதகக வித
மாகப் பரிகரித்து வந்தமையால் அவற்றை அவள் மேலும்மேலும்
வெறுத்தாளே யன்றி அவளது உத்தமகுணங்கள் ஒன்றேனும்
மாறுபடவில்லை. இவ்வாறே தோழிகளும் செவிலித்தாயரும்
தமயந்தியின் நடத்தையில் அவளுடைய நிலைமையை மாற்ற முயன்
றும் அவர்களால் ஆகவில்லை. அதனால் அவர்கள் பயந்து, அவள
நிலைமையை அவள் மாதாவிடத்தில் தெரிவிக்காமல் இருப்பது
பெரும்பிசகென நினைத்து அம்மாதியாரை வணங்கித் தமயந்தி
யின் நிலைமையை முற்றும் தெரிவித்தார்கள். அவள் இதைக்
கேட்டவுடன் மனமகிழ்ந்து தமயந்தியின் தந்தையினிடத்தில்
தெரிவித்தார்கள். வீமராஜன் தன் குமாரிக்கு கலியாணபருவம்
வந்ததைக் கேட்டு ஆனந்தக்கடலில் மூழ்கித் தன் மந்திரிகளையும்
தன் நகரிலுள்ள கலைவல்லோரையும் அழைத்துத் தமயந்திக்
குத் தக்க கணவன் யாவனென உசாவினான். அப்போது அவர்
கள் உலகத்திலுள்ள உத்தம அரசர்களையும் அவர்களுடைய பெரு
மையையும் சொன்னார்கள். வீமராஜன், அரசர்களது பெயரை
மாத்திரம்கேட்டு முடிவுசெய்வதும் சுற்றத்தார் அனுமதியின்றித்

தானே ஒரு ஆடவனைத் தேர்ந்தெடுத்தலும் தாதைதான் நினைத்தபடி மணவருமாய் சொல்லுவாருள. ஏற்போது சிறந்த முதியோரே,

குலம்வேண்டு மென்றிருப்பார் குலத்துள்ளோர்
    கல்வியிற் குறையாளுடைய
பலம்வேண்டு மென்றிருப்பார் தந்தைமார்
    பரந்தபெருஞ் செல்வமுமாம்
தலம்வேண்டு மென்றிருப்பார் தாயமார்கள்
    யவ்வனமு மழகுஞ்சார்ந்த
நலம்வேண்டு மென்றிருப்பார் நாறுகுழற்
    கன்னிமார் நலதனைமிக்கார்.

உலகத்திலே தன்புதல்விகளுக்கு கணவனைத் தேடப்புகும் பிதா ஆடவனைக் கல்வியிற் சிறந்தவனாக இருந்தாலே போதுமானதென்று நினைப்பான். தாய் அவ்வாடவனுக்கு விஸ்தாரமான பூஸ்திதி இருந்தாலே மேலானதென்று கருதுவாள். சுற்றத்தார் அக்குமாரன் நல்ல குலத்தவனாக இருந்தாலே சிறப்புடைத்தென்று செப்புவார்கள். ஆயின் கன்னியாகப்பெண் தனக்கு நேருங் கணவன் மிகுந்த அழகுவாய்ந்த யவ்வனபுருஷனாக இருந்தாலே உயர்வுடைத்தென உன்னுவாள். ஆகையால் ஒருவர்போனவழி ஒருவர் போகமாட்டார்கள். ஆனால் "அன்பு முதற் பலகுணங்களுண்டானாலும் அவனியிலொரு குற்றம் யாவர் மாட்டுந்துன்பமும் உண்டாகாதிராது" என்றதுபோல எல்லாம் பொருந்தி யாவரும் திருப்தியடையும்படியான ஆடவனே கிடைப்பதே அரிது. ஒருக்கால் நான் தேர்ந்தெடுக்கும் ஆடவன் தமயந்தியின் குற்றமற்ற வனப்புக்கு இணையாகவிடின் உலகம் என்னைப் பழிக்குமே. தமயந்தி சாமானிய இராஜகுமாரிகள்போலல்லாமல் தேவர்களும் விரும்பும்படியான உத்தம இலக்கணமுடையவளாக இருக்கின்றாளே. அதனுக்கிணையானநாயகன் ஏற்படாவிட்டால் அவள் வாட்டமடைவாள். அவ்வாட்டமானது என்னையும் என்குலத்தையும் வாட்டுமே. அன்றி, தமயந்தி தானே வேறு எந்த அரசனையாவது மனதில் நினைத்திருப்பதாகச் சொன்னால் அவனைப்பற்றி விசாரித்துப்

பெரும்பாலும் திருபதியாக இருந்தால் அவளிஷ்டப்படியே விவாகம் செய்துமுடிக்கலாம். விவாக விஷயத்தில் பெண்கள் மிக்க இளம்பருவமுடையவரென்றும் அறிவு முதிராதவரென வும் ஸ்வாதந்திரியம் தெரியாதவரென்றும் அவர்களுக்குரிய விவாகத்தில் அவர்கள் அபிப்பிராயத்தை முற்றிலும் அநுசரியாமல் முரட்டாட்டமாய் வரனைத் தேடுகிற பெற்றோர் அப்பெண்ணின் க்ஷேமத்தைக் கருதியவராகமாட்டார். அப்பெண்களினுடைய அபிப்பிராயமும் சில அம்சங்களில் கலந்திருந்தால் அதுவே பொன்மலர் நாற்றமுடைத்துப் போலும். மற்றெல்லாரினும் தமையந்தியைத் திருபதி செய்வதே எனக்குரிய பெரும்பாக்கியமென நான் நினைக்கிறேன். அவள் கண்கலங்குவாளேயானால், என் உயிர்நிலை கலங்கும். இதற்கு யான் யாது செய்வேன். உலகத்தில் பெண்களை மக்களாக அடைவதினும் பெரியகேடு வேறொன்றுமில்லை" என்று வருந்தினேன்.

அப்போது அந்தச் சபையில், உலகத்தில் சகல அரசர்களுடைய பெருமைகளை அறிந்தவரும், பல கலைகளைக் கற்றறிந்து அவற்றின்படி நடப்பவரும், நெடுநாள் தீர்த்தயாத்திரை செய்தவரும், தேச பாஷைச் செய்யுட்களில் வல்லவரும், முகத்திமாத்திரத்தி லிருப்பவர் எல்லாரைப்பற்றியும் முயற்சி செய்பவரும், காரிய உபாயங்களை அறிந்தவரும், யஜுர் வேதத்தில் சொல்லப்பட்ட பலவிதமான யாகம் முதலிய நற்கருமங்களை அறிந்தவரும், புத்திமான்களிற் சிறந்தவருமாகிய ஒரு உத்தம பிராமணர் அரசனை நோக்கிச் சொல்லுற்றார். "அரச, உலகத்திற் புத்திரியைப் பெற்றவர் தாழ்ந்தவரெனப்படில்லை. உதாரணமாக ஒரு சிறு கதையைத் தமக்கு ஞாபகப்படுத்துகிறேன். முற்காலத்தில் பர்வதராஜன் பார்வதியைப் புத்திரியாக அடைந்தான். அதனால் அவனுக்கு திருநேத்திரதாரியும், கங்காதரனும், கபாலியும், பிறைசூடியும், திரிபுராந்தகனும், காலகாலனும், பசுபதியும், காமதகனனும், அறஞ்செய்ய றமாகமுடிந்த தக்ஷயாகவிக்னனும், சர்வேச்வரனுமான சங்கரன் மாப்பிள்ளையாக ஏற்பட நேரிட்டது. அவன் தவமும், மகப்பேறும், நோன்பும், கௌரவமும், பேரின்பமும், புத்திரனைப் பெற்றவர்களுக்குக் கிடைக்குமோ. அவன் இப்பெண்

மசனை அடைந்தசனல்லவா யென்னைப் படைத்தான். அது போல எல்லாகுணங்களுக்கும், இலக்ஷணங்களுக்கும் இருப்பிடமாகிய உன் புத்திரிக்குச் சாமானிய புருஷன் கணவனாகமாட்டான். அவன் எல்லோரினும் சிறந்தவனாகவே இருப்பான். அவனைத் தேவர்களும் புகழ்வார்கள். ஏற்றுமேல் தாரும் மேன்மை அடையலாம். மேலும் நான் தீர்த்தயாத்திரை செய்தகாலத்தில் ஒவ்வொரு அரசருடைய தன்மையை அறிந்திருக்கிறேன். அவர்களிற் சிறந்த சக்கரவர்த்தி ஒருவன் இருக்கிறான். அவன் தொன்றுதொட்டுச் சிறப்புற்றோங்கிய சந்திரகுலத்துட் டோன்றல். அவன் புஜபலபராக்கிரமமுடையவன். அவனுக்குப் பயமேய இல்லை. எப்போதும் நல்லறவனாகவே விளங்குகிறான். அவனழகைப் பார்த்துத் தேவர்கள் இன்றும் கண்ணிமையாதவர்களாக இருக்கிறார்கள். அவன் பொறுமையே வடிவமாகக்கொண்டு பூபாரந் தாங்கும் புண்ணியன். வாய்மை அவனைத் தனக்குற்ற இடமாக்கொண்டு வளர்ந்தோங்கும் மகிமையன். அவனுக்கடங்காதவர்களும், இணையானவர்களும், மேற்பட்டவர்களும் இப்போது இவ்வுலகத்திலில்லை. அவனிடத்தில் சௌரியமும், வீரியமும், கீர்த்தியும், தைரியமும், பராக்கிரமமும், உதாரகுணமும், பெருந்தன்மையும், செல்வமும், அகாரியத்தில் வெட்கமும், தானமும், ஜீவகாருண்யமும், கபடமின்மையும் குடிகொண்டிருக்கின்றன. அவன் அரசர்களிலெல்லாம் உற்சாகமும், உத்தமதேகக்காந்தியும், உடையவன். அவன் நன்றாக நீதியைச் செலுத்துகிறபடியால் அவனுடைய நீதியானது பிறர் அறிவதற்கு அருமையானது. அவன் எல்லா இலக்ஷணங்களும் பொருந்து நல்லொழுக்கத்தால் சிறந்து, பெரியோர்களுடைய வரையறையில் சட்டுப்பட்டுச், சத்தியத்தையும் தர்மத்தையும் முதன்மையாகக் கொண்டு, காலத்தையறிந்து தன்னையும் தன் குடிகளையும் பாதுகாத்து நல்ல நியமம் உள்ளவனாய் ஸாதுக்களுக்குரிய காரியபாகத்தை வகிக்கின்றவன். அந்த உத்தமசீலன் பெயர் நளன் என்று சொல்லுகிறார்கள். அவனே இலக்ஷ்மிபோன்ற உன் குமாரியாகிய தமயந்திக்கு இணையானவன் என நினைக்கிறேன். உலகில் பசுக்கள் முகத்தினால் முகர்ந்து அவைகளுக்குச் சமீபத்தில் உள்ளவற்றை அறியும்;

சாதாரண மனிதர்கள் தமது இரண்டு கண்களாலும் சுற்றிலு முள்ளவற்றை அறிவார்கள். அரசர்கள் தூதர்களால் இப்புவியி லுள்ளவற்றை அறிவார்கள். பிராமணர்கள் எவ்வுலகத்தவையா யினும் அவை எல்லாவற்றையும் வேதங்களாலேயே அறிவார்கள். ஆகையால் என் வார்த்தையைத் தாம் நம்புவதில் பயனுண்டு. தமயந்திக்கும் அதுவே திருப்தியாகவிருக்கலாம். அந்நாளை ய உன் குமாரிக்குக் கணவனைத் தெரிப்பது யாவருக்கும் சம்மத மாகவே இருக்கும். இது தமக்கு உடன்பாடாகாவிடின் க்ஷத் திரியர்களுக்குரிய தர்மம் ஒன்றுண்டு. அதாவது எந்த அரசன் தன்புத்திரிக்கு வரன் தேடவிரும்புவனோ அவன் எல்லாத் தேசங் களிலுமுள்ள அரசர்களுக்கும் திருமுகம் அனுப்பி அவர்களை வரவழை த்து அவர்கள் கூடியசபையில், தன் பெண்ணை அலங்கரித்து அவள் கையில் ஒரு புஷ்பமாலையைக் கொடுத்துப் பிறகு அங்கு கூடிய அரசர்களின் பெயரையும் பெருமையையும் அவளுக்குத் தெரிவித்துத் தனக்கிஷ்டமான புருஷன் கழுத்தில் அம்மாலை யைச் சூட்டச்செய்து அவ்வாறடைந்த அரசனையே அவளுக் குக் கணவனாகக்கொண்டு மணவினை முடிப்பதுண்டு. அன்றேல் உலகத்தில் அரசர்களுக்கு முக்கிய கருவி வன்மை. அதை உடையவனே எப்போதும் மேலானவன். அவன் சொல்லுவதும் செய்வதும் கசப்பாயினும் துவர்ப்பாயினும் அவை எல்லாருக்கும் இனிக்கும். “வல்லான் வகுத்ததே வாய்க்காலென்றும் பெருவழக் குக் கிழுக்குமுண்டோ” என்றபடி அவன் வார்த்தையே சட்டம். அவன் முன்னிலையில் யாவரும் எவற்றையும் பிரதிஷ்டமாகவே கொண்டாடுவார்கள். ஆகையால் அவ்விதம் பலசாலியைக் கண்டறிவ தற்காக மிகவும் பலமுள்ள கருவிகளால் அதிக சூக்ஷ்மமான காரியங்களைச் செய்யச்செய்து அதில் வெற்றியடைந்தவர்களுக்கு அப்பெண்ணை மணமாலை சூட்டச்செய்து மணவினை முடிப்ப துண்டு. இதற்குத்தான் சுயம்வரம் என்று பெயர். இது க்ஷத் திரியர்கள் எல்லாராலும் சகஜமாக ஒப்புக்கொள்ளத் தக்கது. இதுவே தமது குமாரியும் தன்னிஷ்டப்படி கணவனைத் தேர்ந் தெடுப்பதற்குத் தகுந்த உபாயம். இதனால் தமது மனோபீஷ்ட மும் நிறைவேறும். இவற்றில் எது சிறந்ததோ அதைக் கைக்

திவ்விய தேகமுடையவர். அவர் எல்லாப் பிராணிகளாலும் பூஜிக்கப்பட்டு எல்லா வேத வேதாந்தங்களையும் அறிந்து, எக்காலமும் சிறந்த தவத்தையே மேற்கொண்ட பிரம்ம ஞானி. யுக்தியிலும் இராஜரீக சாஸ்திரத்திலும் ஊக்கமுள்ளவர். முனிவர்களுள் மகா முனிவரென்ற கீர்த்தி பெற்றவர். பரத்துக்குப்பரமான பொருளைப் பற்றித் நாமங்களைச் செம்மையாக அறிந்த சுத்த ஆத்மாவுடையவர். அவர் ஆசையைவிட்டு ஐம்புலன்களையுமடக்கிக் கோபமின்றிக் கபடமற்று விளங்கும் பிராமணர், செய்கருமங்களைவிட்ட பாவிகளான பலவகைப்பட்ட பிராணிகளுக்கும் பலவிதமான வேத உபதேசங்களை அனுசரித்து அவரவர்களுக்குத் தக்கவாறு தர்மவிவரத்தை செய்பவர். மனுவாசகுக்காயங்கள் ஓத்து நியாய சாஸ்திர தர்மசாஸ்திரங்களில் நிபுணராய் மேன்மேலும் உயர்ந்த படியிற் செல்லுவார். அவர் குற்றமற்றவர். அழகான குடுமியை உடையவர். எப்போதும் வெற்றி நடப்பவர். அவர் தேவேந்திரனால் கொடுக்கப்பட்ட இரண்டு தூய்மையும் நுண்மையும் பொருந்திய இரண்டு அழகான திவ்விய வஸ்திரங்களையும், அக்கினியையும் சூரியனையும்போலப் பிரகாசிக்கின்ற அழகிய இரண்டு பொற்குண்டலங்களையும் அணிந்துகொண்டு, விமருதயிருந்த ஒளியுடைய வெள்ளிக்குடையைப் பிடித்துக்கொண்டும் யாருக்குங்கிடையாத உயர்ந்த பிரமதேஜஸை யுடையவராகி மகதி என்னும் சிறந்த வீணையுடன் தேவராஜன் சபைக்குப் போய்ச்சேர்ந்தார்.

அப்போது அச்சபையில் தேவதுந்துபி முழங்கின. அநேக வாத்தியங்கள் கோஷித்தன. கந்தருவர் ஏழிசையுங்கூட்டி யாழ் வாசித்தனர். அரம்பையரிற் சிலர் ஆடினர், சிலர் சாமரை முதலியன இரட்டினர். பஞ்சதருக்களும், இருநிதியும், காமதேனுவும், சிந்தாமணியும் அத்தேவராஜனுடைய அருள்நோக்கறிந்து ஏவல் செய்தன. விஞ்சையர், கின்னரர், அவுணர், உரகர், புவியாளுமன்னவர் முதலியோர் இருமருங்கிலுஞ் சூழ்ந்து போற்றினர். சப்தரிஷிகளும் ஆசிகூறினர். அப்போது இந்திரன் ஒரு பக்கத்தில் குற்றுடைவாளை இறுக்கி மற்றொரு பக்கத்தில் மின்னலைப்போல் ஒளிக்கும் வச்சிரப்படையைத் தாங்கி பொன்னுடையைத்தரித்து சர்வாபரண அலங்கிர்தனாய அநேகயோசனைதூரம்

கமழ்ந்து வீசும் கற்பக பூமாலையணிந்து ஒரு வெண்டாமரைக் காடு பூத்தாற்போல ஆயிரம் கண்களும் விளங்க அனேக சூரியர்களை உருக்கி வார்த்தாற்போன்ற ஜோதிமயமான சிம்மாசனத்தில் வீற்றிருந்தான்.

அப்போது தேவேந்திரன், நாரதர் வருகையை வாயில் காப்போரால் அறிந்து, காணக் கிடைக்காத பொருளைக் கண்டவன் போல மகிழ்ச்சி மீதூர எழுந்து சென்று வணங்கிக் கையேந்தி அழைத்து வந்து, அர்க்கியம் பாத்தியம் ஆசமனீயம் முதலியவெல்லாங் கொடுத்து முகமனியம்பி [illegible] மிகச் சிறந்ததான போடப்பட்ட ஒரு பரிசுத்தமான ஆசனத்திருத்தி அவரது திவ்விய தேஜஸைத் தனது ஆயிரங் கண்களாலும் நோக்கி பின் வருமாறு சொல்லலுற்றான்: "மகாமுனிவரே! பகை செற்றம் நீங்கிய மனத்தினரே! யாவர்க்கும் அறிவதற்கரியவரே! கற்றறிந்தவரின் அறிவை அளப்பதற்கு எல்லையாக உடையவரே! துவைதமென்பதைத் தெரிந்தேனும் அறியாத ஞான சாகரமே! தாம் வெகு காலமாக என்னையும் என்னுலகத்தையும் ஞாயிற்றைக் காணாத கமலம் போலாகச் செய்யும்படி நான் தமக்கிழைத்த தவறுண்டோ? தாம் எங்கெங்கு சென்று என்ன என்ன விசேடங்கள் கண்டு வந்தீர்? தாம் சென்ற இடங்களில் நான் தெரிந்து கொள்ளக்கூடிய விசேஷங்கள் எவையேனுமுண்டோ? நிற்க, எனக்குக் கொஞ்ச காலமாக ஒரு குறை ஏற்பட்டிருக்கிறது. அதைத் தடையின்றிச் சொல்லிக் கொள்ளத் துணிகிறேன். ஏனெனில் அக்குறையை நீக்குதற்குத் தம்மையன்றிப் பிறர் ஒருவருமில்லை. தமதருளால் எனக்கு எல்லாவித போகங்களும் நிறைந்திருந்தும் சிலகாலமாக அதிதி பூஜையே நடைபெறவில்லை. ஏனெனில் எனக்கு அதிதிகளாவோர்கள் பூவுலகத்தில் யுத்தஞ் செய்து மானத்தையே ஆபரணமாகக் கொண்டு யுத்தகளத்தில் புறங்கொடாது உயிரை இழந்து சுவர்க்கத்தை அடையும் வீரர்களல்லவா! விருந்தில்லா உண்டி வேப்பங்காயன்றோ? சருகையுண்ணும் முனிவரும் விரும்பாரென்னுவர். எப்படிப்பட்டோராலும் அடையப்பெறாத அமிர்தமுண்ணும் நான் விருந்தின்றி உண்ணுவது விதியோ? பூவுலக அரசர்கள் யுத்தஞ் செய்வதையே விடுத்து

விட்டார்களா? அருட்கடலே! தாமதத்தை கூர்ந்து என் மனமறுக்கந் தீர இவ்விஷயத்தைப் பற்றி திருவாய்மலர்ந்தருள வேண்டும்."

நாரதர் இந்திரனுடைய வைபவத்தையும் போகானுபவத்தையும் கண்டு களிகூர்ந்து அவனது இனிமையான பிரிய வசனங்களைக் கேட்டு பரமசந்தோஷமடைந்து அவனை நோக்கி "தேவபதி! உனக்கு ஒரு குறையும் நேரிடாது. நான் பூவுலகத்திலுள்ள புண்ணிய தீர்த்தங்களை நாடி யாத்திரை செய்ததால் இங்கு சிலகாலமாக வரக்கூடவில்லை. இப்போது பூவுலகத்து அரசர்களெல்லோரும் யுத்தத்தை மறந்திருப்பது உண்மையே. என்னெனில் பூமியிலுள்ள நாடுகளில் விதர்ப்பம் என்றொன்றிருக்கிறது. அதையாளும் மன்னன் வீமன் என்னும் பெயருடையவன். அவனுக்குத் தமயந்தி என்னும் பெயருடைய ஒரு புத்திரி இருக்கிறாள். அவளுக்கிணையான மாது இப்போது எவ்வுலகிலுமில்லை. அவளழகை மெச்சாதார் மண்ணிலும் விண்ணிலும் இல்லை. இத்தேவலோக மாதர் அப்பெண்ணரசியின் ஏவல்செய்யும் பெரும்பேற்றை அடையவும் தகார். அவள் தனக்கென ஒரு நாயகனை மனத்தால் வரித்திருக்கிறாள். அதை அவள் தந்தையும் அறியான். அதனாலே அப்பெண் சுயமாகவே நாயகனை வரித்துக்கொள்வதற்காக அவள் தகப்பன் இறைமகற்கேற்றார் சுயம்வரமென பூவுலகத்தரசர் யாவர்க்கும் திருமுகமனுப்பியிருக்கிறான். அத்திருமுகங்கண்ட அரசர் யாவரும் ஒருமுகமாய் முன்னிட்டுப் போகமும் அமிர்தமும் அவள் குதலைமொழிக்கே ஈடாகாவென நினைந்து வீமராஜன் பட்டணத்தை நோக்கிச் செல்லுகின்றனர். ஆகையால் இப்போது யுத்தத்தை யாவரும் முற்றிலும் மறந்தேவிட்டார்கள். அவளை மனைவியாக அடைபவன் பெரும் பாக்கியசாலியாக இருக்க வேண்டும். அவன் சுவர்க்கபோகத்தையும் இகழ்வானென்பதற்கையமில்லை. அவளைத் தேவர்களடைந்தாலும் அவர்களும் மேம்பாடடைவர். 'கல்வி ஸ்திரீ இரத்தினம் ஆகிய இவற்றை எவரிடத்தில் இருந்தாலும் அடையலாம்' என்பது ஸ்மிருதி வாக்கியமாகையால் உனக்கு அப்பெண்ணரசியை அடைய

கொண்டே மற்ற நாடுகளுக்குச்சென்ற சிரமம் நீங்கப் புதிதான உற்சாகமும் ஊக்கமு மேலிட்டவர்களாய் அந்நாட்டின் தலைநகராகியதும் தன்னை அடைக்கலமாக அடைந்த தமயந்தியின் மனதையும் உயிரையும் தன்னைவிட்டு நீங்காது பாதுகாத்துவரும் பரோபகாரியாகிய நளசக்கரவர்த்தியின் பாதத்தைச்சுமந்ததால் பொற்பொலிவு பெற்றதுமாகிய மாவிந்த நகரத்தை அடைந்தார்கள். அதை அடைந்தவளவில் அத்தூதர்களுக்கு அதுவரையில்லாத ஓரானந்தம் திடீரென உண்டாயிற்று. அதற்குக்காரணம் அறியாதவர்களாய் அந்நகரத்தினுட் பிரவேசித்துச் செல்லுகையில் தமயந்தி வசிப்பதற்கேற்ற நகரமும் அவளை ஏற்றுக்கொள்ளும் புனிதமான நகருமா இப்பூமண்டலத்தில் இதொன்றேயெனத் தமக்குள் தீர்மானித்து மன்னர்பிரானாகிய நளனை அணுகி வணங்கித் தெண்டனிட்டுக் கைகட்டி வாய்புதைத்து நின்று திருமுகத்தைச் சமர்ப்பித்தார்கள்.

அதைப்பார்த்தவுடனே நளன் என்றுந் தெவிட்டாத ஆனந்த சாகரத்தில் மூழ்கினவனாய்த் தன் முன்னோர்செய்த தவப்பயன்தான் எதிர்பாராதவண்ணம் கைகூடினாற்போலக் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருகத் தமயந்தியின் வனப்பைக்கேட்டது முதல் மெலிந்த புயங்களினின்று நழுவிக்கொண்டேயிருந்த அங்கதங்கள் (தோள் வளைகள்) திமிர்ந்து இறுகுமாறு இரு புயங்களும் பூரிக்க முகத்தில் புதிதான திவ்யதேஜஸ் பிரகாசிக்கத் தன் தேககாந்தி முன்னிலும் இருமடங்கதிகரிக்க அத்திருமுகத்தைப் பன்முறை புரட்டிப் புரட்டிப் பார்த்துத்தமயந்தியினிடத்துச் சென்றிருந்த தன் உயிர் திரும்பவும் தன்னை வந்தடைந்தாற்போல அதை வேறொருவர் தொடவும் சகிக்காதவனாய்த் தனது புஷ்பம் போன்ற கையில் வைத்து அதைப் பார்த்துப் பார்த்துப் பரிவு மிக்குப் பக்குவமாய்த் தன் பக்கத்தில் வைத்துக்கொண்டான்.

பின்பு நளன் அத்திருமுகத்தைக் கொணர்ந்த தூதர்கள்மீது அன்புமிகுந்து தயவாகவே அருளொடு நோக்கிப் பிரிய வசனஞ் சொல்லி அவர்களுக்கு வேண்டியவற்றையெல்லாம் அவர்கள் மனம் வெறுக்க நல்கி அவர்கள் விலாப்புடைக்க உண்ணுமாறு

அறுசுவையோடு உண்டியளித்து மகிழ்வித்து அவர்களைத் தங்கள் தேயத்துக்குச் செல்ல உத்தரவு கொடுத்தனுப்பினான்.

நளனுடைய மந்திரிமார் முதலியோர் களிப்பினால் மிகுந்து ஒளிவீசும் அவனது திருவாயினின்று யாது பிறக்குமோ என வேறு கவலையின்றித் தமது ஐம்புலன்களையும் மனத்தையும் அவனிடத்தே பொருத்திக் காத்துக்கொண்டிருந்தார்கள். அப்போது நளன் சோடச கலைகளோடு கூடிய பூரண சந்திரனைப் போல விளங்குகின்ற முகத்தோடும் ஆடவர்மனத்தையும் வாட்டும் சிருங்காரமான புன்னகையோடும் தன் மனத்தின்படி தனக்கு இதத்தை விளைவிக்கின்ற தன் கையிலுள்ள வேலாயுதம் போலத் தன் நன்மையையே அல்லும் பகலும் நாடும் பெருமிதம் வாய்ந்த அமைச்சர்களை யன்புடனழைத்துப் பின் வருமாறு சொல்லலுற்றான். "என் புகழுக்கும் செங்கோன்மைக்கும் இன்றியமையாத ஐயன்மீர்! உங்கள் மனம் என்றும் சத்தியத்தையே நாட்டும். இப்போது விதர்ப்ப நாட்டரசனாகிய வீமராஜன் செல்வக்குமாரியாகிய தமயந்தியின் சுயம்வரத்தை இற்றைக்கேழா நாளில் நடத்துவதாக நிச்சயித்திருப்பதெனத் திருமுகம் கிடைத்திருக்கிறது. அதற்கு நான் அவசியம் போகவேண்டுமென விரும்புகிறேன். அதற்காகச் சதுரங்க சேனைகளையும் திட்டம் செய்ய வேண்டும். கால தாமதஞ் செய்வது தகுதியன்று. ஏனெனில் 'காலத்தில் செய்யாத காரியம் கைகூடாது' என்பது உலகப் பிரசித்தமானதல்லவா"

அதைக் கேட்ட மந்திரிமார்கள் அவன் ஆணையைச் சிரமேற்கொண்டு வெவ்வேறு சேனைத்தலைவர்களுக்கும் அறிவித்தார்கள். அத்தலைவர்கள் பேரானந்தங்கொண்டு தத்தமக்குரிய சேனையை அலங்கரிக்கப் புகுந்தார்கள். அவர்களுள் தேர்த்தலைவன் அனேக ஆயிரம் மேருமலைகளை ஓரிடத்தில் ஒழுங்குபெற வைத்தாற் போலத் தேர்ச்சாலைகளினின்று அனேக தேர்களை வெளிப்படுத்தி அவற்றின் உறைகளை நீக்கிச் சக்கரம் முதலியவற்றிற்கு அலங்காரமான வர்ணங்களைப் பூசிப் பொற்படியமைத்துப் பொன்னாற்செய்யப்பட்ட தேர்த்தட்டு குத்துக்கால் மேற்கட்டி முதலியவற்றிற்கு

உள்ளும் புறமும் நெருங்கிட்டுப் பல விலையுயர்ந்த முத்துமாலை களைத் தொங்கவிட்டு உச்சியிற் பொன்னாற் செய்து பலவகைக் கற்களால் அலங்கரிக்கப்பட்ட சிகரமும் அமையச் செய்தனர். அத்தேர்களில் நல்ல தேரிற்பூட்டிய சப்தசாமபுரவியோ எனச் சந்தேகிக்கும்படி விலையுயர்ந்த ஆபரணங்களால் அலங்கரிக் கப்பட்டுப் பொற்கடிவாளங்களையும் பொற்சரிகையாற் பின்னப் பட்ட கடிவாளக் கயிறுகளையுமுடைய நன்னான்கு குதிரைகளைப் பூட்டினார்கள். இவ்வாறலங்கரிக்கப்பட்ட தேர்களில், எஃகினாற் செய்யப்பட்டுப் பொன்னினாலும் வெள்ளியினாலும் மேலுறையிடப் பட்ட கவசமணிந்து விரல்களில் தோலுறையிட்டுச் சரிகை தலைப் பாகை அணிந்து இடதுபுறத்தின் பின்புறத்தில் அம்பறாத்தூணி விசித்து அநேக ஆயுதங்களைத் தேர்களில் ஒவ்வொரு பக்கத்தில் அமைத்துப் பொன்ற பெரிய விற்களைத் தாங்கி களிப்பின் மிகுதியால் பிரகாசமான முகத்தையுடைய ஆயிரக் கணக்கான வீரர்கள் அந்தத் தேர்களில் அமர்ந்து அநேக சூரியர் களைப்போல விளங்கினார்கள்.

யானைத்தலைவர்கள் திக்குயானைகளை வெருண்டோடச்செய் யும் வலிமிகுந்த உன்னதமான அநேக யானைகளை நீராட்டிப் பொன் தகட்டில் இரத்தினங்களால் மத்தகம்போல் இழைக்கப் பட்ட முகபடாங்களை அவற்றின் நெற்றியிலணிந்து கன்னங்களி லும் துதிக்கையின் மேற்புறத்திலும் கண்கவரும் வர்ணங்களி னால் சித்திரமெழுதி நெற்றியின் மேற்புறத்தில் நீலகாந்தி அத னடுவில் பொற்றிலகமிட்டு அநேக சரிகை இழைகளால் முறுக் கப்பட்ட பலபுரிகளாலாகிய கழுத்துக் கயிறணிந்து தங்கப் பிடி களையுடைய அங்குசங்களைக் காதில் தொங்கவிட்டுக் கால்களில் தண்டையணிவித்துச் சரிகையினாலும் முத்துக்களினாலும் ஓரங் களிலும் இருபுறத்தானைகளிலும் விசித்திரமான வேலைப்பா டமைந்த விலையுயர்ந்த படங்களை அவற்றின் முதுகிற் சாத்திப் பொன்னாலும் வெள்ளியினாலும் செய்யப்பட்ட அம்பாரிகளை அவற்றின்மேல் அமைத்தார்கள். அவ்யானைகளில் ஆண்யானை களின் மேல் அநேக யானைபலம் பொருந்திய அலங்காரமான வீரர்கள் அமர்ந்தார்கள். அவ்வாறே பெண்யானைகளின்மேல்

உத்தம இலக்ஷணம் வாய்ந்த அனேக ஸ்திரீகள் ஆரோகணித்து அனேக அரமகளிர் பூலோகத்தை நாடிவந்த தோற்றத்தை உண்டு பண்ணினர்.

குதிரைத்தலைவா யெழுந்த வெள்ளைக்குதிரையும் இவற்றைக் காணுந்தோறும் வெட்கித் தலைகுனியுமாறு உத்தம இலக்ஷணம் பொருந்திய கணக்கற்ற குதிரைகளை நலமுறக் கந்தேய்த்து மகமலபட்டைப்போல் மிருதுவாக்கி அவற்றின் வால்மயிரையும் பிடரிமயிரையும் வாரி ஒழுங்குபடுத்தி அவற்றிற்குப் பொற்கலினமிட்டுப் பலவகைக் கற்களாலான சுட்டியோடு கூடிய நெற்றிப் பட்டம் சாத்திக் கழுத்தில் அனேக முத்துமாலைகளையும் இலைவடிவமாகச் செய்து கோக்கப்பட்ட பொன்மணிமாலைகளையும் இட்டுச் சிறந்த பதனிட்ட தோல்களாலும் பருக்கப்பொதிந்த பட்டுமெத்தைகளாலும் ஆகிய சேணங்களை வைத்து அவற்றோடு பட்டுக் கச்சைகளாலிறுக்கிய சாற்படங்களைத் தொங்கவிட்டு நான்கு கால்களிலும் சதங்கை அணிந்து கடலின் அலைகள்போல் வரிசை வரிசையாக அவைகளைக் கொண்டுவந்து நிறுத்தினார்கள். அவைகளின்மேல் அனேக வீரர்கள் ஆரோகணித்தனர்.

காலாட்படையில் தொன்று தொட்டு அழியாப் புகழமைந்த கணக்கற்ற சூரர்கள் தட்டிச்சல்லடமணிந்து இடைக்கச்சை இறுக்கி உடலிற் சட்டையிட்டுத் தலைப்பாகை அணிந்து கைகளில் தாம் தேர்ச்சியடைந்துள்ள சஸ்திரங்களைத் தாங்கி மதங்கொண்ட யானைகளைப்போல வந்து நின்றார்கள்.

அப்போது நன்னறிய வாசனை ஊட்டப்பட்ட உத்தம தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து தனது இஷ்ட தெய்வத்தை வணங்கிப் பின் இனிப்பு, புளிப்பு, கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு, சருச்சரை என்னும் அறுசுவையோடுகூடிய உணவைப்பாத்திரங்களில் விருந்தோடுண்டு புழுகு மான்மதம் முதலிய வாசனை கலந்த சந்தனம் பூசி ஆனெய்யோடு முகவாசம் (ஏலம் கிராம்பு முதலியன) கூட்டி வாசனையூட்டிய சுவர்ண ரேக்கு கலந்த அடைக்காய்ச் சீவலோடு அப்போதரித்த வெற்றிலைத் தளிர்களை அடைப்பக்காரருதவ விருந்தாக மென்றுகொண்டே அலங்கார

செய்துகொண்டும் அரைக்குட்சென்றான் அடுகேயலங்கரிப்போர் பலர், விசித்திரமான ஆடையாபரணங்களை இருகைகளிலும் ஏந்திக் கொண்டு ராஜன் சோகம் எதிர்செல்லுவோமென அவனை அரு கேணுக்குக் காத்திருந்தார்கள். அப்போது அரசன் அங்குள்ள வைகளிற் சிறந்ததும் அநேக இரத்தினங்களைக் கோத்து வாங்கப்பட்டதுமான ஒரு பட்டு வஸ்திரத்தையுடுத்தி இடையிலே கச்சையிறுக்கி அதனிடத்துப்புறத்தில் பலமணிகளழுத்திய கைப் பிடியுடனேபொன் உறையுமிட்டதுமான வெற்றிபொருந்திய வாளைத்தொங்கவிட்டுக் காலகவசமணிந்து பொன் ஜரிகைகளால் சித்திரிக்கப்பட்ட பாதரக்ஷைகளையும் வீரகண்டையையும் தரித்து அநேகவிலையுயர்ந்த முத்துமாலைகளை மார்பின் குறுக்கே யணிந்து சந்திரஹாரங்களும் நவரத்னங்களால் கோக்கப்பட்ட மாலை களும் நவரத்னங்களால் இழைக்கப்பட்ட மாலைகளும் பதக்கங் களும் மார்பில் துலங்க, விலைமதிப்பில்லாத ஒற்றைக் கல்லா லாகிய கண்டியைக் கழுத்திலணிந்து, விரல்களில் மோதிரங்களையும் முன்கைகளில் பொற்கடகத்தையுமிட்டு, வாகுவலயம் இருத்திக் காதுகளிலே பொன்னாலும் வயிரத்தாலும் மற்றுமுள்ள மணிகளா லும் செய்யப்பட்ட இரண்டு குண்டலங்கள் இரண்டு சூரியர்களைக் கட்டித் தொங்கவிட்டாற்போலத் தூங்க, தலையில் இந்திரனு டைய கிரீடம் போன்றதும் அநேக சூரியர்களை ஒன்றாகச் சேர்த்து வைத்தாற்போல் ஒளிவீசுகின்றதும் இரத்தினங்களுக்கு ஆகரம் (இருப்பிடம்) போன்றதுமான ஒரு திவ்ய கிரீடமணிந்து விலையுயர்ந்த ஒரு பீதாம்பரத்தை உத்தரீயமாகக்கொண்டு தனது வலதுகையில் வேலாயுதந் தாங்கி யௌவன வயதோடுகூடிய நளன் அநேக மன்மதர்கள் சேர்ந்து ஒருருவெடுத்தாற் போலத் திவ்விய அழகும் தேஜஸும் பிரகாசிக்கப் பருத்த தோள்களும் தொடைகளும் சிறந்த யானையின் துதிக்கைபோன்ற கைகளும் இமயமலைபோன்ற வனமையையும் ஆனைபிடிகம் போன்ற சரீரமும் உடையவனாகி மிகவும் உற்சாகத்தோடு மதங்கொண்ட யானை போல நடந்து தன் தேரை அணுகினான்.

அவனுடைய தேரானது, வெண்பொன்னால் செய்யப்பட்ட சக்கரங்களையும் வியப்புதரத்தக்க சிறந்த மணிகளாலாகிய

ஒளிபொருந்திய குடைகளையும் ஆகாயத்தை அளாவும் கொடிகளை
யும் விசையாகக் கட்டப்பட்ட கிணிகிணிகளையும் மேக கர்ஜ்ஜனை
போன்ற சப்தத்தையும் பிரகாசிக்கின்ற ஒளியையும் உடையது.
அதனுள் சிறந்த ஆயுதத் தூணியும் பலவகை அஸ்திர சஸ்திரங்
களும் ஒருபுறத்தில் நிரப்பப்பட்டிருந்தன. அதில் பொன்னாபர
ணங்களால் அலங்கரிக்கப்பட்டு ஒவ்வொன்றும் ஆயுதபாணியாகிய
ஒவ்வொரு வீரனைத் தன் முதுகில் சுமந்து கனைக்கின்ற உவமை
யற்ற அனேக குதிரைகள் பூட்டப்பட்டிருந்தன.

அந்தத் தேரில் நளன் நல்ல முகூர்த்தத்தில் ஏறி அந்தத் தேருக்கு
ஒரு புதிதான அழகை உண்டு பண்ணிக்கொண்டு அமர்ந்தான்.
அப்போது பிராமணர்கள் ஆசிகூறினார்கள். அந்நகரத்தார் ஆர்வ
மிக்கு ஒரு முகூர்த்தகாலம் வரையில் 'ஜய ஜய' எனக்கூவி அர
சனுக்கு எக்காரியமும் கைகூடவேண்டுமென்று தமது இஷ்ட
தெய்வத்தை வணங்கினார்கள். பஞ்சவாத்தியங்களும் தேவதுந்
துபிபோல் முழங்கின. வந்தியர் அரசன் புகழைப் பாடினர். நன்
னிமித்தங்கள் பலவும் நேர்ப்பட்டன. அனேகர் சாமரை ஆலவட்
டம் முதலியன இரட்டினர். நாட்டியர் நாட்டியமாடினர். இசை
வல்லோர் அரசன் புகழை இசைத்துக் கீர்த்தனங்கள் பாடினர்.
சேனைத்தலைவர் இருபுறங்களிலும் நால்வகைச் சேனைகளில்
காலாட்படையை முதலிலும் மற்றைக் குதிரை யானை தேர் ஆகிய
படைகளை முறையே ஒன்றன்பின் ஒன்றாய் அமைத்தார்கள்.
அவற்றிற்கு நடுவில் மந்திரிமார்கள் பிரபுக்கள் மற்றுமுள்ள சிற்றர
சர்கள் இவர்களுடைய தேர்கள் உபவிமானங்கள்போல சென்றன.
அவைகளுக்கு நடுவில் சக்கரவர்த்தியாகிய நளனுடைய தேர்
குபேரனது புஷ்பகவிமானம் போல நடுநாயகமெனச் சென்
றது. அதில் வீற்றிருந்த நளன் பரந்த இடத்தையுடைய சமுத்
திரத்தின் நடுவில் உதிக்கும் சூரியன்போல் விளங்கினான். இவ்
விதம் அலங்காரமான காட்சியோடு விதர்ப்ப நாட்டை நோக்கிச்
செல்லும் நளனுடைய சேனைப் பெருக்கத்தைக் கண்ட ஆகாய
வாசிகள் நிடதநாடு முழுதும் இவ்விடத்தை விட்டு வேறிடம்
நாடிச்செல்லுகின்றதோ எனவும் அச்சேனையின் முழக்கத்தைக்

கேட்டுச் சப்தசமுத்திரங்களும் ஒருங்கே இடம்விட்டுப் பெயர்ந்து செல்லுகின்றனவோ எனவும் ஆசங்கித்தனர்.

இவ்விதமாக நளன் தனக்கு முன்னால் விதர்ப்ப நாட்டை யடைந்து தமயந்தியினிடத்தில் சென்றிருக்கின்ற தன்மனத்தை நாடிச்செல்பவன்போல அதிக விரைவாக விதர்ப்ப நாட்டைநோக்கிச் செல்லும்போது, முன்னே நாரதரின் தூண்டுதலாலே புறப்பட்ட தேவேந்திரன் முதலாகிய தேவர்கள் ஆகாயவீதியில் வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் நளனுடைய மலர்ந்த செந்தாமரை போன்ற முகத்தையும் நீண்டு விசாலித்த அருள் ஒழுகுங் கண்களையும் பரந்த மார்பையும் திரண்டு பருத்த புயங்களையும் முழந்தாள் வரையில் நீண்ட கரங்களையும் அவன் வீற்றிருக்கும் கம்பீரத்தையுங் கண்டு வியப்புற்று இவன் செந்தாமரைக்கண்ணனோ எனச் சந்தேகித்தார்கள். பிறகு சற்று உற்றுநோக்குங்கால் நீல மேகசாமளவர்ணமாக இல்லாமல் சிவந்த ஜோதியோடு விளங்கினமையாலும் மானிடப்படையோடு விளங்கினபடியாலும் இவன் பூவுலக அரசனாக இருக்கவேண்டும் எனத் தீர்மானித்தார்கள். தேவேந்திரனும் நளனது அழகை நெடுநேரம் கண்குளிரப் பார்த்து "இப்பூவுலக மன்மதனாகிய இவ்வரசனுடைய அழகைக் கண்ட இன்றுதான் நான் இமையாத ஆயிரங்கண்களை அடைந்ததனாலாய பயன் பெற்றேன்" என்றான்.

வருணன், மன்மதனைப்போன்ற இவ்வரசனுடைய அழகைப் பார்த்தபிறகு கூட "தமயந்தி வேறொருவனை விரும்பி அவனுக்கு மாலை சூட்டுவாளோ?" என்றான்.

அக்கினி, "இவ்வளவு அழகுவாய்ந்த இந்த அரசனுக்குத் தமயந்தி மாலைசூட்டாளாயின் அவளழகு யாதுபயனுடைத்து?" என்றான். இவை யெல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்த இயமன் கடைசியில் "இவ்வரசனும் தமயந்தி சுயம்வரத்துக்குச் செல்லுவானாயின் நாம் திரும்பிப் போவதே அறிவுடைமை" என்றான். இதைக்கேட்ட தேவேந்திரன்,

"போர்த்தொழில் வயிரவாட் பொருவி லண்ணல்செந்
தாரப்பசுங் கிளியனு டார்பெறுது போய்க்
காரக்குழ லரமடையா கமல வாண்முகம்
பாரப்பதெவ்வாறு" எனப் பரிவிற்கூறிப்

பின்னும் இத்தமயந்தியைக் கலியாணம் செய்துகொள்வ
தற்கு நான் எவ்வகையான உபாயங்களைத் தேடவேண்டுமோ அவற்
றையுந்தேடாமல் விடுவதில்லை. இவ்வரசனுடைய முகத்தை
நோக்கும்போது இவனிடத்தில் சத்தியம், பொறை, கருணை முத
லியன குடிகொண்டிருப்பதாகத் தெளிவாகத் தோற்றுகின்றமை
யால் அவற்றோடு கூட்டுறவாகிய தெய்வபக்தியும் இருத்தல்
வேண்டும். மேலும் இவனைப்பார்த்தால் முன்னாளில் அவுணர்
வலியடக்கி இப்போதும் தேவராஜன் எனும் பெயர் எனக்கு
நிலைக்கச் செய்த வீரசேனனைப்போன்றிருத்தலால் அவ்வீரசேன
னுடைய குமாரனாக இருத்தல்வேண்டும். இவனைக்கொண்டே
தமயந்தி என்னைக் கலியாணம் செய்துகொள்ளுமாறு செய்தால்
இவனுக்குத் தமயந்தியின்பேரில் விருப்பமிருந்தாலும் அல்லது
தமயந்தியே இவனுக்கு மாலையிட விருப்பங்கொண்டாலும்
இவன் தேவரால் விரும்பப்பட்டவளைத் தான் அங்கீகரிப்பது தாம
மல்லவென்று வெறுத்து நீக்குவான். இவனால் வெறுக்கப்பட்ட
தமயந்தி பிறகு என்னைத்தான் மணம் செய்துகொள்ள விரும்பு
வாள் என்று சொல்லிக்கொண்டு மற்ற மூன்று தேவர்களோடும்
நளனை அணுகினான்.

அப்போது நளன் அத்தேவர்களுடைய ஜோதி வடிவைக்
கண்டு வியப்புற்று அவர்கள் தேவர்களாகவே இருக்கவேண்டு
மென எண்ணங்கொண்டு தன் தேரை விட்டிழிந்து அவர்களை
வணங்கிக் கைகூப்பிக்கொண்டு நின்றான்.

தேவேந்திரன் அவனது அடக்கத்தையும் அவன் முகத்தில்
விளங்கும் வீரத்தன்மையையுங்கண்டு மகிழ்ந்து அவனுக்கு ஆசி
கூறி அவனைச் சமீபத்தில் அழைத்துப் பின்வருமாறு சொல்லலுற்
றான். "அரசனே! உன்னைப்போன்ற பரோபகாரியும் உத்தம சீல

னும் இதுவரையில் ஒருவனும் என் கண்ணிற்பட்டதில்லை. இன்றே எனக்குச் சுதினமென நினைக்கிறேன். நீ அறியாததும் ஒன்று உண்டு என்ன எனக்குத் தோற்றவில்லை. உன் கரங்களை நோக்கும்போதே உன்னைப்போன்ற கொடையாளி உலகிலிருக்கக்கூடுமென நினைக்க இடமே இல்லை. என்றபடி மனிதன் என்றும் அழியாமலிருக்கும் தன்மையின் புகழை அடைந்து அதை நிலைக்கச் செய்யவேண்டும். அப்புகழும் ஈகையினிடத்தே விளையுமானால் அது பாலுந்தேனுங் கலந்த பானம் போலாகும். ஈகையே மனிதருக்கு இன்றியமையாதது, இம்மை மறுமை இரண்டிலும் பயன் தருவது. அற்ப ஆயுளையுடைய மானிடருக்கு எல்லாவற்றிலும் சிறந்த துணையாகிய நல்லறத்தை விரும்பாது வாழும் மக்களிற் சிறந்த மடவோருண்டோ? ஈகையின் அருமையையும் அதனாலுண்டாகும் பேரானந்தத்தையும் அனுபவித்து அறிந்தோர் மற்ற எல்லாவற்றையும் அற்பமாக நினைத்துத் தமதுயிரைக்கொடுத்தாவது ஈகையைக் கைக்கொள்ளுவார்கள். அக்கொடையாளிகள் சுவர்க்க போகத்தையும் இகழ்வர். ஆதியில் ரகு என்ற அரசன் தன் நாடு முதலியவற்றைப் பூசுரருக்குத் தானமாகக் கொடுத்து மட்கலங்களையே தனக்குரிய ஆபரணமாகக்கொண்டு காட்டில் வாசஞ்செய்கையில் தன்னைவந்து யாசித்த ஒரு பிரமசாரியின் விவாகத்துக்காகப் பொருளில்லை யென்று சொல்ல வாயவராமல் இன்னுயிரேனும் கொள்ளுதல் தீது கொடுப்பது நன்று என்பதைக் கடைப்பிடித்துப் பொருளீட்டுவதற்காகக் குபேரனிடத்தில் யுத்தத்துக்குச் சென்றான். முன்னொருகால் நான் விருத்திராசுரனோடு யுத்தம் செய்தபோது அவனைக்கொல்வதற்குப் பலமுறை முயன்றும் அப்போதிருந்த வச்சிரப்படை மிகப் பழமையானதால் பயன்படாமற் போயிற்று. அதனால் கிலேசமுற்று யுத்தத்தை விட்டுக் கருணாகரனாகிய திருமாலையடைந்து வணங்கி என் மனக்கிலேசத்தை நீக்குமாறு வேண்ட அத்தயாநிதி என்மீதருள்கூர்ந்து ததீசி மகாமுனிவருடைய முதுகெலும்பைக் கொண்டு புதிதான ஒரு வச்சிராயுதம் செய்தால் அஃது அவனைத் தவறாது கொல்லு

ளெனத் திருவாய் மலர்ந்தருளினார். அவ்வாறே அம்முனிவ
பிரானையடைந்து காரியத்தைத் தெரிவிக்க அத்தருமமூர்த்தி
உடலை அடைந்ததின் பயன் இதனினும் சிறந்தது யாதுள
தென மகிழ்ந்து அத்திருவுடலை விடுத்துத் தமது பரிசுத்த ஆத்மா
வைப் பிரிந்துகொண்டார். இவரைப்போல ஈகையின் பெரு
மையை உலகப்பிரசித்தமாகச் செய்தவர்கள் அநேக
ருண்டு. ஆனால் இவ்வீகைத் தன்மையால் சிறப்புற்றோரில் பலர்
இம்மண்ணுலகில் கண்ட மன்னரே. அவர்கள் ஈகையைக் கைக்
கொள்ளாவிடின் எனக்குத் தேவலோக ஆட்சியும் தேவராஜன்
என்ற பெயரும் இத்தனைநாள் வரையில் நீடித்திருக்குமோ
எனக்கு எதாவது ஆகவேண்டுமானால் நான் மண்ணுலகும்
அரசரைக்கொண்டே சாதித்து வருகிறேன். அந்த உத்தம மன்
னர்களும் என் வேண்டுகோளை மறுக்காது அதைத் தமது காரிய
மாகவே நினைத்துச் செய்து முடிப்பார்கள். அதனால் அவர்கள்
அடைந்த புகழ் இன்றும் நிலைத்திருக்கிறது. நீயும் அவ்வுத்த
மர்களோடு சேர்ந்தாக எண்ணப்படும் தன்மையோடு விளங்கு
கிறபடியால் உன்னைக் கண்டவுடன் உன்னையும் எங்களுக்கு
ஒருதவி செய்யுமாறு செய்து உன் தந்தை யடைந்த புகழை
உனக்கும் உண்டு பண்ணவேண்டுமென்பதே என்னுடைய உண்
மையான எண்ணம். அவ்வெண்ணம் உண்டான அந்தக்ஷணமே
உன்னால் ஆகவேண்டிய காரியமும் ஒன்று எனக்குத் தோற்றி
யது. அக்காரியம் உன்னைப் போன்றவர்களுக்கு மிகச் சாதார
ணமானது. ஆயினும் அதை உன்னைத் தவிர வேறொருவரிடத்
தில் தெரிவிப்பது உசிதமாகத் தோற்றாமையால் உன்னையே
வருத்த நேரிட்டது. நாங்கள் தேவர்களென்பது உனக்குத்
தெரிந்திருக்கலாம். எங்களில் நான் தேவேந்திரன். மற்ற மூவ
ரும் வருணன், அக்கினி, யமன். எங்களுக்கு அக்காரியத்தைச்
செய்து முடிப்பதாக வாக்குத்தத்தம் செய்தால் அதை நான்
உனக்குத் தெரிவிக்கிறேன்."

இதைக் கேட்டு நளன் வியப்படைந்து, "எல்லாம் வல்ல
தேவர்களுக்கும் அரிய பொருள் மானிடர் வசத்திலிருக்குமோ

அவர்களால் ஆகாத காரியம் மானிடரால் ஆகுமோ? அவர்கள் கருத்து இன்னதென்று தெரிந்துகொள்ளக் கூடவில்லையே. க்ஷத்திரியனுக்குப் பிறந்த நான் ஒருவர் கேட்டதை எவ்வாறு மறுப்பேன்.

குறிப்பறிந்து ஈதலே மேலான கொடை. அதனால் அடையும் பலன் இம்மை மறுமை இரண்டிலுஞ் சிறந்ததே. ஒருபொருளை மறைத்து வைத்து அதனால் இம்மையிற்கூடச் சிறிதும் பயனடையாமற் போவதினும், உள்ளதை மறைக்காமல் இரப்போர்க்கீந்து அதனாலுண்டாகும் பெரும்பயனை இம்மை மறுமை இரண்டிலும் அனுபவிப்பதே மேலானதாகும் என்று பலவாறு தனக்குள்ளே சிந்தித்துத் தேவர்களை நோக்கி "யாம் வணங்கும் கடவுளரே! தாங்கள் இந்நிலவுலகத்தெழுந்தருளி நான் கண்டு உய்யுமாறு கருணைகூர்ந்தது என் முன்னோர்கள் செய்த தவப்பயனேயன்றி வேறன்று. அளவற்ற புண்ணியங்களைச் செய்தவர்களும் காண்டற்கரிய நுங்களை ஒன்றுக்கும் பற்றாத நான் இந்நிலவுலகிற் கண்டபோதே பெரும்பாக்கிய சாலியானேன். தாங்கள் எதைச் செய்யச் சொன்னாலும் நான் மறுக்கமாட்டேன். தமதருளுக்குப் பாத்திரனான என்மீது கருணைகூர்ந்து நான் செய்ய வேண்டியதைத் தெரிவிக்கவேண்டும்" என்று கேட்டுக்கொண்டான்.

இதைக்கேட்ட தேவேந்திரன் தான் நினைத்த காரியம் கைகூடினாற்போல மனமகிழ்ந்து நளனைப் பார்த்து "அரசனே! நின்னுடைய வார்த்தைகள் அமிர்தத்தினும் இனியவை. இனிமேல் எங்கள் எண்ணத்தை உன்னிடத்தில் தெரிவிப்பதனால் எங்களுக்கு ஒருவிதத் தாழ்மையுமில்லை. மன்னவ! நாங்கள் தேவபோகத்தையுமிகழ்ந்து தமயந்தியின்மீது ஆற்றொணாக்காதல் மிகுந்து அவளுடைய சுயம்வரத்துக்காகப் போய்க்கொண்டிருக்கிறோம். எங்களில் யாராவது ஒருவர் அவளை மணந்துகொள்ளாமல் எங்கள் இருப்பிடம் போவதினும் இழிவானது வேறொன்றுமில்லையென வருந்துகிறோம். ஆகையால்,

செங்கண் மதயானைத் தோவேந்தே தேமாலை
எங்களிலே சூட்ட வியல்வீமன் — மங்கைபால்
தூதாக" என்றான்.

இவ்வாறு தேவேந்திரன் சொல்லிய வார்த்தைகள் கூரிய நாராசம்போல் இரு செவிகளிலும் புகுந்த அளவில் நளன் திடுக்கிட்டு மனம் வருந்தி நான் இத்தேவர்களுடைய எண்ணத்தை அறியாமல் என்னை அவர்கள் வசமாக்கி விட்டேன். இனி நான் அதினின்றும் என்னை விடுவித்துக்கொள்வது முடியாத காரியம் அல்லவா? அவர்கள் என்னைச் சுலபமாக ஏமாற்றி விட்டார்கள். அன்னபக்ஷியானது தமயந்தியினிடத்திலிருந்து திரும்பிவந்து அவளுடைய நிலைமையை என்னிடத்தில் சொன்னது முதல் அவள் எனக்கே மனைவியாகிவிட்டதாக நினைத்துக் கொண்டதுந்தவிர அவளையன்றி வேறொருவரையும் மணப்பதில்லை என்ற உறுதியான எண்ணமும் கொண்டிருக்கிறேன். அவளும் என்னைத்தவிர வேறொருவரையும் மனத்தினாலும் நினைப்பதில்லை என்று உறுதியாகச் சொல்லியிருக்கிறாளே. இப்போது எனக்கு அவளிடத்துள்ள காதலை நான் எவ்வாறு மறப்பேன். ஒருகால் நான் மறக்கத் துணிந்தாலும் அவள் எவ்வாறு என்னை மறக்கக்கூடுமே? அவள் செப்பிய உறுதிமொழிக்காகவாவது நான் அவளைக் கலியாணம் செய்து அதனால் அவள் கொண்ட எண்ணத்தை நிறைவேற்றி அவள் சொல்லிய வார்த்தைகள் பொய்க்காதபடி நிலை நாட்டவேண்டியது என் கடமைகளில் ஒன்றல்லவா? நான் அவ்வாறு செய்யாவிடின் என் ஆண்மையும் என்னவாகும். அவளும் என்னை ஒரு க்ஷத்திரியனாக நினைத்து மதிப்பாளா? நான் அவளைக் கலியாணம் செய்து கொள்ளாமையால் அவள் தன்னுயிரை மாய்த்துக்கொள்வாளாயின் அப்பழி என்னைச் சாருமே. அப்பழி பெண்பழியாகையால் அதுமிகக் கொடிதன்றோ? கற்புக்கரசியாகிய தமயந்தியை உற்றதுணையாகக் கொண்டு இல்லறம் வழாது நடாத்திப் பஞ்ச யாகமும் சிறக்கச் செய்யலாம் என்று நினைத்திருந்த எண்ணம் பின்னமாகப் போய்விட்டதே. இவ்வாறு என் எண்ணத்துக்கத

இடையூறு நேரிடுமெனச் சிறிதேனும் முன்னரே அறிந்திருந்தால்
இவ்விஷயத்தில் என்மனதைச் செலுத்தியிருக்க மாட்டேன்.
மானிடப்பிறவியை அடைந்த எனக்கு இனிவரும் காரியத்தை
அறியச் சக்தியில்லா விடினும் தெய்வத்தன்மை பொருந்திய
அன்னபக்ஷிக்கும் தெரியாமல் போயிற்றே அல்லது அன்ன
பக்ஷியானது இதனை முன்னரேயே அறிந்திருந்தும் வேணு
மென்று வேடிக்கை பார்க்கின்றதோ இப்போது என்மனதை
முற்றிலும் கொள்ளைகொண்டு தன் வசப்படுத்திக்கொண்டிருக்
கிற தமயந்தியை விட்டு அம்மனதை என்னிடத்தில் அழைத்
துக்கொள்ள எனக்கு என்ன சுவாதீனம் இருக்கிறது. அந்தோ!
நானொன்று நினைக்கத் தெய்வமொன்றல்லவா நினைத்திருந்தது.
கடவுளின் திருவுளமிதுவானால் நான்செய்வதுயாது" என்று
பெருமூச்செறிந்து சற்றே யோசித்துப் பின் தெளிந்து "இடுக்கண்
வருங்கால் நகுக அதனை அடுத்தூர்வ தஃதொப்ப தில்" என்றபடி
புன்னகைசெய்து, நான் தமயந்தியைக் கலியாணம் செய்துகொள்
ளாது அவள்மீதுற்ற காதலால் என்னுயிர் போவதாக இருந்தாலும்
நான் தேவர்களுக்குச் சொன்ன உறுதிமொழியினின்றும் பிழைக்க
மாட்டேன். உலகத்தில் சத்தியந்தவறுவதினும் இழிவான காரியம்
வேறுண்டோ. இறந்தாலும் பொய்தன்னைச் சொல்லலாமோ.
சத்தியம் உயிரினுஞ் சிறந்ததன்றோ. க்ஷத்திரியர்களுக்குரிய பிர
தானகுணங்களில் முதன்மையானது சத்தியமல்லவா. அதி
னின்றே மற்றநற்குணங்களெல்லாம் பிறக்கின்றன. அது ஒழிந்த
போது அக்குணங்களும் அதனுடனே மாய்வனவாகையால் இத்தேவர்
களுக்கு நான் சொல்லியபடி அக்காரியத்தைச் செய்து என் முன்
னோர்களால் நாட்டப்பட்ட புகழை நிலைநிறுத்துவேனேயல்லது
குலத்தைக்கெடுக்கவந்த கோடரிக்காம்புபோல அப்புகழையழிக்க
மாட்டேன் என்று தனக்குள்ளே தீர்மானித்துத் தமயந்தி
யின் மீதுள்ள காதலை ஒருவாறு மறந்து தேவேந்திரனை நோக்கிப்
பின்வருமாறு சொல்லலுற்றான். "கண்ணாயிரம் படைத்த கட
வுளே! எவ்வகைப் பட்டோருடைய உள்ளத்திலுள்ள எல்லா
வற்றையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல அறியுந் தன்மை

யுடைய சபைக்கு என் மனதிலுள்ளவைகள் நன்றாகத் தெரிந்திருந்தும் என்னையே தமயந்தியினிடத்தில் தூதுபோகச்சொல்வது ஆச்சரியமாக இருக்கிறது. நான் தம்முடைய கட்டளையை மறுத்து தமயந்தியினிடம் தூதாகப்போய் தமதுஎண்ணத்தைச் சிறிதும் மனங்கோணாபடி கூறி உரைத்தாலும் முன்னமே என்னையே கலியாணம் செய்துகொள்ளுவதாக வாக்களித்திருக்கின்ற அந்தத்தமயந்தி இப்போது உம்மில் ஒருவரை மணந்துகொள்ளச் சம்மதிப்பாளோ! இக்காரியம் என்றைக்குக் கூடுமோ?" என்று சொன்னான்.

தேவேந்திரன் "அரசனே! உன்னிடத்திலும் சந்திரகுலப் புத்திரனாகிய பரதனிடத்திலும் கார்த்தவீரியார்ச்சுனனிடத்திலும் சொல்லிய காரியங்கள் நிறைவேறாமற்போவதில்லை என்பது எனக்கு நன்றாகத்தெரிந்த விஷயம். அதனாலேதான் மற்றெல்லோரையும் விட்டு உன்னை நான் தெரிந்தெடுத்தேன். உனக்கும் ஆகாத காரியம் ஒன்று உலகத்திலிருக்கிறதா! எப்படி நீ முயன்றும் இக்காரியம் நிறைவேறாவிடின் அதனால் எங்களுக்கு வருத்தமேயில்லை" என்றான்.

பின்பு நளன் "தேவராய! சந்திர திருவாசகத்துக்கு மறுவாசகமுண்டோ? தங்களாற்கட்டப்பட்ட நான் தாங்கள் சொல்லுவதைச் செய்யவேண்டியவனேயல்லவா! வார்த்தை மீறுக்கவும் வெறுக்கவும் எனக்குத் தகுமோ? நான் தாங்கள் கட்டளையிட்டபடி தமயந்தியினிடத்தில் தூதுபோகத் தயாராயிருக்கிறேன்; ஆனால் தமயந்தி இராஜகன்னிகையானபடியால் அவள் அநேக ஸ்திரீகளால் காக்கப்பட்ட அந்தப்புரத்தில் [illegible] அடைவார் காணக்கூடாத சிங்காரத்தோட்டங்களிலும் [illegible] உலவுவது சாதாரணமானவிடங்களிற் காணமுடியுமோ? ஒரு அரசனுடைய அரண்மனையின் சாரவாயிலிலே வேற்றுநாட்டரசன் அனுமதியின்றி ஒருகாரியமாகச் செல்வது மதியீனமன்றோ! தவிர ஸ்திரீகளிடத்தில் புருஷர் தூதுபோவதென்பதும் இன்னும் இராஜகன்னிகையினிடத்தில் என்னைப்போன்ற யௌவன

பருவமுடைய அரசன் அங்குபோவதென்பதும் ஒழுக்கமற்ற காரியம். ஆயினும், தங்கள் உத்தரவை வேதவிதியமாகக் கொண்டு செல்வதென்றாலும் அங்குள்ள காவலர் அறியாதவாறு நான் உட்புகுவது எப்படி? மேலும் ஒருவர் அறியாமல் உலகத்துலாவுவது அஷ்டமாசித்திகளில் ஒன்றல்லவா! அது நம் போன்ற தேவர்களாலும் சித்தர்களாலுமேயன்றி ஏனையோரால் எளிதில் அடையக்கூடியதோ! எல்லாக் காரியங்களுக்கும் தொடக்கத்தில் பலவகை இடையூறுகள் உண்டாவது போல இக்காரியத்துக்கும் இவ்விதம் இடையூறு நேரிட்டிருக்கிறது. ஆகையால் என்னை இனியும் பரிசோதிக்காமல் நான் செய்யவேண்டிய விதத்தைத் தெரிவிக்கவேண்டும்" என வணங்கிக்கேட்டனன்.

அப்போது தேவேந்திரன் "அரசனே! நீ ஒன்றுக்கும் கவலையுற வேண்டாம். உனக்கு ஒருவித பயமும் வராமல் காக்கவேண்டியது என் கடமை. உனக்கு ஒரு மந்திரத்தை உபதேசிக்கிறேன். அதை நீ உச்சரித்துக்கொண்டே போனால் உன்னை ஒருவரும் காணமாட்டார்கள். நீ ஒருவருடைய கண்ணிலும் படாமல் காவலைக் கடந்து தமயந்தியிடத்திற் சென்று எங்கள் கருத்தைத் தெரிவித்து வருவாய்" என்று கூறியதோடு நளனைச் சமீபத்தில் அழைத்து,

விட்புலந் தனிபுரந் தருநும் வேந்தகோ
னட்போடு மினியன நவின்று யாவருங்
கட்புல னுறுநக காண்கி லாததோர்
நுட்பநூல் விஞ்சையை நுவன்றிட் டான்.

உடனே நளன், பெறுதற்கரிய அவ்வித்தையைப்பெற்று மனக்கிலேசம் நீங்கித் தேவர்களைத் தெண்டனிட்டு வீமன் நகரை அடைந்தான். அந்நகரானது அமராவதியோவென ஐயுறுமாறு அலங்கரிக்கப்பட்டிருந்தது. எப்புறமும் முத்துப் பந்தல்கள் அமைக்கப்பட்டிருந்தன. அப்பந்தல்களில் வாழை, கமுகு

கரும்பு முதலியன கட்டப்பட்டிருந்தன. அவைகளில் தென்னை கமுகு ஈந்து இவற்றின் குலைகள் இடைவெளியின்றிக் கட்டித் தொங்க விடப்பட்டிருந்தன. அப்பந்தல்களுக்கடியிலுள்ள வீதி முழுவதும் சந்தனக்குழம்பால் மெழுகப்பட்டு முத்துப்பொடிகளால் பலவித உருவங்களுள்ள கோலங்கள் போடப்பட்டிருந்தன. அவைகளைச் சுற்றிலுங் காவிப்பொடியால் பவளம் பதிப்பிக்கப்பட்டாற்போல அலங்கரிக்கப்பட்டிருந்தன. பலவகைக் கற்களால் தளவரிசையிட்ட ஓரங்களிலும் வாயிற்படிகளிலும் குத்துக்கல் பதிக்கப்பட்ட திண்ணைகளிலும் பூரணகும்பம் நாட்டிப் பாலிகையமைத்து ஆனையால் தூண்டா விளக்குகளும் அணியாக அமைக்கப்பட்டிருந்தன. சுவர்களெல்லாம் சுத்தச் சுண்ணாம்பு பூசப்பட்டு வாயில்களிலும் பலகணிகளிலும் பலவர்ணம் வாய்ந்த பட்டுச்சீலைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. உப்பரிகைகளெல்லாம் சுண்ணச்சாந்து பூசப்பட்டுப் பாற்கடல்போல் விளங்கின. அவற்றில் அநேக கொடிகள் நாட்டிப் பட்டுக்கொடிச் சீலைகள் கட்டப்பட்டிருந்தன யாரைப் பார்த்தபோதிலும் குபேரனோ இந்திராணியோ எனச் சந்தேகிக்கும்படி ஆடையாபரண அலங்கிருதராய் மலர்ந்த முகத்தோடு விளங்கினர். இவற்றைக் கண்களிக்கக் கண்டு நளன் இடைவிடாது ஒலித்துக்கொண்டிருக்கும் முரசவாத்தியங்களும் பலவகை வாத்தியங்களுமுடைய காவல் மிகுந்த குபேரனது அரண்மனைபோல விளங்கும் வீமராஜனது அரண்மனையை அடைந்தான். அங்கே துவாரபாலகர் கண்கொட்டாது காத்துக்கொண்டிருக்கும் வாயிலை அடைந்து அரண்மனைக்குட் புகுந்தான். அவன் புகும்போது அவனணிந்திருந்த ஆபரணங்களின் ஒளியானது அநேக சூரியர்களின் ஒளிபோலத் தோன்றி மறைய அவ்வொளியால் வாயில்காப்போர் திகைகெட்டுத் திகைத்து அவ்வொளி உண்டானதற்குக் காரணமென்னவெனத் தமக்குள் ஆலோசித்து அறியக்கூடாமல் சுற்றிச்சுற்றிப் பார்த்தார்கள். அவர்கள் கண்களுக்கு ஒன்றுந்தோன்றாமையால் வியப்புற்று யாராவது கண்ணுக்குப் புலப்படாமல் உட்சென்றனரோ? அல்லது இடைவிடாது பிரகாசித்துக்கொண்டிருக்கும் திவ்ய சரீரத்

ணையுடைய தேவர்கள் நமது அரசன் புதல்வியினுடைய சுயம்வரத்தைக் கண்டுகளிக்க மறைந்து சஞ்சரிக்கிறார்களோ? என்று பூமியை நோக்கினார்கள். அப்போது மகாபுருஷ லக்ஷணங்களமைந்த இரண்டு பாதச்சுவடுகளைக் கண்டு அத்திருவடிகளைக் காணப்பெற்றதால் சந்தேகப்பட்டனர். 'பூமியில் சுவடு தோன்றுவதற் கேற்றவன் மானிடனாக இருக்கவேண்டுமேயல்லது தேவனாக இருக்கமுடியாது. ஆனால் மானிடர்கள் மறைந்து சஞ்சரிக்கும் தன்மையுடையவரல்ல. ஆகையால் இச்சுவடு முன்னே எப்போதாவது சென்ற அரசனுடைய திருவடிச்சுவடாக இருக்க வேண்டுமேயல்லது புதிதாக இப்போது ஏற்பட்டவைகளல்ல. அவ்வொளியும் நமது மனமயக்கத்தின் காரியமே அல்லது வேறல்ல,' என்று முன்னிலும் இருமடங்காக மிகவும் கவலையோடு காத்துவந்தார்கள்.

அரண்மனைக்குட் புகுந்த நளன் அங்கு ஒவ்வொரு வாயிலிலுங்காவல் காத்திருந்த வீரர்கள் அறியாதபடி அவைகளைக் கடந்து தமயந்தியின் அந்தப்புரத்துக்குச் செல்லும் வழியறிந்து அங்கே போகும்போது அநேக ஸ்திரீகளைக் கண்டு அவர்கள் அன்னத்தால் வர்ணிக்கப்பட்ட வனப்பின் மாறுபட்டிருந்தமையால் அவர்களெல்லாம் தமயந்தியல்லவென்று நினைத்து அவர்களைத் தாயமாரைப் போலவும் சகோதரிகளைப்போலவும் நினைத்துத் தலையைக் குனிந்துகொண்டு ஒதுங்கி ஒதுங்கிச் சென்றான். இவன் போகும்போது இவனுருவம் ஒருத்தி அணிந்திருந்த ஆபரணத்தில் பிரதிபிம்பித்துச் சட்டென மறைய அவள் மனங்கலங்கி அங்கே ஆடவர்கள் வந்தார்களோ எனச் சுற்றிப்பார்த்துக் காணாமையால் மறுபடி அவ்வாபரணத்திலுள்ள கலையை நோக்கினள். அக்கால் அப்பிம்பத்தைக் காணாது திகைத்து நொந்து நின்றாள். நளன் அநேகஸ்திரீகள் கூடிப் பந்துவிளையாடுகையில் அவர்களால் எறியப்பட்ட பந்து அப்போது அவ்விடத்திற் சென்றுகொண்டிருந்த நளன் மீது பட்டுத் திரும்பியதைக்கண்டு ஒருதடையுமில்லாத இடைவெளியிற்பட்டுப் பந்து திரும்பியதைத் இதுவரையிலும் நாம் கண்டதில்லை.

இன்று இது புதுமையாக இருக்கிறது, என்று எண்ணி மீண்டும்
அதை மறந்து விளையாட ஆரம்பித்தார்கள். இரண்டு ஸ்திரீகள்
எதிர்முகமாக இருந்துகொண்டு புஷ்பந்தொடுத்துக் கொண்டிருக்
கையில் அவர்களுக்குக் குறுக்கே நளன் செல்லத் திடீரென்று
ஒருவர் முகம் ஒருவருக்கு மறைந்து மறுபடியும் முன்போல்
வெளிப்பட அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்து இப்போது 'உன்
முகத்தை மறைத்தது யாது' என ஒருவரை ஒருவர் வினவி இரு
வரும் காரணம் அறியாதவராய்த் தங்கள் காரியங்களைச் செய்யத்
தொடங்கினர். நளனது மார்பிலணிந்த ஆபரணங்களிலுள்ள
ரத்னங்களில் அங்குள்ள ஒரு ஸ்திரீயின் வடிவு தோன்றினபோது
என் உருவம் ஆகாயத்தில் பிரதிபிம்பிக்கக் காரணம் என்ன! என
ஆச்சரியமடைந்து பக்கத்திலுள்ளவர்களை வினவுவாள். நளன்
போய்க்கொண்டிருக்கையில் அவன் வடிவம் கண்ணாடிபோன்ற
சுவர்களில் தோன்ற அதைக்கண்ட பெண்கள் அவ்வடிவத்தைப்
பார்த்துக்கொண்டே நிற்பார்கள். இவ்வாறு அந்த அந்தப்புரத்
தில் அநேக வாயில்களைக்கடந்து தமயந்தி வசிக்கும் திவ்ய
மாளிகையை அடைந்து அவளுக்கென அலங்கரிக்கப்பட்டிருக்கும்
அம்மாளிகையின் அழகைப் பார்த்துக்கொண்டே தமயந்
தியைத் தேடிக்கொண்டு சென்றான்.

அப்போது அங்குக் கூடுகளிலிருந்த கிளிகளும் மற்றைப்
பேசும் பறவைகளும் தாம் தமயந்தியால் போதிக்கப்பட்டு எப்
போதும் சொல்லிக்கொண்டே இருக்கும் வழக்கப்படி **நளன்
வந்தான்** என இனியகுரலோடு பேசின. அதைக்கேட்ட நளன்
திடுக்கிட்டுக் கிளிகள் தன்னைத் தெரிந்துகொண்டனவோ
என அஞ்சிப் பின்பு அங்கிருந்தோர் எவரும் அப்பறவைகளின்
வார்த்தைகளைப் புதுமையாக நினைத்து அதற்குரிய மாறுபாடு
கள் ஒன்றும் தோன்றாமல் தத்தம் கருமங்களிற் கண்ணாயிருந்த
மையால் இது வழக்கமாகப் பேசுகிற பழைய வார்த்தைபோலும்
எனத் தெளிந்தான்.

இவ்வாறு நளன் தமயந்தியைப் பலமாளிகைகளிலும் வண்
டுகள் தேனுண்டு தமயந்தியின் புகழைப் பாடுவனபோல் காத

தாம் செய்துகொண்டிருக்கும் சேவைகளிலும், அவன் வினா
யாமே இடங்களாகிய செய்குன்றுகளிலும் தேடிக் காணாமல்
வேறொருவரைக்கேட்டுத் தெரிந்துகொள்ளவும் தகுதியற்றவ
னாக நின்று அவ்வுப்பரிகையிலுள்ள பல மாளிகைகளின் அலங்
காரங்களைப் பார்த்துக் கடைசியாக நிகரற்ற ஒரு மாளிகையைக்
கண்டு வியப்புற்று ஒருகால் இங்கே தமயந்தியின் கன்னி
மாடமாக இருக்கலாமோ எனக்கருதி அப்பால் சென்றான். இவ்
விதம் அக்கன்னிமாடத்துள் நளன் நுழைந்தவுடனே அதனுடைய
நிழல் அச்சுவர்களிலே தோன்ற ஏவலாளர்கள் இச்சிறுமிக்குரி
யோர் யாரேனும் இங்கு வந்தனரோ எனத் தேடிப்பார்க்குங்
கால் புதிதாக ஒருவரும் காணப்படாமையால் அப்புறத்திலே அச்
சுவர்களிலே தீட்டிய சித்திரங்களில் ஒன்றென நினைத்துப் பரா
முகமாக இருந்தனர். இம்மாடத்துட்சென்ற நளன் சுவர்களாக
அமைக்கப்பட்டிருக்கும் பச்சைக் கற்களின் அழகினையும் வீசும்
பசுமையான ஒளியும், பலவகை இரத்தினக்கற்களாலாகிய மற்ற
பாகங்களினின்று வானவில் போல் பரவும் பலநிறம் கலந்த
ஒளியும், அநேக பூரணசந்திரர்களை ஓரிடத்தில் அடைத்து
வைத்தாற்போலக் குளிர்ச்சியும் வாய்ந்த இம்மாளிகை தமை
யந்தி வதிவதற்குரியதே எனத்தீர்மானித்து அதன் அலங்காரங்
களைப் பார்க்குந்தோறும் வெறுப்படையாமல் புதிதுபுதிதான
ஆனந்தம் மேன்மேலும் பெருகத் தமயந்தியைக் காணவேண்டு
மென்னும் விருப்பமிகுதியால் அவளைத் தேடிக்கொண்டே உட்
சென்றான். உட்பக்கத்திலே ஒரு விசாலமான அறையில் பல
நிறமுள்ள அநேக சூரியர்கள் பிரகாசித்தாற்போல ஜோதிமய
மான ஒரு மண்டபம் தோற்றியது. அம்மண்டபத்தின் மத்தி
யில் காரிருளிற் கரை காணாது கலங்கும் கப்பலோட்டிக்குக்
கரைகாட்டும் கலங்கரை விளக்கம்போலத் (Light-House) தமை
யந்தியைக் காணாது அங்குமிங்கும் தேடித்திரியும் நளனுக்கு
வீமனது தவப்பயனும் தூண்டாவிளக்கும் போன்ற தமயந்தி
வதியத் தவமியற்றிய மண்டபம் இதுவே என அறிவிக்க

அவளெண்ணம் நிறைவேறாததொன்றில்லை. என்னெனில்
அச்சுயம்வரமண்டபத்தில் வந்து கூடப்போகும் அரசர்களில் ஒரு
வரும் இவள் அழகுக்கு இணையாகார். இவளை அடையும் புண்
ணியவானுக்கு எவ்வகைப் போகமும் எளிது. அவனே எழு
வகைப் பிறவியிலும் உயர்ந்தோன். அப்புண்ணியவானை எவ்வுல
கத்தவரோ. அவனைக் கண்ணுற்றுக் கண்டால் கலிதீரும் எனத்
தன்னை மறந்து மனம்போனவாறு சிந்தித்துக்கொண்டிருந்தான்.

ஏதமில் குணத்தின ளிளைய ளாகநுண்
டாதவிழ் பூங்குழற் றையல் பாற்றம
தாதரம் பெருகிய வமரரேவிய
தூதியர் செயதிறஞ் சொல்லுவாம்.

நிற்க, தேவர் நால்வரும் தமயந்தியின் மீதுள்ள காதல்
மிகுதியால் தனித்தனியே பெண்பாலாகிய நான்கு தூதியரைத்
தமயந்தியினிடம் அனுப்பினார்கள். அத்தூதியர் தமயந்தி
யின் அந்தப்புரத்தை யடைந்து அவளைக்கண்டு அவளழகுக்காக
மெச்சினார்கள். அவர்களில் தேவேந்திரன் தூதி தமயந்தியைப்
பார்த்துப் "பெண்கள் நாயகமே! உன்னைப்போன்ற பாக்கிய
சாலி எவ்வுலகிலுமில்லை. நீ மானிடப்பெண்ணாகப் பிறந்திருந்தா
லும் தேவர்களும் மிக்க ஆவலோடு நின்னேவலுக்குக் காத்தி
ருக்கின்றார்களென்றால் இம்மண்ணில் நின்னினும் உயர்ந்தோர்
யாவர்? உனக்கு முற்பவத்திலுண்டான அற்பதவக்குறையி
னாலே இம்மானிட அரசனுக்குப் பெண்ணாகப் பிறந்து இவ்வெ
ளிய மாளிகையில் வதிய நேரிட்டதேயன்றி வேறல்ல. இனி
உனக்குரிய மிகுந்த புண்ணியத்தின் பயனை அடையுங்காலம்
நெருங்கிவிட்டது. ஆனதால் இனிமேல் நீ இங்கிருப்பது நின்
அழகுக்கும் பெருமைக்கும் ஏற்றதன்று. சிறந்த பொற்றளத்தில்
வைக்கவேண்டிய அழகான விலையுயர்ந்த இரத்தினத்தை இரும்
புத்தளத்தில் வைத்தலாகுமோ? தெய்வத்தன்மை பொருந்திய
அரச அன்னமானது அநேக கருங்காகங்களைக் கூட்டத்தில் வதி
தல் ஏற்குமோ? உன் அழகைக்கேட்ட தேவர்களாகிய தேவேந்

ஆடவன் எவ்வுலகிலிருக்கின்றான்? மானிட ஸ்திரீயாகிய நீயே
தேவேந்திரனை மணக்க எண்ணங்கொண்டாலும் பலநாள் தவஞ்
செய்து அத்தவப்பயனால் அடைந்தாலன்றி வேறுவழியில் முடி
யாது. அதைவிட்டு அத்தேவேந்திரனே உன்னை மணந்து
கொள்ளுமாறு யாசிப்பானானால் உன் பெருமையை எவரால் அள
விட்டுச் சொல்லமுடியும். ஏனைய ஸ்திரீகள் தங்களால் எய்து
வதற்கருமையென்று ஏமாந்து நிற்க நீ மாத்திரம் பெறுவையா
யின் அஃது உனக்குப் பெருமையன்றோ? நான் சொல்லியவாறு
இந்திரனுக்கு மாலைசூட்டினால் நீ பருத்தருக்களின் நிழலில் வதிய
வும், காமதேனு முதலியவை நீ விரும்பியவைகளைத் தவறாது
கொடுக்கவும், தெய்வமகளிர் நின்னேவலைக்கேட்கவும், நீ வணங்
கும் பெருமை வாய்ந்த தேவர்கள் நின்னை வணங்கவும் பெறுவா
யென்பதற்கையமில்லை. ஆகவே நீ மானிட அரசர்களில் யாரை
யேனும் விரும்பி மாலை சூட்டினால் அதனை முற்பவத்தில்
செய்த உனது தீவினைப் பயனென்றே நினைக்கவேண்டும்.
மானிட அரசர் இந்திரனோடு ஒப்பிட்டுப் பார்க்கவும் தக்க
வர்களோ?

மண்ணினிற் சிறந்து வாழும் மன்பதைத் தொகுதி தன்னி
லெண்ணிடிற் சிறந்தா ரன்றோ வியக்கரவ் வியக்கா தம்மில்
விண்ணவர் சிறந்தா ரன்றோ விண்ணவர் தலைமையு மாறு
மண்ணனின் னேவல் கேட்பி னதனினுஞ் சிறந்த துண்டோ"

என்று தேவேந்திரனைத் துதி சொன்னாள்.

அதற்குத் தமையந்தி அத்தூதியை நோக்கி "அம்மணீ!
நீ சொல்லியவெல்லாம் உண்மையானவை தாம். தேவேந்திர
னது பெருமையை இதுவரையில் நான் தெரிந்துகொண்டதெல்
லாம் மிகக்குறைவு. இப்போது உன்னால் அத்தேவனுடைய
பெருமையை முற்றிலுங்கேட்டபிறகு அவர் என் போலியரா
லும் பிறராலும் வணங்கிப் பூஜிக்கும் பதத்தையுடையவர் என்
பது நன்கு விளங்குகின்றது. ஒரு ஸ்திரீ ஒரு ஆடவனைத்
தனக்குரிய கணவனாக வரித்தபிறகு அப்பெண்களின் எண்
ணத்தை மாற்றலாகாது என்னும் அழியாத பழியையுண்டு

பன்றும் என்பது வெளிப்படை. அஃது அவருக்குத் தெரியாமலி ருக்குமோ? அப்படி அவருக்குத் தெரியாதென்றாலும் அது பிறரால் நமக்குத் தெரியவராதோ? நீ இவ்வளவு நேரம் என்மீது அன்பு கூர்ந்து புகட்டிய நற்புத்திகள் காற்றுமீதாகமாயிருந்தன. ஐயோ! பாவமான நான் தேவர்களின் விருப்பத்தை யறிவதற்குமுன்னே யே நான் அவசரப்புத்தியினாலே நளச் சக்கரவர்த்தியைத் தவிர வேறொருவனையும் மணப்பதில்லை என்று என்னுள்ளத்திலுறுதி யாகக் கொண்டேன். இனி அவ்வெண்ணத்தை மாற்றி வேறொருவனை மனத்தில் நினைத்தலும் குற்றமாகுமல்லவா? அவருடைய எண்ணத்தையும் எதிர்நிற்றியும் சதுரப்பாடுடைய தேவேந்திரனுக்கு என் மனத்தில் உள்ளவற்றைமாத்திரம் அறிதல் அசாத்தியமான காரியமோ? எல்லாம் தெரிந்த அவருக்கு நான் சொல்வது யாது? வீணாக நீ காத்திருப்பது என் மனத்தை வருத் துகிறது. நீ சென்று வருவாயாக" என்றாள்.

அப்போது தூதன் "தமயந்தி! உன்னால் விரும்பப்பட்ட நளனை தேவராஜனுடைய சாமர்த்தியத்தால் அவனுக்கு உண்மை விருந்த காதல் நீங்கி அதோ அரசர்களில் ஒருவனை நீ மணஞ்செய்து கொள்ளுமாறு உனக்கு இணங்கச் செய்வதற்கு அவர்களின் தூதாக ஏற்பட்டு நின்னிடம் வந்துகொண்டிருக்கிறான். நீ மாத் திரம் அவனிடத்துள்ள காதலை மறக்காதிருக்கும் நகையையுண்டு பண்ணுகிறது. உன்னை விரும்பாத ஆடவனை நீ விரும்புவது மாத்திரம் அழகோ? அது பிசகன்றோ? அது தருமம் தகுதி யுடையதும் ஆகுமோ? அவ்வாறு செய்தால் உன் அழகுக்கும் பெருமைக்கும் குறையுண்டாகாதோ? பெண்களிற்சிலர் எல்லாம் நிறைந்திருந்தும் தம்மைவிட்டு நீங்காத பேதைமைக் குணத்தால் இவ்வாறு தம்மைக் கெடுத்துக் கொள்வதுமுண்டு. நீ தேவ ராஜனை மணந்துகொள்ளாவிடினும் மற்ற அரசர்களிலும் உன்னை விரும்பாத ஒரு அரசனை மணக்க எண்ணங்கொண்டு உனதுபெருமையை நீயே அறிந்துகொள்ளுகிறாயே. அதற்கு ஒருவித சமாதானமும் எனக்குத் தோற்றவில்லையே" எனப் பெருமூச்செறிந்து தமயந்தியினிடத்தில் தாயினும் சிறந்த அன்புடையவன்போலப் பேசினான்.

தமயந்தி தூதி கூறியவற்றைக் கேட்டுக் கோபங்கொண்டவளாயினும் தூதுக்கிசைந்தாருடைய கடமையை அவள் கைக்கொண்டு அதன்படி ஒழுகியபடியினாலே தன் கோபத்தை மாற்றிக்கொண்டு அத்தூதியை நோக்கி "நான் நளச்சக்கரவர்த்தியைத் தவிர வேறொருவரையும் விரும்பேன் என்பது அவருக்குத் தெரிந்திருந்தும் அத்தேவர்களுடைய தூதுக்கு அவரெவ்விதம் உடம்பட்டார்? நீ சொல்வது அவ்வளவு பொருத்தமாகத் தோன்றவில்லை. ஆயினும், நான் அவரால் வெறுத்து நீக்கப்பட்ட காலத்திலும் முற்போந்துள்ள என் கொள்கையை மாற்றி வேறொருவரை மணக்க எண்ணுவதில்லை. மேலும் தேவர்கள் எனக்குத் தந்தையர்கள். அவர்களை நான் விரும்புவதும் அவர்கள் என்னை விரும்புவதும் தகுதியன்று. வேலியே பயிரை யழிப்பது போல அவர்களே சாஸ்திரத்துக்கு விரோதமாக நடக்கத் துணிவார்களேயானால் வேறு எவரால் அந்த சாஸ்திரங்கள் பெருமையையடையும்? உலகத்தில் சாஸ்திரங்கள் உன்னத நிலைமையிலிருப்பதும் அவற்றிற்கு இப்பூவுலகத்தோரும் ஏனையோரும் அஞ்சி ஒழுகுவதும் அத்தேவர்கள் அவற்றின்று பிறழாதிருத்தலினாலன்றோ? ஆகையால் இதனாலும் உன் வார்த்தைக்கிணங்குவது பழிப்புக்கிடமாகும். வீணான பயனற்ற வார்த்தைகளை மேலும் மேலும் பகர்வதால் ஆவதென்ன? இனி நீ இவ்விடம் விட்டு அத்தேவேந்திரனிடம் செல்வதே சிறப்புடைத்து" என்றாள்.

அதைக்கேட்ட இந்திரன் தூதி, தமயந்தியின் மன உறுதிக்கு மெச்சி 'இவள் பத்தினிப் பெண்களுக்கு உரையாணி போன்றவள், இவளை வற்புறுத்துவது எவ்வகையிலும் விபரீதமாக முடிந்தாலும் முடியும்" என்று தனக்குள்ளே நினைத்துக்கொண்டு அவளுக்கு ஆசி கூறித் தன்னையனுப்பிய தேவேந்திரனிடத்திற் சென்று நடந்த விஷயங்களைச் சொன்னான். அவனோடு வந்த மற்றத் தூதியர்களும் அங்குத் தேவேந்திரன் தூதிக்கும் தமயந்திக்கும் நடந்த சம்பாஷணையைக் கேட்டுத் திடுக்கிட்டுத் "தேவேந்திரனையே விரும்பாத தமயந்தி வேறு யாரையும் விரும்பாள். நம் காரியத்தில் முயல்வது வீணேயாகும்" என்று சொன்னார்கள்.

முன்பு குற்றமற்ற தமையந்தியின வனப்புளாழ்ந்த நளன் தான் கற்றிருந்த சாமுத்திரிகா இலக்ஷணங்கள் ஒன்றும பிழையாமல் அமைந்திருக்கும் அவளுடைய அவயவங்களை ஒவ்வொன்றையும வாணித்துக்கொண்டே நிற்கையில், தேவ தூதியர் தமையந்தியை அணுகி அவளோடு வார்த்தையாடியதும, அதற்கவள் தன்மீதுற்ற காதல்மிகுதியால் அவர்களுக்களித்த விடையையும் கேட்டு மனமகிழ்ந்தானாபினும தான மேற்கொண்ட காரியம கைகூடாதெனத் தெளிந்து தனக்குள்ளே “இவ்வளவு மனவுறுதி இத் தமையந்தியினிடத்தில நான் எவ்விதம தூதாகப் போவேன். அப்படியே நான போனபோதிலும் அவள் என்னைப்பற்றி என்ன நினைப்பாள். இவள இவ்வளவு மனவுறுதிகொண்டவள் என்பதைத் நான் அறிந்திருந்தால தேவேந்திரன கட்டளைக்கு உட்பட்டிருக்க மாட்டேன.' தகாத விஷயத்தில தலையிட்டதினால் அல்லவா மேற்கொண்ட காரியத்துக்கு இடையூறுண்டாகிறது?” என்று எண்ணிக் கிலேசமுற்றுப பின்பு அளிக்கப்பட்ட மந்திர சக்தியால மறைந்திருந்த தன் உருவத்தை வெளிப்படுத்தித் தமையந்தியும அவள் தோழிகளும பார்க்கும்படியாக அவர்களுக்கு முன்னே கருப்பு வில்லியான மன்மதனைப்போல நின்றான். அப்பொழுது,

விரைகமழ் நறிய தண்டார் விதர்ப்பர்கோ னளித்த பாவை
யரசிளங் குமரன்றன்னை யார்வமோ டினிது கண்டா
ளுருவெளி கண்டு நாளு முவந்துள மயர்வாள் முன்னந்
தெருளுறக் காணிலெய்து முவகையார் தெரிக்கற் பாலார்.

பிறகு தமையந்தியும் அவள் தோழிகளும் அங்குற்ற நளனை இன்னானென்றறியாது இவ்வளப்பம பொருந்திய நகரத்தில் காவல மிகுந்த பல வாயில்களைக் கடந்து இங்குற்ற இவ்வடிவழகன் விண்ணுக்கிறைவனோ? அல்லது இயக்கன்தானோ? ஒருகால் திருமகள் கண்ணுக்கினியந்த நாயகனாகிய திருமாலே இவண் எழுந்தருளினரோ? அன்றேல் வெள்ளிமலையில் வசிக்கும விஞ்சையர்க்கிறையோ? ஒருவேளை தேவரைக் காக்க

அசுரரை வாட்டிய தேவசேனாதிபதியாகிய குமரக்கடவுளே இத்திருவுருக்கொண்டனரோ! மற்று, ஆகாயமேகுதல் முதலிய சித்திகளிற் சிறந்த உத்தமத் தவத்தோர் மாயஞ்செய்தால் அப்பெரியோர் மிக்க வனப்பு வாய்ந்த சோதிமயமான திவ்விய தேகத்தோடு விளங்குவரென்று சொல்வதுண்டு. அதுபோல முக்கட் கடவுளினால் எரிக்கப்பட்ட மன்மதனும் தேவனாணைப்படியால் மற்றோர் பெறுதற்கரிய இச்சரீரத்தைப்பெற்று இங்கடைந்தனனோ? ஆலோசிக்குமிடத்து அழகிற் சிறந்த மன்மதனை எரித்த கருணையங்கடலாகிய மகாதேவன் அப்பழி தீரும் பொருட்டு உலகத்தை இன்புறச்செய்ய அம்மன்மதனினும் பன்மடங்கு வாய்ந்த வனப்பமைந்த இவ்வழகனை உண்டு பண்ணி இருக்கவேண்டுமென்றே தோற்றுகிறது. ஆனால் இப்பெருமானை உற்றுநோக்குங்கால் இவன் திருவடிகள் பூமியிற்றோய்வதால் இவன் தேவனல்லன்; இப்பூவுலகத்தைப் பொலிவிக்க வந்த பூபாலனாகவே இருக்கவேண்டும். தவிர, அப்பொழுது அன்னப்பறவையால் சிறப்பித்துச் சொல்லப்பட்ட இலக்கணங்களில் ஒன்றேனும் குறைபாமலிருப்பதனால் இக்காவலர் பெருமான நளச்சக்கரவர்த்தியாக இருக்கலாமென்பதற்குப் பல ஒற்றுமைகள் இருக்கின்றன. அவற்றில் அவ்வன்னம் கூறியபடியே இம்மகாபுருடன் அகன்ற மார்பும் திண்ணிய புயமும் முழந்தாளளவு நீண்ட கைகளும் அருளொழுகுங் கண்களும் வாய்ந்து சிறந்து விளங்குகிறான். இவனும் பிரமனாலேயே சிருஷ்டிக்கப் பட்டவன்தானோ? பிரமசிருஷ்டியில் இவனுக்கிணையே இல்லையே. அப்பிரமன் இவனைப் படைக்கப் புகுமுன் எவ்வுருவத்தை மனத்தில் நிருமித்துக்கொண்டானோ! இக்கனணியா காலனுக்கு உவமையாக மகாவிஷ்ணுவைச் சொல்லலாமேயன்றி வேறெவரும் இவனுக்கிணையாகமாட்டார். உலகில் இலக்கணங்களுக்கு எல்லையாக இவனழகைக் காணத் தவஞ்செய்த கண்கள் வேறொன்றைக் காணவும் நாடுமோ? கண்களைப் படைத்தவர்கள் இச்சுந்தரனைக் கண்டு களிக்காவிடில் அவற்றை அடைந்ததனாலாய பயன் யாது?'' என்று தோழிமார்களும் தமயந்தியும் தமக்குள்ளே அவனைப் புகழ்ந்து கிடைத்தற்கரிய அருமை

யுண்டவர்போல் களித்து மௌனமாக அவனழகைப் பார்த்துக் கொண்டே நிற்றல் தமக்குப் பழியாகுமென நினைத்து ஒருவரை யொருவர் நோக்குங்கால் தமயந்தி நளனைப்பார்த்து,

"காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தா
யாவனோ விஞ்சைக் கிறைவனோ — தேவனோ
உள்ளவா சொல்லென் றுரைத்தாள் குழைமீது
வேள்ளவா ணீர்சோர விட்டு."

இவ்வாறு தமயந்தி கேட்டவுடனே நளன் தமயந்தியை நோக்கி "மாதர்திலகமே! உனக்குச் சுயம்வரம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறதாகக் கேள்வியுற்ற தேவர்கள் உன்னை மணக்க விரும்பி வந்துகொண்டிருக்கிறார்கள். அவர்களது வரவை முன்னமே உனக்குத் தெரிவிக்கவும் அவர்களில் யாரேனும் ஒருவரை நீ மணந்துகொள்ளவேண்டுமென்பதை அறிவிக்கவும் என்னைத் தூதாக உன்னிடத்தில் அனுப்பியிருக்கிறார்கள். அவர்கள் கட்டளையை மறுக்க யாரால் ஆகும்? இம்மண்ணுலகத்தவரெல்லாம் அவர்களுக்குக் கீழ்ப்பட்டவர்களல்லவா? அதனால் இம்மண்ணுலகத்தவனான நான் அவர்கள் ஏவலைச்செய்யும் பெருமைபெறுதலை அடைந்ததே மேலென நினைத்து இக்கருமத்துக்குட்பட்டேன். அவர்கள் ஒன்றை அடைய எண்ணங்கொண்டால் அவ்வெண்ணம் நிறைவேறுவது அவர்களுக்கு மிகவும் எளிது. அத்தகைய விசேஷ சக்தியையுடைய தேவர்கள் நின்னை யடையவேண்டுமென்று நீ இயற்றிய தவந்தான் யாதோ? உலகிற் சிறந்த ஆடவராய்ப் பிறப்பதிலும் உன்போன்ற உத்தமஇலக்கணம் வாய்ந்த பெண்ணாகப் பிறப்பதே பெருமையுடையது. ஏனெனில், புருடராய்ப் பிறந்தவர் சுவர்க்கபோகத்தை அனுபவிக்க வேண்டுமானால் யுத்த வீரராகி மிக நெருங்கிய யுத்தத்தில் புறங்கொடாது மானத்தையே சிறந்ததென நினைத்து உயிரை விட வேண்டும்; அல்லது அளவிறந்த புண்ணியத்தை இயற்றவேண்டும். மேலும் இந்திர பதவியை அடையவேண்டுமானால் அதற்கு முற்றுப்பெற்ற நூறு அஸ்வமேத யாகபலன் நிறைந்திருக்க

வேண்டும். ஆனால், உன்னையோ வலுவில் அத்தேவர்கள் விரும்புகின்றனர். நீ அத்தேவர்களில் யாரேனுமொருவரை மணந்து கொள்வதே தகுதியுடையது. வீணாகப் பலவாறு சிந்திப்பதில் பயனில்லை. ஆகையால் மௌனமாக இராமல் உன் சம்மதத்தை வெளிப்படுத்தினாலல்லது நான் மீண்டும்போய் அத்தேவர்களிடத்தில் தெரிவிப்பது யாதுமில்லை. ஆனால்,

அத்தி மலரும் அருங்காக்கை வெண்ணிறமுங்
கத்துபுனன் மீன்பதமுங் கண்டாலும்—பித்தரே
காணார் தெரியற் கடவுளருங் காண்பரோ
மாணா விழியார் மனம்.

என்றபடி நீ ஸ்திரீயாகையால் நம்பக்கூடவில்லை. ஆகவே, நீ சற்று வாய்திறந்து உன் எண்ணத்தை வெளிப்படுத்துவாயாக" என்றான்.

இதைக்கேட்ட தமயந்தி, அவன் தான் நளச்சக்கரவர்த்தி என்றறிந்து வெட்கித் தலைகுனிந்து இடதுகால் கட்டைவிரல் நகத்தால் தரையை எற்றிக்கொண்டு ஒன்றுஞ்சொல்ல வகையறியாமல் நிலத்தை நோக்கிக்கொண்டே நின்றாள்.

அப்போது அத்தமயந்தியின் தோழிமார்கள் நளனை நோக்கி "காவலரே! தேவர்களுக்கு நும்மைத்தவிர வேறொருவரும் அவர்கள் தூதுக்குத் தகுந்தவராகத் தோற்றவில்லையோ? தூதர்களுக்குரிய முக்கிய குணமாகிய கபடில்லாமை நுமக்கே உடைமையானதோ? தவிர, ஆடவராயின் காலத்துக்குத் தக்க கோலங் கொள்ளலாமோ? தம்மைப்போன்ற உத்தமர்க்கெல்லாம் ஏழையாகிய எமது தலைவியின் மனதைப் பரிசோதிக்கத் துணிந்தாலவர்களுக்கு வேறு புகலிடம் யாது? ஆயினும் நாம் நினைத்தபடி எக்காரியமும் முடிவதில்லை, நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கின்றது. ஆகையால், இச்சுயம்வரம் தாம் மேற்கொண்ட காரியத்தின் படியே முடியுமென்றும் அல்லது எங்கள் எண்ணத்தின்படியே தான் முடியுமென்றும் தாமாவது நாங்களாவது உறுதியாகச் சொல்லமுடியாது. ஆனால் மாதர்களுக்குத் திருமாங்கலியம

போலும் விளங்கும் தமையந்திக்கு, உலகத்தில் துஷ்டநிக்கிரகஞ் சிஷ்ட பரிபாலனம் பண்ணுவதில் திருப்பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் அனந்த சயனனுக்கொப்பாகிய நளசக்கரவர்த்தி தாம உயிராக இருக்கின்றார். அவர் உருவெளித் தோற்றமே அவளுக்குச் சிறந்த கண்காக்ஷி. அவர் பெயரை உச்சரித்தலே அவள் நாவுக்கினிய உணவு. அவர் புகழைக் கேட்டலே அவள் காதுக்கினிய பண். அவருக்கு ஊழியஞ் செய்தலே இத்திருமேனியை அடைந்ததனாலாய பயனென இன்னும் அத்திருத்தொண்டுக்கு நோற்றுவருகிறாள். அவள், அவரைத் தவிர வேறெவரையும் மனதினாலும் நினைப்பதில்லை. ஆகையால் அக்காவலர் பிரானையே மணப்பதன்றி வேறொருவர் பெயரை வாயினாற் சொன்னாலும் கேட்கப்பொறுதலளாகி அக்கினியில் விழுந்து உயிர்விடுவாள் என்பதற்கையமில்லை" என்றார்கள்.

அதற்கு நளன் "மெல்லியர்காள்! நுந்தலைவி, நளனை மணக்க வாய்க்காதபோது அக்கினியில் விழுந்து உயிர்விடுவாளாயின் அவ்வக்கினிதேவனை அடைந்ததாகுமே. அன்றி ஜலத்தில் விழுந்திறந்தாலும் வருணனை அடைந்த தாகுமல்லவோ. மேலும் பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம்* என்னும் எண்வகை மணங்களுள் நமக்குரிய தெய்வமணம் தேவர் அருளின்றி எவ்வாறு சம்பூரணமாகும். இத்தெய்வமணத்துக்கு அக்கினி சாக்ஷி ஆகவும், வருணன் தாரைவார்த்துக் கொடுக்கும் நீராகவும் உதவ வேண்டாமோ. அவ்விருவரையும் விலக்கிச்செய்யும் திருமணமும் முற்றுப்பெற்றதாகுமோ. உற்று நோக்குங்கால் நீங்கள் மணவினையை அறியீர் எனத் தோற்றுகிறது. தவிர கிடைத்தற்கரிய கன்னிகையாகிய இத்தமையந்தியின் அழகைப் பார்க்கப் பூவுலக அரசர்களில் ஒருவனும் தேவர்களின் ஊழியனுமாகிய நளனுடைய இரண்டு கண்கள் போதுமானவைகளா? தேவேந்திரனுடைய ஆயிரங்கண்களல்லவா இவள் அழகை முற்றிலும் கண்டுகளிக்குஞ் சக்தியையுடையன. மேலும் எஜமானனை

விட்டு ஊழியனை விரும்பலாமோ. இத்தமையந்தி என் இத வார்த்தைக்கிணங்கித தேவர்கள் இஷ்டப்படி நடவாவிட்டால் தேவேந்திரன் இவள் மீதுற்ற காதல மிகுதியால பஞ்சதருக்களையும் நோக்கி எனக்கு இந்தக்ஷணமே விதாப்ப நாட்டரசன புத்திரியாகிய தமையந்தியைக கொணர்ந்து கொடுக்கவேண்டும் என்ருல் கேட்டதெல்லாம் கொடுக்கும தெயவததன்மை வாய்ந்த அத்தருக்கள் அக்ஷணமே இததமையந்தியை அததேவ ராஜனிடததில் கொண்டுபோயச சேர்ககுமே. அப்போது அவற்றைத் தடுக்க நுமமாலாகுமோ. நீஙகள் பேதையராகையால் உத்தமமானதையும அதை இகழ்வதால விளையும தீஙகையும் அறியும் திறமற்றுப் பேசுகிறீாகள். ஆலோசனை இன்றிச் செய்யும் காரியம் அரைக்காரியம் என்பதை அறியீரோ. நும் மிடதது அருளுடையோா எவரும நுந்தலைவி தேவர்கள் மனஙகளிககுமாறு செயவதையே அவளுக்கும நுமக்கும் முழுநன்மையைப் பயக்கும எனறே சொலலுவாாகள். ஆகையால துரிதப்படாமல் நான் சொல்லியதை ஆயநதாயநது பாாதது நுங்கருத்தை வெளிப்படுததுவதே மேன்மையுடைதது" எனறு சொன்னேன்.

இவ்வாறு நளன் சொல்லியவற்றைத தன இருசெவிகளும் கொப்பளிக்கக் கேட்டுககொண்டிருநத தமையநதி உளம்பதைத்து முகம்வாடிப் பெருமூசசெறிந்து கண்களிலிருந்து நீர் பெருக நின்றுகொண்டிருக்க அவள பரிதபிதது நிற்கும் நிலைமையையும் அவளுடைய துககததையும அதுவரையில கண்டிராத அவள் தோழிமார் பார்தது மனம்புழுஙகி அனலிலிட்ட மெழுகானார்கள. தமையநதி அரசன் கேட்டதற்குத் தக்க விடையளிக்க நாவெழாதவளாயத தனககுள்ளே பின வருமாறு சிந்திக்கலுற்ருள். "உலகததில் பெண்ணாகப் பிறநதவாகளுக் கெல்லாம் கலியாண காலத்தில் இவ்வித துன்பம் உண்டாவது சாதாரணமானதோ; அல்லது எனககு மாததிரம் இதுபுதிதோ. நான் என்ன பாவஞ்செய்தேன். யோசிக்குமிடதது மனிதர் கள் வார்த்தை ஒரே நிலைமையிலிருப்பதில்லை. அதிலும ஆட

வரைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ. மாதர்கள் அற்பகுற்றஞ்செய்தாலும அதற்குக் கட்டுக்கட்டாகச் சாஸ்திரங்களை எடுத்துசசொலலி அதைப பெருங்குற்றமாகக்குவாரகள். ஆடவர் பெருங்குற்றஞ்செயதாலும அதற்கு அளவுமிலலை நிறையுமில்லை. வீணுக ஆடவாகளை வெறுததுக்கொள்வதிற் பயன்யாது? பெண் எனற பெயரைசசொலலி ஒரு துரும்பைக் கிள்ளிப்போட்டாலும பேதமைககுணம முனனுல வநது நிறகிறது. இதற்குகாரணமாக நானே எறபட்டிருககும்போது வேறெருவரைத் தேடவும வேண்டுமோ? உலகததில் பெண்ணுகப் பிறநதவர் யாராவது என்னைப்போலப் பகுததறிவிலலாத பிராணியாகிய ஒரு பக்ஷியின் வார்த்தையை நமபி ஒரு ஆடவனிடத்தில் காதல் கொணடதுண்டா? ஐமபொறிகளில் ஒவ்வொரு பொறியின விசேஷததால் சிலவகைப்பிராணிகள் வருநதுவதுண்டு. அவற்றில் கண்ணுற்கெட்டது பதங்கம் (விட்டில்). இபபறவை விளக்கொளியை மிகக நிறமவாயநத பழம என நினைதது வெகு விரைவாக அதனமேற் பறநதுவிழநது தன் அவயவங்கள் சுடுண்டு வருநதும. அதுபோல நானும என கடபுலனுல் அன்று சிங்காரததோடடததில உலாவிய அன்னததின அழகைக்கண்டு ஏமாநது அது சொலலியவெல்லாம் வேதவாககியமெனவே உறுதியாகக்கொண்டேன். இபபோது இவ்வரசர் கோமான் பேசும் வார்த்தைகளைக கேட்குமபோது, அவ்வன்னபக்ஷி இவரால் அனுப்பப்பட்டதாகவும், பினபு என்னிடததில் விடைபெற்றுப்போன அப்பறவை மறுபடியும் இவரிடததில்சென்று என் நிலைமையையும மன உறுதியையும் நான சொல்லியவாறு மனமுருகச் சொன்னதாகவும சிறிதேனும் தோற்றவில்லையே. அவ்வாறு தெரிவிததிருநதால் கல நெஞ்சாகளானுலும் இவ்வாறு ஆதரவின்றிப் பேசார். ஒருவேளை அவ்வன்னமானது முதலில் இத்தேவர்களால் தான் அனுப்பப்பட்டதோ. அப்படியானுல் அது இத்தேவர்களையல்லவா புகழ்ந்து பேசியிருக்கவேண்டும்; அவ்வாறன்றி அது கடைசிவரையில் நளச்சக்கரவர்த்தியைத் தானே புகழ்ந்துகொண்டே இருந்தது. ஒருகால் அன்னம் வநதது போலவும் பேசினதுபோலவும் கனவுதான் கண்

டேனே. அன்னம் வார்த்தையும் நான் அதைப்பின்பற்றிச் சென்றதையும் என் தோழிமாரும் செவிலித்தாயரும் பார்த்திருக்கிறார்களே. ஆதலால் அது கனவல்ல, நனவே தான். அன்றியும் இவர் நளசக்கரவர்த்தியாய் அல்லாமல் வேறுயாராகவாவது இருக்கலாம் என்று நினைப்பதற்கும் இடமில்லை. ஏனெனில் இவர் அன்னஞ்சொல்லிய இலக்கணங்களில் ஒன்றாவது குறையாமல் எல்லாம் நிறைந்திருக்கிறாரே. தவிர, தேவதூதியரும் நளச்சக்கரவர்த்தியைத் தேவர்கள் உன்னிடத்தில் தூதாக அனுப்பியிருக்கிறார்கள், அவரும் வந்துகொண்டிருக்கிறார் என்று சொன்னார்களே. இவர் நளசக்கரவர்த்தி அல்லவென்று எவ்வாறு நினைக்ககூடும். வீணாக இவைகளை எல்லாம் நொந்து கொள்வதில் இலாபம் என்ன. எய்தவர் நாம் அருகிருக்க அம்பை நொந்த கருமமென்ன இயம்புவீரே, என்றபடி பிறரை நோவதிற் பயனில்லை. நான் முன்செய்த தீவினையானது இவ்வாறு என்னை வருத்துகிறதேயன்றி வேறென்ன. ஆ தெய்வமே! கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்ற முதுமொழி என்வரையில் பொய்யாயிற்றோ? நான் உன் கிருபைக்கு ஆளாகத் தகுந்தவளல்லவோ. ஏழை பங்காளனாகிய நீயே ஏழையாகிய என்னைக் காத்து என் எண்ணத்தை நிறைவேற்றாவிடின் வேறு யார்தாம் அதைப்பூர்த்தி செய்வதற்குரியவர். என்னைக் காக்காவிடின் உன் பங்கிலுள்ள ஏழைக்குத்தான் உன்னிடத்தில் என்ன நம்பிக்கை யுண்டாகும். பெண்ணென்றால் பேயும் இரங்குமே. தயாநிதியாகிய உனக்கு என்மீது கருணைபிறவாதிருக்க நானிழைத்த பெருங்குற்றம் யாதோ? நீ என்னைக் கைவிடின் எனக்கு வேறு பற்றுக்கோடியாது? உலகத்தில் விரதங்களைக் கைக்கொள்வதால் உடல் வாடும். அதனோடு ஐம்பொறிகளின் வலியடங்கும். அப்போது ஆசைகுறையும். அதுபக்தியையூட்டிப் பின் விரக்தியைக் கூட்டும். இவை இரண்டும் முக்தியைக் காட்டும். முக்தியென்பதும் கடவுளென்பதும் ஒன்றே. ஆகையால் உன்னை அடைவதற்குச் சிறந்தவழி விரதமே. அவ்விரதங்களிற் சிறந்தது சத்தியங்காப்பதே. ஆதலால் நான் அன்னத்தினிடத்திற் சொல்லிய உறுதிமொழியினின்றும் என்றும் பிறழமாட்டேன்.

அதற்காக வெனக்கு எது நேரிட்டாலும் அதுவும் நின் கருணை யாலுண்டானதென நினைத்துக்கொள்வேன். பெற்றவளே பிள்ளையைக் கொல்ல நினைத்தால் அக்குழவி பிழைப்பதெவ்விதம்?" என்று தமையந்தி தன் எண்ணம் நிறைவேறுமற் போகுமோ என்ற ஏக்கத்துடன் துக்கித்துக்கொண்டிருந்தாள்.

அப்போது எவரும் சிந்தைசகாவண்ணம் இவ்விருவர் அன்பையும் முடித்துவிட்ட அன்னமானது தெய்வீகத் தன்மையால் இங்கு நடந்தவற்றை அறிந்து களைகணற்றுத் தத்தளிக்குந் தமையந்திக்கு முன்னே தோன்றிப் "பெண்மணியே! உன் முன்னே நிற்கும் இக்கருணாகரன்தான் நளன். அவன் உன்னி டத்து அன்பற்றவனல்லன். அவன் சத்தியந்தவறாத சன் மார்க்கனுகையால் தான் மேற்கொண்ட தூதுக்குரிய தர்மந்தவ றாமல் ஒழுகுகிறான். இதனாலேயே அவன் உண்மை நெறி தவறாதவன் என்று உன் முன்னிலையிலேயே நீ தெரிந்து மகிழ்ச்சியடைய வேண்டுமேயல்லது மனங்கரையலாமோ? நீ ஒன்றுக்கும் ஆலோசிக்கவேண்டாம். உன் எண்ணத்தின்படியே நடக்கும். இவ்விடையூறெல்லாம் இப்போதே ஒரு விதமாக நீங்கிவிட்டால் பின்பு உன் எண்ணம் இடையூறின்றி நிறை வேறும் என்பதற்கையமில்லை. அதற்காகவே இவைகள் சம்ப வித்தனவேயன்றி வேறல்ல. நீ கண்கலங்கவேண்டாம்" என்று அவள் மனதைத் திடப்படுத்தியது.

பின்பு அவ்வன்னம் நளனை அணுகி "புரவலனே! நீ ஆடவ ரிற் சிறந்தோனானதால் தமயந்தியினிடத்துள்ள காதலை மறைத் துக்கொள்ளும் வல்லமையுற்றாய். அம்மங்கையினிடத்ததை மெல்லிய ரிடத்திலதான் காணபிக்கவேண்டும். மேலும் தமையந்தி அதைப் பொறுக்க வல்லவளோ? முன்னமேயே அவள் நின் காதல் நெருப்பால் உடல் குழைந்து ஆதாரமின்றித் தவிக்கும்போது நின் கொடிய சொல்லாகிய நெடியவேலும் பாய்ந்தால் அவள் நிலைமை என்ன வாகும் என்பது உனக்குத் தெரியாதா. நீ உண்மை பிறழா உத் தமன் என்பதையும் தருமந்தவறாதயாசிதி என்பதையும் இத்தூதி னால்தான் சம்பாதிக்கப்போகிறாயோ. அவையுன்னுடன் கூடவே

பிறந்தனவென்பது உலகமறிந்த விஷயமல்லவா. மேலும் நீ இவ் விடத்தில் தேவர்களுக்காகத் தர்மந்தவறாமல் பேசிய விஷயங்க ளையும் இவர்கள் உனக்குக் கொடுத்த உத்தரத்தையும் அத்தேவர் அறியாதவரல்லர். ஆகையால் நீ இங்கு நடந்த விஷயங்களை அவர்களிடத்துச் சென்று தெரிவித்தால் அவர்கள் உன்னைப்புகழ் வார்களேயன்றி இகழார். நீ இன்னும் பயனற்ற இக்காரியத்தில் பாடுபடுவதால் உனக்குப் பழிச்சொல்லுண்டாகும்" என்று சொல் லிற்று.

உடனே நளன், தமையந்தியின் மன உறுதியையும் அவள் அப்போதிருந்த நிலைமையையும் கண்டு மனமிரங்கி அதற்குமேல் ஒன்றும் சொல்ல மனம் எழாமல் தன்னை மறைத்துக்கொண்டு தான் சென்றவழியாகவே திரும்பிவந்து தேவர்களிடத்தில் அங்கு நடந்தவற்றைக் குறைவறத் தெரிவிக்க அத்தேவர்கள் அவனிடத் திற் பரிவுமிகுந்து அவனுடைய குற்றமற்ற ஒழுக்கத்துக்காக அவ னைப் புகழ்ந்தார்கள்.

## சுயம்வரப் படலம்.

இங்கு இவ்வாறிருக்கத் தமையந்தியின் சுயம்வரத் திருமுகங் கண்ட கணக்கற்ற அரசர்களும் அதைக்கேள்வியுற்ற சங்கையில் லாத தேவரும் நாகரும் அமராவதிபோல அலங்கரிக்கப்பட்டிருக் கும் காவலோடு கூடிய வீமன நகரை நோக்கி வந்துகொண்டிருந் தார்கள். அவர்களுடைய சதுரங்க சேனைகளும் அந்நகரில் இருக்க இடமின்றி எப்பக்கங்களிலும் நெருங்கிச் சூழ்ந்து வந்தன. அவற் றில் அளவற்ற குதிரைகளின் காலடிக்குளம்புகள் பூமியிற்றாக் குவதால் உண்டாகும் புழுதி ஆகாயத்தை மறைத்தது. தேவர்க ளும் அரசர்களும் ஒருவர் புயத்தில் ஒருவர் புயம் தாக்குமாறு நெருங்கினமையால் மன்னருமரசர் புயத்தில் பூசிய சந்தனக்கு ழம்பின் நறுமணம் தேவர்கள் புயத்திலும் தேவர்கள் அணிந்து வந்த கற்பகப்பூமாலையின் திவ்வியமணம் புவிவேந்தர்மீதும் கலந் தன. யானைகளின் மதஜலமும் குதிரைகளின் வாயினின்றொழு

கிய நுரையும் அரசர் புயங்களினின்றொழுகிய மான்மதங் கலந்த சந்தனக்குழம்பும் வீதிகளில் ஓடிச் சேறு செய்தன. விஞ்சையர் இயக்கர் விண்ணோர் முதலியோர் விமானங்களும் புவிமன்னர் தேர்களும் அளவற்ற இரத்தினங்களின் ஒளியிலாவது அலங்காரத்திலாவது குறைவின்றி யிருந்தமையால் இவ்விரண்டிற்குமுள்ள வேறுபாட்டை எளிதிலறியக் கூடியவர்களும் மயங்குமாறு அவ்வளவு சிறப்புற்று கலந்திருந்தன. அச்சுயம்வரத்துக்கு வந்தோரெல்லாரும் பற்பல தேயத்தாரானமையால் அவர்கள் பேசும் பாஷைகளும் பற்பலவாக இருந்தன. அதனால் அக்காலத்தில் யாவருக்கும் பொதுவான தேவபாஷையில் யாவரும் ஸம்பாஷித்தார்கள். அங்கே யானைகள் பிளிறும் ஒலியும், தேரோடும் ஓசையும் ஸப்த சமுத்திரங்களின் முழக்கத்தை ஒய்ச்செய்தன, அரசர்களின் சந்திரவட்டக்குடைகளும் கொடிகளும் ஆகாயத்தை மறைத்துச் சூரியன் ஒளியைத் தடுத்தபோதிலும் அவ்வரசர்களின் மகுடத்திலுள்ள இரத்தினங்கள் இளவெயில் வீசின. அக்கால அந்நகர்,

கருமணி யிமைக்கும் பைம்பொற்
　　குடைநிழல் வெயிலை யோட்ட
மருமலி நறிய மென்பூ
　　மாலை வாடாமையாலுந்
திருநகர்ச் சேவ்வி நோக்கி
　　யிமைப்பிலர் திரிதலாலு
மரசரோடமரர் தம்மை
　　யறிவரி தாயதன்றே.

இச்சுயம்வரத்துக்கு வர வாயுவானவன் மிக்க ஆவலுற்றானேனும் அவன் வாகனமாகிய மானானது வீமன் நகரை நோக்கிச் செலுத்தப்பட்டபோது அம்மான் தமயந்தியின் விழிகளுக்கஞ்சி திரும்பியோடிய படியாலும், ஈசன் இச்சுயம்வரத்துக்காக எழுந்தபோது இடதுகால் எழாமையினாலும், குபேரன் தன் உடற்குறைக்கு வெட்கப்பட்டதாலும், நிருதி தேவர்களையே விரும்பாத தமயந்தி இராக்கதர்களையா விரும்பப்போகிறாள் என்று நினைத்

த்தாலும் அவர்கள் வாராமையால் நான்கு திக்குப்பாலர்களைத் தவிர மற்ற நால்வருமாகிய இந்திரன், அக்கினி, யமன், வருணன் முதலிய நால்வரும், தமயந்தி நளன்மீதுள்ள காதலால் அவர்களை வெறுத்தபோதிலும் அவர்களுக்கு அவள்மீதுள்ள விருப்பொழியாமையால், அவளை எவ்விதத்திலாவது அடையக்கருதி, அந்நளனைப் போல உருவெடுத்துக்கொண்டு அந்நகரினுட்சென்றனர். * இவர்களுக்குப்பின் சதுரங்க சேனைகளும் நாலாபக்கங்களிலும் சூழ்ந்து வரத் திருமால் இச்சுயம்வரத்துக்கு எழுந்தருளியதுபோல, யாவரும் நடுங்கித் தனக்கடங்கும்படி அச்சந்தரும் வேலையுடைய நளனும் வந்து சேர்ந்தான்.

இவ்வாறு திரிலோகங்களிலுமுள்ள அரசர்களெல்லாம் சுயம்வரத்துக்காக எழுந்தருளிய செய்தியை அறிந்த வீமராஜன் மனமகிழ்ந்து முகமலர்ந்து தனது அலங்கரிக்கப்பட்ட அழகியதேரிலேறிக்கொண்டு நாற்பெருஞ்சேனைகளும் தன்னைச் சூழ்ந்துவரத் தன்னிடம் அன்புற்ற சுற்றத்தாருடன் எதிர்சென்று அழைத்து அம்மன்னரோடு அளவளாய இனிய வசனங்கூறி அவரவர்க்குத் தக்க சிறப்புச்செய்து அந்நகரில் அவ்வவ்வரசருக்காக ஏற்படுத்தப் பட்டிருந்த இடங்களில் அமரச்செய்தான்.

அங்கிருந்த மன்னரெல்லாம் அன்று பகல்முழுதும் ஒருவர்க்கொருவர் குசலம் விசாரித்துத் தத்தமக்கேற்ற இடங்களில் தமது நால்வகைச் சேனைகளோடு தங்கிச் சுயம்வரநாள் எப்போது வருமென்று சூரியனைப் பார்த்துக்கொண்டே இருந்தார்கள். சூரியனும், அவ்வரசர்கள் தன்னை உற்று நோக்குவதால் இராஜதிருஷ்டி படுமென நினைத்தோ அன்றித் தேவரும் பூபாலரும் நாகரும் தமக்குத் தமயந்தி மாலை சூட்டாமற்போவாளோ எனக் கொல்லுலைத் துருத்திபோல் மனமழன்றுவிடும் பெருமூச்சானது தன்னையும் சுடும் என நினைத்தோ குடகடலிலாழ்ந்தான்.

மாலைப்பொழுது நெருங்கியவுடன் ஆகாயத்தில் செவ்வானம் படர அந்தணர் முதலிய இருபிறப்பாளர் மூவரும் மாலைக்கடன் கழித்தார்கள். பசுக்கள் தமது கன்றை நினைத்துத் தமதிருப்பிடத்துக்குச்சென்றன. பக்ஷிகள் தத்தம் கூடுகளை அடைந்தன. வீதி

களைப் பெருக்கி நீர் தெளித்துக் கோலமிட்டுத் திண்ணைகளில் விளக்குகள் அமைக்கப்பட்டிருந்தன. அரசன் ஆணையால் எங்கே பார்த்தாலும் பகலோவெனச்சந்தேகிக்கும்படி பலவிதமான விளக்குகள் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றின் ஒளி பகலொளியை மழுங்கச் செய்யும் தரமுடையதாயினும் அச்சூரியன் ஒளிக்குரிய தாபமின்மையால் அன்றைக்குப்பௌர்ணமி திதி அல்லாதிருந்தும் இத்தனை பூரண சந்திரர்கள் எங்கிருந்து வந்தார்களென அங்கிருந்தோர் யாவரும் அதிசயித்தனர். அந்திக்காலத்தில் மலரும் ஆம்பல் முதலிய புஷ்பங்கள் மலர்ந்தன. இளந்தென்றல் சிங்காரத்தோட்டங்களினுழைந்து வருகையில் அவைகளுள்ள நறுமணம் ஊட்டப்பட்டுயிருந்துவாக வீசியது. சந்திரனுக்குத், தமையந்தியின் சுயம்வரத்துக்காக அலங்கரிக்கப்பட்ட அந்நகரையும், அங்கு வந்திருக்கும் அரசரின் தொகுதியையும் கண்டுகளிக்க மிக்க விருப்பமுண்டெனினும், தமையந்தி வாசஞ்செய்யும் நகரில் தனதுவெளுத்து மாசுபடர்ந்த முகத்தைக் காட்டுவது தனக்கு நீங்காப்பழிப்புண்டாக்குமென நினைத்து ஒரு மூலையிலிருந்து எட்டிப்பார்ப்பதுபோல வளர்பிறைச்சந்திரன் ஒரு கோடுபோல் ஆகாயத்தில் தோன்றிற்று. இதைக்கண்டவுடன 'தண்ணென்கதிர வரவால் பொங்குங்கடலானது' தமையந்தியின் சுயமவரம் நாளைத்தினமாகையால் அதற்கு வர விருப்பங்கொண்டவர்க ளெல்லாரும் இனறிரவே வந்துவிடவேண்டும், என்று தனதுகைகளை நீட்டி அழைப்பதுபோல் தோற்றிற்று. கழிகளிலெல்லாம் நீர நிரம்பியது. அந்நகரிலுள்ள ஆதுலர் சாலைகளில் ஆதுலரை அழைப்பதற்காகக கணக்கற்ற மணிகள் ஒலிக்கப்பட்டன. தேவாலயங்களில் பிரதோஷகால நைவேத்தியம் நடத்தப்பட்டது. வீடுகள் தோறும் விருந்தினர் கணக்கற்று நிரம்பினர். பெண்களெல்லோரும் அப்போதலர்ந்த மல்லிகை முதலிய புட்பங்களைப் பறித்துத தொடுத்தார்கள்.

இவ்வாறு மாலைகாலம் கழிந்தவுடன் அன்றிரவு அரசர்கள் அறுசுவையோடுண்டு தமது பஞ்சணையில் நித்திரை செய்யாமலன்றும் தமையந்தியின் மணமாலை தமக்குக் கிடைக்குமோவென எக்கங்கொண்டு அதே கவலையாக இருந்தபடியால் தூக்கம் பிடியாமல்

வருந்தினர். 'கவலையுடையார்க்குக் கண்ணுறக்கமில்லை' என்பது பொய்யாகுமா. தேவேந்திரன் முதலிய நாலவரும், தாம் தகாத காரியத்தில் புகுந்தமையால் மானிட உருவமடைய நேரிட்டதையும் உணராமல் தம்மால் இயன்றவரையில் தமயந்தியை அடைய முயன்றும் பயன்படாமையால் வருந்தி ஊண் உறக்கம் இரண்டையும் விட்டனர். மற்றத்தேவர்களும் அன்றிரா முழுவதும் கண் கொட்டவே இல்லை. நாகா அந்நகரத்தில் இடி முழக்கம்போலும் வாச்சிய ஒலியால் தமது காது பட்டமையுமறியாது தம் உணவையும் மறந்து தமயந்தியைக் கண்டதற்குரிய சுதினம் எப்போது புலருமெனக் கிழக்கே நோக்கிய எண்ணமாகவே இருந்தபடியால் அவர்களும் உறக்கமென்பதை அறியவில்லை.

நளன், தான் தூது சென்றபோது அவளிருந்த நிலைமையையும் அவள் மன உறுதியையும் அவனுடைய அன்புற்ற வார்த்தைகளுக்காகக் கண்கலங்கியதையும் நினைத்துப் பரிதபித்து அவள் எண்ணம் எவ்வாறு பூர்த்தியாகுமோ என்பதை அறிய மனங்கொண்டு அதே நினைவாக இருந்து அன்றிராப்பொழுதைக் கழித்தான்.

தமயந்தி நளன் பேசிய வார்த்தைகளாலும், அவன் தேவர்களுடைய தூதுக்கு உட்பட்டதாலும், கடைசியாக அவனுடைய எண்ணம் முற்றும் அறியப்படாமலும், தன் உறுதிமொழி தவறுமோ எனத் திகிலடைவதும் பின்பு தனக்கும் நளனுக்கும் இடைநின்று அன்னம் சொல்லிய சமாதானத்தால் சற்றுத் தேறுதலடைவதுமாகச் சஞ்சலப்பட்டு மனம் புண்ணாக இருக்கும்போது வீசிய இளந்தென்றலையும் கண்ணுக்கினிய காட்சியையும் குளிர்ந்த கிரணங்களையுடைய பிறையையும் வெறுத்து அன்றிரவை ஒரு கற்பகாலமாகக் கழித்தாள். அன்றிரவில் அவளுக்கு அவள் பார்த்த அனைத்தும் தன்னைப்போலவே துக்கமுற்றதாகக் காணப்பட்டன. அன்றியும், ஆனந்தமாக ஆரவாரித்த கடல் முழக்கத்தைக் கேட்டு "இந்தக்கடலும் என்னைப்போல் தன் எண்ணம் நிறைவேறாமையால் வாய்விட்டுக் கதறுகிறதோ. அதுவும் என்னைப்போல யாரையாவது அடைய எண்ணங்கொண்டதோ. உலகத்தில் என்னைப் போல் துன்பம் அடைபவர் இல்லையென நினைத்த எனக்கும் ஒரு

துணையிருக்கிறது போலும்" என்று தன்னைப்போலவே எல்லா
வற்றையும் நினைத்து ஒன்றினாலும் மனம் சமாதானம் அடையா
மல் வருந்தினாள்.

இவ்வாறு யாவரும் அவ்விராககாலத்தைக் கழிக்க வகையறி
யாதவராய்க் கடலிலகப்பட்ட துரும்புபோல அலைக்கப்பட்டு இராக்
காலத்துத் தாமரைபோல முகம்வாடித் தம்வசமற்றவராய் ஏங்கி
னார்கள். அப்போது, சூரியனன்றிரவில் சுயம்வரத்துக்காக வந்த
அரசர்களின் நிலைமை எவ்வாறுற்றதெனக் காணவருபவன்போல
வும், திரிலோகங்களிலுமுள்ளாவர்கள் அச்சுயம்வரத்துக்கு வந்
திருக்கத் தான்மாத்திரம் போகாதிருந்ததால் தன் குலத்துக்கீனம்
என நினைத்து வருபவன் போலவும், ஈசன் தனது பாகத்திலுள்ள
கண்ணால் தமயந்தியின் சுயம்வரத்தைப் பார்ப்பதால் குற்றமில்
லையென நினைத்துத் தன் வலதுகண்ணால் பார்ப்பதுபோலவும்,
உலகத்தில் அஞ்ஞான இருளில் மூழ்கி உய்யும்வகையறியாது
உழல்கின்ற ஆன்மாவை எங்கும் நிறைந்த பரஞ்சோதியாகிய கட
வுள் தன் நீங்காத கருணையால் அதற்குமுன் தோன்றி அதைக்
கவிந்துகொண்டிருக்கும் இருளைப்போக்கி விளக்கமுண்டுபண்ணு
வது போலவும் தனது இளமையான கிரணங்களைப் பரப்பி
அந்தகாரத்தில் சூழ்ந்திருந்த இருளையோட்டித் தாமரையையும்
அங்குற்றோர் முகத்தையும் மலரச்செய்து, மயங்கிக்கிடக்
கின்ற அரசர் முதலிய ஏனையோருக்கும் தமயந்தியின் சுயம்வர
தினம் இன்றுதான் எனத் தெரிவிக்கவந்த தேவதூதனை போலக்
கீழ்த்திசையில் உதயமானான்.

வீமராஜன் தன் மங்கைக்கு நற்காலம் எப்போது பிறக்கு
மென நாளெண்ணிக்கொண்டிருந்தபடியா லன்றுபுலர்ந்தவுடன்
காலைக்கடன் முடித்துக்கொண்டு தன் குலதெய்வத்தைக் கிழக்கு
நோக்கித் தெண்டனிட்டுச் சபாமண்டபத்திலமர்ந்து ஏவலரை
அழைத்துத் தன் மங்கை சுயம்வரநாள் அன்றையதினமாகை
யால் நகரை அலங்கரிக்கத் தன்னுயிரன்ன குடிகளுக்கறிவிக்கு
மாறு முரசறையச்செய்தான். அவன் பெரியமங்கலமுரசை யானை
யின்மீதேற்றி அரசனாணையின்படி அந்நகர்முழுதும் அடித்தான்.

இவ்வொலியைக்கேட்ட அந்நகரத்தார் அமுதுண்டவர்போல் களித்துத்தெருக்களையும், வீடுகளையும் பனிநீர் தெளித்துப்பெருக்கிச்சந்தனக்குழம்பால்மெழுகி வானவில்போல்காவி தீட்டி முத்துப்பொடியால் கோலமிட்டுத் திண்ணைகளில் பொற்பூரணகும்பம் அமைத்து மாலைசூட்டிப் பாலிகை நிறைத்துப் பொன் விளக்குகளில் ஆனெய்விட்டு விளக்குகளேற்றினார்கள். வீதிகளில் ஆகாயத்தை அளாவும்படி கால்கள் நாட்டிப் பந்தரிட்டுப் பட்டுவிதானங் கட்டிக் கால்கள்தோறும் வாழை கமுகு கரும்பு முதலியன கட்டிப் பந்தலின்மேல் ஓரங்களிலும் உட்பக்கங்களிலும் தென்னை, கமுகு, ஈந்து, மா முதலியவற்றின் குலைகளை இடைவெளியின்றித் தொங்கவிட்டுத் தரைதெரியாது பலவகையான கம்பளங்களை விரித்து ஒவ்வொரு வீட்டிலும் மணவினை நடத்துதல்போல அலங்கரித்தார்கள். இவ்வாறு வீடுகடோறும் பந்தல்கள் விடாமல் அமைக்கப்பட்டதால் அந்தெருக்கள் முழுதும் ஒரேபந்தரிட்டுச் சூரியன் ஒளியை அப்புறப்படுத்தியதுபோலிருந்தது. வீடுகளில் சுவர்களெல்லாம் சுண்ணாம்பு பூசி ஓரங்களில் காவி தீட்டப்பட்டன. அச்சுவர்களில் அழகிய சித்திரங்கள் வரையப்பட்டு அலங்காரமாக மாலைசூட்டப்பட்டிருந்தன. பலஉலோகங்களாலாக்கப்பட்ட கதவு நிலைகளையும் பலகணிகளையும் விளக்கிக்கதவுகளுக்குப் பல வர்ணங்கள் பூசப்பட்டன. வாசற்படிகளிலும் தெருக்களிலும் தோரணங்கள் கட்டப்பட்டன. வீடுகளுக்கெல்லாம் அகிற்புகையூட்டிப் பலகணிகளுக்குப் பல நிறமவாய்ந்த பட்டுக்களாலாகிய திரைச்சீலைகள் விடப்பட்டன. மேல் உப்பரிக்கைகளில் அழகிய கொடிச்சீலைகள் கட்டப்பட்ட உன்னதமான கொடிகள் நாட்டப்பட்டன. அந்நகரத்தார் தங்களையும் தங்கள் குழந்தைகளையும் பட்டுக்களாலும் இரத்தினாபரணங்களாலும் அலங்காரம் செய்துகொண்டு ஆனந்தக்கடலில் மூழ்கி அந்தணர்களுக்கு அறுசுவையோடுண்டி அளிப்பவரும், தேசாந்திரிகளைத் தேடி அழைத்து முகமன்கூறி அவர்க்கினியன படைத்து அதிதிபூசை செய்பவரும், தமதரசன் புத்திரியின் எண்ணம் நிறைவேறி இன்புற்று நீடூழி வாழவேண்டுமெனத் தேவாலயங்களில் கடவுளர்க்கு

மகாநைவேத்தியம் முதலியன நடாத்தி, ருத்திரம் புருஷசூக்தம்
முதலிய நவிற்றுவோரும், தத்தம் குலதெய்வங்களை வணங்குவோ
ருமாக ஒவ்வொருவரும் களைப்பின்றி ஒழிவில்லாமல் பலவகை
யான சிறப்புச் செய்தனர். அதனால் அந்நகர் அளகையோ எனக்
கண்டோரயிர்க்கும்படி விளங்கிற்று.

இவ்விதமாக அந்நகரத்தார் அடங்கா மகிழ்ச்சியடைந்து
தமயந்தியின் சுயம்வரத்தைக்காணக் கருத்துற்றவராய்ச் சபா
மண்டபத்துக்குச் சென்றனர்.

அம்மண்டபமானது அந்நகரத்திலழகான சமவெளியில் பதி
னான்கு காதம் அகன்று வீதிகள் அகழிகள் மதில்களால் சூழப்பட்
டிருந்தது. அதற்கு அனேக வாயில்களுண்டு. அவ்வாயில்களில்
தோரணங்கள் கட்டப்பட்டிருந்தன. அதன் மேற்புறம் விசித்
திரமான மேற்கட்டிகளினால் எங்கும் அலங்கரிக்கப்பட்டிருந்தது.
அங்கே எங்கனும் அகிற்புகையூட்டிச் சந்தனக்குழம்பு தெளித்துப்
பூமாலைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. அதைச் சுற்றிலுமனேக
விதமான இலை புஷ்பங்களோடுகூடிய மரங்களை நாட்டிச் சோலை
போல் விளங்கச்செய்தனர். அம்மண்டபத்துள் பட்டுகளைக்கம்பள
மாக விரித்துத் தளம், நடப்பவர் பாதங்களுக்கு ஊறுண்டாகா
வண்ணம் செய்யப்பட்டிருந்தது. அங்கே இலேசாகவே காற்று
வீசவும் பனிநீர் தெளிக்கவும் புஷ்பங்கள் சொரியவும் பலவகை
கருவிகள் நிருமிக்கப்பட்டிருந்தன. அதனுள்ளே சுயம்வரத்துக்
காக வந்த அரசர்கள் அமர்வதற்காக அனேக இராஜ கிருகங்கள்
கட்டப்பட்டிருந்தன. அவைகள் செவ்வையாகச் செய்யப்பட்டு
ஆகாயத்தைக் கிழிக்கின்ற சிகரங்களையும், பொன்னாலான பல
கணிகளையும் பல இரத்தினக் கற்களாலாகிய தளவரிசைகளையும்
ஏறுவதற்குச் சுலபமான பளிங்குப் படிகளையும் உடையன. அவற்
றுள் அனேக ஆஸனங்கள் முதலியன நிரப்பப்பட்டிருந்தன. அக்
கிருகங்களுக்கு ஊட்டப்பட்ட வாசனையானது அனேக காததூரம்
கமழ்ந்தது. அவைகள் சுத்த வெண்ணிறம் வாய்ந்தவைகளாய்ப்
புஷ்ப மாலைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தன. அவற்றின்
வாயில்களில் புஷ்பமாலைகளே திரைச்சீலையாகத் தொங்கவிடப்

பட்டிருந்தன. இவ்வலங்காரமான மண்டபத்தில் தேவதுந்துபி போல் பலவகை வாத்தியங்கள் கோஷித்தன. அப்போது வீமராஜன் சுயம்வரத்துக்குரிய நற்போதுகிட்டியதென அரசர்களுக்கு அறிவிக்கச்செய்தான்.

அவ்வரசர்கள் ஒருவரையொருவர் மிஞ்சினவர்களாய்ப் பொன்னுடைகளாலும் இரத்தினாபரணங்களாலும் அலங்கரித்துக் கொண்டு தமது பிரதானி முதலியோர் தம்மைச் சூழ்ந்துவர, கட்டியக்காரர் அவ்வவ்வரசருடைய நாடு, நகரம், மலை, ஆறு, முரசு, கரி, பரி, மாலை, கொடி, செங்கோல் என்னும் தசாங்கங்களையும் புகழ்ந்துகூற நாட்டியர் நாட்டியமாட இசைவல்லோர் இசைபாட அவ்வழகிய மண்டபத்தையடைந்து அவரவரிடங்களில் அமர்ந்தார்கள். அப்போது அம்மண்டபமானது கணக்கற்ற அரசர்களாலும் தேவர்களாலும் உரகர்களாலும் நிரம்பப் பட்டிருந்தமையால் திரிலோகங்களையும் தன் உந்தியில் வைத்துக் காக்கும் மகாவிஷ்ணுவின் வயிறு போன்றிருந்தது.

இந்திரன் முதலிய நால்வரும் தமயந்தியால் இகழப்பட்டமையால் அவ்வுருவை வெளியே காண்பிக்க நாணமுற்றவர்கள் போலவும், பொன்மலையை யடைந்த காக்கையும் பொன்னிற மடைவதுபோலவும், சாதுக்களையடைந்த மற்றோரும் அச்சாதுக்களின் தன்மையையடைவதுபோலவும், தாமவரும்வழியில் சத்தியமே உருவெடுத்த நளனை அடைந்தமையால் அவனைப் போலானவர் போலத் தாங்கொண்ட நளனுருவோடே அம்மண்டபத்துக் கெழுந்தருளினார்கள்.

‘அந்தோ, ஐயவார் மயிலிற் பட்டோர் தமக்கொரு மதியுண்டாமோ,’ என்றபடி, ஸ்திரீகளை விரும்புமவர்க்கு உருவழிந்து மதிகெட்டுப்போமென்பதையும் உயர்ந்த நிலைமையிலிருந்து அந்தக்ஷணமே தாழ்ந்த நிலைமையையடைந்து எல்லோராலும் அத்தாழ்ந்தவரில் ஒருவராகவே மதிக்கப்பட்டுப் பெருமையழிந்து ஏமாறுவார் என்பதையும் இத்தேவர்நால்வரும் நன்குவிளக்கினர்.

அப்பால், பெரியவாயும் நெறிந்த கொம்புமுடைய இளமையான எருமைகள் இயல்பாகவே வழியவிம்மெபால வயல்களிற்பாய்ந்து

அங்குள்ள நீர்நாரைக்குஞ்சுகளுக்கு ஆகாரமாகும்படியான வளப்பமிருந்த நிடதநாட்டையுடைய நளன், வண்டுகெளிணிய தேனையுண்டு சப்திக்கும முல்லைமாலைகளணிந்து கிரீடந்தரித்துக் காலில கழல வீக்கி யமனுடைய நாமென்று சொல்லும்படியாக இரத்தந்தோயந்த கூறறுடைவாளை இடையில் தொங்கவிட்டுப் பருந்துகள் எப்போதும வட்டமிடும்படி நிணமதோய்ந்து புலால நாற்றம வீசுகின்ற ஒளிமிகுந்த வேலாயுதத்தைக் கையிலேந்திப் பிரகாசம பொருந்திய மணிகளாலாக்கப்பட்ட தனதேரின்மீது அனேக இதழ்களையுடைய தாமரையை மலாத்துமிளஞ்சூரியனைப் போல விளங்கினவனாய் அச்சுயம்வர மண்டபத்துக்குப் போகப் புறப்பட்டான்

அப்போது அவனுக்கு அனேகர் சந்திரவட்டக்குடை எடுத்தும், காளாஞ்சி ஏந்தியும, சாமரை இரட்டியும, அடைக்காய் உதவியும் அவனைச் சூழ்ந்தாாகள். திவ்விய சந்தனம் எத்திக்கிலும அனேக காததூரம் கமழ்ந்தது. மதநீர் நாற்றத்தால் வண்டுகள் மொய்க்கின்ற காதுகளையும பருத்த கால்களையுமுடைய பட்டத்து யானைகள் இருபுறத்திலும நெருங்கி நின்றன. அந்நளனது தாமரை மலர்போன்ற பாதத்தில வணங்கப்புகும் அரசர்களுடைய கிரீடங்கள் ஒன்றோடொன்று மோதுவதால் சிதறிவிடும பொற்பொடிகள் பரவி அவனிமுழுதும் மூடியதால் இப்பூமி பொன்னுலகத்தை ஒத்திருந்தது. வாத்தியங்கள் கடல் முழக்கம்போல் ஒலித்தன. மாகதர் அனேகர் அரசன் வெற்றியைப் புகழ்ந்து பாடினார்கள். அனேக இளம புலிகள்போல் அனேக விலலாளிகள் எப்பக்கங்களிலும் சூழ்ந்து நின்றார்கள்.

இவ்வாறு நளன் வெகு விமரிசையோடு சுயம்வரமண்டபத்துக்குப் போகும்போது அவனழகைக் கண்ட அனைவரும் "இத்தேரின் மிசை விளங்குகின்ற இவ்வாலிப அரசன், விஞ்சையாகுமரனோ, மன்மதனோ, வண்டுகள் மொய்க்கின்ற திருத்துழாய் மாலையணிந்த விசாலமான தோள்களையும் நீலமணிபோலும நிறத்தையுமுடைய மகாவிஷ்ணுவோ, சூரபத்மனைக்கொன்ற வேலைத்தாங்கிய வேலவனோ, விண்ணில் சஞ்சரிக்கும் திறமைக்

குரிய மந்திரத்தை மறந்து இம்மண்ணுலகிற்குழ்ந்து உலாவு கின்ற இயக்கனோ, யாராயிருக்கினும இவனழகைப் பார்த்த இன்று தான் கண் படைத்ததனுலாய பயன் நமக்குக் கைகூடிற்று. இசசுந்தரன் தன் மனதில தமையந்தியை நினைத்து அவள்மீது விருப்பங்கொண்டு இச்சுயம்வரத்துக்கு எழுந்தருள அத்தமையந்தி எவ்வளவு காலம் எவ்வெவ்வித மாகத தவஞ்செய்தனளோ. இச்சுயமவரத்துக்கு எண்ணில் லாத இளவரசர் தமையந்தியின்மீது மிகக காதலோடு வந்திருந்த போதிலும அச்சுந்தரி இவனில்லாளிக கலலாமல் வேறொருவர் கழுத்தில் அக்வழகிய மணமாலையைச சூட்டவும துணிவாளோ. ஆலோசிக்குமிடத்து வீமராஜன இச்சுயம்வரம நாட்டியதானது இப்புவியாளும மன்னரையும தேவரையும் நாகரையும ஒருமிக்க கூட்டி அவர்களுககு இக்கருப்புவிலலொழிந்த மன்மதனைக் காண்பித்து அவர்கள் செருக்கையழித்து மனதைப் புண்ணாக்கிப் போக்குவதற்கேயன்றித தன புதல்வியின் வனப்புக்கியைந்த மணாளனைத்தேடுவதறகே யன்று," என்று பலவாறு புகழ்நது கொண்டிருக்கையில் அதசேர் அவ்விடததை விட்டகல மனம் பொருத அநககரததார் நளனது அகன்ற மார்பின அலஙகாரத் தையும் கருணைசுரந்து காட்டுங் கண்களின் வனப்பையும களங்க மற்ற சந்திரன்போன்ற முகத்தின் எழிலையும தேன்துளிக்கும் மாலை புரளுகின்ற திண்ணிய தோள்களின் பெருமையையும் அவர்கள் முற்றும் பார்த்தானந்திக்கப் போதுமான அவகாசங் கொடாமல் அத்தேரை அப்பால் ஈர்த்துச செல்லும குதிரை களைச் சற்று மெதுவாக நடக்குமாறு வேண்டிக்கொள்வர்.

இவ்விதமாகத் தன்னைக் கண்டோர் எல்லாரும் மதிமயங்கு மாறு வீதிகளைக் கடநது சுயம்வரமண்டபததையடைந்து மேகங கவிந்த ஒரு உன்னதமான பர்வதத்தினின்றிறங்கும்பெருமை தஙகிய ஆண் சிஙகத்தைப்போலத் தன்தேரினின்றிழிந்து மிக வும் கம்பீரமான நடையுடன் அம்மண்டபத்துட்சென்றனன்.

அப்போது அரசர்களும் தேவர்களும் சந்திரனைக்கண்ட தாமரைபோலவும் நக்ஷத்திரக் கூட்டங்கள்போலவும முகம்வாடி

ஒளிமழுங்கி அவனை நேரே பார்க்க நாணமுற்றுக் கடைக்கண்
ணால் பார்த்துக்கொண்டிருக்க வீமராஜனாலிடப்பட்ட இரத்தின
மயமான ஒரு திவ்விய சிம்மாசனத்திலமர்ந்தான்.

திரிலோகவாசிகளும் ஒரேயிடத்தில் தங்குமாறு நிருமிக்கப்
பட்ட புதிய உலகம்போல சிறப்புற்றோங்கும் அச்சுயம்வர மண்
டபத்தையும் சுயம்வரத்தையும் பார்க்க வராதவர் யாருமில்லை.
திருமூர்த்திகளில் பிரம்ம விஷ்ணுக்களும் தத்தம் வாகனங்களி
லமர்ந்து ஆகாயவீதியில் வந்து தங்கினார்கள்.

வீமராஜன், அச்சுயம்வர மண்டபத்துக்கெழுந்தருளிய மன்
னர் யாவரையும் விருப்பத்தோடேற்று உபசரித்து அவரவர்க்கு
ரிய ஆஸனங்களில் அமரச்செய்து, பிறகு சுயம்வரத்துக்குரிய
காலம் கிட்டினமையால் அங்குற்ற அரசர்களுடைய இருதய கம
லங்களில் வாழும் இலக்குமி போன்ற தன் அருமைப் புதல்வி
யாகிய தமயந்தியை அழைத்துவரும்படி அங்கிருந்த தாதிமார்
களுக்குக் கட்டளையிட்டான்

அம்மாதர் மிகவும் துரிதமாகச்சென்று தமயந்தியின் தாயி
னிடத்துத் தெரிவித்தபிறகு அப்பொற்கொடி தானென்ற பூங்கொ
டியைப் பலவகை வாசனைத்திரவியங்களாற் சிறந்த கங்காஜலத்தில்
ஸ்நானஞ் செய்வித்துக் கூந்தலை அகிற்புகையால் உலர்த்திப்
பொற்பட்டாமுடுத்தி ஒப்பற்ற இலக்ஷணம் அமைந்த பொற்பது
மையை நாணுவித்த இரத்தினாபரணங்களால் அலங்கரித்தாற்போலக்
கேசாதிபாதம் வரையில் இரத்தினாபரணங்களைப் பூட்டி அழகுக்க
ழகு செய்வதுபோல செஞ்சாந்து பூசித் தலையில் முல்லைமாலை
யணிவித்துக் கண்களுக்கு அஞ்சனமெழுதி நெற்றியில் திலக
மிட்டு மஞ்சணீர் விளக்கெடுத்துத் திட்டிசுழித்துத் தன் குலதெய்
வத்தை நினைத்துத் தன் புதல்விக்கிசையான நாயகன் ஏற்பட
வேண்டும் என வணங்கி யாசித்து, அநேக தோழிமார்களும்
செவிலித்தாயரும் சூழ்ந்து செல்ல ஒரு பொற்றட்டில் அழகிய
மணமாலையை ஏந்திச் சிலதோழிமார் பின்னேபோகத் தன் புத்
திரியாகிய தமயந்தியைச் சுயம்வர மண்டபத்துக்கனுப்பினாள்.

அம்மங்கையர்க்கரசிக்கு முன்னால் அனேக பெண்கள் வில் அம்பு வாள் கேடகம் முதலியன பற்றி நிகரற்றுச் சென்றார்கள். அனேகர் சாமரை இரட்டினர்; அடப்பை தாங்கினர். தொன்று தொட்டு மேலான குலத்திற்பிறந்து ஐம்புலன்களையும் நன்னெறியின் வழியே செல்லப் பழக்கிய கல்விக்கடல்கடந்த சட்டையிட்ட விருத்தர்கள்கையில்பொற்பிரம்பு கொண்டெதிர்வருவோரை விலக்கிச் சென்றனர். தமயந்தி, சந்தனக்குழம்பால் மெழுகப்பட்டு மிருதுவான பட்டைவிரித்துத் தேனிறைந்து வாசனை மிகுந்த அனிச்ச மலர் பரப்பிய அழகிய தளத்தில் தனதுமெல்லிய பாதங்களால் மெதுவாக நடந்து சுயம்வர மண்டபத்தை அடைந்தாள்.

வீமராஜன் தன் முன்னோர்கள் நெடுநாளியற்றிய தவப்பயனே ஓருருவெடுத்து வருவதுபோல் வருகின்ற தன அருமைப் புதல்வியைக் கண்டு மிக்க மகிழ்வடைந்து முகமலர்ந்து எதிர் நிற்கத் தமயந்தி தன் தந்தையை வணங்கி அங்குற்றோரை மனத்தால் வணங்கிப் பிதாவின் கட்டளைக்குக் காத்திருந்தாள். வீமன் தன் புத்திரியை ஆசீர்வதித்துத் தன அருகில் நிறுத்தி எங்கும் நிறைந்து எல்லாமறிந்த கடவுளை வணங்கி "ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனனும பஞ்ச கிருத்தியங்களையும செய்து எல்லாமாய அல்லதுமாய் விளங்குகின்ற எம்பெருமானே! இச்சுயம்வரத்துக்கெழுந்தருளிய அரசவெள்ளத்தில் இவர் இவர் இன்ன இன்ன தேசத்தரசரென்றும், அவர்நாட்டின்சிறப்பும் அவர்பெருமையையும் வலிமையும் இவ்வளவினவென்றும அறிந்து சொல்லத்தக்கார் ஒருவரையெனக்கருளி இச்சமயத்தில் இவ்வரசர்களுக்குமுன யான் தலைகுனியாது என்னைக் காக்கவேண்டிய கடன் நின்னுடையதேயாக; அதை ஏற்றுக்கொள்பவர் வேறொருவருமுண்டோ" என்று வருந்திப் பிரார்த்திக்க, அக்கருணைக்கடல் அரசன் வேண்டுகோளுக்கிரங்கித் திசைமுகனை நோக்கி "வீமராஜன் கருத்தின்படி செய்யவல்லவர் சரசுவதியைத் தவிர வேறு யாருளர்" எனச் சொல்லத், திருமாலின் திருவுள்ளக்கருத்தையறிந்த பிரமன் நாவுக்கரசியை நோக்கி "பூவுலகத்தரசர்களில் ஒருவனாகிய

வீமராஜனுடைய புத்திரி தமயந்தியின் சுயம்வரம் இப்போது நடக்கப்போகிறது. அதற்காக வந்திருக்கும் அரசர்களைத் தெரிந்து அம்மாதுக்குரைப்பவர் யாருமில்லாமையால் நீ இக்கணமே அங்குச் சென்று அவளுக்கு ஒவ்வொரு அரசர் பெயர் முதலிய யாவையும் தெரிவித்து வீமராஜன் கோரிக்கையைப் பூர்த்திசெய்து வருவாயாக" என்று கட்டளையிட்டான். அவ்வெண்டாமரையாள் அவ்வாணையைச் சிரமேற்கொண்டு தன் கணவனை வணங்கி உத்தரவு பெற்றுக்கொண்டு ஆகாயத்தினின்றிழிந்து வீமன் நகரையடைந்து கண்ணுக்கினிய காட்சியையுடைய அச்சுயம்வர மண்டபத்துக் கெழுந்தருளினாள். அங்ஙனம்,

போந்தவள் வண்டுமூசாப் பொன்னரி மாலையோடும்
வார்ந்த தேமாலைதாழ்ந்த வதுவைமண் டபத்தின்மேவி
யேந்தெழி லெருத்தங்கோட்டி நாணொடு மிறைஞ்சிநின்ற
கூந்தலம் பிடிக்குவேந்தர் குலமுறை கிளக்கலுற்றாள்.

சரஸ்வதி, அவ்விராஜசபையில் உதவியின்றித் தலைகுனிந்து நிற்கின்ற தமயந்தியை அடுத்துப் "பெண்கள் நாயகமே! உன் மனமறுக்கம் தீர எனக்குத் தெரிந்தவரையில் இங்கு வந்திருக்கும் அரசர்களைப்பற்றிய யாவும் உனக்குத் தெரிவிப்பேன். நீ மனக்கிலேசமடைய வேண்டாம்" என்று தாய்போல் அன்பு பாராட்டித் தமயந்தியை அவளுடைய தோழிகளோடு அழைத்துக்கொண்டு மன்னராலயமாகிய அம்மண்டபத்தில் புகுந்து ஒவ்வொருவரைப் பற்றியும் சொல்லத் தொடங்கினாள். "பெண்கள் அருங்கலமே! இதோ முதலில் வீற்றிருக்கும் இத்தேவன் ஆயிரங்கிரணங்களாகிய கைகளால் இப்புவியைக் கவிந்துகொண்டிருக்கும் இருளையோட்டும் ஜோதியான சூரியபகவான். அவரருகிலிருப்பவர் சோடச கலையும் விளங்கும் குளிர்ந்த ஒளியையுடையவரும் தேவர்களுடைய அமிர்தகடத்தைத் தன்னிடத்தே கொண்டவருமாகிய சந்திரபகவான். இங்கு ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாமல் இரண்டு மன்மதரைப்போல் அழகாற்சிறந்து வீற்றிருக்கும் இவ்விருவரும் அசுவினி தேவர்கள். இப்பால் கணக்கற்றவராய்

வீற்றிருக்கும் இவர்கள் யாவரும்தேவர்கள். இவர்களையடுத்துவீற்றிருப்போர் தேவவகுப்பில் யாழ்வல்லோராகிய கந்தருவருக்கரசர். இவர் வெள்ளிமலையில் வாசஞ்செய்கின்ற விஞ்சையர்க்கரசர். அவர் பக்கலில் தேவர்கள் போற்ற இருப்பவர் இயக்கர்தம் பெருமானாகிய குபேரனது குமாரராகிய அழகிற்சிறந்த நளகூபரர். இத்தவிசிலிருப்பவர் முற்காலத்தில் பரமசிவன் திரிபுராதிகளை அழிப்பதற்காகக் கொண்ட மேருவாகிய வில்லுக்கு உற்ற நாணும், அச்சிவபெருமானுக்குச் சிறந்த ஆபரணமாகவும் விளங்கும் சிறப்பு வாய்ந்த பாதலத்தில் வாழும் பலதலைகளையுடைய நாகவேந்தர். பெண்மணி, இவ்வரிசையிலிருப்போர் யாவரும், புவியாளுமன்னரிற் சிறந்தோர். இவர்களில் முதலிலிருக்கின்ற இவ்வைவர் புட்கரம், சாகம், கிரௌஞ்சம், குசை, சான்மலி முதலிய தீவுகளுக்கு இறைவர். இங்கிருப்பவர்கள் நாவலந்தீவுகளையர். அங்கிருப்போர் அவந்தி, கவுடம், மதுராபுரி, என்னும் தேசங்களையாளும் மன்னர். இவர் அலையாகிய கைகளால் முத்துக்களைக் கொழித்துக் கரையில் ஒதுக்கித் தனையடுத்துத் தோய்ந்தோர் பாவத்தைப் போக்கிப் பரகதிக்கு வழிகாட்டும் பரிசுத்தம் பொருந்திய தீர்த்த விசேஷத்தால் சிறந்த கங்கை நாட்டுக்காவலர். அவரை அடுத்துள்ள மன்னர்கள் காம்பிலி கலிங்கம், காசி, சிந்து, குருதம், மச்சம் முதலிய தேசத்ததிபர்கள். இங்கு இரத்தினத்தூண்கள்போல் பருத்ததோள்களோடு மிகவும் கம்பீரமாக வீற்றிருக்கும் அரசன் தொன்றுதொட்டு நீண்ட கீர்த்தியும் சிறந்த சீர்த்தியும் நிறைந்த நேர்த்தியும் தெளிந்ததேர்ச்சியும் வாய்ந்து கரையின்மேல் வனம்போல் வளர்ந்து தொங்குகின்ற தாழம்பூக்களின் மகரந்தக் கூட்டினால் கடலின் புலால் நாற்றத்தைப்போக்கும் மணமிகுந்த நதியையுடைய மகத நாட்டையாளும் மகிபன் இதோ இருக்கின்றவர்கள் குரு, பல்லவம், கேகயம், மத்திரம், வங்கம், அங்கம் முதலிய நாடுகளுக்கிறைவர். இப்பூபாலன் கதிர்நிறைந்த வயலினூடே வண்டுகள் களிப்பின் மிகுதியால் காந்தாரம் பாடிக்கொண்டு புதிய கள்ளுண்ண கமலமொட்டுகளை ஊதுவதால் முறுக்கவிழ்ந்த அம்மலர்களினின்று பெருக்கெடுத்தோடும் தேனானது

இடைவிடாது மடைதிறந்து பாய்கின்ற வளப்பம் பொருந்திய பாஞ்சாலதேசத்தையாளும் பார்த்திபன், இவ்வரசன் ஆதனங்களிலிருப்போர் காந்தாரம், மிதிலை, மாளவம் முதலிய வளப்பம் மிகுந்த நாடுகளுக்கதிபர். இங்குச்சிறந்த முத்துமாலைகள் புரளுகின்ற திண்ணிய தோளையுடைய வீரன், அப்போது மலர்ந்த வாசனை மிகுந்த அழகிய தாமரை மலர்களில குடம் போலப் பருத்த சூலநிறைந்த சங்குகள் ஏறி முத்துக்களை உயிர்க்கின்ற கோசலநாட்டரசன். அவன் குடகநாட்டரசன். இவன் சோழன். அவன் பாண்டியன்."

என்ன மற்றிணையவாறே யெரிமணி மாடஞ்சேர்ந்த
மன்னவர் குலமும் பேரும் வரன்முறை வழாது கூறி
மின்னகு பரிதி வைவே னளனுருக் கொண்டு மேய
வன்னவர் தமையு மற்றை நளனையு மறைய லுற்றாள்.

இவ்வாறு கலைமாது, அங்குற்ற அரசர்கள் யாவரையும் தமையந்திக்குத் தெரிவித்தபிறகு இந்திரன் முதலிய நான்கு தேவர்களும் நளனுருக்கொண்டு நளனோடு வீற்றிருப்பதை அறிந்து அத்தேவர் மறைவை வெளிப்படுத்தாமலும் தான் மேற்கொண்ட காரியத்துக்குக் குறைவு நேரிடாமலும் தேவர்களுக்கும் நளனுக்கும் பொருத்தமான சொற்களைப் பிரயோகித்துச் சிலேடையாகத் தமையந்திக்குப் பின்வருமாறு தெரிவித்தாள். முதலில் இந்திரனைக் காண்பித்து "மாதர்திலகமே! இதோ கையில் பகையைச் சினக்கின்ற வேலைத்தாங்கிய புருஷ சிரேஷ்டன் வலிமிகுந்த வயிரவாளும் கற்பகமலிந்த தோளும் ஆதியில் பல பகைவரை அடக்கிய அகன்ற அழகிய மார்பையும் உடையவன்" என்றாள். அதாவது இந்திரனைக்குறிக்கும்போது வச்சிராயுதத்தையும் கற்பக மலராலாகிய மாலை நிறைந்த தோள்களையும் உடையவனாய ஆதியில் பகைமைகொண்டு அனேக மலைகளின் சிறகை அறுத்து அவற்றை இருந்த இடம்விட்டுப் பெயராது அடக்கியவன் என்றும், நளனைக் குறிக்கும்போது கூரிய வாளையும் மலைகள்போலும் பருத்த தோள்களையும் உடையவ

னும் முன்பு பல விரோதிகளையும் அடக்கி இப்போது தனக்குப் பகை யென்பதே இல்லாது நிகரறறு வாழ்பவன் எனவும் பொருள்படும்.

அப்பால் சரஸ்வதி தமையந்திக்கு அக்கினிதேவனைக் காண்பித்துப், "பெண்மணி! அசசமூட்டும வேல்தாஙகிய இப்பெரியோன், அளவிட்டுச சொல்லுதற்கரிய வெகுளியுள்ளதொரு விஞன்; பொஙகி ஆர்தத பகைஇருட் பிழமபுசிக்கும பல்சுடர் உமிழும் வாளான்; பெருமைதஙகிய புலவராலேததப்பட்ட தால மேழுடைய கோ" என்று சொன்னாள். அதாவது அளவிட்டுச சொல்லுதற்கரிய கோபமிருந்த ஆடடுககடா வாகனத்தை நீக்கினவனும, மிருநது செறிநது பரவிய பகையாகிய இருளைப் போககும் மிகுநத அக்கினியைக் கக்குகின்ற ஜோதியான உருவத்தையுடையவனும, பெருமைதங்கிய தேவராலும புகழப் பட்ட அக்கினிதேவன் (தாலமேழுடையோன-அககினிதேவன்.) என்றும், நளனைக் குறிக்கும்போது மாறறுனிடததுத தஞ்ச மென்றடைதலையும் எவரும் எளிதில் நீககறகரிய கோபத்தையும் தன் மனதினின்று நீக்கினவனும அகஙகாரிததது வீரம் பேசி எதிர்க்கும் பகைவராகிய இருட் கூட்டததை ஒழித்த மிக்க ஒளிபொருநதிய வாளையுடையவனும கல்வித்துறைபோய புலவர்களால் பாராட்டிப் பாடப்பெற்ற எழு பூமியையும் ஆள்பவனுமாகிய சக்கரவர்ததி என்றும் பொருள.

பின்பு பாரதி யமனை அடுதது "இப்புண்ணியன் குறைவற்ற தர்மன், கடல்சூழ்ந்த உலகமுழுதும் தன் புகழைப் பரவசசெய்த குற்றமற்ற செஙகோல் வேநதன" என்றாள. (தருமன்—யம தர்மராஜன. நளனைக குறிககுமபோது தர்மததைக கைககொண்டவன் எனபது பொருள்.)

அப்பால் இசைமகள் வருணனைக்கிட்டி "மடமானே! இப்பெரிய தோள்களையுடைய வேநதன் சொல்லுதற்கரிய சிறப்பான மிக்க அழகுவாயநத புவனவேந்து. தவிர, எத்திக்குகளிலும் பரவிப் புகழ்பெற்ற ஈகைத்தன்மையும் வாய்நத நேமிவேந்தன்"

என்றாள். வருணனைக் குறிக்கும்போது புவனவேந்து, நேமி வேந்து என்பன கடலரசன் அல்லது சமுத்திரராஜன் (வருணன்) என்றும, நளனைக்குறிக்கும்போது புவியாளு மன்னனென்றும் பொருள்படும.

கடைசியில் வாணி தமையந்தியை நோக்கிப் "பதுமினி, இத் திவ்ய சிம்மாசனத்தில மனமதனைப்போல் கையில் வில்லும வேலுந்தாங்கி அலர்ந்த செந்தாமரைபோன்ற முகத்தில் புன்சிரிப் போடு வீற்றிருக்கின்ற மகிபனை, நீர்வளமும நிலவளமும் சுரந்து எங்கணும தாமரைத்தடாகங்களும், செந்நற்கழனிகளும், கருப் பஙகொல்லைகளும, தென்னஞ் சோலைகளும் நிறைந்து, பிராணி களும் தமக்குரிய இயற்கையான பகைமையொழிந்து, புலியும் பசுவும் ஒரு துறையில நீர் பருகுமாறு காக்கும் ஆக்ஞை சக்கரத் தோடு செஙகோலமுறை வழாது விளங்கும் செல்வமிகுந்த நிடத நாட்டையாளும வேந்தன" என்றுஞ்சொலலித் தன்காரியத்தைப் பூர்த்தி செய்தாள்.

தமையந்தி, சரஸ்வதி சொல்லிய சாதுரியமான வார்த்தை களால் சற்று மதிமயங்கி மனமநொந்து, பிறகு அததேவி தேவர் களைச் சொல்லுமபோது மாத்திரம் இரண்டுபொருள் படும்படி யாகவும நளனைத் தெரிவிக்குமபோது அவனுக்கே உரிய சிறப் புகளைத் தெரிவிக்கும ஒரேபொருள்படுமபடியாகவும் வருணித்த லையாலும, நான் அணிந்திருந்தமாலையில் மாத்திரம் வண்டுகள் மொயத்தலானும, இருவருக்கும அன்பை ஊட்டிவளாத்த ஊழ் வினை வலியாலும உண்மையான நளனையே தனக்குரிய நாயகனா கக்கொண்டு தலைகுனிந்து நாணத்தால் முகத்தை ஒருபுறமாகச் சற்றுத்திருப்பிககொண்டு காதல மீதூரக களித்த மனத்தளாய்த் தன்பக்கத்தில் தாதியராலேந்தப்பட்ட மணமாலையைத் தன்தாம ரைக் கைகளா லெடுத்து,

இன்னரிச் சிலம்பு சேடபொற் கிண்கிணி யார்ப்பவேகி
மன்னவர் மனமுங்கண்ணும் வண்டெனத் தொடர்ந்துவீழக்
கொன்னுனை வயிரவொள்வா ளிடதர்கோன்குவவத்தோண்
டொன்னரிமாலைசூட்டிப் பூங்கழல் வணங்கி நின்றாள். [மேற்

தமயந்தியால் சூட்டப்பட்ட அழகிய மணமாலையானது ஒப்பற்ற பருவதத்தின்மேல் விழும் அருவியைப்போல் நளனது பருத்த தோள்களில்புரள நளன் மனம்பூரித்து ஆனந்தக்கடலில் மூழ்கி நிகரற்றவனாய் விளங்கினான். தேவதுந்துபிபோல் வாத்தியங்கள் முழங்கின. ஆகாயத்தில் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த தேவர்கள் ஆசீர்வதித்துப் புஷ்பமாரி பொழிந்தனர். வேடிக்கைப் பார்க்கவந்தவர்களெல்லாம் தமயந்தியின் அழகுக்கிணையான நாயகன் நளனேயன்றி வேறொருவருமல்லவென்றும் அவனுக்கு மாலைசூட்டுவதே தமயந்தியடையும் பெரும்பேறாகுமென்றும் கருதிய தம்மெண்ணம் பூர்த்தியான விஷயத்தில் ஆனந்தபரவசராகிக் கரகோஷத்தாலும் மங்கலவாழ்த்தொலியாலும் அண்டமுகட்டை அதிரச்செய்தார்கள். வீமராஜனுக்கிரு புயங்களும் பூரித்து வாகுவலையங்கள் திமிர்ந்தன. நளனது நால்வகைச்சேனைகளும் குதூகலத்தோடு ஆரவாரித்தன. அந்நகர் முழுதும் மகிழ்ச்சி குடிகொண்டது. தமயந்தியின் தாய் அவளை ஈன்றபோதினும் பலமடங்கு மகிழ் கூர்ந்தாள். தேவாலயங்களில் மகாநைவேத்தியங்கள் எடுக்கப்பட்டன.

இவ்வாறு யாவரும் மகிழும்படி நளனுக்கு மாலைசூட்டிய தமயந்தியை அவள் தோழிகளும் செவிலித்தாயரும் அக்குல மரபுக்கேற்ப, ஒளிவீசுகின்ற பளிக்கு மண்டபத்திற்கழைத்து வந்து அங்கேயுள்ள ஒரு திவ்விய ஆசனத்தில் அமரச்செய்து விலைமதிக்கக்கூடாத ஒப்பற்ற சீரையால் அவளுக்குத் திரையிட்டனர்.

தமயந்தி நளனுக்கு மாலைசூட்டியதைக்கண்ட மன்னரனைவரும் மனம் புழுங்கி ஒருவரையொருவர் பார்க்கவும் வெட்கித் தலைகுனிந்து மாலைப்போதைக்கண்ட தாமரைபோல முகம்வாடிச் செயலற்றிருந்தனர்.

# போர்புரி படலம்.

தமயந்தி தம்மை வெறுத்து நளனுக்கு மாலைசூட்டியதால் தமக்குண்டான இழிவை மனத்துள்ளடக்கி அதைக்கண்டு மகிழ்ந்த வர்போல்

அழகினைச் சுமந்தபேறு பெற்றன ளணங்கின் றென்று
வொழுகொளி யாரமார்ப ருவாக்கடன் மெலியவாப்பப்
பொழிகதிர் வயிரவோள்வாட் புரவலன் புழுங்கிநெஞ்சம்
விழியழல் கதுவநோக்கி வேந்தரை விளித்துச் சொல்வான்.

உலகத்தில் யாரேனும் ஒருவர் ஒரு காரியத்தை முடிக்க விரும்பித் தம்மாலானமட்டும் முயன்றும் அது முடியாமை கருதி உலகில் எக்காரியத்தையும் எளிதில் செய்து முடிக்கும் இயல்புடையவர்போல வேஷங்கொண்டாலும் அவரது பெருமையும் முடிக்குந் திறமும் இவ்வேஷதாரிக்கு ஒருகாலும் கிட்டாது என்னும் உண்மையைத் தன் மாறுவேஷத்தால் வெளிப்படுத்திக் கொண்டரசக்கூட்டத்தில் மறைந்திருந்த தேவேந்திரன், தன்னை மணஞ்செய்து கொள்ளும்படி தமயந்தியினிடத்தில் தூதாக அனுப்பியதோடு தூதியரை அனுப்பியும் அவள் அவர்கள் வார்த்தைகளுக்குக் காதுகொடாது தேவர்க்கரசனாகிய தன்னை இகழ்ந்து மானிடர்க்கரசனாகிய நளனைப் புகழ்ந்து மாலை சூட்டியதைத் தன் ஆயிரங்கண்களாலும் கண்டு மனம்புண்ணாகி யாதும் தோன்றாமல் தனக்கு நேரிட்ட இழிவைச் சிந்தித்துக்கொண்டிருக்கையில், அங்குக்கூடியிருந்த அரசர்கள், தமயந்தி நளனுக்கு மாலை சூட்டியதைக் கண்டு மகிழ்ந்தவர்கள்போல் ஒலித்த மங்கல மொழிகள் பழுக்கக் காய்ச்சிய வேல்போல அத்தேவேந்திரன் காதுகளின் வழியாகச் சென்று புண்ணான மனத்திற்றைக்கப் பொறுக்காது துடிதுடித்துத் தான் வீற்றிருந்த சிம்மாசனத்தை விட்டுத் திடீரெனக் கீழே குதித்துக் கண்களிற் பொறிபறக்க அவ்வரசர்களை வெறுப்புடன் நோக்கிப் பின் வருமாறு வெகுண்டுரைத்

தான். "ஏ, அரசர்களே! நீங்களும் புவியாளும் மன்னரன்றோ. பார்க்கும்போது நீங்கள் யாவரும் ஆண் சிங்கங்களாகவே தோற்றுகிறீர்களே. உங்கள் கையில் இருப்பன வில்லும் வேலும் அல்லவோ. அவைகளை உபயோகிக்கும் காலத்தில் மறைத்து வைத்திருந்து ஊன்றுகோலாகக் கொள்ளக் காப்பாற்றி வைத்திருக்கிறீர்களோ. நீங்கள் எல்லோரும் க்ஷத்திரிய குலத்திற் பிறக்கவில்லையோ? அன்றியும், திருமகள்போன்ற தமயந்தி உங்களை வெறுத்தவுடன் உங்கள் குலமானத்தையும் மறந்தீர்களோ? தமயந்தி செய்த காரியத்தால் உலகில் இயற்கைப் பிரமாணமும் தவறிவிட்டது போலிருக்கிறது. அனுபவத்தில் சூரியனைக் கண்டு சந்திரன் ஒளி மழுங்குமேயன்றிச் சந்திரனைக்கண்டு சூரியன் ஒளி மழுங்கியதென்பதை இதுகாறும் கண்டதும் கேட்டதுமில்லை. இங்கு இப்போது சந்திர குலத்தரசன் ஒருவன் அழகிய மணமாலை சூட்டிக்கொண்டு முகம் மலர்ந்திருக்கவும் சூரிய குலத்தில் பிறந்த நீங்கள் முகம் வாடிச் செயலற்றிருக்கவும் எத்தனைக் காலம் சுமை சுமையாகப் பாவத்தைச் சம்பாதித்தீர்களோ. நீங்கள் முனிந்தால் உங்களில் யாரேனும் ஒருவனுக்கு இந்நளன் ஆற்றுவனோ. இவன் வலி எவ்வளவு! இவன் சேனைப் பெருக்கம் எம்மாத்திரம். நீங்கள் பல் கடித்து வில்பிடித்து நாணேற்றிக் குணத்தொனி காட்டினால் இவன் ஆண்மையும் சேனை வலியும் பறக்கவேண்டாமா. உங்கள் வன்மையெல்லாம் கிணற்றுக்குள் வைத்த விளக்காயிற்றே. உங்கள் ஆண்மை உலோபி கைப்பொருளாயிற்றே. உங்கள் கைகளிலுள்ள ஆயுதங்கள் பேடிகைப் பாணமன்றோ. நீங்கள் வெகுநாள் தேடி வைத்த புகழ் இன்று ஆற்றிற் கரைத்த புளிபோலாயிற்றன்றோ? புகழுக்குப் பிறக்காத பூமான் புவியிலிருந்தென்ன போயென்ன. உங்களுக்குத் தமயந்தியினிடத்தில் இருக்கும் விருப்பமெள்ளளவேனும் எனக்கிருக்குமாயின் இந்நளன் இந்நேரம் என் கையில் என்ன பாடுபட்டிருந்திருப்பானென்பதை நீங்களே பார்த்திருக்கலாம். ஐயோ பாவம்! உங்கள் முகத்தைப் பார்க்கும்போது என் மனம் படும் பாட்டை அளவிட்டுச் சொல்லவும் கூடுமோ. தமயந்தி நளனுக்கு மாலை சூட்டுவதைப் பார்த்தானந்திக்கவோ இவ்வளவு தூரம்

தைக் கைவிடாது வெளியே புறப்படுங்கள். ஏ வீரர்களே! உங்கள் வீரத்தன்மையை இங்குக் காட்டித் தமயந்தியைக் கைக்கொள்ளாவிடின் அவ்வீரத் தன்மையாலடையும் பயன் யாது? சூரர்களே, இதுவரையில் உங்கள் முன்னோர்களால் சேகரித்து வைக்கப்பட்ட புகழ் அழியாது போற்றிக் கையிலுள்ள வில்லைக் கோட்டி, நாணைப்பூட்டி, அம்பைத்தீட்டி, உங்கள் கைவலியைக் காட்டி, வீமன் நளன் தமயந்தி இவர்களுடையசெருக்கைவீட்டி நளனைப் புறங்காட்ட ஓட்டி, மங்கள நாணைத் தமயந்திகழுத்தில் சூட்டி உங்கள் நாட்டுக்குக் கூட்டிச்செல்லுங்கள்" என்று உரக்கக் கூவினன்.

இவற்றைக்கேட்ட அவ்வரசவெள்ளம், வாலை உருவுவிடப் பட்ட புலிபோல சினந்து வீராவேசத்துடன பெருமூச்செறிந்து கண்களில் நெருப்புப்பொறி பறக்க மீசைதுடிக்கப்பல்லைக்கடித்து வில்லை வளைப்பவர்களும, நாணொலி காட்டுபவர்களும, வாளை உறையினின்று விரைவிற் கழிப்பவர்களும, தோள்தட்டுபவர்களும், வேல் தீட்டுபவர்களும், கதையைச் சுற்றுபவர்களுமாகப் போர்ப்பறை ஒலிக்க யுத்தசன்னத்தராயப் புறப்பட்டு நளனைக் கூவி "ஏ அரசனே, தமயந்தி தலையைக் குனிந்துகொண்டே மாலையைசூட்டியதால அது தவறி உன்கழுத்தில் விழுந்ததே யல்லது உன்னைப்பார்க்கினும் அழகிற்சிறந்தோர் இங்கில்லை என நினைத்து அவள் சூட்டியதல்ல. ஆகையால் நீ காவமடையவேண்டாம். இது மன்னர் சபை. இதில் எவன வலியால் மிக்கவனோ அவனே சிறந்தவன். அழகு பெண்களுக்கேற்பட்டதேயன்றி புருஷர்களுக்கல்ல. புருஷர்களின் உத்தம இலக்கணங்கள் கல்வி, பொறை, கொடை, வாய்மை, வீரம், மானம், புகழ், முதலியன. நீ உண்மையான வீரத்தன்மை உடையவனாயின எங்களுக்குமுன் னே வந்து தமயந்தியின் மணமாலையால பூரித்திருக்கிற உன் புயவலியைக்காட்டு. இங்குக்கூடிய மன்னர்யாவருக்கும் பொதுவானதும் விலைவரம்பில்லாததுமான ஒப்பற்ற மணியை நீ மாத்திரம் கைக்கொள்வதற்கு என்ன விசேஷ பெருமையுடையவன். க்ஷத்ரியர்களுக்குரிய அஸ்திர சஸ்திரங்களில் வல்லவனாயின் இப்போது

எங்கள் கையிலிருக்கும் அவ்வாயுதங்களுக்கு வழிசொல்லிவிட்டுப்
பிறகு அந்த வீர இலக்குமிபோன்ற தமயந்தியைக்கைக்கொள்”
என்று இணையற்ற ஒரு ஆண்சிங்கத்தின்முன் பல நரிகள் ஊளை
யிடுவதுபோல் தலைமயக்குற்று யுத்த ஆயுதங்களின் தன்மை
அறியாது தாறுமாறாகக் கத்தின.

நளன் அரசர்களது செருக்கையும் தேவேந்திரனது புணர்ப்
பையுங்கண்டு சற்று நகைத்து அவர்களுடைய வலியைக்காண
வேண்டி அவர்களோடு யுத்தத்துக்குப் புறப்பட்டான்.

அப்போது, தமயந்தி அரசர்கள் கோபாவேசத்துடன்
வில்வளைத்து நின்ற நிலைமையையும், கொல்லுந்தன்மையை
யுடைய வேலைத்தாங்கிய நளனது தோள்கள், யுத்தம் என்றளவில்
தமக்கு வெகுகாலமாக வேலையில்லாமையால் உண்டான தினவு
இன்று தீருமென மகிழ்ந்தனபோலப் பூரித்த நிலைமையுங்கண்டு,
‘இப்போர் எவ்வாறு முடியுமோ’ எனப்பயந்து கண்களினின்று
அருவிபோல நீர் வழிய நின்றாள்.

அதைக்கண்ட நளன் மனம்பொறாது அவளருகிற்சென்று
“கணகலையுடையவளே, இப்போது விளையப்போவதையறியாது
குதிக்கின்ற இவ்வரச வெள்ளத்தை அழித்து இரத்தவெள்ள
மாக்கி ஒருழுந்து புரளும் நேரத்துக்குள் திரும்பி வருவேன்.
நீ சிறிதும் கவலைகொள்ளவேண்டாம்” என்று அவளைத்தேற்றி
அவளுக்குக் காவலாக அவள் தகப்பனாகிய வீமராஜனை நிறுத்தி
நளன் போர்ச்சின்னங்கொள்ளப் புகுந்தான்.

நளன் மணக்கோலத்தை மாற்றி எஃகினாற் செய்யப்பட்டுப்
பொற்றகட்டால் மூடப்பட்ட பிரகாசம்பொருந்திய கவசமணிந்து
அம்பறாத்தூணி இறுக்கிக் கையுறையிட்டுப் பெரிய வில்லேந்தி
யமனும் கண்டஞ்சும்படியான வீரத்தன்மை விளங்க நின்றான்.
அப்போது அவன் சாரதி கவசமணிந்து தலைப்பாகை கவித்துக்
கையிற் குறடாகொண்டு சிங்கங்கள் போன்ற குதிரைகளைத்
தேரிற்பூட்டி அப்பெரிய தேரைக்கொண்டுவந்து நிறுத்தினான்.
அத்தேரில் நளன், சூரபதுமனை எதிர்த்துச்சென்ற குமரக்கட

வுள்போல், கையில் வில்லும், வேலும் தாங்கி அமர்ந்து தனது நால்வகைச் சேனைகளும் வில், வேல், வாள், கேடயம், தோமரம், குந்தம், கப்பணம், கோடரி, பிண்டிபாலம் முதலிய ஆயுதங்களைத் தாங்கி மிகவும் குதூகலத்தோடு தன்னைச் சூழ்ந்துவரப் போர்க்களத்தை அடுத்துத் தனது வில்லை வளைத்து நாண் பூட்டிக் குணத்தொனி காட்டினான்.

அத்தொனியானது திக்கி யானைகளும் செவிடுபடும்படி யுகாந்த காலத்திடிபோல் ஒலிக்க, அதைக்கேட்ட நாகர்கள் பாதலத்துள் நுழைந்தார்கள். தேவர்கள் அண்டமுகடு உடைந்ததோவெனச் சந்தேகித்துத் தம்முலகத்துக்கேகினர். பகையரசர் சேனைகள் வெருண்டோடின. அரசர்கள் அதுவரையில் உணர்ந்தறியாத ஒருவகை அச்சத்தை அடைந்தார்கள். அவர்களுடைய இடது கண்ணும் தோளும் துடித்தன. தேரிற்கட்டிய குதிரைகள் தம்மையறியாது உறங்கின. யானைகள் கண்களினின்று இடையறாது கண்ணீர் வார்ந்தது. சேனைகள் கொட்டாவிவிட்டன. அவ்வரசர்கள் மாலைகளில் புலால் நாற்றம் வீசிற்று. தேர்களிற் கட்டிய கொடிகளில் பருந்துகள் வீற்றிருந்தன.

தேவேந்திரன் நளனையும் அவன் போர்க்கோலங்கொண்டவுடன் மலைகளும் சிறுகும்படியாகப் பருத்த அவனுடைய தோள்களையும் ஆண்மையையுங்கண்டு மனங்கலங்கி இன்றோடே இப்புவனம் முழுதும் அழிக்கப்படுமோ? எனக் கலங்கித் தான் விளைவதை உணராது அரசர்களைத் தூண்டிவிட்டதற்காக வருந்தி அப்போர்க்களத்தை விட்டு ஒருபுறமாகச் சென்றான்.

நளன் தனது பெரிய வில்லில் மிகக் கூர்மையான பாணங்களைத் தொடுத்து ஆகாயத்தை மூடி அரசர்கள் தேர்களையும் மற்ற சேனைகளையும் தாக்கினான். நளன் சேனையும் மற்ற அரசர்கள் சேனைகளும் எதிர்த்து வில்லாளிகளோடு வில்லாளிகளும் யானைகளோடு யானைகளும் குதிரை வீரரோடு குதிரை வீரருமாகக் கதித்துத் தொந்த யுத்தம் செய்தார்கள். அப்போது நளனால் விடப்பட்ட பாணங்களால் தேரழிந்து சாரதி இழந்து

குதிரைகள் சழிந்து வில் முறிந்த அரசர்கள் வேறு தேரேறி வில் லெடுத்து அனேக பாணங்களைச் சரமாரிமாகப் பொழிந்தார்கள். நளன் தன்னால் விடப்பட்ட பாணங்களால் அச்சரங்களைக் கண்டித்து உடனே இன்னுமனேக பாணங்களை விடுத்து அவ்வரசர்கள் தேர்களை உடைத்துச் சாரதியையுங் கொன்று குதிரைகளை யறுத்து விற்பிடித்த கைகளைத் துண்டித்து உடலைச் சல்லடைக் கண்களாகத் தமையந்தியை நினைத்த மார்பிலும் அனேக பாணங்களைத் தொடுத்து அவமானசையை மறக்கும்படிச் செய்தான்.

பிறகு நளன் அவ்வரசர்களுடைய சேனைகளிற் புகுந்து ஒரு ஆண்சிங்கமானது கணக்கற்ற யானைக் கூட்டத்திற் புகுந்து சின்னாபின்னப் படுத்துவதுபோல் பாணங்களால் அச்சேனைகளைக் கலக்கும்போது சிறந்த வில்லாளிகளாகிய கலிங்கம், மகதம், புட்கரம், சாகம், காமபிலி முதலிய நாட்டரசர்களும் சேர சோழர்களும் அச்சேனைகளைத் தள்ளிக்கொண்டு நளனுக்கு முன்னே வந்து வீரம் பேசி அவனோடு எதிர்த்து அனேக பாணங்களைத் தொடுத்து இதோடு நளன் அழிந்தானென்ன மகிழ்ந்தார்கள்.

அப்பாணங்கள் நெருப்புப் பொறிகளைக் கக்கிக்கொண்டு மிகவும் வேகமாக வருவதைக் கண்ட நளன் அவர்கள் சாமர்த்தியத்தைக் கண்டு வியந்து அவர்களோடு விளையாட்டாக யுத்தம் செய்துகொண்டிருப்பது தகாதென நினைத்துத் தன்னிடத்திலுள்ள மிகக் கூர்மையான அம்புகளை விடுத்து அவர்கள் கர்வத்தை அடக்கி அவர்களை வில்லெடுக்கவும் பாணந் தொடுக்கவும் விடாமலும் சாரதிகளினுடலெல்லாம் முள்ளம்பன்றிபோல் அம்புகளால் தைத்து அவர்களைத் தேர் நடத்தவும் விடாமலும் செய்தபடியால் அவ்வரசர்கள் "இனிமேல் இந்நளனை எதிர்த்து நின்றால் நம்மை யமலோகத்துக்கு நிச்சயமாக அனுப்புவானே அல்லது இப்பூவுலகத்தில் நிலைக்கச் செய்யான்" என நினைத்து அப்போர்க்களத்தில் தமமானத்தையும் தேரையும் விட்டுப் புறமுதுகிட்டோடினர்.

அவர்கள் ஓடியதைக் கண்ட மற்ற அரசர்களும் அவர்கள் பெருஞ்சேனையும் நளனை அங்குமிங்கும் அசையவொட்டாமல்

ஈசல்போல் வளைத்துக்கொண்டனர். அப்போது நளன் தன் வெற்றி பொருந்திய வில்லை வளைத்து வில்லாளிகளுக்கு மூன்றும் யானைகளுக்கிரண்டும் குதிரைகளுக்கு ஒன்றுமாகக் கணக்கிட்டுப் பாணங்களை எய்து அவ்வரசர்களையும் சேனைகளையும் மலைத்து அலைத்து அழைத்து அழைத்து வளைத்து வளைத்து எமலோகத்துக்குச் சீட்டுக் கொடுப்பவன்போல வதைக்கும்போது அவ்வரசர்களும் சேனைகளும் கலகலத்து விலவிலத்துச் சடசடத்துப் பலர் கண்ணீர்விட்டுப் புண்ணீர் தோய்ந்து நன்னீரின்றி நா வறண்டு மதிமருண்டு உடல் சுருண்டு வீழ்ந்தார்கள். பாணம் பட்டுக் கண்டதுண்டமாகிக் கால் வேறு, தலை வேறு, உடல் வேறு, தொடை வேறாக அறுபட்டு வீழ்ந்தன. கவந்தங்கள் கூத்தாடின. அலகைகள் நளன் புகழைப்பாடின. எங்கே பார்த்தாலும் இரத்த வெள்ளமாகி இரத்தாறுகள் உடைப்பெடுத்தோடின. அந்த ஆறுகள் பெரிய அலைகளோடு தாம் வரும் வழியிலுள்ள மலைகளையும் மரங்களையும் உருட்டித் தள்ளிக்கொண்டு வருவது போல் தலையறுந்த குதிரைகளையும் துதிக்கை யிழந்த யானைகளையும் அரசர்களது கொடிமரங்களையும் உடைந்த தேர்களின் அச்சு, தேர்க்கால், குத்துக்கால், கொடிஞ்சிகளையும் அடித்துக் கொண்டோடின. பிணக் குவியல்கள் குன்றுகள்போல விளங்கின. எஞ்சியவர்கள் நளன் கண்ணுக்கும் அம்புக்கும் அகப்படாமல் அக்குவியலுக்குள் நுழைந்துகொண்டும், பிணங்களை வாரித் தங்கள்பேரில் போட்டுக்கொண்டும், இரத்த வெள்ளத்தில் மூழ்கிச் சென்றும் முன்னால் ஓடுகிறவர்களைப் பிடிக்கப் போகிறவர்கள்போல் பாவனை செய்து அவர்களைத் தள்ளிக்கொண்டு அவர்களுக்கு முன்னே ஓடியும் உயிர் தப்பினார்கள். நளன் எங்கே பார்த்தாலும் தன்னுருவமே தோற்றும்படி சக்கரம்போலச் சுற்றிச் சுற்றிப் பார்த்து ஓடுகிறவர்களையும் எதிர்க்காது ஆயுதங்களைக் கீழே போட்டு நின்ற நிராயுதபாணிகளையும் தஞ்சம் புகுந்தோரையும் விட்டுத் தன்னை எதிர்த்தோரை அடுத்து அவராண்மையைக் கெடுத்து அவராவியைக் காலனுக்குக் கொடுத்துத் தன் வலம்புரிச்சங்கை எடுத்துத் தன் வாயில்வைத்துத் திரிலோகங்களும் நிலை குலையும்படி பம், பம், பம்மென ஊதினான்.

இவ்வாறு நளன் வில்லெடுப்பதும் சரம் தொடுப்பதும் பார்ப்போர் கண்ணுக்குத் தோற்றாமல் மாற்றார் விடும் அம்புகளைத் தடுப்பதும் எதிர்த்த அரசரைப் படுப்பதும் ஓடியவர்க்கு உயிர்ப்பிச்சை கொடுப்பதும் மடிந்தோரை சுவர்க்கத்துக்கு விடுப்பதும் ஆகிய இவற்றைக்கண்ட தேவேந்திரன் நளனது வில்லாண்மையையும் கரவேகசரவேகத்தையும் தனுர்வேத பாண்டித்தியத்தையும்மெச்சி இப்போரை இப்போதே நிறுத்தும்படி நளனை வேண்டிக் கொண்டாலன்றி இந்நிலவுலகம் முழுதும் இன்றைக்கே முடிவடையும் என்று நினைத்து மற்ற மூன்று தேவர்களோடும் நளனுருவை மாற்றிக்கொண்டு பழைய உருவத்தோடு நளனை அணுகி,

> துன்று களத்தேதிர் துன்னலர் யாரும்
> போன்ற முருக்கிய போர்த்தொழி னீங்கி
> வேன்றி கோள்வேலவ மின்னனை யாடன்
> மன்றல் முடித்தனை வாழிய வென்றார்.

இவ்வண்ணம் தேவர்கள் நளனைச் சண்டையை நிறுத்தும்படி வேண்ட நளன் தன் வில்லைக் கீழேவைத்துத் தேரைவிட்டிழிந்து அத்தேவர்களை வணங்கி நின்றான்.

• நளனது வணக்கத்தையும் தேவ விசுவாசத்தையும் வாய்மையையும் முற்றுமுணர்ந்த அத்தேவர்களில் மகபதி, நளனைநோக்கி "அரச! நீ எவ்விடத்தில் யாகஞ் செய்தபோதிலும் நான் என் இயல்பான உருவத்தோடு தோற்றி உன்னால் அளிக்கப்படும் அவிர்ப்பாகத்தைப் பெற்றுக்கொள்வேன்" என்றான்.

அக்கினி "வள்ளலே! நீ நெருப்பன்றி அறுசுவையோடு கூடியதும் அமுதம்போன்றதுமான உண்டி சமைக்கும் வித்தையை உனக்குக் கொடுத்தேன்" என்றான்.

யமன் "புண்ணிய சீல ! நீ பலவித துன்பங்களை அடைந்து மனம் வருந்துங்காலத்தும் தர்ம சிந்தனை உன்னைவிட்டகலாதிருக்கவும், மிகவும் நெருங்கிய யுத்தத்தில் உனக்கு வெற்றியைத்

தரத்தக்க ஆயுதங்கள் எத்தனை வேண்டுமானாலும் உனக்குக் கிடைக்கும்படியாகவும் வரங்கொடுத்தேன் ''என்றான்.

வருணன் "மன்னரேறே! நீ அணியும மாலை என்றும் வாடாதிருக்கவும், கடலை வற்றச் செய்யவும், பாலையை நீர் நிலையாக்கவும் விரும்பினாலும் அவ்வாறே ஆகுமபடியான வல்லமையை உனக்களித்தேன்" என்றான்.

பின்பு தேவர்கள் தமயந்தியை நோக்கிக் "கற்புக்கரசியே! எக்காலத்திலாயினும் உன கற்பையழிக்க எண்ணங்கொண்டு உன்னைத்தீண்டுபவரது ஆவி போம்படியாகவும், நீ நினைத்த உருவம் எடுக்கும்படியாகவும் வரங்கொடுத்தோம்" என்றார்கள்.

. இவ்வாறு தேவர்கள் நளனுக்கும் தமயந்திக்கும் சிறந்த வரங்களளித்துத் தத்தம் திசைக்குப் போனார்கள். நளனும் வெற்றி வாய்ந்த தன் சேனையோடு தனதிருக்கை சேர்ந்தான்.

வில்லாண்மைக்குரிய அனேக அரசரைப் புறங்கண்ட நளனது வல்லமையைக்கண்ட வீமராஜன் மிக்க மகிழ்ச்சியுற்றுத்தன் தவப்பயனைப் புகழ்ந்து, எல்லாவற்றிலும் மேலான ஒரு சக்கரவர்த்தியே தன் மங்கைக்குரிய நாயகனானதைக் குறித்துக் களிகூர்ந்து தமயந்தியைச் சாக்கவேண்டிய கவலையொழிந்து அவள் மணவினையைக் காணவேண்டிய அவாமிகுந்து அதற்காகவேண்டியவற்றைச் செயவிக்கும்பொருட்டுக் கலியாண மண்டபத்தை அடைந்தான்.

---

# மணம்புரி படலம்.

---

அம்மண்டபமானது, பளிங்கினால் செய்யப்பட்ட எழு யானைகளின்மீது பொற்படிகளமைத்து, அவற்றின்மேல் நீலத்தினால் யாளிகள் நிறுத்திப் பல இரத்தினக் கற்களால் மேடையமைத்துப் பளிங்கினால் சுவர் வைத்து இடை இடையே மரகதச் சாளரங்கள்

பொருத்திப், பவளத்தால் பல உருவங்களோடு செய்யப்பட்ட ஆயிரம் கால்கள் நாட்டி இந்திர நீலக்கல்லால் போதியமைத்து ஆடகப் பொன்னால் உத்தரம் ஏற்றி அவற்றில் சிவப்புக்கற்களால் சிறு குழும் அமைத்து மேலே சந்திரகாந்தக் கல்லால் மண்டபம் இயற்றப்பட்டிருந்தது. அதனுள், முத்தினால் பாளையும், மரகதத்தால் பசிய இலையும், பவளத்தால் பழங்களும், வெண்பொன்னால் உடற்பாகமுமுடைய கமுகுகளும், தங்கத்தால் வாழைத்தாறும், பவளத்தால் அத்தாற்றின் நுனியில் தொங்குகின்ற வாழைப்பூவும், பொன்னால் அடிமரமும், மரகதத்தால் நெடியவிலையையும் உடைய வாழைகளும் வரிசை வரிசையாக நிறுத்தப்பட்டன. அம்மண்டபத்தைச் சுற்றிலும் சிறு சண்பகம், குருக்கத்தி, சண்பகம், பாதிரிமுதலியமணமிகுந்த மலர்தரும்விருக்ஷங்களைவைத்து வளர்த்து அவற்றின் மலர்களினின்றும் வழியும் தேன் அருவிபோல் ஓடவும், அத்தேனை உண்ட வண்டுகள் களித்துப் பாடவும் அம்மலர்களில் தோய்ந்துவரும் தென்றலும் திகழ்க்கும்படியாகவும் உய்யானவனம் செய்யப்பட்டிருந்தது. அம்மண்டபத்தின் நடுவில் ஒரு வேள்விச்சாலையும் ஓமமேடையும் ஓமகுண்டமும் இயற்றி அதைச் சுற்றி வைரப்பொடியால் அதற்குரிய கோலமிட்டு, இணைகயல், கண்ணாடி, சாமரம், கொடி, தோட்டி, நிறைகுடம், முரசு, விளக்கு ஆகிய அஷ்டமங்கலத் தொழிலும் இயற்றப் பொறிகள் நிருமிக்கப்பட்டிருந்தன. அச்சாலையைக் குங்குமப்பூ, கருப்பூரம், மானமதம், பனிநீர் முதலியன கலக்கப்பட்ட சந்தனக்குழம்பால் மெழுகி, அங்கே சூரிய மண்டலமும் நாணும்படியாக ஒளி செய்யும் மணிவிளக்கேந்திய பாவைகள் நிறுத்தி நக்ஷத்திர மண்டலமோவெனக் கண்டோர் சந்தேகிக்கும்படி பல வகை இரத்தினங்களாலாகிய கம்பளங்களை மேலே விதானமாகக் கட்டினார்கள். அரணமனையின் முன்றிலில் பந்தரிட்டு வட்டம் வட்டமாகப் பாலிகை அமைக்கப்பட்டிருந்தன. இவ்வலங்காரமான மண்டபத்துள் சிங்கங்களின் பிடரியில் பொற்குறடிட்டுப் பவளத்தால் செய்யப்பட்ட குடத்தோடு கூடிய சதுரமான கழுத்தையுடைய தூண்களும், பளிங்கினால் உத்தரமும், பவளத்தினால் மேல்முகடும் அமைத்துப் பலமணிகளால் விமானம் ஒன்று இயற்

றப்பட்டிருந்தது. அவ்விமானத்துள் முத்துச்சரங்களைத் தாம்பா கவுடைய நவமணிகளாலாகிய தவிசு ஒன்று ஒப்பற்றதாய் அமைக் கப்பட்டது. அத்தவிசின் ஆய்ந்தரிந்த புஷ்பங்களைப் பரப்பிச் சுத்த வெண்மையான பட்டாடை விரிக்கப்பட்டிருந்தது.

அம்மண்டபத்துள,

ஆற்று வேள்வி யருந்தவர் சூழ்வரப்
போற்று நான்மறைக் கோதமன் போர்கெழு
வேற்ற டங்கண் விளங்கிழை மன்றலுக்
கேற்ற யாவையுங் கொண்டே னெய்தினன்.

அங்கு அனேக வேதியர்களும் மற்றுமுள்ளோரும் கூடி யிருக்க வீமராஜனுடைய குல குருவாகிய கௌதமர் மணவினைக குரிய யாவையும் சேகரித்துக்கொண்டு அரசனைநோக்கி "மன்ன! மன்றலுக்குரிய காலம் சமீபிக்கிறது. ஆகையால் அக்காரியசதுக் காகவேண்டிய வினையைத தொடஙகலாமோ" என வீமராஜன் அவர் திருவுள்ளககருததறிந்து அவரை வணஙகி ஒற்றரை யேவி நளச்சக்கரவர்த்திக்குத் தெரியுமாறு செயதான்.

அவ்வொற்றர்கள தம்மன்னன் ஏவலைத தலைமேற்கொண்டு நளனிடத்திற் சென்று வணஙகித தெரிவிததபோது அதைக் கேட்டுக்கொண்டிருநத முனிசிரேஷ்டர்களாகிய காசியபர் முதலி யோர் அரசனை விதிப்படி கஙகை முதலிய புண்ய தீர்த்தஙகளில் ஸ்நானஞ் செய்வித்தார்கள். நளன் எஙகும் நிறைநது எவ்வுயிர்க் கும் உயிராகி எல்லாவற்றிற்கும் சாக்ஷியாக விளஙகுகினற சிவ பெருமானை வாயாரத துதிதது வணஙகிப் பூசுரர்களுக்குப் பூ தானம் கோதானம முதலிய தானஙகளும் மனம் வெறுக்குமாறு கொடுத்து அவர்களை இருமைக்கும் உற்ற துணையாகக் கருதி வணங்கி நின்றான். அப்போது அரசனுக்கு அலஙகரிப்போர் பலர் எதிரேவநது அவனைத் தொழுது அவனருளால் விலையுயர்ந்த ஆபரணங்களாலும் ஆடைகளாலும் அரசனை அலங்கரிக்கத் தொடங்கினார்கள். முதலில் சூரியன்போலப் பிரகாசிக்கின்ற ஒரு கிரீடத்தை ஒரு பெரிய மலைக்குச் சிகரம் வைத்தாற்போல்

அழகுபெறச்சூட்டி, இரண்டு புயங்களிலும் இரு கதிர்கள் விளங்கினாற்போலக் காதில் வச்சிரக குண்டலங்கள் பூட்டி, அகன்ற மலைபோன்ற மார்பில் அருவிகள்போல அனேக முத்துமாலைகளைச சாத்தித, தோள்களில் பொன் வளையங்கள் சேர்த்துப், பிரகாசம்பொருந்திய பொன்மலையை அழகிய வெண்மேகம் சூழ்ந்தாற்போல மதிக்கவொண்ணாத விலையுயாந்த வஸ்திரத்தை இடையிற் சாத்தி, எண்ணரிய சிற்றரசாகள் இடைவிடாது வணங்குவதால் அவரது பொன் முடிகள தோய்ந்து தேய்ந்த பசும்பொன்னாலாகிய வீரக்கழலைக் கால்களில் வீக்கினர்.

இவ்வாறு மன்மதனும் வெளகும்படியாக அலங்கரிக்கப்பட்ட நளன், மேருகிரியானது முகபடாம முதலியன அணிந்து நான்கு கால் கொண்டு நடந்தாற்போல விளங்கிய தனது பட்டத்து யானையின்மேல் அமைக்கப்பட்ட நவரத்தினங்களாலாய அம்பாரியில அமர்ந்து அந்தணா வாழ்த்தப பேரிகை எங்கணும் ஒலிகக வாத்தியங்கள் முழங்கச சிற்றரசர்கள் களித்த உள்ளத்தனராய் மெய்காப்பாளாபோல் அவனைச சூழ்ந்து அவன் கடைக்கண்ணோக்குக்கு எதிர்பார்த்துவரச் சிலர் குடை பிடிக்கச சிலர் சாமரை வீச இரத்தின மயமான கலியாணமண்டபத்துள் சென்று மணத்தவிசில அமர்ந்தான.

தமையந்தியை, அவள் தோழிமார், தாம் கற்றறிந்த முறைகள் எல்லாவற்றிலும சிறந்ததும இணையற்றதுமாகிய முறைப்படி அலங்கரித்து அவளை அவ்வுத்தம ஓரையில, நளனுக்கு விஜய லட்சுமியைத் தத்தம் செய்யப புகுவார்போல் கடல் போலும் அனேக மாதர்கள் சூழ்ந்து அத்தமையந்திக்குரிய பணிவிடை செய்து மனமுவந்து அவளை அக்கலியாண மண்டபத்துக்கு அழைத்துவந்து, தேனைச சொரிந்து அனேக காததூரம் வாசனை வீசுகின்ற மாலைகள் நாற்றிய ஒலியுள்ள மணிகளாலாய விசாலமான மண்டபத்தில் ஏற்றி நளனுக்கு வலதுபுறத்தில் ஒரே ஆசனத்தில் நளனது மனத்தாமரையில் வீற்றிருந்த இலக்குமிபோல் அவளை அவனருகில் வீற்றிருக்கச செய்தனர். வேதியர்கள் கடல் முழக்கம்போல் மந்திரம் ஓத, தேவதுந்துமிபோல் வாத்தியங்கள்

முழங்க, அரம்பையர்போல் மாதராட, கந்தருவர்போல் யாழ் வல்லோர் யாழுடன் பாட ஹோமம் வளர்த்து ஆகுதி செய்து தாரை வார்த்துக் கொடுத்தற்குரிய சமயம் நெருங்கியவுடன் வீமராஜன் எழுந்து விரிந்த தாமரை மலரில் செங்காந்தள் மலர்ந்ததுபோல நளனது கையின்மேல் தமையந்தியின் மிருதுவான கையை வைத்து 'இருவரும் காண்போர் கண்களுக்கு வேறுடம்புடையவரேனும் இல்லற ஒழுக்கத்தில் ஓருடம்பானவர்போல் என்றும் பிரியாதுமனமொத்து உமையும் உமாபதியும் போலவாழக்கடவீர' எனத் தண்ணீர் வார்த்தான். பின்பு ஹோம சம்பந்தமான காரியங்கள் யாவும் பூர்த்தியானவுடன் நளன தமையந்தியோடு, தேவர்கள பூமாரி பொழிய வேதியர் ஆசி கூற அக்காக்ஷியைக் கண்டோர் கண்களில் ஆனந்தபாஷ்பம் பெருக, வீமனும் அவன் மனைவியாகிய சாருகாசனியும ஆனந்தக்கடலில் மூழ்கப் பாணிக்கிரகணம் செய்துகொண்டு அக்கினி வலமவந்து பொரிசொரிந்து. தமையந்தியின் பாதத்தை அம்மியின்மேல வைத்துக் கற்புக்கு வரம்பான அருந்ததியைக் காட்டினான்.

இவ்வாறு மணவினைக்குரிய வெல்லாம் முறைவரப் பூர்த்தியானவுடன் தமையந்தி மிகவும் வணக்கத்தோடு தன தந்தையை வணங்க, வீமன் மகிழ்ச்சி கூர்ந்து தமையந்தியை நோக்கி "என்னருங்குலமணியே, திருமால் திருமகளைத் தன்னிருதய கமலத்தில் வீற்றிருக்கச் செய்தாற்போல, அரசன உன்னை எப்போதும் மனதினிடத்திற் கொள்ளுமாறு அவன மனமகிழ நடந்து அவனை விட்டுப்பிரியாது கூடி வாழ்ந்து, அரசன துஷ்டநிக்கிரகம், சிஷ்டபரிபாலனம் செய்து குடிகளைத் தன மக்கள் போல் பாதுகாத்து இரட்சிக்குமபடியான இராசரிய காரியத்திலும, இல்லறம் நடாத்துவதிலும் நீ அவனுக்கு உற்ற துணையாக வாழக்கடவாய" என்று மகிழ்சிறந்த மனத்துடன வாழ்த்தினான்.

நளன், தன் குலகுருவானவரும், உலகத்திலுள்ள யாவருக்கும் பிதாவானவரும தவமுடையானவருமாகிய காசிபரைத் தனது குலதெய்வமாகவும் தனக்குற்ற குறவர் யாவருமாகவும் மனதுட்கொண்டு அவரது பாதகமலங்களை வணங்கிப் பின்பு வீமராஜனை

அணுகி அவன் சிற்றரசனுகையால் அவனோடு ஆலிங்கனஞ் செய்தான். அப்போது வீமராஜனும் கௌதமர் முதலிய முனிவர்களும அரசனுக்கு ஆக்கம கூறி வாழ்த்தினார்கள்.

பின்பு நளனும் தமையந்தியும் அங்குள்ள உத்தம வேதியரை வணங்கி அவர்களுடைய ஆசிபெற்று அத்தம்பதிகளுக்கேற்படுத்திய அழகிய மணவறையிற்செல்ல அனேகமாதர்கள் மஞ்சணீரும் கர்ப்பூரதீபமும எந்தித் திட்டி கழித்தார்கள்.

வீமராஜன் தநகரில் நால்வகை வருணத்தாருக்கும் உண்டியளித்து அவரவர்விருப்பத்தின்படி பலவித தானங்களும் கொடுத்துப் பற்பல தேசங்களிலிருந்து வந்த பல வித்துவான்களுக்கும் அவர்கள் புலமைகருத் தக்கவாறு பரிசளித்து இரவென்றும் பகலென்றும் வித்தியாசமில்லாமல் தேவலோகமபோல் யாவரும் மலர்ந்த முகத்துடன அவ்வரண்மனையில் நடந்த ஆடல் பாடல்களில் மூழ்குமாறு மிகவும் விமரிசையோடு அக்கலியாண உற்சவத்தைப் பலநாள வரையில நடைபெறச செய்து யாவரையும மகிழ்வித்தான.

நளனும தமையந்தியும தமதெண்ணம முற்றிலும் நிறைவேறியதை நினைந்து ஆனந்த பரவசராய், நிகரற்று விளங்கினர். இவ்விருவரையும ஒன்று சேர்த்த விதியையும, ஒப்புயர்வில்லாத அவர்கள் அழகையும, நளனது புயவலியையும் புகழாதாரில்லை. தமபதிகளிருவரும களித்து வாழ்வதைக் கண்டோர் யாவரும் தத்தம மக்களை அந்நிலைமையிற் கண்டாற்போல் மகிழ்ச்சியுறுவாரெனில் தமையந்தியின் தாய் தந்தையரின் பூரிப்பைச சொல்லவும வேண்டுமோ?

இவ்வாறு நளன் வீமராஜனது விருப்பத்தின்படி அவன் நகரத்தில் அனேக நாள் சந்தோஷமாகத் தங்கியிருந்தான். பிறகு தமையந்தியோடு தன்னகருக்கேக எண்ணங்கொண்டு தன் கருத்தை வீமராஜனுக்கறிவித்தான். உடனே வீமராஜன் நளன் தங்கியிருந்த மணவறைக்குச செல்ல அதையறிந்த ஏவலாளர் நளனுக்குத் தெரிவித்தார்கள். நளன் எதிர்சென்று போய்த் தன்

மாமனைத் தழுவினன். வீமராஜன் நளனுடைய மனதின்படியே தமையந்தியை நிடத நாட்டுக்குக் கூட்டியனுப்பச் சம்மதித்து அதற்காகவேண்டிய ஏற்பாடுகள் செய்யத்தொடங்கினன்.

தமையந்தி தன் தாயினிடத்தில் உத்தரவு பெறுவதற்காக அவளுடைய அந்தப்புரத்துக்குச் சென்று தன் தாயை வணங்கி "என் அருமைத்தாயே! நான் என் கொழுநனோடு நிடதநாட்டுக்குச் செல்வதற்கு மனமுவந்து உத்தரவளித்தருளவேண்டும" என்று மிகவும் அன்புடன் கேட்டாள். இவ்விதமாகத் தன் குமாரி எப்போது கேட்பாளோ என அல்லும பகலும அனந்த சயனனை ஆராதித்துவந்த அப்பெருமாட்டி அவ்வினிய வார்த்தைகளைக் கர்ணாமிருதமபோல் காதுட்கொண்டு தன் அருமைப்புதல்வியைக் கட்டியணைத்து அவள் விருப்பத்தினபடியே உத்தரவளித்துப் பின் வருமாறு புத்தி புகட்டினள். "என் கணமணியே! உன்னைப் பெண்ணாகப்பெற்ற எனக்கு எவவித கிலேசமுமு உண்டாகாதென நினைதத என் எண்ணம முற்றிலும் கைகூடிற்று. அவ்வாறே உனது புக்ககத்திலும் நின்புகழ் பெருகும என்பதற்கையமில்லை. உலகத்தில் பெண்களாலேயே குலம உயர்வதும் தாழ்வதுமுண்டு. ஆகையால் நினது நன்னடக்கையாலும் கற்பினாலும் நின் கொழுநனும் நீ பிறநத குலமும் உயரவேண்டும். கற்பென்பது கணவன் சொல்லியதைக் கற்றுக்கொண்டு அதன் படி நடத்தலேயாகும். ஸ்திரீகளுக்குரிய அச்சம் மடம் நாணம் பயிர்ப்பு என்ற நான்கனுள் நாணம் என்பதை வேலியாகக் கொண்டு அக்கற்பென்னும் பயிரைக் காக்கவேண்டும். அதற்குப் பொருமை என்னும் தண்ணீர் இடைவிடாது வார்க்கவேண்டும். பெண்களுக்குப் பொருமை இல்லையெனின் குடும்பபாரத்தைப் பொறுததலாகாது. பொறுமை இல்லாத மனைவியே இல்லாளெனப்படுவாள். அவளாலேதான் இல்லறம் வளர்ந்தோங்கும். இல்லறத்தை ஒழுங்குபெற நடத்துபவர் துறவறததில் ஒழுகுபவரினும் மேலானவராவர். அவ்வில்லறமாகிய வண்டியை இழுத்தற்குரியோர் காதலனும் காதலியுமே. இவ்விருவரும் மனமொத்து, ஒரே ஒழுங்கான வழியைப் பற்றுவாராயின் அவ்வண்

டியும் ஒழுங்காகச்செல்லும். அன்றேல் தடைபட்டுச் செல்லாது நின்றுவிடும். மேலும் ஆடவர்கள் உலகத்தில் பல மனிதர்களோடு பழகவேணடியிருப்பதால் அவர்கள் மனமும் பல வேறுபட்ட குணங்களால் அலைக்கப்பட்டு அமைதியை அடையுமாறு தமதில்லத்துக்குச் செல்லுவார்கள். அப்போது அங்கும் சமாதானம் இல்லையாயின் அவ்வாடவர்க்கு இவ்வீடு காடாகும். ஆடவன் வெளியிற்சென்று உழைப்பதெல்லாம் இல்லறத்தை ஒழுங்குபெற நடத்துவதற்கே. அவ்வுழைப்பால் உண்டாகும் களைப்பை நீக்கும் கைகண்ட மருந்து காதலியின் கனிந்த வார்த்தைகளே. கடுஞ்சொல்லையுடைய மனைவி கானகத்துப் பேயாவாள். உலகில் நாயகனுக்கும் நாயகிக்கும் இடை நின்று கலகம் விளைப்பது தரித்திரம். அது குடிகொண்டவிடத்தில் கலகம் கூத்தாடும். வறுமையைப் பாராட்டாத மனைவியே மனைக்குற்ற செல்வம். அவளிருக்கும் மனையே எல்லாம் நிறைந்ததாகும். அவளுக்குப் பயப்படாத தெய்வம் இல்லை. கணவன் கற்பகத் தருவைப்போல் நினைத்ததெல்லாம் தனக்களித்துத் தனபதிபோல் வாழும்போது அவனைத் தெய்வமாக நினைக்கும் சீமாட்டிகளைக் காட்டிலும், கணவன் கட்டத் துணியுமின்றிக் கெட்ட நிலைமையிலிருக்கும்போது அவனே தனக்கு இம்மை மறுமை இரண்டுக்குமுற்ற துணையென்றும் உயர்ந்த தெய்வமென்றும் நினைத்துத் தன் மனம் ஒத்திருக்கிற பெருமாட்டியே மேலானவள். அவள் பெருமையைச்சொல்ல எவராலும் இயலாது. உயர்குலத்திற் பிறந்த கர்வத்தால் அகமுடையானை அலக்ஷியஞ் செய்து அறுசுவையோடுண்டு ஹம்ஸதூளிகா மஞ்சத்திலமர்ந்து அமரபோகம் அனுபவித்தாலும் அவளினும் இழிந்தோரில்லை. கணவனே கண்கண்ட தெய்வம் என நினைத்து அவன் காலாலிட்ட வேலைகளை மனமுவந்து தலையால் செய்து கண்டோர் புகழத் தனக்கும் தன் குலத்துக்கும் தன் ஒழுக்கத்தால் பெருமை யுண்டுபண்ணும் பெண்மணி காலகதியால் வறுமையுற்றாலும் அவளே சிறந்த பதிவிரதை யென்றும் பத்தினியென்றும் உலகுக்கு உதாரணமான உத்தமி யென்றும் அழைக்கப்படுவாள். மேலும் உன் கணவன் உன் தந்தையைப்

பார்க்கிலும் மேலான நிலைமையி லிருப்பவர். அப்படிப்பட்ட சிறந்த கணவனை அடைந்ததனாலேயே உன் தவம் மேலான தென்பதற்கையமில்லை. அரசா மனமகிழ நடப்பது சிறந்த அறி வுடைமை. உன் கணவன் மனதின்படியே நீ நடந்துகொள்ள முயலவேண்டும். இதுவரையில் பெற்றோராகளாகிய எங்களுக்கு உன்மீதுள்ள அளவற்ற அன்பையே துணையாகக் கொண்டு எக் காரியத்தையும் சாதிக்க முயலுவது சரியன்று. உன் கணவன் இஷ்டமே உன் இஷ்டமாகவும் அவருடைய சுகாசுகங்களே நின் னுடையனவாகவும் அவன் மொழிக்கு எதிர்மொழியின்றி அவன் நன்மையை வேண்டுவதே நின்னுடைய தர்மம். உத்தமப்பெண் ணாகிய உனக்கு அதிகம் சொல்லவேண்டியதில்லை. பெற்ற மனம் பித்து என்பதுபோல் என் மனதுக்குத் தோற்றியவற்றைச சொன்னேனேயல்லது வேறல்ல. பெண்கள் கலியாணம் ஆகும் வரையில் பெற்றோர் பாதுகாப்பிலிருந்து கல்யாணமானபின் கண வன் பாதுகாப்பிலிருப்பதே முறைமை. அம்முறைப்படி நீயும் உன் கணவன் வீட்டுக்குப் போகவேண்டியதுதான். இவ்வாறு எப்போது என்னைக் கேட்பாய என்று அனுஷ்டித்த விரதத்தின் பலன் இப்போதுதான் கைகூடிற்று. காதுகளும குளிர்ந்தன. என் கோகிலமே! உனக்கு ஒரு குறையும வராமலிருக்க நான் தினந்தோறும் கடவுளை வணங்குவேன். உன்னுடைய தோழி கள் யாவரையும உன்னோடு அழைத்துக்கொண்டு அருமையாக வளர்த்த பூவையையும் கிள்ளையையும இன்னும மற்ற பிராணி களையும் உன்னோடு கொண்டு உன் புக்ககத்துக்குச் சென்று உல கம் புகழ வாழ்வாயாக" என்று சொல்லித் தன் மகளை மார்போ டணைத்து முத்தமிட்டு உச்சி மோந்து, தன மகளைவிட்டுப் பிரிய மனமில்லாதவ ளாயினும் மனதை ஒருவாறு திடப்படுத்திக் கொண்டு அனுமதி கொடுத்தாள்.

தமையந்தி தன் மாதாவின் மனக்கலக்கத்தைக் கண்டு தா னும் சற்றுக் கலங்கி அரிதில் விடை பெற்றுக்கொண்டு தன் தந் தையாகிய வீமராஜனை அடைந்து "தான் கணவனோடு செல்ல அனுமதி கொடுக்கவேண்டும்" என்று வணங்கி நின்றாள்.

வீமராஜன் தன் குலக்கொழுந்தின் புதுமையான வார்த்தைகளை அவளது மழலைச் சொல்லைப்போலக் கேட்டு ஆனந்தமடைந்து நளனையும் தமயந்தியையும் பார்த்து மனம் பூரித்து அவளுக்குச் சீதனமாக உத்தம இலக்ஷணங்களைப் பொருந்திய குதிரைகள் பூட்டிய தேர்கள் ஆயிரமும், பெருமை பொருந்திய யானைகளாயிரமும், குதிரைகள் இரண்டாயிரமும், செழிப்பு மிக்க ஊர்கள் ஐம்பதும், தோழிகளில் இரண்டாயிரத்தைந்நூறு பேர்களும், தாசிகளில் எழுநூறு பேர்களும், பொன்னாணயங்கள் ஒரு கோடியும், இரத்தினக்கட்டில் படுக்கை ஆபரணம் நிறைந்த பெட்டிகள் ஆலவட்டங்கள் கண்ணாடிகள் சாமரங்கள் கவிகைகள் சிவிகைகள் முதலியனவும், இன்னும் அளவற்ற பொருள்களும் கொடுத்துத் தன் மகளையும் மாப்பிள்ளையையும் பிரயாணப்படுத்திவிட்டான்.

அப்போது வீமராஜனது மனைவியார் தமயந்தியின் பிரிவால் மனம் வருந்தினார்கள். அதைக் கண்ட கௌதமர் அம்மாதர்களை நோக்கிப் பின் வருமாறு சொல்லலுற்றார். “உலகத்தில் பெண்ணைப் பெற்றவர்கள் அப்பெண் தம் வசத்திலேயே எப்போதும் இருப்பள் என நினைக்கக்கூடாது. அவள் பிறர்க்கே உரியவள். உரியவரோடு செல்லுங்காலத்து மனமகிழ்ந்து அப்பெண்ணின் உள்ளம் மகிழுமாறு விடையளித்து மனம் புழுங்காது வாழ்த்தவேண்டும். புஷ்பச் செடிகளில் உண்டான புஷ்பத்தை அச்செடி அனுபவிப்பதுமில்லை, அவற்றை அனுபவிப்போர் பறித்துச் செல்லும்போது வருந்துவதுமில்லை. திருமகளைப் பெற்ற பாற்கடல் அத்திருமகள் உடனே திருமாலோடு சேர்ந்து செல்லும்போதும் வருந்தவில்லையே. ஆகையால் நீங்கள் வருந்துவதிற் பயனில்லை. இது சுப காரியமாகையால் துக்கத்தைவிட்டு மிக்க சந்தோஷத்தோடு முகமலர்ந்திருக்கவேண்டும்” என்று சொல்லி அவர்களை ஆற்றாமையை மாற்றினார். ஆயினும் தமயந்தியின் தாயாகிய தாருகாசனி தன் பெண்ணைத் தன்னைப்போல் பரிவுடன் பாதுகாப்பவர்கள் அவள் புக்ககத்தில் யாரிருக்கப் போகிறார்கள் என நினைத்துத் தமயந்தியின் உயிர்த்தோழியை அழைத்து “மங்கையே, எனக்கு நீ வேறு தமயந்தி வேறல்ல. அவளிடத்தில்

உனக்கு என்னைக் காட்டிலும் விசேஷ அபிமானம் இருக்கலாம். ஆயினும், அவள் பிரிவால் மனம் வருந்துகின்ற நான் எந்தவிதத்தினாலாவது என் மனதுக்குச் சமாதானத்தை நாடுகிறபடியால் அது சம்பந்தமாக உனக்குத் தெரிவிப்பன சிலவுண்டு. அவையாவன; இதுவரையில் நாங்கள் தமையந்திக்கு அன்னையாக இருந்து அவளிஷ்டத்தைப் பூர்த்தி செய்து எமதுயிர்போல் பாதுகாத்து வந்தோம். இனி தமையந்திக்குத் தாய் நீயே. அவளுக்கு வேண்டுவனவற்றைக் குறையாது செய்து அவள் எவ்விததிலும் மனத்தளர்ச்சியடையாதபடி பாதுகாக்கவேண்டியது உன் கடன்," என்று சொல்லிஅவளுக்கு விலையுயர்ந்த ஆடையாபரணமெல்லாம் அளித்து அவளை மகிழ்வித்துத் தமையந்தியோடு அனுப்பினாள்.

---

## மீட்சிப்படலம்.

---

மற்றிவை நிகழும் வேலை மகிழ்வோடு மாமன் றன்பால்
வெற்றிகொள் குருதி வைவேல் வேந்தர்கோன் விடைகொண்
யற்றமில் கேள்வி சான்ற அமைச்சரை யினிதி னோக்கி [டேகி
யிற்றை நாளெழுச்சி யென்ன விமிழ்முர சறைக வென்றான்.

நளன் வீமராஜனிடத்தில் விடை பெற்றுக்கொண்டு தன் அமைச்சரை அழைத்துத் தான் தன் நகருக்குப் புறப்படும் செய்தியைத் தன் சேனைக்கு அறிவிக்குமாறு முரசறையச் செய்தான். அவ்வொலியைக்கேட்ட சதுரங்க சேனைகளும் களிப்பினால் கடல் முழக்கம்போல் ஒலித்து அணி அணியாக நின்றன. நளன் மலர்ந்த முகத்தோடு அனேகர் சந்திரவட்டக் குடை பிடிக்கவும் கவரி வீசவும் தனது பொன்மயமான தேரிலேறி நல்ல சுபமுகூர்த்தத்தில் நற்சகுனக் காக்ஷியோடு அனேக வேதியர் ஆசி கூறவும், பல சிற்றரசர் அவனைத் தொழுது சூழ்ந்துவரவும், அண்டமுகடுடைபட முரசொலிக்கவும் அச் சேனைகளால் எழுப்பப்பட்ட புழுதியானது ஆகாயத்திற் கிளம்பி

அப்பாலும் செல்வதற்கிடமில்லாமையால் எங்கணும் கவிந்து மூடாதபடி உத்தம யானைகள் சொரிந்த மதநீரிற் கலந்து சேருகிப் பூமியிற்றங்கவும, இப்பெருஞ்சேனைகள் யாவும் பூமியிற் சென்றால் அச்சுமை பொறுக்காது பூமிசலிக்கும் என நினைத்து ஆகாயத்தில் பறப்பனபோல் பாய்ந்து ஓடவும், இளஞ்சூரியனுடைய ஒளியை மறைத்து நிலவொளியை வீசுவனபோல் முத்துக்களாலான வெள்ளைக்குடைகள் எங்கணும் நிழற்றவும் தனது அழகிய நகரைநோக்கிப் புறப்பட்டான்.

தமையந்தி தனது அருமையான பூவையையுங் கிள்ளையையும் தனது தோழியர் எடுத்து வரவும், மற்றும் பலர் அடைப்பை ஆலவட்டம் சாமரை முதலியன எடுத்துத் தன்னைச் சூழ்ந்து வரவும், கணக்கற்ற மாதர் பெண்யானைகளின் மீதேறி இருபுறத்திலும் செல்லவும் ஒரு அழகிய பல்லக்கில் ஏறிச் சென்றாள்.

நளனது அமைசசர் அரசன் புறப்பட்ட செய்தியைத் தூதர்களால் தெரிவித்து நளனது அழகிய நகராகிய மாவிந்த நகரத்தை அலங்கரிக்குமாறு ஏற்பாடு செய்தார்கள். அந்நகரத்தார் களிப்பின் மிகுதியால தமது மாடங்களை அலங்கரித்து மங்கலச் சின்னஙகளமைத்துப் பூலோக அளகையெனச்செய்து தமது அரசனும் அரசியும் வரும் மார்க்கத்தில் வெகுதூரம் சென்று அவர்கள் வரவை அவாவோடு எதிர் பார்த்துக்கொண்டிருநதார்கள். நகரிலிருநத அமைச்சர் முதலாயினேர் அரண்மனையைத் தேவேந்திரன் சபைபோலாக்கிச் சிஙகாரத்தோட்டங்களைச் சீர்படுத்தி அரண்மனைக்குமுன் பந்தரிட்டுப் பல மணிகளாலும் பட்டாடைகளாலும் புஷ்பமாலைகளாலும் அலங்கரித்துப் பூரணகும்பஙகளமைத்து உத்தமவேதியர்களால் உத்தம மநதிரஙகளை ஓதுவித்து, மங்கலவாத்திய முழக்கச்செய்தார்கள். அவ்வமைச்சர்களிற் சிலர் தமது அரசனையும் அரசியையும் எதிர்கொண்டு அழைத்துவர அனேக உத்தம இலக்ஷணங்கள் பொருந்திய பெண்கள் மங்கலத திரவியமும், பூரணகும்பமும், தீபமும், ஏந்திவர வாத்தியமுழங்க, நாட்டியப்பெண்கள் ஆட, பாவலர் கவிபாட, மாகதர் அரசன் புகழ்பாட, யாழ்வல்லோர் யாழின் நரம்

பொலியும் தமது மிடற்றொலியும் வேற்றுமையின்றிக் கந்தரு வரும் நாணும்படிபாட மிகவும் விமரிசையுடன் அரசன் வரும் வழியில் எதிர்சென்று போனார்கள்.

அப்போது அரசனுடைய சேனைகளின் முழக்கத்தையும் முரசொலியையும் வெகுதூரத்துக்கப்பால் கண்ட அந்நகரத்தார் பிரிந்த தாயோடுகூடுங் கன்றைப்போல் மகிழ்ந்து மெய்மறந்து செய்த கரவோசை குரலோசையால் சேனைகளின் முழக்கம் அடங்கிற்று. அவர்களிற் பலர் ஒருவரை ஒருவர் களிப்பின் மிகுதியால் கட்டித்தழுவுவார்; ஒருவர்பேரில் ஒருவர் கையூன்றிக் குதித்தோடுவார். அநேகர் கூட்டமாகக் கூடிக் கூத்தாடுவார். பலர் அரசன் வெற்றியைப் பாடுவார். இவ்வாறு அந்நகரத்தார் களிப்பினால் தாம் செய்வது இன்னதென்றறியாமல் குதூகலத் துடன் எள்விழ இடமில்லாமல் நெருங்கி அரசன் திருமுகத்தைக் காண ஒருவரை ஒருவர் இடித்துத் தள்ளிக்கொண்டு கண்ணிமை யாது நின்றுகொண்டிருக்கையில், கையிற் பொற் பிரம்பு கொண்ட பிரதானிகள் அரசன் தேர்செல்ல வழிவிடும்படி அவர்களை இரு புறத்திலும் விலக்கிக்கொண்டே செல்ல, உதயகிரியில் தோன் றும் இளஞ்சூரியனைப்போல் முன்னிலும் அநேகமடங்கு ஒளி மிகுந்து தனது அழகியதேரில் தம்மையாட்கொள்ள வருகிற தமது ஐங்குரவரும் ஒருருவெடுத்து வந்தாற்போன்ற தமது அரசனைக்கண்டு மனம்பூரித்து அவனது கருணைமழையால் செழித்து அவனது நகைமுகத்தால் பேரின்ப வாழ்வு பெற்றார் போல் பரவசராகிப் பார்த்துக்கொண்டே நின்றார்கள். அப் போது அதுவரையில் தாயில்லாது வருந்திய மக்களைத் தாவித் தேடிவரும் அன்னைபோல் சிவிகையில் அநேக ஸ்திரீ இரத் தினங்களுக்கு மத்தியில் ஒருவிலை மதிக்கப்படாத இரத்தினம் போலவும் அநேக அன்னங்களுக்கு மத்தியில் ஒரு அரச அன் னம் வீற்றிருந்தாற்போலவும் அழகெல்லாம் சேர்ந்து ஒருரு வெடுத்தாற்போலவும் வீற்றுச்சென்ற அரசியைக்கண்டு இந்த இலக்குமியைக் கைக்கொண்ட நமதரசனுக்கு அரியது யாது? நம தரசனுக்குரிய நாயகி இவ்வம்மணி இல்லையாயின் வேறு யார்

தான் உரியவராவார்' என்று தமக்குள்ளே சொல்லிக்கொண்டு அந்நகரத்து மாதரெல்லாம தலைமயந்தியோடும் ஆடவர் யாவரும் நளனேடும் அவர்களை விட்டுப்பிரிய மனம் வராமல் மொய்த்துச் சென்றனர். அரசன் வரவுக்குக் காத்திருந்த அமைச்சர் முதலியோர் அரசனையும் அரசியையும் வணங்கி அவர்களருள் பெற்றுத் தம்மைப்போன்ற மற்ற அமைச்சர்களையும் தழுவிக் களித்து வாத்தியங்கள் முழங்கப் பலவகைச் சின்னங்களும முன்செல்ல எங்கே பார்த்தாலும் கண்ணுக்கினியனவாகச் செய்யப்பட்ட அலங்காரங்களால் விளங்குகின்ற நகரை நோக்கி அரசனேடு சென்றனர்.

தமயந்தி, அந்நகரின் அமைப்பையும் வனப்பையும பார்த்துக்கொண்டே சென்றாள். அம்மாவிந்த நகரம் கடல்போன்ற அகழியாலும் வெண்மேகம்போல் ஆகாயத்தை அளாவி நிற்கும் மதிலாலும சூழப்பட்டு போகவதி யென்னும் நாகலோகத்து நகரம்போல விளங்கிற்று. அந்நகர் அனேக வாயில்களாலும், பருமனிலும உறுதியிலும மந்திரமலைக் கொப்பானதும் ஆயுதங்கள் நிரமபக் காவலோடு கூடியதுமான கோபுரங்களாலும், மேகக்கூட்டத்துக்கொப்பான மாளிகைகளாலும் துலங்கிற்று. அந்நகருக்குள் எங்கே பார்த்தாலும், பயிற்சிக் களங்களும சக்தி ஆயுதங்களும நிறைந்து இருந்தன. அது படைச் சேவகர்கள் காவலுள்ளதுமாய, கூரமையான ஈட்டிகளாலும் பீரங்கிகளாலும் அனேக யந்திர வலைகளாலும இரும்பினுற் செய்யப்பட்ட பெருஞ் சக்கரங்களாலும அலங்கரிக்கப் பட்டதுமாய விளங்கியது. உட்புறத்தில் அழகிய வீதிகளும், அலங்கரிக்கப்பட்ட சதுக்கமும சந்தியும் நிறைந்திருந்தன. அந்நகரைச் சுற்றி கனிகளோடு கூடிய மா, தென்னை, வாழை, பலா முதலியனவும்; கடப்பம், அசோகு, சண்பகம், புன்னை, ஆச்சா, மகிழ், பச்சிலை, தாழை, அரிநெல்லி நாவல், பாதிரி, நீர் நொச்சில், அலரிச்செடி, பாரிஜாதம் முதலிய புஷ்பந்தரும மரஞ்செடிகளும் நிறைந்த சோலைகள் சூழ்ந்திருந்தன. அச்சோலைகளில் அனேக பக்ஷிகள் பாடின. பல வகைக் கொடிப் பந்தல்களும், அழகிய சித்திரசாலைகளும், கண்ணாடிபோல் விளங்குகின்ற பளிங்கு மாடங்களும், செய்குன்று

களும், நீர் நிரம்பிய வாவிகளும், தாமரை நீலோற்பல முதலிய மணந்தரு மலர்களும் அவற்றில தங்கும் அன்னம் நீர்க்காக்கை சக்கரவாகம் முதலிய பக்ஷிகளும், உடைய தடாகங்களும் நிரம்பியிருந்தன. அந்நகரில் அனேகம தாமரை ஓடைகளும் விசாலமான குளங்களும் இருந்தன. அந்நகருக்கருகில் தன்னையடுத்தோர் பாவத்தைப் போக்குவதில் இணையற்றதும் உயர்ந்தோரால் புகழ்பெற்றதும், ஆதியில தன் கரையில் பெரிய பட்டணங்களையும் வியாபார ஸ்தலங்களையும் பூர்வீக அரசர்களுடைய இராஜதானிகளில் பலவற்றையும், ஸ்தாபிக்கத்தக்க பெருமை வாய்ந்ததும், முதல் முதல் அதன் கரையிற்றங்கியவர்களுக்குக் கல்வி அறிவு, ஒழுக்கங்களை விருத்தி செய்து பின்பு எங்கும் பரவச்செய்ததும், தன்னையடுத்தோர் பாவத்தைப்போக்கிப் பரகதிக்கு வழிகாட்டுவதுபோல் அதன் பாழிடங்களைப் பதப்படுத்திப் பக்குவமான கழனியாக்கும் தன்மையுடையதும், இமாலயத்தின் புகழெல்லாம் ஒன்றுகூடி ஒரே வழியாகச் சென்றனபோல் மிக வெண்மையாக என்றும் வற்றாத திவ்விய நீரையுடையதும், பாகீரதி, சானவி என்னும் பல காரணப்பெயர்களையுடையது மாகிய கங்கையென்னும் தெய்வத்தன்மை பொருந்திய நதி அந்நாட்டிலோடிப் புகழ்பெற்றது. அந்நகரத்தில் உத்தம வேதியர்களும், தமதொழுக்கந்தவறாத பல வருணத்தாரும், சத்தியமே இம்மை, மறுமை இரண்டுக்குமுரிய சாதனமாகக் கொண்டு அதைக் காத்தலே விரதமாகக்கொண்டிருந்தனர். பசுக்கள் கணக்கற்றிருந்தன அங்கே முப்பத்திரண்டு தர்மங்களும் குறையாது நடத்தப்பட்டன. குடிகள் முகங்கள் மலர்ந்திருந்தன. துக்கம் என்பது அந்நகரில் எப்பக்கத்திலும் காணப்படவில்லை.

இவ்வளவு பெருமை வாய்ந்த அந்நகரைப் பார்த்துக் கொண்டே தமையந்தி அரண்மனைக்குச் சமீபத்தில் செல்ல நளன் தனது அழகிய தேரைவிட்டிழிந்து பலவகை வாத்தியங்கள் முழங்க வேதியர்கள் பூரணகும்பம் ஏந்திவர அரண்மனைக்குட் செல்வதற்குத் தமையந்தியைச் சிவிகையை விட்டிறக்கி அனேக தோழிமார் சூழத் தன்னோடு அழைத்துக்கொண்டு சங்கந் துந்துபி முத

லியன முழங்கப் பிராமணர்கள் 'ஜய ஜய' என்றொலிக்க, முனிவர்களும் சூதர், மாகதர், வந்தி முதலியோரும் துதி செய்யத் தன் நகரத்தார் மகிழ்ச்சி கூற நளனும் தமயந்தியும் அரண்மனைக்குட் பிரவேசித்துத் திவ்விய ஆசனங்களி லமர்ந்தார்கள். அநேக மாதர்கள் மங்கல ஆலத்தி எடுத்துத் திட்டிகழித்தார்கள். பலர் அரசனையும் அரசியையும் துதித்துப் பாடினர். அநேக சிற்றரசர்களும் மற்றுமுள்ளோரும் செலுத்தி வந்த கப்பம் சில வருஷங்கள் வரையில் நிறுத்தப்பட்டன. சேனைகளைக் காப்போருக்கும் அதிற் சேவித்தோருக்கும் பல மாதச்சம்பளங்கள் இனாமாகக் கொடுக்கப்பட்டன.

இவ்வாறு அரசனும் அரசியும் தமது நாடடைந்து இராச்சிய காரியங்களையும் இல்லறத்தையும் ஒழுங்குபெற நடாத்தி உயிர் ஒன்றும் உடலிரண்டுமாக வாழ்ந்து வந்தார்கள்.

---

# கலிதொடர் காண்டம்.

---

## கலிதோன்று படலம்.

ஈங்கிவ னின்னண மிருப்ப வானிடைப்*
பூங்கழல் விண்ணவர் போதுமேல்வையிற்
றீங்குறு படுபழி தீது சூழ்வர
வாங்கவர் முனகலி யடைந்த தோதுவாம்.

நளன் தன் நகரில் இவ்விதமாக வாழ்ந்து கொண்டிருக்கையில், முன்னே தமயந்தியின் சுயம்வரத்துக்கு வந்திருந்த தேவர்கள் திரும்பித் தம்மூருக்குப் போய்க் கொண்டிருக்கும் போது தமக்கு முன்னே கறுத்த உடலோடும் கொண்டிக் காலோடும் போய்க்கொண்டிருந்த கலியைக் கண்டார்கள். அவர்களில் தேவேந்திரன் அக்கினியை அழைத்து "நீ இவ்வளவு

பரபரட்புடன் எங்ஙனம் செல்கின்றாய்? '' என்று கேட்டான். அதற்குக் கலி தேவேந்திரனை நோக்கித் ''தேவராஜனே! பூவுலகில் வீமராஜன் புத்திரி தமையந்தி என்னும் அழகிற் சிறந்தா ளொருத்திக்குச் சுயம்வரம் நடக்கப் போகிறதென்று இப்போதுதான் கேள்வியுற்றேன். அவளைக் கலியாணம் செய்து கொள்ள வேண்டு மென்னும் அவா மிகுதியால் மிகவும் விரைவாகச் செல்கின்றேன். அதனால் இப்போது தம்மோடு வார்த்தையாட அவகாசமில்லை. இதோ ஒரு நொடியில் போய் அவளைக் கலியாணம் செய்துகொண்டு திரும்பி வருகிறேன். இப்போது தம்முடன் எனக்குச் சற்று நின்றுகூடப் பேச நேர மில்லை. வீணாக என்னைத் தாமதப்படுத்தவேண்டாம். நான் போய் வருகிம்றன். ஆனால் நான் தமையந்தியைக் கலியாணம் செய்துகொண்டு திரும்புவதைத் தவிர எனக்கு அங்கு வேறு ஒரு வேலையுமில்லை. நான் போனால் எனக்கு ஒருவித தடையுமிராது. தமையந்தியும் என்னைப் பார்த்தபிறகு வேறொருவரையும் விரும் பவும் மாட்டாள். என் பேரைக் கேளாதவர்களும் எனக்கு வசப் படாதவர்களும் எவ்வுலகினுமில்லை. அச்சுயம்வரத்துக்கு என்னை பார்க்கிலும் மேலானவர் யார் வந்திருக்கப் போகிறார்கள். ஆகை யால் காலத்திற்போய்க் காரியத்தை முடித்துக்கொண்டு அத் தமையந்தியுடன் நான் சந்தோஷமாய் வரும் காக்ஷியைத் தூம கண்டு களிக்க வேண்டாமா. வீண்காலம் போக்கிவிட்டேன். நான் போய் வருகிறேன், என்று தன் வாயில் வந்தபடி பிதற்றிக் கொண்டு துரிதப்பட்டான்.

இவ்வாறு பைத்தியம் பிடித்தவன்போல் பேசுகிற கலியின் வார்த்தைகளைக் கேட்ட தேவேந்திரன், புன்னகை செய்து கலியை நோக்கி ''தமையந்தியைக் கலியாணம் செய்துகொள் ளத்தானா இவ்வளவு துரிதப்படுகிறாய். இனி அவசரப்படவேண் டியதில்லை. அப்பெண்மணியின் சுயம்வரத்துக்குத்தான் நாங் களும் போய் வருகிறோம். அவள் தனக்கிசைந்த கணவனும் வில்லாளிகளில் வெற்றிமாலை வாய்ந்தவனும் அசுவசாஸ்திரம்

அமைவரக் கற்றவனும் நிடத நாட்டுச் சக்கரவர்த்தியும் பூலோக மன்மதனுமான நளனையே விரும்பிக் கலியாணம் செய்து கொண்டாள். அவனை விரும்பி அச்சுயம்வரத்துக்குப்போன திரிலோக மன்னர்களும் வெட்கித் தலைகுனிந்து தமதிருப்பிடம் சென்றனர். நாங்களும் தம்பதிகளை ஆசீர்வதித்து எமதிருப்பிடத்துக்கேகின்றோம்" என்று சொன்னான்.

தேவேந்திரனது புன்னகையானது திருபுராரியின் நகையைப்போல் கலியின் உள்ளத்தை வெதுப்பக் கண்களில் நெருப்புப்பொறிபறக்கக் கையோடு கையறைந்து பற்களைக் கடித்து அங்குமிங்கும் குதித்துத் திரிலோகங்களையும் தன் தீமையால் அழிக்க எண்ணங்கொண்டவன்போல் மேலுங் கீழுமாகப் பார்த்து "ஒரு அற்பமானிடப் பேதைக்கு அவ்வளவு மனத்துணிவா. ஒன்றுக்கும் பற்றாத ஒரு பெண்பிள்ளைக்கு இவ்வளவு நெஞ்சழுத்தமிருக்குமாயின் ஆண்பிள்ளைக்கு எவ்வளவு இருக்க வேண்டும். தாழ்ந்த மானிடப்பிறவியில் ஒரு சாதாரண சிற்றரசனுக்குப் பெண்ணான அவளை ஒரு பொருளாக மதித்துத் தேவர்கள் விரும்பிச் செல்லுகிறதாம்; அவர்களை அலக்ஷியம் செய்துவிட்டுத் தனக்குப்பிடித்த ஒரு மானிட அரசனை அவள் கலியாணம் செய்துகொள்ளுகிறதாம். என்ன அநியாயம். தேவர்களை இவள் யார் என்று நினைத்தாள். அவர்கள் நினைத்த மாத்திரத்தில் எதையும் ஆக்கவும் அழிக்கவும் வல்லவர்களல்லவா. ஒரு மானிட ஸ்திரீயால் தேவ வகுப்பு இகழப்பட்டதென்றால் நமது பகைவர் நம்மைக்கண்டு ஏளனம் செய்யமாட்டார்களா. கலி என்பவன் தேவர்களில் ஒருவனென்று அவள் நினைக்கவில்லைபோலிருக்கிறது. முப்பது வருஷம் உலகத்தில் வாழ்ந்தவனுமில்லை, முப்பது வருஷம் கெட்டவனுமில்லை, என்னும் பழமொழி ஏற்பட்டது என்னாலல்லவா. அவள் கர்வத்தை அடக்கி அவளைக் கண்கலங்கச் செய்வது எனக்கு ஒரு பெரிய காரியமா. நான் இதுவரையில் அவளை நோக்காதிருந்ததனாலல்லவா பெரிய வாழ்வை அடைந்ததாக நினைத்துக்கொண்டிருக்கிறாள். எனது கடைக்கண்ணால் சற்று நோக்குவேனாயின்

அவளை உலகமும் மதிக்குமா. அறியாமையையுடைய அத் தமையந்தியே நளனை விரும்பினாலும் அந்நளன் தேவர்களிருக்கத் தான் எவ்வாறு அவளை மணக்கத் துணிந்தான். தேவர்கள் அவனுக்குத் தாழ்ந்தவர்களா; வலுவிற் குறைந்தவர்களா. செல் வத்தால் தேய்ந்தவர்களா. நான் அவர்களைச் சும்மாவிடப் போகிறதில்லை. அவ்விருவரும் தமக்கு இணையான தம்பதிகள் யாருமில்லை என்ற கவர்வுகொண்டு சுகமாக வாழக்கருதிய எண் ணத்தைக்கொடுத்து, மேலோரை அசட்டைசெய்து தமதிஷ் டப்படி நடந்த அவ்விருவருடைய களிப்பைக் குறைத்து ஒருவர் போனவழி யொருவர்போகாமல் பிரித்துத் திண்டாடித்தெருவில் நிற்குமாறு செய்யாவிட்டால் நான் கலியல்ல 'கொட்டினால் தேள் கொட்டாவிடில் பிள்ளைப்பூச்சி' என்னும் பூலோகப் பழமொழி பிசகல்ல. இன்னும் அவர்கள் வாழ்வைக்கெடுத்து, நாட்டைப் பறித்துக்கொண்டு, அநாதிகளாக்கிக் காட்டுக்குத்துரத்திக் கண் ணீர் விட்டுக் கதறச்செய்கிறேன். திருமூர்த்திகளும் என் வஞ் சனைக்குப் பயப்படுவார்களென்றால் மானிடர்கள் எனக்கு எம மாத்திரம். கலியின் வஞ்சனையை மாற்றக் கடவுளுமுண்டோ. அந்நளனுக்குத் திருமூர்த்திகளும் உதவிசெய்தாலும் என்னை வெல்பவருமுண்டோ. என் நோக்குக்கு எதிர்ப்பட்டவர்கள் என் வஞ்சனையில் சூழப்படாமல் தப்புவதுமுண்டோ. எனக்கு நட் பானவர்களே என் வஞ்சனையைப் பொறுக்காது வருந்துவாரெ னில் நான் பகைமை பாராட்டுகின்ற அந்நளனு என் வஞ்சனைக் கீடானவன். ஆகட்டும்; இதோ சொல்லுகிறேன். என் சப தத்தை நிறைவேற்றி, அவர்களிருவரும் ஒன்று சேராமல் வருந்திப் பரிதபிப்பதை என் கண்ணால் கண்டுகளிக்காமல் இவ் விண்ணுலகில் அடிவைப்பதில்லை என்று கலி சபதம் செய்தான்.

அந்த உறுதிமொழியைக்கேட்ட தேவேந்திரன் கலியை நோக்கி "நீ வீணாக அவசரப்படாதே. அழகிற் சிறந்த இணை யில்லாத அத்தம்பதிகளைப் பிரித்து வருத்துவதனால் நீ அடை யும் இலாபம் என்ன. அவர்கள் உனக்கிழைத்த தீங்குயாது? யாவரையும் வருத்தும்படியான வல்லமை இருந்தால் அதை

உபயோகிக்கும் விதம் இதுதானு. சாமர்த்தியத்தால் புகழ டையவேண்டுமேயல்லது இகழ்வுறலாமோ. நளன் மற்ற அர சர்களோடு எண்ணத்தக்கவன் அல்லன். அவனைக் கடவுளரும் புகழ்வார்கள். அவன் நாட்டில் தர்மதேவதை மனமகிழ்ந்து வாழும தவிர, யுத்தகளத்தில் அசுசியத்துக்கு எதிர்ப்பட் டோர் யாவரும யானைகளாவர். நீ நாடும இடம அதர்மத்தா லல்லவா இருண்டிருக்கவேணடும். இந்த இடத்தில் தானே உன் ஆணை செலலும. நீ ஒருவருக்கு முன்னின்று உன் வல்ல மையைக் காண்பிப்பது வழக்கமல்லவே. எப்போதும மறைந் திருந்து காரியத்தைச் சாதிக்கும் தன்மையுடைய நீ புகழால வெளுத்திருக்கின்ற நளனுடைய நாட்டில் எங்கு தங்குவாய. அவன உறுதியாகக்கொண்ட சத்தியம் உன்னைத தாக்குமே. மேலும தமயந்தியோ கற்புக்கரசி. அவளும் உனனைப்போலத் தீமைசெயய நினைப்பாளாயின் அனேக கோடி கலியரைத் தன் பதிவிரதாக்கினியால் எரித்துச சாம்பலாக்கும சிறப்புற்றவள். ஆனல் தமயந்தி நளனுக்குத் தான் உரியவளே யன்றி வேறொருவரும் அவளுக்கிணையாகார். மற்றவர் அவளிடத்தில் மனம வைப்பதும் தகாது. தகுதியான காரியத்தில் தலையிடு வது கேவலம் மானிடர்க்கே தகுதியானதன்று; எனில் தேவர் களுக்கழகாகுமோ. அற்ப கீழ்மக்கள்போல, ஐம்பொறிகளின் அவத்தைகளை அடக்க வலாது அதன் வழியே மனதைச்செல்ல விட்டுக் "கண்டதே காக்ஷி கொண்டதே கோலம்" என்ற கொள்கையைக் கைப்பற்றினல் அது தேவ வகுப்பு முழுமைக் கும அழியாப் பழியை உண்டு பண்ணுதா. தமயந்தி நம்மை இகழ்ந்ததாக நினைக்கும்போது மாத்திரம நமது பெருமையை யும் உயர்வையும் நாம் ஞாபகப்படுத்திக்கொள்வதுபோல நாம் நமக்குத் தாழ்ந்தவர்களாகிய மானிடர் தன்மையை அனுசரிக் கும்போது நமக்குரிய பெருமையும் உயர்வுங்கெட்டுத் தாழ்மை யுண்டாகுமே எனபதை நாம் உணரவேண்டாமா. காமிகளின் ஒழுக்கத்தைக் கடவுளர் கைக்கொள்ளலாமோ." என்று சொன்னான்.

அதற்குக் கலி கைகொட்டி நகைத்து நாம் விரும்பிய ஒரு மாதை அடைவதிலும் மேலான தர்மமும இன்பமும் வேறொன்றிருக்கிறதா. அக்காரியம் கைகூடுவதாக இருந்தால் தர்மமும் இரக்கமும் முன்னிற்குமோ எல்லாம் தெரிந்திருந்தும் ஒன்றும அறியாதவர்போல பேசுகிறீரே. எனக்குத தர்மமென்றும் அதாமம என்றும் வித்தியாசங்கூட உண்டா. எனக்கு எல்லாம் ஒன்றுதான். பசுவைக கொல்வேன் பறையனை உயர்த்துவேன், யாகததைக் கெடுப்பேன, மோகத்தை வளர்ப்பேன், அறத்தைத தடுப்பேன், மறததைக் கொடுப்பேன்; வாழ்வைச சிதைப்பேன், தாழ்வை மதிப்பேன், மறையை இகழ்வேன் சுரை(கள்)யைப் புகழ்வேன்; மெய்யை வாட்டுவேன், பொய்யை ஊட்டுவேன், தபத்தை ஒட்டுவேன், விபத்தை பூட்டுவேன். ஆகையால் என் கட்டுரை நிறைவேறும் வழியைத் தேடுவேனேயல்லது இனி யார் சொல்லியபோதிலும் நான் கேட்பவனல்ல. வீண் வார்ததைகளைக் கொட்டுவதில் பயனென்ன எனக்கு வரும் பழியை நீஙகள ஒருவரும் பங்கிட்டுக் கொளளவேணடாம்; போய வாருஙகள்" என்று தேவேந்திரன் முதலிய தேவர்களை நோக்கிச் சொன்னான்.

அதைக்கேட்ட இந்திரன் "நொண்டிக்கு நூற்றெட்டு கர்வம் என்பது சரியாக இருக்கிறது. இவனிடத்தில் தர்மசாஸ்திரம் பேசினால் அதை அதர்மமாக்குவான். அற்பர்களுக்குப் புத்தி சொல்லப்புகுந்தால் அவமானம் நேரிடுமே யன்றி அதன் பயனை அறியமாட்டார் குறைக் கொள்ளிபோலும் நிறத்தை யுடைய இவனுக்கும் தமையந்திக்கும் எந்த விதத்தில் ஒற்றுமை அலர்ந்த செந்தாமரையைக் காக்கை விரும்புவதுண்டா; விரும்பினும் உலகம் பழிக்காதா. ஆனால் எப்படிப்பட்டவர்களுக்கும் தம் நிலைமையும் குற்றமும் உணர்ந்து நடப்பது சாத்தியமான காரியமன்று போலும் பழி பாவத்துக்கஞ்சாத பாவி அவ்வழகிய தம்பதிகளுக் கிடையூறு செய்ய எண்ணங்கொண்டானே. அத்தமையந்தி இவனைச்சபிக்கமாட்டாளோ. அச்சாபம் இவனைப் பற்றாதொழியுமோ. ஆனால் ஆயிரந்தேள் கொட்டிய விடத்தில்

ஒரு கட்டை எறும்பு கடித்தால் கடுக்குமோ என்பதுபோலச் சாபத்தையே தான் செய்யுங் காரியங்களுக்கு வெகுமதியாகக் கொண்டு அதனால் காயத்துத் தழும்பிட்டுக் கறுத்த தேகத்தை யுடைய இச்சனிக்குத் தமயந்தி சாபம் ஒரு கற்கண்டுக்கட்டி. மூர்க்கரோடு பழகுவதும் அவரைத் திருத்த முயலுவதும் மூதறிஞர் கொள்கையன்று." என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டு மற்றத் தேவர்களோடு தன்னுலகம் சென்றான்.

கலி தன்னுடலைப் பார்க்கிலும் பதின்மடங்கு கறுத்த மனமுடையவனாய அவ்விடத்தை விட்டு நீங்கி மிகவும் விரைவாக நிடதநாட்டை யடைந்து அதனுட்புக எத்தனிக்கையில் அந்நாட்டில் இடைவிடாது பொருள் நிலம் நாடு முதலியவற்றை வேதியர்க்குத் தாரை வார்த்துக்கொடுக்கும் நீரின் பெருக்கை நீந்திச் செல்ல லாதெனக் கண்டான். பின்பும் எத்தனிக்கையில் அந்நாட்டில் வேதியர்கள் தேவர்கள் விரும்பும்படியான யாகங்களைச் செய்து அரிய வேத மந்திரங்களை நாவார உச்சரிப்பதைக் கண்டு அவன் கால் பெயராது நின்றான். ஆயினும் ஒரு தினையளவாயினும் தீமை செய்யப் படுமாயின் அதையே துணையாகக் கொண்டு அந்நகரினுட் புகுந்து நளனைப் பற்றலாமென எண்ணங் கொண்டு காத்து நிற்கையில் அந்நகரில் ஒன்றாவது வேத விதிக்கும், அற நெறிக்கும், சத்தியத்துக்கும் மாறாகக் காணப்படவில்லை. வீடுகள் தோறும் கற்புடைய மாதர் கூட்டமும், வீதிகளில் தேவர்களுக்குச்செய்யும் திருவிழாச் சிறப்பும் காடுகளில் ஐந்தவித்த யோகியர் கூட்டமும் நிறைந்திருந்தன. அரசனிடத்தில் தானம், பெருங் கொடை, அமைதி, அன்பு, உண்மை, வெற்றி, புலனடக்கல், பரிசுத்தம் முதலியன நிறைந்திருந்தமையால் குடிகளும் பொறாமை, பொச்சாப்பு, ஆணவம், செற்றம் முதலியன நீங்கியவர்களாய்த் தருமத்தை அனுசரித்து நோயற்றுக் கொலை, சிறை முதலியன நீங்கி ஐவகைப்பகையும் ஒழிந்து பாபம் விண்டு இனிய வார்த்தையும் தர்மசிந்தனையும் உடையவராயிருந்தனர். மழையைக் கடவுளும் காலத்தில் பெய்வித்ததால் பயிர்கள் பூச்சிகளாலும் நோயினாலும் வருந்தாது செழித்தோங்கின. அந்நாட்டில் திருடர்

களும் அவர்களுக்குரிய தண்டனையும இல்லை. பலம் பொருந்திய பால் பசுக்களும் நிறைந்திருந்தன.

இவற்றைக் கண்ட கலி மதிகலங்கித் தான் தேவர்களிடத்தில் செய்துவந்த கட்டுரை பழுதுபடுமோ என வருந்தி,

இந்நகர் வரைப்பில் யாண்டு மெய்துதற் கரிதென் றெண்ணிச்
சென்னி வான்றடவு தெய்வச் செழுமலர்ச் சோலை புக்கு
மன்னவ னிழைக்குந் தீமை யாதென மனத்தி னோர்ந்து
துன்னருந் தான்றி மீதிற் சூழ்ச்சியோ டிருக்கு நாளில்

நளனிடத்தில ஒரு குற்றமாவது எப்போது காணப்படும் என்று அதே கவலையாக அங்குள்ள தான்றி மரத்தில தங்கியிருந்தான்.

உலகில் பிறரைக் கெடுக்க நினைப்பவா நிற்க நிழலற்று படுக்க பாயற்றுக் கட்டக் கந்தையற்று குடிக்கக் கஞ்சியுமற்றுத தாமே முதலில் கேடுறுவர் என்பதற்குச சரியாகக கலி நளனைக் கெடுக்க எண்ணங்கொண்ட அந்தக்ஷணமே தேவர்களாலிகழ்ச்சி யடைந்து பொன்னுலக வாழ்க்கை நீங்கி மண்ணுலகிலும கால் வைக்ககூட இடமில்லாமல் மரத்தோடு மரமாய மறைந்து நிற்றலுமாகிய செயலைக் கேட்டும் பிறரைக் கெடுக்க முயலுவோர் மக்களெனப் படுவரோ.

கலியின் செயல் இவ்வாறிருக்க, நளன தன்னகரில் தர்மந் தவறாது அரசு செய்து வருகையில இளவேனிற்காலம் தொடங்கிற்று. சூரியனும வடாக்கம் திரும்பினன். மிருதுவான தென்றற் காற்று வீச ஆரமபித்தது. முல்லைகள் அரும்பின. குவளைகள் மலர்ந்தன. மாந்தளிர்கள் மனதுக்கினிய நிறத்தோடு இளந் தென்றலால் அசைக்கப்பட்டுக் கொததுக்கொத்தாய்த் தொங்கிக் கண்ணுக்கினிய காக்ஷியை உண்டு பண்ணின. சோலைகளெல்லாம் மலர்களாலும பூங்கொத்துகளாலும் நிறைந்து தேனைச் சொரிந்தன. அத்தேனையுண்டு களிப்படைந்த வண்டுகள் களிப்

பல்லுகைப் பண்கள் பாடின. கிள்ளைகள் மென் குதலையோடு பேசின. குயில்களினிய குரலோடு பாடின. வசந்த காலத்தையே நாடித் திரியும் பக்ஷிகள் அங்குற்றன. தரையில் சிறு புற்கள் முளைத்துப் பசுமையுற்றன. சோலைகளினிடமெல்லாம் புஷ்பங்களினின்று திரும மகரந்தத்தால் பொன்னுடை விரித்தாற் போன்றிருந்தன.

இவ்விளவேனிற் காலத்தில் அந்நகரமாந்தர் அங்குள்ள அழகிய சோலைக்குச் சென்று அதன் வனப்பைக் கண்டு களித்துத் தமது சுற்றத்தோடு போது போக்கினார்கள். கற்புடைய மங்கையர் தமது நடைக்கும், சாயலுக்கும் குரலுக்கும் குதலை மொழிக்கும் தோற்றுக் காட்டுக்கோடிய அன்னம் மயில் குயில் கிளிகள் முதலியவற்றைத் துரத்தியும் தமது பல் வரிசைக் கிணையாகாத முல்லையரும்புகளைப் பறித்தும் விளையாடிக் கொண்டிருந்தனர். ஆடவரிற் பலர் மரங்களிலுள்ள மலர்களைப் பறித்து மாலையாகவும் செண்டாகவும் கட்டுவார்கள். அம்மாலைகளை ஒருவர் கழுத்திலொருவர் அணிவார்கள். செண்டுகளைக் காதில் சொருகுவார்கள். உருண்டையான கடப்ப மலர்களைப் பறித்துப் பந்துபோல் ஒருவர்பேரிலொருவர் எறிந்து விளையாடுவார்கள். பூக்காத அசோகு மஞ்சாடிமரம், குராமரம் முதலியன அவ்வுத்தமப் பெண்கள் மிதித்தலாலும் நோக்கலாலும் புல்லலாலும் பூத்து விளங்கின. குராமரங்களின் புஷ்பங்களைப் பறித்துப் பாவைபோல வைத்து விளையாடி அவைகளுக்கு மாலைசூட்டி மணவிழா நடத்துவார்கள். மற்ற மாந்தரும் ஒருவர் கழுத்திலணிந்திருந்த மலர்மாலையை அவருக்குத் தெரியாதெடுத்துத் தாம் அணிந்துகொண்டும் தமது காதிலிருந்த சிறுமலர்ச செண்டை மற்றவர் காதில் சொருகியும், அவர்கள் திரும்பிப் பார்க்கையில் கைகொட்டிச் சிரித்தும விளையாடுவார்கள்.

இவ்விளவேனிற் காலத்தில் அரசனும் அரசியும் கற்பகக் காவைப்போன்ற தமது சிங்காரத் தோட்டத்துக்குச் சென்று அதன் அழகைக் கண்டு வியந்து தம்மனதுக்கினிய புஷ்பங்களைப் பறித்து விளையாடிக்கொண்டிருந்தனர். அனேகர் பல

நிறமுள்ள புஷ்பங்களைப் பலமாலைகளாகக் கட்டி அரசனிடத்தில் கொண்டுவந்து வைப்பார்கள். பல மலர்களின் மணமெல்லாம் ஒன்றுகூடிப் புதிய இனிய மணத்தோடு அங்குற்றோர் யாவரையும் மகிழ்வித்தன.

இவ்வாறு மலர் கொய்து விளையாடியபின் யாவரும் அச்சோலையிலுள்ள பல தடாகங்களிலும் விளையாடுவதற்குச் சிவிறி முதலிய நீரிறைக்குங் கருவிகளோடு தண்ணீரிலிறங்கித் தண்ணீரைக் கையாலும் சிவிறியாலும் வாரி இறைப்பார்கள். புஷ்பங்களைப் பறித்தெறிவார்கள். ஓரிடத்தில் மூழ்கி மற்றோரிடத்தில் போய்க் கிளம்புவார்கள்.

இவ்வாறே அரசனும் அரசியும் புனல் விளையாடிப் போது போக்கி அங்குள்ள பளிங்குமாடத்தை அடைந்து பொன்னுடைகள் உடுத்திக் களித்திருந்தார்கள். மற்றவர்களும் அவர் மனஞ்சென்றவாறு புனலாடிக் களித்தனர்.

## சூதாடு படலம்.

இவ்வாறு இளவேனிற் காலத்தையும் மற்றப் பருவங்களையும் அவற்றிற் குரியவாறு சந்தோஷமாகக் கழித்து இன்ப சாகரத்தில் மூழ்கியவராய் வாழ்ந்துவரும் நாளில் தமயந்தி கருப்பம் உற்றாள். நாளுக்கு நாள் தாமரைபோன்ற முகம் வாடி உதடு வெளுத்து, தோள்கள் சோர்ந்து, காணப்படாத இடை பருத்து, புளிப்பே அக்காலத்துக்குரிய சுவையாகக் கொண்டாள். இவ்வித குறிகளோடு முந்நூறுநாள் நிரம்பியவுடன் இளஞ்சூரியனைப்போல் ஓராண்மகவைப் பெற்றாள். அரசன் மிக்க மகிழ்ச்சியுற்றுப் பிராமணர்களுக்குப் பலவகைத் தானங்கள் கொடுத்துத் தேவாலயங்களில் திருவிழா நடாத்திப் பிள்ளைக்கு நாமகரணம், சாதகருமம் முதலியனவுஞ் செய்வித்து அக்குழந்தையை மிகவும் அன்புடன் வளர்த்துவந்தான். அக்குழந்தை

வளர்பிறைச் சந்திரன்போல் நாளுக்குநாள் விருத்தியடைந்து வரு
கையில் அக்குழவிக்கு ஆண்டுநிறைவு, ஆயுள்ஹோமம், அன்னப்
பிராசனம், சௌளம் முதலியனவுஞ் செய்து நாளொருமேனியும்
பொழுதொரு வண்ணமுமாகப் பெற்றோர் வளர்த்துவந்தார்கள்.
சிலகாலங் கழிந்தபின் தமயந்தி ஒரு பெண்மகவையும்பெற்றாள்.
இவ்விரு குழந்தைகளையும், நளனும் தமயந்தியும் தமது இரு
கண்கள்போலப் பாதுகாத்து அக்குழந்தைகளை யலங்கரித்துக் கண்
ணுற்கண்டும், பாலநாறும்வாயில் முத்தமிட்டும் உச்சிமோந்தும்,
அவர்கள் மிருதுவான உடலைத்தடவியும், குழலினும் யாழினும்
இனிமையான அவர்கள் சொல்லைக்கேட்டும், தாலப்பருவமுதல்
சிற்றில்சிதைத்தல் அம்மானையாடல் முதலிய பருவம்வரை அக்
குழந்தைகளின் கபடமற்ற விளையாட்டுகளைக்கேட்டும் பரவசமாகி
யும் உலகத்தில் எவ்வகைச் செல்வங்களையும் பெற்றோர் எல்லாரி
லும் தாமே முதன்மையானவர்களாகக் கருதி மேன்மேலும் மகிழ்
சிறக்க வாழ்ந்து வந்தனர்.

நிழலுமிழ்ந் துதிரங்காலும் வயிரவா ணிட்டதர் கோமா
னெழுபுவி வேந்தர்யாரு மிடுதிரைகோணாந்தேஞ் ஞான்றும்
தொழுதன ரேத்திநிற்பத் தொடுகட லுடுத்த ஞால
முழுவது மொருகோலோச்சி முறைவழா தளித்தா னன்றே.

இவ்வாறு நளன் தனக்குட்பட்ட சிற்றரசர்கள் தனக்குரிய
கப்பத்தைத் தவறாது செலுத்திக் கைகட்டி வாய்புதைத்து
நிற்பக் கடலாற் சூழப்பட்ட பூமிமுழுதும் அறநெறி பிறழா
மலும் மனுமுறை கோணாமலும் ஒருகுடைக் கீழாண்டு வந்தான்.

ஆயினும், "ஊழிற் பெருவலி யாவுள. மற்றொன்று சூழினுந்
தான் முந்துறும்" என்றபடி, நளன் முன் செய்த தீவினைப்பயனோ,
கிட்டத்தார் செய்த பாவமோ, தமயந்தி நோற்ற தவக்
குறையோ, பூமிதேவிக்கு அஷ்டமத்தில் சனியோ, தேவர்கள்
யாக உணவின்றித் தவிக்குங் காலமோ, தர்மம் மங்கி அதர்மம்
பொங்குங் காலமோ, செங்கோல் குனிந்து கொடுங்கோல் ஓங

குங் காலமோ, பன்னிரண்டு வருஷங்கள் வரையில் நிடத நாட்டில் அடிவைக்கக்கூட இடம் பெறாமல் தவித்த சனிபக வான் நளனை அணுகித் தன் எண்ணத்தைப் பூர்த்திசெய்து கொள்ள உதவியது. எக்காரியத்தையும் குறைவறச் செய்யும் தன்மையுடைய பரிசுத்தம் பொருந்திய புருஷோத்தமனை நளன் ‘கேடுவரும் பின்னே மதிகெட்டு வரும் முன்னே’ என்ற படி ஒருநாள் மாலைக்காலத்தில்,

சந்திசெய்த் தாள்விளக்கத் தாளின்மறுத் தான்கண்டு
புந்திமகிழ்ப் புகுந்துகலி—சிந்தையெல்லாம்
தன்வயமே யாக்கித் தமைய னுடனிருந்தான்
பொன்னசல மார்பற் புகைந்து.

சந்திசெய்ய பாதத்தைச் சுத்தி செய்ததில் ஓரிடத்தில் ஜலம் படாமையால் அதுவே அவனிடத்துண்டான போதுமான குற்றமெனக் கொண்டு சனி மனமகிழ்ச்சியடைந்து அவனைப் பற்றி அவனிழல்போல் அவனைவிடாது தொடர்ந்து அவனைத் தன் வசப்படுத்தி அவன் அறிவை மயக்கித் தன் எண்ணப் படியே அவன் புத்தி செல்லுமாறு செய்து, பிறகு அவனுடைய நாடு நகரமுதலியவெல்லாம் அவனிடத்தினின்று பறிக்கும் உபா யம் என்னவென்று ஆலோசிக்கத் தொடங்கினான்.

‘தர்ம நெறிதவறாமல் நளனைவெல்ல எவராலும் ஆகாது. யுத்தத்தில் அவனைப் புறங்காட்டவல்லவர் யாருமில்லை. ஆகை யால் இவனை வஞ்சனையால் வென்று இவனை நாட்டைவிட்டுத் துரத்தவேண்டுமேயல்லது அதனினும் சிறந்த உபாயம் வேறொன் றுமில்லை. இக்காரியத்துக்கு உதவிசெய்யக் கூடியவர் யாவர்’ எனச் சனி யோசித்தான்.

நளனுக்குத் தாயாதியான ஒரு சகோதரனிருந்தான். அவன் பெயர் புட்கரன். அவன் ஒரு சிற்றரசன்; மிகவும் கொடியவன்; நளனுடைய வாழ்விலும் செல்வத்திலும் பொறாமைகொண்ட வன். இவனுடைய ஞாபகம் கலிக்குத் தோற்றியவுடன் தன் காரியம் நிறைவேறியதெனக் களித்து அவனிடத்தில் சென்று

அவனுடைய சிறுமையுற்ற வாழ்வில் அனுதாபங்கொண்டவன் போல நடித்து அவனை அழைத்துப் பின்வருமாறு சொல்லலுற்றான். "ஓ புட்கர ராஜனே, உன்னுடைய பொறுமையையும் அடக்கத்தையும் கேள்விப்பட்டு உன்னைப் பார்க்கவேண்டுமென்ற எண்ணங்கொண்டு வெகு தூரத்திலிருந்து வருகிறேன். உன்னைப்போல உள்ளதைக்கொண்டு திருப்தி அடைகிறவர்கள் ஒருவரையும் நான் கண்டதில்லை. அந்தப் பக்குவம் எவருக்கும் எளிதில் கிடைக்காது. சில அரசர்கள் பேராசையென்னும் பிசாசு பிடித்துத் தம்மிடத்து எவ்வளவு விசாலமான பூமியும் செல்வமும் இருந்தாலும் மேன்மேலும் மற்ற அரசர்கள் தலையில் கையை வைத்துச் சமயம் வாய்க்கும்போது அதர்ம யுத்தமும் செய்து அவர்களுடையனவெல்லாம் தம்முடையனவாக்கி அதனால் தலைமையுற்றுத் தலைதெரியாது செருக்கடைந்து தருக்கி வாழ்கிறார்கள். இவ்வாழ்வு எத்தனை நாளைக்கு நிற்கும். முடிசாய்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் இப்புவிதனில் பிடி சாம்பலாய்ப் போகிறாரேயன்றித் தமது வல்லமையையும் இராஜரீகமும் செல்வப்பெருக்கத்தையும் காண்பித்துத் தம்மேற் சீறிக்கொண்டுவரும் யமனைச் சற்றுத் தடுப்பவராரும் இல்லை. இவ்வுண்மையைக்கண்டறிந்த நீ உனக்குரியதேயதிகமெனநினைத்து அவாவொழிந்து ஆனந்தவாழ்வையுற்றாய். ஆயினும் பொருளிலார்க்கு இவ்வுலகத்திலடையும் பயன் யாதுமில்லை. இவ்வுலகில் அடையக்கூடிய அறம், பொருள், இன்பம் என்ற மூன்றனுள், பொருளால் அதற்கிருபுறத்திலுமுள்ள அறத்தையும் இன்பத்தையும் அடைய வேண்டும். அது இல்லையாயின் மற்ற இரண்டும் இல்லை என்பதை அறிவிக்கும் பொருட்டே அறம் இன்பம் என்னும் இரண்டிற்கும் இடையே பொருள் என்னும் சொல் வைக்கப்பட்டிருக்கிறது. பொருளில்லாதவனை ஒரு பொருளாக மதிப்பதில்லை. பொருளே இழிகுலத்தவனை உயர்குலத்தவனாகவும், கல்லாதவனைக் கற்றறிந்தவனாகவும், குருடனைத் தாமரைக் கண்ணனாகவும், உலோபியை உத்தமக் கொடையாளியாகவும், அழகிலாதவனை அழகிற் சிறந்த மன்மதனாகவும், மந்தனை அறிவிற் சிறந்த மந்திரியாகவும், பாபத்தை அணிகலனாகக் கொண்ட

பாவியைத் தருமமூர்த்தியாகவும், நன்மையைத் தீமையாகவும், தீமையை நன்மையாகவும், நாயினுங் கடையனை நாயகனாகவும், மெய்யைப் பொய்யாகவும், பொய்யை மெய்யாகவும் செய்ய வல்லது. அஃதில்லார் எத்துணைச் சிறப்புடையராயினும், நல்லொழுக்கத்துக்கு வரம்பானவராயினும், கல்வி கேள்விகளிற் கரை கண்டவராயினும், அறிவிற் சிறந்தவராயினும் அவர்களை யாரும் மதியார்கள். அவர்கள் சொல் வேப்பங் காயாகும். அவர்களுடைய நற்குணம் கிணற்றுக்குள் வைத்த விளக்கு போலாகும்.

ஆகையால் இத்துணைப் பெருமை வாய்ந்த பொருளை உலக வாழ்வைநச்சி இருப்பவர் வெறுப்பது மதியீனம். 'திரை கடலோடியுந் திரவியந்தேடு' என்று சொல்லப்பட்டிருக்கிறது யாவருக்கும் நிதரிசனம். அரசனே, நீ எவ்வளவோ பெருமையடைய வேண்டியிருக்க அவற்றைக் கவனியாது இந்நிலைமையிலிருப்பதைப் பார்க்கப்பார்க்க என் மனம் பதைக்கிறது. நீ நளனுக்குச் சகோதரமுறையுள்ளவனல்லவா? நளன் சக்கரவர்த்தியாகி இவ்வெழுபுவியிலுள்ள மன்னர் யாவரும் தமது முடிகள் அவன்காலிற்பட வணங்கவும் நீ அச்சிற்றரசர்களில் ஒருவனாகவிருந்து அவனுக்குட்பட்டு வாழவும் யாரிட்டசாபமோ! நீ செய்தபாபமோ! உனக்கு உன்னத வாழ்வையடைவதில் யாதேனும் லோபமோ! அயலாரை வருத்தலாகாதென்னும் அனுதாபமோ, நளனைத் தாக்குவது யாராலும் ஆகாதென அயலார் உனக்குட்போட்ட தூபமோ. அல்லது நளன் உன் குலத்துக்குத் தீபமோ. உன்னைச் சகோதரனென மதியாது சிற்றரசர்களிலும் மிகத் தாழ்ந்தவனாகக் கருதிச் செருக்கி வாழ்கின்றானே. அவனைப் பார்த்துவிட்டு உன்னைப் பார்த்தால் நளனுடைய சகோதரனென்றும் சொல்லுவார்களோ. உலகத்தில் அற்பர்களுக்குப் பவிஷு வந்தால் தமது மாதா பிதா சகோதரர் முதலிய சுற்றத்தாரைத் தமக்குரியாரெனச் சொல்லிக்கொண்டால் தமது கௌரவம் குறையுமெனத் தாமே நினைத்துக்கொண்டு கர்வத்தால் அவர்களுக்குரிய மரியாதையையும் செய்ய வேண்டிய கடமையையும் கைவிட்டுச் சாதாரண வேலைக்காரர்கள்போல் நடத்துவதன்றிப் பிறர் கேட்டாலும் அவ்வாறே சொல்

னுவதுபோல, நளனை உன்னைப்பற்றிக் கேட்டால் தனது சிற்றர சனாகத் தெரிவிக்கிறானே யல்லது சகோதரனென்று சொல்லு வதே இல்லை. இவ்வார்த்தையைக் கேட்கும்போது உனக்கு எப்படி இருக்கிறதோ; அது எனக்குத் தெரியாது. ஆனால் என் வயிறு கொதிக்கின்றது. உலகில் மனிதர்கள் தம் நிலைமை கெடுவது சகஜம். அவர்களைப் பார்த்து பரிதாபப்படவேண்டுமே யல்லது பரிகாசமாவது அலக்ஷியமாவது செய்யக்கூடாது. செல் வம் யாரிடத்தில் நிலைத்திருக்கும். அது வண்டி உருளைபோல் ஓடிக்கொண்டே இருக்கும் தன்மையுடையதல்லவா. அதையறி யாத நளன் தன் மார்பைப்பார்த்துக்கொண்டு அகங்கரித்துத் தலை கால் தெரியாமல் நிற்பதும் அவனை நாயகனாக அடைந்ததனாலே தமயந்தி தனக்கு மிஞ்சினவர்கள் யாருமில்லையெனத் தலை கொழுத்துத் திரிவதும் கண்ணாற் கண்டு பொறுக்கத்தக்கன வல்ல. இந்த நளன் இருக்கும் தானத்தில் நீ இருந்தால் அந்த மகிமையும் அந்த அழகும் வேறுதான். அப்படிப்பட்ட இடத்தை உன்னைப்போன்றவர்கள் அடைய வேண்டுமேயல்லது நளனைப் போன்ற கன்றுக்குட்டிகளா அடைவது தகுதி. ஒரு நாழிகை யாவது உன்னை அவனுடைய சிம்மாசனத்தில் வைத்து அவனை வணங்கும்படியாகச் செய்த அரசரெல்லாம் உன்னை வணங்கும் படியாகச் செய்து, அவனுக்களிக்கும் திறையை உனக்களிக்கப் பணித்து, அவன் செல்வமெல்லாம் நீ கைக்கொண்டு அவனது விசாலமான பூமி முழுதும் நீ செங்கோல் நடாத்துவதைக் கண் ணால் காணவேண்டும் என்ற அவா என்னை இடைவிடாது தூண் டுகிறது. ஆனால் இவ்வாழ்வை நீ அடையவேண்டுமென்று நினை தால் உனக்கு இது அருமையான காரியம் அல்ல. உன் வல லமை உனக்குத் தெரியவில்லை. எனக்கு நன்றாகத் தெரியும். என் மனமும் சாமானியர்களிடத்தில் செல்லாது. எனக்கு இரக் கம் உண்டாவது அபூர்வம். இரக்கம் உண்டாகிவிட்டால் அவ் விரக்கத்துக் குரியவர்கள் நல்ல நிலைமை அடைந்து விட்டார்க ளென்றே சொல்லலாம். அதைப் பற்றித் தினையளவு சந்தேக மும் வேண்டுவதில்லை. நான் பொய் பேசமாட்டேன். ஒரு வேளை அதைரியப்பட்டாலும் நான் கூடவே இருந்து அவர்க

னுக்கு அக்காரியத்தை முடித்து வைத்துவிட்டுத்தான் மறு காரியம் பார்ப்பேன். என்னைப்பற்றி நீ பின்னால் நன்றாக அறிவாய். உன் எண்ணம் எப்படியோ. உதவி செய்பவர் எவ்வளவு வலிமைசாலியாக இருந்தாலும் முன்னிற்பவர் எண்ணம் தெரிந்து கொண்டல்லவா தொடங்கவேண்டும். உன் மனதை எனக்கு மறைக்காமல் என்னை உனக்கு நல்வழி காட்ட வந்த நாயகனென உறுதியாகக் கொண்டு தெரிவித்தால மேலே நடக்கவேண்டிய காரியங்களுக்கு ஆகவேண்டியதைச்சொல்லுகிறேன்'' என்றான்.

அதற்குப் புட்கரன் ''ஐய, நீர் சொல்லுவதெல்லாம உண்மையே. எனக்கும் பொருளில் வெறுப்பில்லை. அது கிட்டாமையால்தான் வெறுப்புற்றவன் போலிருக்கிறேன். நளனுடைய வாழ்வைக் காதால் கூடக் கேட்க என் மனம் பொறுப்பதில்லை. அவனைப்போல் ஒரு நாளாவது வாழமாட்டேனே என்ற ஏக்கமே அதிகமாக இருக்கிறது. அதற்கென்ன செய்வது. முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்படுவதுபோல் நான் நளனது வாழ்வை அடைய விரும்புகிறேன். அது எவ்வாறு கைக்கூடும். நான் ஒரு அற்பச சிற்றரசன். அவன வலிமைக்கும் என் வலிமைக்கும் உவமையே இல்லை: நான் நளனை எதிர்த்து ஜயமடைவதென்றால் மின்மினி சூரியன் ஒளியை மறைக்கும; பூனை பாற்கடலை முற்றுங்குடிக்கும; எறும்பு கடலைக் கடக்கும்; வானத்தை வில்லாக வளைக்கலாம; மணலைக கயிறாகத்திரிக்கலாம். மேலும் நளனென்றால் எல்லாருக்கும அச்சம். அவனுக்கு விரோதமாக எனக்கு உதவிசெய்ய எவரும் முன்னுக்கு வாரார். அவனை வெல்வதற்கு யாராலும் ஏலாது. இந்தத் தமையந்தி நளனுக்குச் சுயம்வரமண்டபத்தில் மாலை சூட்டியவுடன் அங்குற்ற அரசர்கள் யாவரும் ஒரே முகமாக நளனை எதிர்த்தபோது நளன் தனிமையாக நின்று அவர்கள் யாவரையும் புறமுதுகிட்டோடச் செய்தானே. அதனாலேயே அவன் தோள் வலி இவ்வளவினையுடையதென்பது விளங்கவில்லையா. யுத்த களத்தில் நளன் வில்லைப்பிடித்து நின்றால் அப்போது அவனைக்கண்ட தேவர்களும் கலங்குவார்களே. அவன் வலியை நான் நன்றாக அறிந்திருந்தும் அவனோடெதிர்ப்பேனோ'' என்றனன்.

"அது விஷயமாய என்னைத் தட்டிக்கொடுப்பவர் யாவராயினும் அவர் வார்த்தைக்கிணங்கமாட்டேன். ஒருகால், அவர் வார்த்தைக்கிணங்கி நளனைப் பகைத்துக் கொள்வேனாயினே இப்போது எனக்குரிய சிறியநாடும் போய நான் ஆண்டியாகத் திரியவேண்டுமேயல்லது வேறுவழியில்லை. ஏதோ இப்பிறவியில் அவனைப் போல வாழ்வதற்கு முற்பிறவியில் போதுமான புண்ணியம் செய்யவில்லையென்று மனதை ஒருவாறு திடப்படுத்திக் கொள்ள வேண்டுமேயன்றி வீணாக ஆகாதவிஷயத்தில் ஆசைவைத்து மனதைப்புண்ணாக்கிக் கொள்வதிற் பயனென்ன? ஆனால் எவ்வளவு செல்வப் பெருக்குடையரோனும் நளனைப்போல் அவ்வளவு கர்வம் அடையக்கூடாது. நீர் சொல்வது போலவே நளன் தமையந்தியைக் கலியாணம் செய்துகொண்டபிறகு தலைகால் தெரியாமல் தான் திரிகிறான்" என்று பின்னும் புட்கரன் சொன்னான்.

அதைக் கேட்ட கலி "புட்கர ராஜனே, நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். நளனை வெல்லுங் காரியம் உன்னைச் சார்ந்ததல்ல. அது முற்றிலும் என்னைச் சார்ந்தது. நான் நளனை நாட்டைவிட்டுத் துரத்தவேண்டியது. நீ அவன் செல்வமெல்லாம் கைக்கொண்டு தேவேந்திரன்போல் சுகமடைய வேண்டியது. அரசர்களை வெல்ல வேண்டுமானால் யுத்தம் செய்துதான் வெல்ல வேண்டும் என்பதில்லை. அனேக தந்திரங்கள் இருக்கின்றன. அதில் ஒன்று உனக்குத் தெரியும். அதாவது சூதாட்டம். அதில் உன்னை வெல்பவருண்டோ? அவ்வலிமையைக்கொண்டு நளனை நிச்சயமாக வெல்லலாம்" என்றான்.

புட்கரன் "ஐயா, தாம் சொல்லுவது உண்மையே. நளன் சத்தியநெறியினின்றும் தவறாதவன் போலவும், வேத விதியினின்றும் விலகாதவன் போலவும், பாசாங்கு செய்கின்றானே. அப்பாசாங்கைத் தனக்குதவியாக வைத்துக்கொண்டு 'சூதாடல் உயர்ந்தோரால் விலக்கப்பட்டதால் நான் அக்காய்களைக் கையாலும் தொடமாட்டேன்' என்று நளன் சொல்லி மறுத்தால் நான் செய்வதென்ன விருக்கிறது. அதிலிருந்து பகைமை விளையுமே.

அப்பகையை ஒழிக்க என்னால் ஏலுமோ, சூதாலேதற் குட்பட்டா லல்லவோ எனது வல்லமையைக் காண்பிப்பேன். அவன் சூதாட்டத்தில் என்னை வெல்லமாட்டானென்பது எனக்கு நிச்சயமாய்த் தெரியும். எனக்கு நல்ல காலமிருந்தால் நான் ஏனிந்த நிலைமையிலிருக்கிறேன்" என்றான்.

கலி "இந்த அற்ப காரியத்துக்குத் தானா இவ்வளவு நாள் மௌனமாயிருந்தாய். உனக்கும் உலக வாழ்க்கைக்கும் வெகு தூரம். நீ பேசுவதைப் பார்த்தால் உலகந் தெரிந்தவனாகவே தோற்றவில்லை. உலகந் தெரிவதென்றால் சுருக்கமாகச் சொல்லுகிறேன்; நீ கேட்டுக்கொள். என்னைப்போல உனக்கு இதனை அருளோடு போதிப்பவர்கள் ஒருவரும் கிடைக்கமாட்டார்கள். என்னைப் போன்றவர்களுக்குத்தான் அது தெரியுமே யல்லாது வேறு யாருக்கும் தெரியாது. நீ என்னை நம்பி உன் மனத்தில் உள்ளவற்றை ஒளிக்காமல் சொன்னபடியினாலே எனக்கு உன்னை எப்படியாவது கடைத்தேறச் செய்ய வேண்டுமென்ற எண்ணம் பூர்த்தியாக ஏற்பட்டுளது. ஆகையால் என்னைப்போல உன்னைச் செய்துவிட்டுத்தான் உன்னைவிட்டுப் போவேனேயல்லது நடுவில் கைநழுவ விடமாட்டேன். சற்றுக் கவனித்துக் கேள். உலகத்தில் யார் யாரை எந்தெந்த விதமாக வசப்படுத்தலாமோ அவையெல்லாம் நன்றாகத் தெரிந்திருக்கவேண்டும். நியாயம் என்றும் அநியாயம் என்றும் வித்தியாசம் பாராட்டக்கூடாது. மனத்தில் எவ்வளவு பொறாமையும் வெறுப்பும் இருந்தபோதிலும் பேசுவது மாத்திரம் சர்க்கரைக்கட்டிபோ லிருக்கவேண்டும். யாரையும் வார்த்தையினாலேயே வசப்படுத்தி, அவர் முற்றிலும் நம்பி விட்டார்களென்று தெரிந்தபிறகு அவசியமவர்களைக் கெடுக்கவேண்டும். அதுதான் புருஷத்தனமை. நமது மனதுக்கொவ்வாத யாவரும் அடியோடே ஒழியவேண்டுமென்று தினந்தோறும் காலை மாலை இருவேளைகளிலும் தவறாமல் கடவுளைப் பிரார்த்திக்க வேண்டும். இதனினும் சிறந்த வேண்டுகோள் வேறொன்றுமில்லை. ஆனால் அவ்வெண்ணத்தை வெளிப்படுத்தாதபடி நமது பகைவனுக்கு ஒரு அற்ப ஆபத்து வந்தாலும் அதைப் பார்க்கச் சகிக்காதவன் போல் நடிக்கவேண்டும். அப்போது தான் நமது எண்ணம்

வெளிப்படாமலும் நாம் அவனுக்கு அவ்வாபத்துக் காலத்தில் உதவி செய்யாமையால் அவனிடத்துண்டாகக் கூடிய வருத்தம் நீடிக்காமலும் இருக்கும். பிறர் பொருளை முற்றிலும் அபகரிக்கும் சமயம் நேரும் வரையில் அவர் வீட்டுத் துரும்பைக்கூட இச்சிக்காதவன்போல் அபிநயிக்கவேண்டும். ஒருவரிடத்திலும் உண்மையே பேசக்கூடாது. ஆனால் கேட்பவர்களுக்கு நாம் பேசுவது உண்மை போலவே தோற்றவேண்டும். அவ்விதம் பேசுபவன்தான் சாமர்த்தியவான். உலகம் அவனிருக்கும் திக்கு நோக்கித் தெண்டனிடும். எதையும் ஆக்கவும் அழிக்கவும் தெரியவேண்டும். அதைத் தெரிந்தால்தான் ஒருவனை நமதிஷ்டப்படி உயர்த்தவும் தாழ்த்தவும் கூடும். இது தெரியாதவன் மனிதரிற்பதர்.

நமக்குத் தெரியாத விஷயங்களையும் தெரிந்ததைப்போல் நாம் பாவனை செய்துகொள்ளவேண்டும். வணக்கத்தைவிட்டு நம்மைப் பிறர் வணங்கும்படியான கம்பீரமான தோற்றத்தை அடையவேண்டும். பிறர் நம்மைப் புகழ்வார்களென்று பொறுத்திருக்கக்கூடாது. நம்மை நாமே புகழ்ந்துகொள்ளவேண்டும். குடிப்பது கூழேயாயினும் உடுப்பது சிறப்புற்ற உடையாகவே இருக்கவேண்டும். உலகத்தில் எதைவிட்டாலும் விடலாம், பொய்யை விடவேகூடாது. அதைவிட்ட மனிதன் சிறுமை உறுவான். அதைக் கைக்கொண்டவன் எவனோ அவன் தான் அதனுடைய பயனை முற்று முணர்ந்தவன். அவனே அப்பொய்யாலுறும் மேன்மையும் சௌக்கியமும் அடைபவன். அது தான் தற்காலத்தில் கண்கண்ட தெய்வம். அதனாலே தான் உலகம் பொய்யென்றும் உலகத்திலுள்ள எல்லாம் பொய்யென்றும் சொல்லப்படுகிறது. ஒரு பொய் சொலின் ஒரு காரியம் நிச்சயமாகச் சாதகமாகும். இப்படியே பெருக்கிக்கொண்டு போனால் சொற்ப காலத்துக்குள் எத்தனை பொய் சொல்லப்பட்டதோ அத்தனை காரியங்களும் கைகூடிப் பெரும்பயனை விளைத்து அவற்றிற்குரியோரை அவரினும் மிக்காருலகிலில்லை யென விளங்கச்செய்யும். ஆனால் இது உனக்கு மாத்திரம் புதிதாகப் போதிக்கப்பட்டதல்ல. இதைக் கைக்கொண்டு

அதனால் நல்ல நிலைமையடைந்து உலக இன்பங்கள் முற்றும் தம் முடையதாக்கிப் பெருவாழ்வடைந்திருக்கிற மகான்கள் பலருண்டு. இவர்களெல்லாரும் என்னுடைய கொள்கையைக் கைக்கொண்டு அதனாலுண்டாம் பயனை முற்றும் உணர்ந்து அதைக் காப்பதே விரதமெனக்கொண்டு அதினின்று எள்ளளவும் பிறழாது ஒழுகினமையாலல்லவோ அதனால் சிறப்புற்றிருக்கிறார்கள். எனக்கு வேதம் என்பது நித்திய விரோதி. நான் உண்மை இருக்கும் ஊரிலேயே இருக்கமாட்டேன். தருமத்தைக் கண்டால் நான் தலைகாட்டாதோடுவேன். ஏனெனில் உலகத்தில் மனிதரை முற்றிலும் கெடுக்கும் க்ஷாமங்களில் முதன்மையானவை இவை மூன்றும் தாம். மானிடப்பிறவியையுற்றோர் யாவரும் கைக்கொள்ளவேண்டுவனவற்றிற் சிறந்தவை இம்மூன்றுமே எனவும், இவற்றைக் கைவிட்டால் இம்மை மறுமை இரண்டும் கெடும் எனவும் மதியீனராகிய சிலர் தப்பான எண்ணங்கொண்டு அநியாயமாகத் தமது நிலைமைகெட்டுத் தவிக்கிறா கள். இந்நிலைமையிலுள்ளோரைப் பார்த்தும் கேட்டுங்கூட மதியின்றிக் குரங்குப் பிடியாக அவற்றையே கைக்கொள்ளும் கசடர்களை நான் ஒருபோதும் அணுகுவதே இல்லை. ஆகையால் நீயும் இவற்றை எக்காலத்திலும் கைக்கொள்ள நினையாதே. அப்போதுதான் நீ நல்ல பதவியடைந்து உலகத்தில் உன்னை எவரும் புகழ வாழ்வாய்" என்றான்.

இவ்வாறு கொடுமையே உருவெடுத்த குடிகேடனாகிய சனியே உலகத்தில் பல மானிட உருக்கொண்டாற்போல உற்பவித்த மகா பாவிகளாகிய சில வஞ்சகர்கள் பிறரைக்கெடுக்க எண்ணங்கொண்டு தமதெண்ணம் நிறைவேறும் பொருட்டுக் 'கொண்டபே ராற்றலுடையார்க்கு மாகாதளவின்றி ஏற்றகருமஞ் செயல்,' என்றதுபோல் தமக்குத் துணையாகக்கூடிய ஒருவரை அடைந்து அவருக்கு இதமான வார்த்தைகளைச் சொல்வதுபோல் மிகக் கொடிய வேடனும் கைக்கொள்வதற்கஞ்சி விலக்கக் கூடியனவும், அவற்றைக் கைக்கொண்ட அந்தக்ஷணத்தில் மாத்திரம் அளவிடற்கரிய அற்ப இன்பம் சித்தித்தாற்போல் காண்பித்துப் பின்பு பெருந் துன்பத்தை விளைக்கக்கூடியனவு

மாகிய தீநெறியைப் போதித்து அவர்களுக்கு நன்மை செய்ப வர்போல் நடித்து அவர்களைத் தம்வசப்படுத்துகிறார்கள். இதை அறியாதார், தூண்டில் முள்ளில் மறைத்துக் கோக்கப்பட்ட ஆகாரத்தைத் தன்னிடத்து அருள் மிகுந்து அளிக்கப்பட்ட உணவாகக்கொண்டு அதை மிக்க ஆவலோடு பாய்ந்து அருந்து கையில் அதனுள்ளிருக்கும் முள்ளால் குத்துண்டு துடிதுடித்து இறக்கும் மீனைப்போல், அத்தீநெறியைப்பற்றி ஒழுகிப் பலவித துன்பங்களுக்காளாகிப் பரதவித்து அவற்றினின்றும் மீள வகை யறியாது வருந்துகிறார்கள். இவர்களுக்கு இயற்கை அறிவு எள்ளளவேனும் இருக்குமாயின் தம்மை ஏமாற்றிப் பின் தத்த ளிக்கும்படி செய்யும் அக்கொடியவர் வார்த்தைகளுக்குட்பட மாட்டார். இவ்வாறு மானிடர் நன்னெறியைவிட்டு விலகுவதும் வஞ்சகர் வார்த்தைக் கிணங்குவதும் ஆசையென்னும் கொடும் பாவியின் வசத்திலுற்றதாலல்லவா. மானிடருக்கு இயற்கை அறிவுண்டெனினும் சுத்த ஜலமானது பாசியின் சம்பந்தத்தால் அதன் தன்மையொழிந்து அருவருக்கத்தக்க நீராவதுபோல் அவ்வறிவானது ஆசையால் மூடுண்டு தன் வலியொழிந்து மறையப் பின் ஆசைமுதிர்ந்து தனக்கிடங்கொடுத்தோரைத் தன்னை எவ்விதத்திலும் திருப்தி செய்யும்படி வருத்த அதன் வலியை அடக்க வகையறியாத கீழ்மக்கள் தமது வாழ்நாள் முழுதும் அதைத் திருப்தி செய்வதே தொழிலாக்கொண்டு முயன்றும் அதை முற்றிலும் திருப்தி செய்யாமலும் தாம் மானிடப்பிறவியால் அடையக்கூடிய புருஷார்த்தங்களில் ஒன் றேனும் கைக்கொள்ள அவகாசம் இல்லாமலும் ஏமாந்து கை தவறிவீழ்ந்த மட்பாண்டம்போல் உடலை வீழ்த்திமாய்கிறார்கள். இதனை அறிந்த அறிவாற் சிறந்த ஆன்றோர் ஆசையை அடி யோடு வெறுத்து அவனி இன்பத்தை ஒறுத்து, அவ்வஞ்சகர் கேண்மையை மறுத்து அருள் பெருக அதர்மம் சிறுக்கக் காம வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றங்களையும் கறுத்து ஆணவம் காமம் மாயை என்னும் மும்மலங்களையும் அறுத்து மனதை அது இது என அலையவிடாது ஒன்றைப்பற்றி ஓரிடத்திலிருந்து

உலகத்தை அறிந்ததாகப் பிதற்றும் உலுத்தனால் (பொருளாசைசககாரன்) எக்காலத்தும் அடையமுடியாத சிறந்த சிததிகளை யடைந்து என்றும் அழியாத முத்தியுறுவார்.

புட்கரனே, சிற்றறிவாற் கழிந்த சிறியோன்; உலகப் பற்றுகளுக்கு உறைவிடமானவன். பொறாமையே உருவெடுத்த புன்மையோன். சத்தியத்தின் பெருமையறியாத சளுக்கன் (வீணன், கீழ்மகன்) முத்திநெறியறியாதமூடன். பெரியோர்ப் பேணுப்பேதை. நன்னெறியறியாத நஞ்சு. நடலையே குடிகொண்ட நாயோன். ஆகையால் அவன இதுவரையில் நளனை கீழ்ப்படுத்தத் தடையாக இருந்தது தான் உலகம் அறியாமல் இருந்ததனாலல்லவா என நினைத்து கலி சொல்லியவற்றைத் தன்னை உன்னத நிலைமைக்கேற்றுவிக்கும உத்தம வேத மந்திரங்களாக்கொண்டு அவற்றில் ஒனறேனும் விடாது மனதுட் கொண்டு அககலியை வணங்கி "என்னைக கடைத்தேற வைக்குங் கடவுளே. தம்முடைய அருளைப்பாட என்றால் தரமோ எனக்குத் தம்மினுஞ் சிறந்தோரு முண்டோ. எனக்குத் தாய தந்தை தமர் முதலிய யாவருந் தாமே. என்னைத் தமது கையிலுள்ள ஓராயுதமாகககொண்டு அதை எவ்வெவ்விதமாக நடத்த வேண்டுமென்று தமக்குச சித்தமோ அவ்வவ்விதமாக நடத்தி என்னை நல்வழிப் படுத்தவேண்டியது தமது கடமை. தாம் என்ன செயயச் சொன்னாலும் செய்யத் தயாராக இருககிறேன். தமது கட்டளை இன்னதென்று தெரிவித்தருள வேண்டும்" என்றான்.

அதைக் கேட்ட கலி மனமுவந்து "அரசனே! என்னை யாரோ என நினைக்கவேண்டாம். நான் நவக் கிரகஙகளிலொருவனாகிய கலி. உன் மனப்பிணியை யறிந்து அதை அடியோடு நீக்கி உன் மனத்தைத் திருப்தி செய்ய வேண்டுமென்ற நோக்கம கொண்டே உன்னை அடைந்தேன். ஆகையால் நானிப்போது ஓரிடப உருவெடுத்துக் கொள்ளுகிறேன். நீ ஒரு வெற்றிக் கொடியைச் கைக்கொண்டு என்பேரிலேறி நளனிடத்திற் சென்று அவனைச் 'சூதுப்போருக்கு நீ வருகின்றாயா' என அழைத்தால் க்ஷத்திரிய தர்மத்தைக் குறைவறக் கைக்கொண்டவனாகிய

நளன் போர் என்றவுடனே அதை மறுக்காமல் அதற்குட்படு வான். அப்போது நான் அவ்வாட்டத்தில் உனக்கு ஜெயம் உண்டாகும்படி செய்து அரை நொடியில் அவனுடைய செல்வமெல்லாம் உன்னுடைய தாக்குகிறேன். சடுதியில் புறப்படுவாயாக" என்று தான் சொல்லியபடி ஒரு ரிஷபமாக அப்புட்கரனுக்கு முன்னே நின்றான்.

இவ்வாறு தனக்கு முன்னே எருதின் உருக்கொண்டு நிற்கும் கலியைக் கண்ட புட்கரன் மனம் வெருவி இப்பெரியோன்மீது எவ்வாறு எதிர் செல்வதெனச் சற்று அஞ்சிப்பின் ஒருவாறு தெளிந்து அக்கலியின் ஆணையின்படி ஒரு வெற்றிக் கொடியைக் கைக்கொண்டு தமது மந்திரிமார்களிற் சிலர் தன்னைப் பின்பற்றி வர நளனது வளப்பம் பொருந்திய மாவிந்தநகரை நோக்கிச் சென்றான்.

கலி, தேவ வகுப்பிலுற்றவனாயினும் தன் வஞ்சனையினாலே உயர்திணையினின்றும் அஃறிணையாகித் தன் பெருமை யொழிந்து சுமக்கத் தகாதவனைச் சுமந்து, எவ்வகைப்பட்டோரையும் தனதெண்ணப்படி நடத்தும் வன்மையுடைய தேவன் ஒரு மானிடனுடைய இச்சையின்படியே நடந்து, தன் வாகனமிழிந்து தான் வாகனமாகிக் கேட்டோர் நகைக்கக் கீழோர இகழத் தன்னிலைமை தவறித் தாழ்மையுற்றான். இதனாலே வஞ்சகர்கள் பிறரை வஞ்சிக்க முயலும்போது அவர்களுக்குறுவதெல்லாம் இழிவென்பதும் அவ்விழிவால் விளையும் மானக் கேட்டையும் உணரார் என்பதும் நன்கு விளங்குகின்றன. இவ்வளவு கேடுற்றும் அவர்களடையும் பயன் யாதென ஆராயுங்கால் இனையளவும் பயன் பெறாது அப்பயனை முற்றிலும் வேறு பிறரடைந்து சுகமுறுவர். ஆனால் சிலரடையும் நற்பயன் யாதுமில்லையெனினும் பிறரை வருத்தியதாலுண்டாகிய பாபமிருந்து வருந்துவர் என்பதற்கையமில்லை. ஆகையால் உலகில் பிறரைக் கெடுப்பதினும் இழிவான தொழில் வேறொன்றுமில்லை.

ஆனால் உலகத்தில் இழிவென்ப தொன்றில்லாமல் உயர்வின் பெருமை விளங்காதாகையால், அவ்விழிவை வெளிப்படுத்தக் கிடைத்தற்கரிய மானிடப் பிறவியிலுற்ற கயவனாகிய புட்கரன்

அவன் பெயரை இன்று கூட எவரும் வெறுக்கும்படியாக 'இந் நிலத்து மன்னுதல் வேண்டின் இசை நடுக' என்பதற்கு மாறாக வசையை நட்டுத் தன் குலத்துக்குரிய குணங்கெட்டு மாவிந்த நகரடைந்தான். அந்நகரத்தில் சத்தியமே தோல்வளையமாகக் கொண்ட நளன் செங்கோல் செலுத்தியதால் யாவுஞ்செழித் தோங்கி யாவரும் முகமலர்ந்து தமது சக்கரவர்த்தியின் பரந்த புகழைப் பாடிக் கொண்டிருந்தார்கள். இச் சிறப்புகளைக்கண்டு மகிழ்ந்த புட்கரன் 'இத்துணைப் பெருஞ்செல்வம் வாய்ந்த இந் நகரின் அரசாக்ஷியைக் கைக்கொண்டு எப்போது மகிழ்ந்திருப் பேனோ' எனக் கவலை கொண்டு பிற கோட்டை கொத்தளங் களையும் அவற்றின் விமரிசையையுங்கண்டு பெருமூச்செறிந்து கொண்டே நளனது அழகிய அரண்மனையை அடைந்து தன் வரவை நளனுக்குத் தெரிவிக்கச் செய்தான். வாயில் காப்பாளர் அதிவிரைவிற்சென்று நளனிடத்தில் வணக்கத்தோடு தெரி விக்க நளன் களங்கமற்ற மனமுடையவனாகையால் அப்புட்கரன் திடீரென வருகைக்குக் காரணமுணராது அவனைப்பார்க்க ஆர்வ மிகுந்து அவனை உடனே அழைத்து வரும்படி அவ்வாயில் காப் போருக்குக் கட்டளையிட்டுத் தன் மந்திரிகளை யனுப்பி எதிர் கொண்டழைத்துவரச் செய்தான்.

மந்திரிகள் அப்புட்கரனைக்கண்டு அப்போது அவன் கொண் டிருந்த கோலத்தின் புதுமையால் விளையப்போவது யாதோ வென மருக்கமுற்று அரசன் ஆணைக்கஞ்சி அசசனியான புட் கரனை அரண்மனைக்குள் அழைத்துச்சென்று திருமாலைப்போல் திவ்விய ஆசனத்தில் வீற்றிருக்கும் தருமதேவதையாகிய நள னுக்கருகில் தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும் புகழும் படியான புவியாளும் மன்னர்க்கு மன்னனாகிய நளன் வீற்றிருக் கும் புண்ணியாசனத்தில் இப்பெரும்பாவியை வீற்றிருக்கச்செய் வது தகாதெனநினைத்தோ, தருமத்துக்கருகில் அதருமம் தோற்றுவது தகாதென நினைத்தோ, தன்னை யாசித்தோருக்கு அவர் மனம் வெறுக்கக் கேட்டதெல்லாம் கொடுக்கும் வள்ளலுக் கருகில் ஈகை என்பதே அறியாது பிறர் பொருளை அபகரிப் பதையே தொழிலாக்கொண்ட கள்ளனை வீற்றிருக்கச் செய்ய

லாகாதென நினைத்தோ, களங்கமற்ற படிகம்போன்ற மன
முடைய கருணைக்கடலோடு களங்கமிருந்து பல கிருமிகளுக்
கிருப்பிடமாகி யாவரும் வெறுக்கத்தக்க சாலகத்தைச் சேர்க்கக்
கூடாதென நினைத்தோ, அப்புட்கரனை நளனோடு வீற்றிருக்கச்
செய்யாது அவன் நிலைமைக்குத் தக்க ஓராசனத்தில் அமரச்
செய்தனர்.

அப்போது புட்கரன் தன் நிலைமைக்கும் முறைக்கும் தக்க
படி நளனை வணங்கி நிற்க நளன் தன் சகோதரனை மிக்க அன்
போடு தழுவி இனிய வசனங்கூறி அவனைப் பார்த்ததாலுண்டா
கிய மகிழ்ச்சி உள்ளிருக்க இடம்பெறாது வெளிவந்தாற்போல
முகமலர்ந்து அவன் அவ்வளவு தூரம் கடந்து வந்ததாலுண்டா
கிய களைப்பை ஆற்றச்செய்து அவனுக்கிட்ட சிம்மாசனத்தில்
வீற்றிருக்கப் பணித்தான். பின்பு நளன் புட்கரனை நோக்கி
"மன்ன, தம்மோடு கலந்துபேசி வெகு நாளாயிற்று. தம்மைக்
கண்ட இன்று என் மனம் மகிழ்ச்சியடைந்திருக்கிறது. இத்
தனை நாள் என் ஞாபகமில்லாதிருக்க நான் தமக்கிழைத்த தீங்கு
யாதாவதுண்டா? எனக்கு உன்னைத்தவிர வேறு சகோதரர்
யாரிருக்கிறார்கள்? இப்பரந்த பூமியை ஆளுவதில் ஞாபகக்குறை
வால் உன்னை நான் கவனிக்கவில்லையென நினைக்கவேண்டாம்.
உன்னைப் பார்க்கவேண்டுமென்ற ஆவலே அதிகமாக இருந்தது.
அந்த ஆவல் பூர்த்தியாகுங் காலம் இன்றுதான் போலிருக்கிறது.
எக்காரியமும் முடியுங் காலத்தில்தான் முடிகிறதேயன்றி நாம்
விரும்பிய வண்ணம் ஒரு குறிப்பிட்ட காலத்தில் முடிவதில்லை.
தாமும் தம்மோடுற்ற யாவரும் சுகமா. தமது நாட்டிலுள்ளோர்
யாவரும் அறநெறி வழாது அடங்கி நடக்கிறார்களா. காலமழை
தவறாது பெய்கிறதா? தமது நாடு பஞ்ச முதலியனவின்றிச்
செழித்தோங்குகின்றதா? தமது செங்கோலைக் காக்க அந்தணர்
கள் வேதமோதுதல் யாகஞ் செய்தல் முதலிய உத்தமமான காரி
யங்களை மனக் களிப்போடு செய்து வருகிறார்களா? பசுக்கள்
பலிக்கின்றனவா? அவ்வவ் வருணத்தார் தத்தமக்குரிய தொ

ழியலே ஒழுங்குபெறச் செய்து வருகிறீர்களா. அதிதி பூசை குறை வின்றி நடக்கின்றதா? தமது நாட்டில் ஜன சங்கியை விருத்தி யாகிக்கொண்டே வருகிறதா? அதுவே நாட்டின வளப்பத்துக் கும் அரசனது செங்கோலுக்கும அறிகுறி. நம்மாலே நமது முன்னோர் பெருமை விளங்கவேண்டும. நமது குலம் மேன் மேலும் சிறப்படையவேண்டும. தமது செங்கோன்மைக்கு என் னால் ஆகவேண்டிய உதவி யாதேனும உளதாயின அதை இப் போதே தெரிவித்தால் அதுவே முதற் காரியமாகக் கொண்டு செய்து முடிப்பேன்,'' என்று மிகவும் பரிவோடு வினவினான்.

புட்கரன் பொறாமை கொண்ட மனமுடையவனாகையால் நளனது சிறப்பைககண்டு பொறுக்காமல் மனம புண்ணாகி அவன் சொல்லும் அறமொழிகளும இனிய வசனங்களும் அம்புபோலும் வேல்போலும் காதிற் பாயச சகிக்காதவனாய் நளன் விரும்பிக் கேட்டவைகளுக்கெல்லாம் சுருக்கமாக "தமதருளாலும் செங் கோன்மையாலும் குறைவின்றி இருக்கின்றன'' எனறு விடை பகர்ந்து தான் வந்த காரியம் எப்போது துவக்கப்படும் என்பதி லேயே கருத்தாயிருந்தான்.

நளன் அப்புட்கரனுக்கு அறுசுவையோடு விருந்தளித்து மிகப் பரிவுடன் பேசிக்கொண்டிருக்கையில் அதிதியோன் தன மனதில் அத்தனைநாள் வரையில் சிறைப்பட்டுக் கிடந்த வஞ்ச னையை அவன் வெளிப்படுத்தி யாவருக்கும் வெளிப்படையாகத் தெரிவிக்குமபொருட்டு உயர்த்திறுற்போல இடைவிடாது அவன் கையிற் பற்றிக் கொண்டிருந்த கொடியைக் கண்டு, நளன் "சகோ தரனே, தாம கையிற் பற்றி இருக்கும் இக்கொடியின் காரிய மென்ன? இது இப்போதுதான் புதிதாகக் காணப்படுகிறது. இது யாராவது பெரியோரால் தமக்களிக்கப்பட்டதோ. இதை எப்போதும் கைவிடக் கூடாதென்பது அப்பெரியவரது கட்ட ளையோ. அப்பெரியோரை நானும் கண்டு தெரிசிக்கலாமோ. அவர் தமது நாட்டிலுள்ளவரா அல்லது பரதேசியோ. இக்

கொடியின் பெருமை யாது. இவற்றை விரிவாக எனக்குச் சொல்லவேண்டும" என்றான்.

புட்கரன், தன் காரியம் துவக்குவதற்குத் துவஜாரோகணம் ஆயிற்றெனக் களித்து முகத்திற் புன்னகை காட்டி "மன்னதி மன்ன, இக்கொடியின் பெருமையையும் இதையளித்த பெரியோரது சிறப்பையும் என்னால சொல்ல வலுமோ. அப்பெரியோர் இப்போது என்னோடிருக்கிறார். அவர் கருணையே உருவெடுத்து வந்தாற்போல என்னை அணுகி எனக்கு இதமான விஷயங்களைப் போதித்து வருகிறார். அவர் போதனையின்படி நான் நடப்பதால் நாளுக்குநாள் எனக்கு மகிழ்ச்சி பெருகுகிறது. அவர் கடைக்கணோக்குற்றார் எவராயினும், ஒருவராலும் மறுக்கலாகாத அரும்பதவி யடைவாரெனில அவரை நேரில் பார்ப்பதெவன். நானும் அவரை நேரில் பார்க்க அஞ்சியே முதுகின் புறமாகவே செல்லுகின்றேன். சிறக, நான் சூதாட்டத்தில் வல்லவனென்பது தமக்குத் தெரியும். அதற்கு ஆயுதங்களும் பிறருதவியும் வேண்டியதில்லை. ஆயினும், க்ஷத்திரியாகள் அதைக் கைக்கொள்வதாலும்; போரைப்போல ஒருவரையொருவர் எதிர்த்துக்கதித்து வீரங்கொண்டு எவ்விதத்திலும் வேற்றுமையின்றி ஒருவரையொருவர் வெல்ல முயலவதாலும் இச்சூதாட்டமும் ஒரு போரெனவே மதித்து அப்போரில் என்னை எதிர்த்தோரை வெல்லுவேனென்பதற்கு அறிகுறியாக உயர்த்தப்பட்ட இவ்வெற்றிக் கொடியைக் கைக்கொண்டு பல நாடுகளிலும் சென்று வருகிறேன். இதுவரையில் இதைத் தாழ்த்தினோர் யாருமில்லை. இன்னும சில நாடுகளுக்குப் போகக் கருதிச் செல்லுமவழியில் தமமுடைய ஞாபகம எனக்குண்டாயிற்று. தாம் எல்லாமறிந்து எவ்வகைப்பட்டோர் வலியையும் அடக்கிச் சத்திய நெறி தவறாமலும், க்ஷத்திரிய தர்மத்தைத தமக்கே உரியதாக்கிக்கொண்டும அதினின்று வழாமலும், செங்கோல் வளையாமலும் இப்பூமி முழுதும ஆண்டுவரும் பூபாலனாகையாலும் தமக்கு மிகவும் விருப்பமுள்ளதும் போரெனப் பேர் படைத்ததுமான இப்பெரிய காரியமும் தம்மைப்போன்ற சமர்த்தர்களால் சாதிக்

கத் தக்கதாகையாலும் தமது சித்தம் இன்னதெனத் தெரிந்து கொள்ள விரும்பி இவனுற்றனன். ஆனல் போரெனப் பேர் கொண்டதெதுவாயினும் க்ஷத்திரியர்களால விலக்கக்கூடியதல்ல வென்பது மனுமுறைகண்ட மன்னர் கொள்கை " என்று தன் வஞ்சக வலையை வீசினன்.

சொல்லிய வவ்வுரை கேட்டுத் தூணிக்
கல்லெனப் பணைத்துயர் கலவைத் தோளினன்
வெல்கொடி யுயரிய விடலை சூதினீ
வல்லையே லாடுதும் வருகென் றேதினன்.

நளன், புட்கரன் சொல்லிய கபடமான வார்த்தைகளைக் கேட்டுக் கலியின் வயத்தனயப் பின் வருமாறு புகன்றன். "போரென்பது எதுவாக இருந்தாலும க்ஷத்திரியரால் விலக்கக் கூடியதலல. போர் என்னும் ஒலியைக் காதால் கேட்டபிறகும் பின் வாங்குகிறவன் க்ஷத்திரியனவனே. அவனுக்கு வீர சுவர்க்கமும் கிட்டுமோ. எதை விட்டாலும விடலாம். க்ஷத்தி ரிய தர்மத்தை விடலாமோ. அது உயிரினுஞ் சிறந்ததன்றே. போருக்கு அஞ்சுகிற அரசன், தன நாட்டில வாழும குடிகளுக்கு இயலபாக உள்ள ஐவகை அச்சத்தில் பகைவரால உண்டாகும் அச்சத்தை எவ்வாறு போக்குவான. அவ்வரசனிடத்தில், அவ னல் ஆளப்பட்ட குடிகளுக்கு எவ்வித நம்பிக்கை யுண்டாகும். அக்குடிகளும் நசசுவார்களா? அவன் அரசாக்ஷியும நிலைக்குமா? ஆகையால் வெற்றிக் கொடியை உயர்த்திய நீ இப்போதே சூதா டத் தயாராகவிருநதால் என்னேடு ஆடலாம். நான் உன் வெற் றிக் கொடிககாவது சூதுப் போருககாவது பின் வாஙகுகிறவ னல்ல. பலகையைப் பரப்பு. காய்களை வெளியே எடு. கால தாமதம் செய்யாதே " என்றன்.

அதைக் கண்டு நளனது அமைசசர்கள் அதிசயித்து " இஃ தென்ன விந்தையாக இருக்கிறதே. சூதாட்டத்தை உத்தமர் கள் விரும்புவார்களோ. இதற்குட்பட்டவரும் நமது நளச்சக்கர

வர்த்திதானே. அவர் அறியாத விஷயங்களுமுண்டோ. அவ
ருக்குச் சூதினால் விளையும் தீமையும் அதனாலுறும் தாழ்மையும்
தெரியாதா. அவரைவிட அறிவாற்சிறந்த மன்னருமுண்டோ.
அவருடைய சத்தியமும் அருளும் செங்கோன்மையும் அறியாத
திக்குகளுமுண்டோ. அவருடைய நாட்டையாளும் ஆக்கினை
சக்கரமானது அவருடைய சத்தியமாகிய யந்திர சக்தியாலல்
லவா இடைவிடாது அந்நாட்டைச் சுற்றிச் சுற்றி மண்டலமிட்
டுக்கொண்டிருக்கிறது. அத்துணைப் பெருமை வாய்ந்த தரும
மூர்த்தியின் மனம் தீ நெறியிற் செல்லக் காரணம் விளங்கவில்
லையே. விஷத்தைப் பார்க்கிலும் மிக்க கொடியவனான இப்புட்
கரனுடைய வஞ்சனையால் அவர் மனம் வேறுபட்டதோ. ஐயோ,
இப்புட்கரன் தூமகேது போலத் தோன்றினனே. இவன் பா
தம் பட்டவிடம் பாழாகுமே இவன் பூலோகச் சனியல்லவா.
இவன் கண்பட்ட இடம் காடாகுமே. இதற்கு நாம் செய்வது
யாது " என்று கையைப் பிசைந்துகொண்டு மனம் புழுங்கினார்
கள்.

பின்பு திடப்பட்டு அவ்வமைச்சர்கள் ' நாம் இப்போது
வாயை மூடிக்கொண்டிருப்போமாயின் நமது கடமையறிந்தொழு
குபவராக மாட்டோம். **தெரிதலுந் தேர்ந்துசெயலு மொரு
தலையாச் சொல்லும் வல்ல தமைச்சு.** நன்னெறி தவறாத
அரசன் எக்காலத்தும் விநோதத்தாலாவது, எல்லாக் காரியங்
களிலும் தன்மனதைச் செலுத்தி அவற்றை ஒழுங்குபெற முடிப்
பதால் உண்டாகும் மனத்தளர்ச்சியாலாவது, நன்னெறியினின்று
சற்றுமாறுபடுவதுண்டு தவிர முக்குண வசத்தால் முறைபிழ்ந்
துரைப்பர் ' என்னும் சூத்திர விதிப்படி மானிடர்களுக்குத் தாமதம்,
இராசதம், சத்துவம் என்னும் மூன்றுகுணங்களும் இடைவிடாது
மாறிமாறிப் பிறத்தல்இயற்கை. அவற்றுள் தாமதகுணமானது:—
பேருண்டி, நெடுந்துயில், சோம்பல், நீதிவழு, ஒழுக்கவழு, வஞ்
சம், மறதி, பொய்கோபம், காமம், கொலைமுதலியவற்றை விளை
விக்கும். இக்குணவேளையிலும் தனது சிற்றரசரிடத்துத் தோன்
றிய குற்றத்தால் விளையும் கோபத்தாலும் அரசர் மனம் நீதியி

னின்று வழுவுதலுமுண்டு. அவ்வவ்வமயங்களில் அகன்றகல்வி, கேள்வி யுக்தி, அனுபவஙகளால சிறப்புற்ற அமைசசர்கள், தேருக்கு முட்டுக்கட்டைபோலவும, கப்பலுக்குச் சுக்கானைப்போலவும், அதிவேகமுள்ள குதிரைக்குக் கடிவாளம் போலவும், அரசனை இத வார்த்தைகளால் நல்வழியிற் செலுத்தி நீதியையும் தருமத்தையும காக்கக் கடமைப்பட்டவர்கள். இவ்வகை அமைச்சரில்லா அரசு பாழாகும், ஆகையால் அமைசசரெனப் பேர் படைத்த நாம் அழிவையுண்டாக்கும் இக்கொடிய சூதாட்டத்தில் மனம் வைத்த நமது அரசனுடைய மன வேறுபாட்டை மாற்றிச செஙகோன்மையைக காககவேண்டியதே நமக்குரிய தருமம.”

ஐயறிவுந் தம்மை யடைய வொழுகுதல்
எய்துவ தெய்தாமை முற்காத்தல்—வைகலும்
மாறேற்று மன்னர் நிலையறிதல் இம்மூன்றும்
சீரேற்ற பேரமைச்சர் கோள்.

என்று தமக்குள்ளே தீர்மானித்துக்கொண்டு அரசனை அணுகி அவனை வணஙகிப் பின் வருமாறு புகன்றனா.

“எமது ஐய; செஙகோன் முறை பிறழாச் செல்வமே! கொடுங்கோன்மை குறைக்கும் கூற்றே. நீதி வழுவா நிடதத்தார் நிதியே. நீதி உருவே. சிறியோமாகிய யாம் தமக்குரைப்பது யாதுமில்லையாயினும் இப்போது தம்மால் மறக்கப்பட்டன போல் தோன்றுகின்ற சிலவற்றைத தமக்கு ஞாபகப்படுத்தத் துணிந்தோம். தந்தைக்குத தனயன் புத்தி புகட்டுவதில்லையாயினும் தந்தையின் நன்மையைத் தேடுவது தனயன் கடமையன்றோ. அத்தனயன் வார்த்தைகளைக் குழந்தைப் பருவததுக் குதலைமொழிபோல் முதிர்ந்த பருவத்தும் கேட்டின்புற்று அவற்றிற் சிறப்புடையனவற்றைக் கொள்ளுதல் தந்தைக்குப் பெருமையன்றோ. தாழ்ந்தோா வாயினின்று பிறக்கும் நீதிகள் நன்மை பயவா திருத்தலுமுண்டோ. அவற்றைக் கைக்கொண்டால் உத்த

மர் தாழ்மையுறுதலுமுண்டோ. சிப்பியானது மிகவும் துர்நாற்ற முடையதேனும் அதினின்று பிறக்கும் முத்தை அதன் பெருமைக்காகவும் குணத்துக்காகவும் கைக்கொள்ளாதார் உலகிலுண்டோ. அம்முத்தை அணிந்துகொள்பவர் அதனாலுறும் பெருமையும் அழகும் அடையாமல் போவதுமுண்டோ. அதுபோல் இகழ்ந்த தக்கனவாகிய எமது வார்த்தைகளுக்கு இன்று சற்றுந் தமது திருச்செவி ஈந்தருளவேண்டும். அண்ணலே, தாம் கனவிலும் கருதாத இத்தீய ஒழுக்கத்தில் தமது திருவுள்ளம் சென்றதற்குக் காரணம் அமைச்சராகிய எமது தீமையோ, அன்றி இனி எமக்குறுங் கேட்டின் முற்சின்னமோ. சிறியோர் கோட்டியிற் சேருதலாலடையும் பயனிதனினும் வேறுமுண்டோ. அதனாலேதான் விழுமியோர் 'வெள்ளைக் கோட்டியை விரைவினில் ஒழிமின்' எனப் பணித்தனர். தமது பெருமைக்கும் உயர்வுக்கும் எவ்வாற்றினும் ஒவ்வாத இப்புட்கரன் தமக்கு முன்னிருந்து தம்மைப் பார்ப்பதே சிறுமைக்கு வித்தாகும். இவன் பார்வையும் சனியன் பார்வையும் ஒன்றல்லவோ. இவன் உத்தமனாயின் செங்கோல் பிடிக்கவேண்டிய கையில் சொக்கட்டான் காய் கொள்ளுவானோ; வில்லேந்துங் கையில் தீமை விளையும் சூதேந்துவனோ. யாராயினும் ஒரு உத்தமன் எவரும் இணங்கத் தகாத ஒரு பாதகனாகிய அதமனோடு ஒருதினம் உண்டு இணங்கினானேல் அவ்வுத்தமனுக்குரிய உத்தம குணங்களில் கால்பாகம் நீங்கும், மறுநாள் அரைப் பாகமும், மூன்றாம்நாள் முக்கால் பாகமும், நான்காம் நாள் உத்தம குணங்கள் அடியோடும் நீங்கி அவனுக்குரிய அதம குணங்கள் மேலிட்டுத் தானும் அவனேயாவான் என்பது மேலோர் கருத்து. ஆர்கலியுலகத்து மக்கட்கெல்லாம் ஓதலிற் சிறந்தன்று ஒழுக்கமுடைமை. என்பதுபோல எக்குடியிற்பிறந்தோராயினும் ஒழுக்கத்தால் உயர்வதும் தாழ்வதுமுண்டு. உயர்வு இழிவு ஒழுக்கத்தாலன்றிப் பிறவியாலல்ல. ஆகையால் தீய ஒழுக்கங்களுக்கெல்லாம் உறைவிடமாகிய இச்சூதினை அருகிருத்தி அவனுக்குரிய சூதாட்டத்தைத் தாம் கைக்கொள்வது தர்மமோ.

புலைமயக்கம் வேண்டிப் பொருட்பெண்டிர்த் தோய்தல்
கலமயக்கங் கள்ளுண்டு வாழ்தல்—சொலைமுனிந்து
பொய்ம்மயக்குஞ் சூதின்கட் டங்கல் இவைமூன்றும்
நன்மையி லாளர் தொழில்.

இச்சூதாட்டத்தைத் தம்மைப்போல் நன்மையின் பெருமை
யறிந்தவர்களும் நச்சுவார்களோ? அது பச்சை நாவியினும் கொடி
தன்றோ? அதைமெச்சிக் கைக்கொள்பவர் பிச்சை எடுத்துண்
ணும் வாழ்க்கைக்கு இச்சையுடையராவர். ஐயனே, தமக்குப்
புதுமையான விருப்பத்தை உண்டுபண்ணிய இச்சூதாட்டமானது
பரிசுத்தமடொருந்திய உண்மையையும், உயர்வாகிய தர்மத்தை
யும், இவ்வுலகமுழுதும் ஆளும் உரிமையையும் போக்கித்தீவிர
புத்தியைக் கெடுக்குமாதலால் இது கொடுங்கோலரசர்க்கே உரி
யதெனச் செங்கோலரசர் இதை முற்றிலும் வெறுத்து விலக்கு
கிறார்கள். மேலும் 'இச்சூது வறுமையைத்தேடி யழைத்து
வரும் தூது; கொடிய பொய்மைக்கு உற்றதுணை; அற்பத்தன்
மையை விளைவிக்கும் களனி; உண்மைக்குத் தக்கபகை,' என்று
மேலோர் சொல்வதுண்டு. இச்சூதில் அடையும் வெற்றியும்
நிலைத்ததல்ல. வேடர்கள் பக்ஷிகளைப்பிடிப்பதற்குத் திருட்டுத்
தனமாக வலையில் மறைத்து அதனுள் வைத்திருக்கும் ஆகாரத்
தைக் கபடமற்ற பறவைகள் தம்மீது கருணைகொண்டு உதவிய
உணவென நினைத்து அதை உண்ணப்புகும்போது அவ்வலையி
லகப்பட்டுக் கொடிய வேடனுக்குத் தாம் ஆகாரமாவதுபோல்,
அவ்வெற்றியானது அச்சூதைக் கொண்டோர்க்கு அதனிடத்தில்
விருப்பத்தை உண்டுபண்ணி அதிலேயே அவர்களை மூழ்குவித்து
வறுமைக்கு ஆளாக்கி மானத்தைச் சிதைக்குமே யல்லது புகழை
அளிக்குந்தன்மையுடையதல்ல. இஃதன்றி,

காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்
ஈதன் மறுத்த லிவைகண்டாய்--போதில்
சினையாமை வைகுந் திருநாடா செம்மை
நினையாமை பூண்டார் நெறி.

அடியு மாண்மையும் வலிமையுஞ் சேனையும்
அழகும் வென்றியுந் தத்தம்
குடியு மானமுஞ் செல்வமும் பெருமையுங்
குலமும் இன்பமும் தேசும்
படியு மாமறை யொழுக்கமும் புகழும் முன்
பயின்ற கல்வியுஞ் சேர
மடியுமால் மதிபுணர்ந்தவர் சூதின்மேல்
வைப்பரோ மனம் வையார்.

பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின். (கழகம—சூதாடுகளம்.)

*எந்த அரசன் சூதாட்டத்தில் மனஞ் செலுத்துகிறானோ அவனை நல்ல தேஜசும் கல்வியும் செல்வமும் ஊணும உடையும் அடையாவாம்.*

உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின்.

*ஆகையால் சூதாடப்புகுந்தவன் அழகு குன்றித் தான் கற்ற கல்வியின் பயனடையாமல், தன்னிடத்துள்ள மிகுந்த செல்வத்தையுமிழந்து உண்ண உணவுமின்றிக் கட்டத் துணியுமற்றுக் கசடர் வாயிலிற் கையேந்திநிற்பான். அச்சூதினால் எவ்வளவு துன்பம் நேரிட்டாலும அது தன்னிடத்து வெறுப்புண்டாக்காது. மேன்மேலும தன்னை விரும்பசசெயது தவிககவிடும் தன்மையுடையது. எமதண்ணலே!*

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.

*அன்றிச்சூதினால் பெரும்பயனுற்றாலும் அச்செல்வத்துக்கும் பெருமையில்லை. அறநெறியாலீட்டும் பொருளே சிறப்புடைத்து. வஞ்சகமே உருக்கொண்ட இச்சூதினால் பெரும்பயனுற்றாலும்*

அது நிலைத்திருப்பதில்லை. ஏனெனில்' அதுபற்றிய இடமெல்லாம் சிதைத்துப் பாழாகுமே யல்லாமல் வாழவைப்பதில்லை. எத்துணை முதிர்ந்த அறிவுடையோராயினும் அவரை அறிவிலராக்கி அவரிடத்துள்ள பொருளைப் போக்கிக் கையிலரைக்காசுமில்லாத ஆண்டியாக்கி அலையவிடுவதில் கொடியது இச்சூதினும் வேறொன்றுளதோ? தவிர இச்சூது உத்தம குணங்கள் யாவையும் வேரோடறுக்கும் வாள்; அதம குணத்தைச் செழிக்கச் செய்வதற்குச் சிறந்த எரு. மானிடர்க்குரிய பெருமையை வேரோடு களைந்து சிறுமையை வளர்ப்பதற்குச் சிறந்த செவிலித்தாய். ஆதலால் இச்சூதாட்டத்தில் மனமவைத்தவர் செய்யத்தகாத விலக்குகளும் தீய வொழுக்கங்களும் ஒன்றுமில்லை, அறத்தாலீட்டியபொருளை அவ்வழியே செலவிட்டுப் பெரும்பயனுற்றவரும் சிறிதுகாலம் இத்தீய ஒழுக்கத்தில் தலையிடுவாராயின் தாம் பலநாள் சேர்த்துவைத்த புண்ணியபலனை இழந்து கொடிய தீநரகுக்குரியராகின்றனர். இப்பூமி முழுதும் ஒரு குடைக்கீழ் ஆண்டு உயர்ந்தோங்கி வாழும் சக்கரவர்த்தியாயினும் ஒரு நொடியில் எல்லாமிழந்து இரக்கத்தகாதவரிடத்தும் இரக்கப்புகுவர். அதனாலேதான் மனுநெறிகண்ட அரசர் இச்சூதை விரும்பிக் கைக்கொள்ள அஞ்சுவர். மனிதர்களுக்கு, நன்மை, பெருமை, கடவுளிடத்தன்பு, பெரியோரைப்பேணல, புருஷார்த்தங்கள் முதலிய சிறந்தவற்றைப் போதித்து அவர்களை நல்வழிப்படுத்துவதில் ஒப்பு உயர்விலலாத வேதத்தில் விலக்கப்பட்ட இச்சூதாட்டத்தை, அவ்வேத விதியே தமக்குப் பெரும்பயன் விளைக்கும் வைப்பெனக் கண்டறிந்தோர் கைக்கொள்வது முறையோ. அது பரித்த புகழுக்கொரு கறையே. கறைபடாது புகழைக்காக்கும் வகையறியாதது அவர்க்குற்ற முறையே. இச்சூதால் உறுவது சிறியோரிடத்துச் சிறையே. எமதிறையே, தமக்குப் பிறர் புத்தி புகட்டவும வேண்டுமோ, பிறரிடத்துள்ள கசடு அறப்போதிக்கும் கல்விக்களஞ்சியமாகிய தாம அறியாதனவுமுண்டோ. இச்சூதாட்டத்தால் விளைவதை வரையறுத்துச் சொல்லப்புகுந்தால் மிகப்பெருகுமென்றும், அதை ஆடாவிடினும் அதில் விருப்பங்கொள்ளுதலும் குற்றமுடைத்து என்பது விளங்கவும் "சூது

விரும்பேல்" எனச் சுருங்கச் சொல்லினர். இதுகாறும் நிடத நாடாவது நிடத நாட்டுச் சக்கரவர்த்திகளாவது தர்ம நெறியினின்று தவறினார்களென்றும், அரசனும் தாழ்மைபவர்களை யுற்றனனென்றும் ஏற்பட்டதேயில்லை. இப்போது யார் செய்த தீமையாலோ பழியுறா இந்நாட்டுக்குப் பழியுறுங் குறிகள் தோற்றுகின்றன. வள்ளாலே, எமதுள்ளம் நடுங்குகின்றது. காரியத்தின் போக்கையறிந்து தெரிவிக்கின்றோமேயன்றி வேறல்ல. தமது இன்ப துன்பங்களிரண்டிற்கும் நாங்களும் ஈடுபட்டிருக்கின்றோம். ஆகையால் எம்மை இன்னும் நெடுநாள் காக்கும்பொருட்டாவது இச்சூதில் மனஞ் செலுத்தாது அதனிடத்துண்டான விருப்பை யொழித்தருளவேண்டும்" என்றனர்.

நளன் மந்திரிமார்கள் உரைக்கும் மொழிகளைப் பொன்னே போல் போற்றும் இயல்புடையனேனும் அப்போது கலியின வயத்தன ஆனமையால் அவர்கள் வார்த்தைகளை வெறுத்து அவர்களை நோக்கி "நும்மை யிதுகாறும் எனக்குற்ற நண்பரென்றும், எக்காலத்தும் என்னை ஒட்டி உறும் உறவென்றும், நான் வழுவுங் காலத்தில் எனக்குதவும் ஊன்றுகோலென்றும், எனக்குரிய இடபரந்த பூமியைப் பொதுப்பட நோக்குவதற்குற்ற உதவி நேத்திரங்களென்றும் இப்பாரிய செங்கோலைத் தளரவிடாது தாங்கும் பலவன்மை மிக்க கரங்களென்றும் நினைத்து மோசம் போனேன். மந்திரிகள், அரசனுக்குற்ற துணையாகி அவன் சத்திய நெறியினின்று பிறழாதவாறு அவனைக் காத்து சத்தியத்தை வேரூன்றி வளரச்செய்து அவன் செங்கோலைப் பாதுகாக்கும் கடமை பூண்டவர்கள். நீங்கள் சத்தியத்தின் பெருமையை அழித்தெனைக் கொடுநரகிற் புகுத்துவதற்கேதுவான பொய்யை எனக்குப் புகட்டி அதைக் கொள்ளுமாறும் வற்புறுத்துகிறீர்கள். உங்கள் தீமொழிகளுக்கினிச் செவி கொடுக்கமாட்டேன். உலகத்தில் உறவும் நட்பும் ஆபத்துக்காலத்தில் வெளியாகுமென்பது உங்களால் தெளிவாயிற்று. என அன்னத்தைப் புசித்து என்னால் பெருமையுற்ற நீங்கள் எனக்குக் கழிக்கவேண்டிய செஞ்சோற்றுக் கடனுக்காவது நன்மை புகட்ட வேண்டாமா? நான் பொய்யனாகி

உலகத்தா லிகழப்படுவதால் நமக்குறும் பெரும்பயன் யாதேனுமு
ளதோ. பஞ்சமாபாதகங்களாகிய பொய், கொலை, காமம், கள், புலா
லுண்ணல் ஆகியவற்றுள் முற்பட்டதும் மற்றைய நான்குக்கும்
பிறப்பிடமானதும், விலக்குக்கள் யாவற்றினும் மிகவும் இழிந்தது
மான பொய்யைக் கைக்கொண்டு இச்சூதை மறுத்துப் பெரும்பய
னுற்று நம்போன்ற நன்றிகெட்டவர்களைக்காப்பதிலும், பொய்யை
இகழ்ந்து இச்சூதுப் போரைப் புகழ்ந்து நீவிர் பிதற்றிய நிரபக்
கொடுமொழிகளைக் களைந்து ஆதுலனுவதே மேன்மையுடைத்து.
நான் கற்றுணர்ந்தவைகளே எனக்கு இம்மை மறுமையிரண்டிலும்
நன்மை பயக்கப் போதுமானவை. ஒருவரிடத்திலும் இனிமேல்
நான் புதிதாய்க் கற்றுக்கொண்டு அதன்படி நடந்து பெறுவதற்
கரிய பெரும்பேறடைய வேண்டியதில்லை. உலகத்தில் எவ்வகைப்
பட்டோரையும் ஒருமுறை பார்த்தவளவில் நல்லவர் கெட்டவர்
எனத் தீர்மானித்துவிடலாமென்பது நம்பத் தக்கதல்ல. எவரை
யும் அவர் சாகும் வரையில் நல்லவரெனச் சொல்லக்கூடாது.
நல்லவரெனப்படுபவர் சமயம் வாய்த்தால் நன்மையைவிட்டு நும்
மைப்போல் தீமையைக் கைக்கொள்ளுகின்றனர். அதனுலே
தான் எல்லாம்வல்ல கடவுளரும் தம்மிடத்து உண்மையன் அன்
புடையவர்களையும் கடைசிவரையில் ஐயமறப் பரிசோதித்து அவர்
பெருமையை உலகத்திற் பரவத்தக்கதாக்கிப் பின்பு மேலான
உதவியை அளிக்கிருர். நான் உங்கள் தன்மையறியாமல் அவசரப்
பட்டு உங்களிடத்தில் வைத்த நம்பிக்கையே எனக்குரிய நற்கதியை
அழிக்கும் வாளாயிற்று. எவரெவர் எவ்வெவ்விதமாகச் சொல்லிய
போதிலும் நான் புட்கரனுக்குரைத்த உறுதிமொழியினின்றும்
பிறழமாட்டேன். போரென்றால் எதுவாயினுஞ்சரிதான். இப்
புட்கரன், தன் சூதுக்கிறுதியில் போரென்னும் பேரமைத்து
அதைப்பொர என்னை அழைத்ததையும், க்ஷத்திரிய குலத்துக்
கிணமுருதபடி பொருவேன் என நான் கூறிய உறுதிமொழியை
யும் செவியாரக் கேட்டிருந்தும் அப்போரில் தலையிடலாகாதென
மறுப்பது நுமக்குத் தருமமா?

பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ
ரேழுபது கோடி யுறும்.

நும்மை நம்பி நான் உங்களை என்பக்கத்தில் வைத்துக்கொள்ளுதி லும் அனேக கோடி பகைவரைப் புகலிடமாகக்கொள்வது சிறந்த அறிவுடைமை நான் புட்கரனுக்குச் சொல்லியமொழி சத்திய மன்றோ. அதினின்றும் தவறுவது மனிதப்பிறவிக் கேற்றதோ. நானும் நும்மைப்போல் அமைச்சனாகவிருந்தால் காலத்துக்குத் தக்கபடி பேசி உள்ளே ஒன்றும் புறமே ஒன்றுமாகப் பிதற்றிக் காலங்கழிப்பேன். நான் சத்தியமே உற்றஆயுதமாயும் செங்கோலே உற்ற அமைச்சாகவும், க்ஷத்திரிய தர்மமே பெருஞ்செல்வமாகவும் கொண்டமையால் உள்ளும்புறமுமொத்து ஒரேமொழியாகப்பேசக் கடமைப்பட்டவன். இக்காரியத்தில் நீங்கள் என்னை இன்னும் மறுக்கத் துணிவீராயின் உம்மைப்போல நன்றியில்லாதவர் யாரு மில்லை யென உறுதியாகக்கொள்வேன்" என்று கடுகடுத்துக் கள்ளுண்டவன்போல மதிமயங்கித் தன்னை முற்றுமறந்து அமைச் சர் கூறிய நன்மொழிகளால் விளையும் நன்மையைக் கருதாது சூதே தனக்கினிய தவப்பேறெனக் கைக்கொண்டு ஆடத்தொடங் கினான்.

அப்போது நளன் புட்கரனை நோக்கிச் "சகோதரனே, இவ் வாட்டத்துக்குப் பந்தயம் யாது" எனக் கேட்கப் புட்கரன் "மன்னர் பெருமானே, என்றும் அழியாததும், எவரையும் மதி யாததும், எவரிடத்தினும் நிலைத்திராததும் என்போலியரிடத்து நீங்காத பற்றுடையதாகத் தன் முதுகில் சுமந்து திரியும்படியான பெருமிதம் வாய்ந்ததுமான இவ்வெருதைப் பந்தயமாக வைக்கி றேன். இது இவ்வுலகத்தில் யாவருக்கும் எளிதில் கிடைக்கக்கூடிய தல்ல. இதற்கிணையானது திரிலோகங்களிலுமில்லை. ஆகையாலி தற்கிணையாகத் தாம் வைக்கக்கூடிய பந்தயப்பொருள் தம்மிடத்தில் ஒன்றும் காணப்படவில்லையே. ஆயினும் உள்ளதைக் கொண்டு திருப்தியடையவேண்டுமேயல்லது அதிக ஆசைப்படுவது தகாது. ஆகையால் தமக்குரிய பூமி முழுவதும் பந்தயமாக வைத்தால் ஒரு

வாறு மனதுக்குச் சமாதானமாக இருக்கும். ஆட்டம் துவக்குவ வதற்கும் உற்சாகமுண்டாகும்,” என்றான்.

நளன் கலியின் வசப்பட்டபோதே அவன் கைக்குரங்காகிச் சூதாகிய கள்ளுண்டு புட்கரனாகிய பேயும்பிடித்தபடியால் நன்மை தீமை என்பவற்றை உணராது புட்கரன் கூறிய கபட வார்த்தைகளுக்கிணங்கி, மாத மும்மாரி பெய்து வளப்பம் மிகுந்து மாதவரும விரும்பும் மாக்ஷிமை தங்கிய பொன்விளையும் பூமி முழுதும பந்தயமாக வைத்து ஆடத் தொடங்கினான்.

கலி, நளன் எப்போது சூதாடப் புகுவானெனச் சமயம் பார்த்துக்கொண்டிருந்தவனாகையால் இப்போது நளன் சூதுக்காய்களைப் பற்றத் துணிந்தவுடனே தான் அக்காய்களின் உருக்கொண்டு நளன் அக்காய்களை உருட்ட உருட்டப் புட்கரனுக்கே வெற்றி உண்டாகும்படி உருண்டுருண்டு டாண்டான. அதனால் நளன் முன்பின் பாராமல் வெறிப்பிடித்தவனைப்போல நாடு, நகரம், யானை, குதிரை, தேர், காலாள், பொன், பொருள், ஆடை, ஆபரணம் முதலிய யாவற்றையும ஒன்றன் பின் ஒன்றாக வைத்துத்தோற்று நிற்கக்கூடத் தனக்குச் சொந்தமான இடமில்லாமலும செப்புக் காசும் தனதெனக் கைக்கொள்வதற்கின்றி வெறுங்கையோடு தன் அழகிய சிம்மாசனத்தைவிட்டுக் கீழே இறங்கினான்.

பரிதாபம்! ஏக சக்ரேசுவரனாய், ஆக்கினா சக்கரங்கொண்டு சத்தியமே நிலைத்தெனக் கைக்கொண்டு புகழ்பெற்ற நிஷத மன்னர்களில் ஒருவனாய்த், தேவர்களும புகழும் பெருமையுற்றவனாய் அளவிடற்கரிய செல்வமிகுந்தோனாய்ச் சக்ரவர்த்தியெனப் பேர்படைத்த நளனே சூதில் ஆழ்ந்து எல்லாவற்றையுமிழந்து ஆதுலனானானெனில், சில பணக்காரர் எனப் பேர்படைத்தவர்களும அற்றைக்கூலிக்கு வேலை செய்து பிழைப்பவரும் சூதாட்டத்தில் மனஞ்செலுத்தி அதுவே தொழிலாகக்கொண்டு அதில் ஆழ்குவாராயின அவர் நிலைமை என்னவாகுமெனச் சொல்லவும வேண்டுமோ. அவர்களுக்கென்றே கருணாலயமாகிய பெரியோர்கள் இவ்வித நிறைபெற்ற செல்வ ஊற்றுப் பெருமையுடையவரும் சூதினால்,

வறுமையுற்றனர் என்ற கதைகளை அருளோடு வெளிப்படுத்தி
இருக்கிறார்கள். இவற்றைக்கொண்டும் தமது அறிவாலும் சூதின
தீமையை உணராது சூதாடுவோர் தம்மிடத்துள்ள சிறு பொருளை
யும் அச்சூதுக்கடவுளுக்குக் காணிக்கையாகக் கொடுத்து உடலை
மூடக் கந்தையுமின்றிக் கையாற் பொத்தி அக்கடவுளையே தியா
னிக்கத் தியானிக்க அச்சூதாக் கடவுள் மனமிரங்கித் தன் அருட்
கண் சாத்தியவுடன் உண்ண உணவுமின்றி, இரப்பதே தொழி
லாகக் கொண்டாலும் பலியிடுவாரின்றி, மானமழிந்து மதிகெட்டு
போனதிசைகளிலெல்லாருக்கும் கள்ளராய், எழ்பிறப்புந் தீராயத்
தம்மிடத்துச் சிறிது பொருளுற்ற காலையில் அன்புமிகுந்து அடியா
ளெனப் பேர்கொண்டு அடிபணிந்து வணங்கிய தமக்குரிய மாதர்
கட்கும் பொல்லாதவராகிப் பொல்லாத நரகுக்காளாகின்றனர்.
இத்தகையோர் அறிவு நூலினுஞ் செம்மை.

நளன் தனது தெய்வத்தன்மை பொருந்திய ஆசனத்தைவிட்
டுக் கீழே இறங்கியவுடன் புட்கரன் தன் நிலைமை மறந்து நகைத்
துச் சகோதரனே! "இப்போது நான் உன்னைப் பார்த்தால் அழ
காக இருக்கிறது, உன்னை அரசன் என்று சொல்வதற்குரிய
உரிமை யாவையும் நீ இழந்தாய். ஆயினும் உன் முகத்தில் வாட்
டம் என்பதே காணப்படவில்லை. எதையும் தான் கஷ்டப்பட்டுச்
சம்பாதித்தாலல்லவோ அதை இழந்ததாலாகிய துக்கம் பிறக்கும்.
முன்னோர்கள் தேடி வைத்ததைக் கொண்டு அலங்காரம் செய்து
கொண்டமையால் அப்பொருளின் பெருமையை யறியவில்லை.
தான் தேடாப் பொருளுக்கு விலையேது? மதிப்பேது? இச்சூ
தாட்டம் வில் அம்புகளை வைத்துக்கொண்டு எதிர்த்தோரை இரக்
கமற்று முன்பின் பாராமல் வேற்றுமையின்றிக் கொல்லும் கொ
லைத் தொழிலல்ல. அக்காரியம் யாருக்கும் எளிது. சூதுப்போர்
அறிவான்மிகுந்த மதியூகிகளுக்கே உரியது. இப்போரில் உன்
னைப்போன்றவர் எக்காலத்தும் வெற்றியடையமாட்டார். நீ உன்
செல்வச் செருக்கால் வழியோடு சென்ற என்னை அழைத்து எல்
லாவற்றையும் என்னிடத்துத் தோற்றனை. இனிமேல் இந்நாட்
டில் ஊசி குத்தும் பாகங்கூட உனக்குச் சொந்தமில்லை. உன்னால்

ஆளப்பட்ட பூமி நால்வகைச்சேனை முதலிய யாவற்றுக்கும் நானே தலைவன். நிடதநாட்டுக்குச் சக்கரவர்த்தி புட்கரனாகிய நான். இனி இந்நாட்டில் செல்வமெல்லாம் என் ஆணையே. நானுன்னைப்போல் அரசாண்டு மந்திரிகள் கூடப் புத்திசொல்லும்படியான நிலைமையில் என்னை நான் வைத்துக்கொள்ள மாட்டேன். புட்கர னென்றால் எமனாக நினைக்கச் செய்வேன். இந்நாட்டின் வளப்பம் இனி நன்கு விளங்கும். இராசசியம் ஆள்வதென்பது எல்லாரும் தெரிந்து கொள்ளக்கூடியதா. அதற்கென்று சிலர் பிறப்பார்கள். அவர்களுக்கு இயற்கையாகவே அந்த சாமர்த்தியம் உண்டாகிவிடும். அவ்வகையோரில் நான் ஒருவன். இது ஒருவர் சொல்லிக் கற்றுகொள்ளக் கூடியதல்ல. சற்று நேரத்துக்குமுன் சக்கரவர்த்தியாகவிருந்த உனக்கு இப்போது ஒரு சிற்றரசனுக்குள்ள மதிப்புக் கூட இல்லை. எப்போதும் புத்திமான் பலவான்தான். அறிவுடையோர் தாழ்மையுற்றாலும் அதி விரைவில் மேன்மையுறுவார் என்பதை என்னைப் பார்த்துத் தெரிந்து கொள். அறிவிலார் கோள்வலியால், நாயபெற்ற தெங்கம்பழம்போல், மேன்மையுற்றாலும் அஃது அவற்குத் தக்காமையால் தமதுபழைய நிலைமையை அடைவார் என்பது உன்னைக்கொண்டு நீ நன்றாகத் தெரிந்து கொள்ளலாம். மனிதர் எத்துணைப் பெரும் பேறடைந்தாலும் கருவங்கொள்ளக் கூடாது. அதை அடைந்தவன் நாயினுங்கடையாவான். உன்னைக் கெடுத்ததுவும் அதுவே. இப்போது உனக்குரிமையானவற்றுள் எஞ்சி நிற்பது ஒன்றுண்டு. அதாவது உன் மனைவி. அவள் உன் இன்ப துன்பங்களுக்கும் இம்மை மறுமைக்கும் உன்னைவிடாது பற்றி நிற்பதற்குரிமையுடையவள். உன் இஷ்டத்துக்கு முற்றிலும் சிறைப்பட்ட அடிமை. அவளையும் பந்தயமாக வைத்து ஒரு ஆட்டம் ஆடினால் அவளுடைய கற்புடைமையினாலாவது நீ வெற்றியடைந்து அதுமுதல் நீ இழந்தவற்றை துக்வொன்றாகப் பெற்றாலும் பெறலாம். அவளுடைய கற்பையும் இதனாலே அறிந்துகொள்ளலாம்.'' என்று புன்னகையோடு சொன்னான்.

# நகர் நீங்கு படலம்.

என்றலு முறுவலித் திசைக்க லாதன
வொன்றுநீ யுரைத்திட லுலங்கோ டோளிணாய்
வென்றுநின் னகர்வயின் மேவலே னெனாத்
துன்றுகா னகஞ்செலத் துணிதன் மேயினான்.

புட்கரன் கூறிய மொழிகளைக்கேட்ட நளன் நகைத்து, அற்பருக்கு வாழ்வுவந்தால், அர்த்தராத்திரி குடை மேலாகுமென்றானே, என்றபடி கனவிலும் கண்டறியாத பெருஞ்செல்வமானது ஒரு நொடியில் இப்புட்கரனை அடைந்ததால் தன நிலைமையை முற்று மறந்து தன் நாவினின்று வெளிப்படும் வார்த்தைகளின் பொருளறியாது பேசுகிறான். அவற்றை மனதுட்கொள்வதிற் பயனில்லை. மூடரை முழுமூடராக்கி உலக இன்பத்திலேயே மூழ்குவித்து மீளா நரகில் புதைத்து மூடுவதில் செல்வத்துக் கிணையானதும வேறொன்றுண்டோ? எனத் தன் மனதுட்கொண்டு புட்கரனை நோக்கிச் "சகோதரனே, உயர்ந்தோர் காலகதியால் கேட்டையடைந்தாலும் அவர்களுக்குரிய உயர்ந்த குணம் அவரை விட்டு நீங்காது ஆகையால் தகாத வார்த்தைகளைச சொல்லுவது தகுதியன்று. அவ்வாறு சொல்வதால் அவற்றைக் கேட்பவர்க்கு யாதொரு குறையுமுண்டாகாதெனினும் அது அவற்றைச் சொல்லுபவரது அற்பத்தன்மையை வெளிபடுத்தும். உலகத்தில் மனிதன் தேடவேண்டியவற்றுள் சிறந்தது செல்வமல்ல. அது ஒரு அற்பத் துணைககருவி. அதை நல்வழியில் செலவிட்டு இம்மையில் அறம், இன்பம் என்னும் இரண்டையும் மறுமையில் வீடுபேற்றையும் அடையவேண்டும். இவற்றை அடைய முயலாதவன் செல்வம் பெருக்கு அவனுடையதேனும் உண்மையில் அவ்வழியுள் செலவழிக்கும் வேறு பிறருடையதாகும்; அன்றேல் பம்புக்கும் (சூனியம்), பேய்க்கும், பரத்தையர்க்கும், வம்புக்கும், கொள்ளைக்கும், கோவுக்கும், கள்வர்க்கும், தீக்குமாகும். அவனும்,

உற்றிடு நிதியின் குப்பை யொழியுமென் றுதவாலுத்தர்
அற்றமி றுயர்செய் சூசிமுகநர கெய்துவாரால்

என்றபடி, தம்மிடத்துள்ள மிருந்த பொருளானது பிறருக்குக் கொடுத்துதவுவதால் நாளுக்குநாள் குறைந்து போய்விடுமென ஒரு பைசாவைக் கூடப் பிறருக்குக் கொடாமல் சேர்த்துக் கொண்டே பணங்காத்த பூதமாகிய பொருளாசைக்காரர் இடைவிடாது துன்பத்தைச் செய்கின்ற சூசிமுகம் என்னும் நரகில் அழுந்துவதுபோல, அந்நரகில் அழுந்தி வருந்துவார். கடவுள் ஒருவரிடத்துள்ள பொருளை மற்றொருவரிடத்தில் போக்குவதும் அவருடைய கருணையின் மிகுதியே. ஏனெனில் உத்தமர்களிடத்தில பொருளைக்கொடுத்துப் பலவித துன்பங்களுக்கு ஆளாக்கி அதனால் அவர்கள் மனத்தை வருத்துவதைப் பார்க்கச் சகிக்கமாட்டார். கடவுள் பொருளற்றவரிடத்தில் நீங்காத கருணையுடையவர். ஏனெனில் பொருளற்றவர்கள் இடைவிடாது கடவுளைத் தியானித்துக்கொண்டிருப்பார். அவர்களுக்குப் பொருள் போய்விட்டதே என்ற துக்கமும் உண்டாகாது. சனி தொலைந்ததே யென்று சந்தோஷப்படுவார்கள். பொருளாசை பிடித்தவனுக்கே பொருள் சேரும். அப்போது தான் அவனுக்கு இம்மையில் யாதொருவித இன்பமுமின்றித் தீமை மிகுந்து மறுமையில் பொருளாசை பிடித்ததற்குத் தகுந்த தண்டனையும் கிடைக்கும். அற்பர்களுக்குப் பொருள் சேர்ந்துவிடுமாயின்,

பூசுவது செஞ்சாந்தம் பூணுவது நெட்டங்கி
கூசுவது நல்லோரைக் கூடுவது தீயோரைப்
பேசுவது மாமாயம் பேணுவது பேரகந்தை.

என்றபடி தீச்செயல்களுக் கிருப்பிடமாவதன்றிக் குறையுற்றோர்தம் முன் சென்று அவருடைய குறைவுகளைச்சொல்லி வாய்விட்டுக் கதறி யாசித்தாலும் அக்கீழ்மக்கள் காதுகேட்காது; கண் தெரியாது; வாய் பேசாது ஆசனத்தோடு சாத்திவைக்கப்பட்ட சவமாவார். இவர்களுக்குக் கடவுள் எதற்காகப்

பொருளைக் கொடுத்தார் என்பது சிறிது தெரிந்திருந்தால் யாசக ரைக்கண்டபோது தரிக்கப்பட்டமரம்போல் அசைவற்றுச்சாய்ந்து கிடப்பாரோ. ஒருவனுக்குச் செல்வம் சேர்ந்தால் அது தன்னைப் பரிசோதிப்பதற்காகக் கடவுளால் கொடுக்கப்பட்டதென நினைத்து அப்பொருளைத் தனக்குரியதெனக்கருதாது பிறர்க்கே உரியதென உறுதியாகக்கொண்டு அப்பொருளினால் நற்கருமக் குறையுற்றோர்க்கும், நல்லாற்றில் ஒழுகுவோருக்கும் மனம் வெறுப்பக்கொடுத்துத் தானும் நல்வழியிற் செலவிட்டுப் பயன் பெறவேண்டும். பொருளீட்டுவதும் தருமவழியாகவே யிருக்கவேண்டும். பிறரை வஞ்சித்துக் கண்ணுக்கு அரூபியாகவே இருந்தாலும் எங்கும் நிறைந்து எல்லாவற்றையும் அறியும் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதை மறந்து, செய்யத் தகாதவற்றைச் செய்து பொருளீட்டுவோர்க்கு விதிக்கப்பட்ட நரகம் எழுவகை நரகங்களிலும் மிகக் கொடுமையானது.

நெஞ்சம் வைத்து நிதிமுத லாகவே
வஞ்சமற்ற பிறர்பொருள் வவ்வினோர்
நஞ்சமொத்த நமன்படர் தள்ளவோர்
தஞ்சமற்ற தாமிச்சிரஞ் சார்குவார்.

அந்நரகின் பெயர் தாமிசிரம் எனப்படுகிறது. சகோதரனே, இந்நரகினின்று தப்புவது அசாத்தியமான காரியம். வஞ்சனையால் கைக்கொண்ட பொருட்செருக்கால வரம்புகடந்த ஒழுக்கத்தை யுடையவராய், இறத்தல் என்பது ஒன்று இருக்கிறதென்றும், அப்போது மானிடராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் இப்பிறவியிற் செய்த தீமைகளை ஒரு உத்தம நியாயாதிபதியிடத்தில் ஒப்புவித்து அத் தருமனால் அவரவர் நன்மை தீமைகளுக்குத் தக்கவாறு பலனடைய வேண்டியிருக்குமே என்பதையும் மறந்து, நிதியே தெய்வம், தன் பதியே சுவர்க்கம், விதியே தன்னிஷ்டம், சதியே தன் விருப்பம் என மதியின்றிப் பாய மூட்டையைக் கட்டிக் கொண்டு பெருவாழ்வுற்றனர் போல் களித்துத் தமது காலத்தைக் கழித்து முடித்துக் காலன் வரவை எதிர்பார்க்குங்கால்

இவர்கள் அதுசாறும் செய்தப் பாபங்களே பலவுருவெடுத்தாற் போலக் கைகளில் கத்தி, ஈட்டி, அரிவாள், ரம்பம், உலக்கை, சக்கரம் முதலிய ஆயுதங்களோடு புகையுங்கண்ணும் தொங்குகின்ற நாவும், மலைக்குகை போன்ற நாசியும், கோரப்பல்லும், எரியுந்தீயின் கொழுந்தைப்போன்ற செம்பட்டை மயிரும், பருத்து மாரிகால அமாவாசை இருள்போன்ற உடலையும உடைய யமபடர்கள் 'இக்கொடும் பாவியை விடாதீர்கள், குத்துஙகள், வெட்டுங்கள், கட்டுஙகள்' என்று அட்டகாசம செய்துகொணடு தமமையணுகும்போது நடுநடுங்கி அவர்களைப் பார்தத கண்ணும் பஞ்சடைய, நாத்தமொறக கைகால் சோர்ந்து, கண்களினின்று இடைவிடாது நீர்வழிய, வாயினின்று நுரை தள்ளினாற்போலக் கபம் மேலிட்டுக் கலகலவென்னத் திகில் மிகுதியால் உணவில் மனஞ் சிறிதும் செல்லாது வாயிலூற்றிய சிறுகாண்டிப்பாலும் உட்செல்லாது கடைவாய்வழிசசோர, உயிரானது எநதவழியாகத்தப்பி ஓடலாமென்று ததளிக்க ஆததருணததில் 'ஐயோ, மனிதப்பிறவியின் முடிவையறியாது, எனக்கு மேற்பட்டவா ஒருவருமில்லையென நினைத்து அடாதனவெல்லாம் செய்து தலைகால் தெரியாது தருக்கி நின்றேனே. இப்போது இவருக்கு என்னவழி சொல்லுவேன், என மனம புண்ணாகிப் பெருமூசசெறியும்போது ஓடுவதற்கு வழிபார்ததுக் கொண்டிருந்த உயிா அப்பெருமூச்சோடு சேர்ந்து வெளிவா அதற்கென்று கணணுங கருததுமாகக் காத்திருந்த யமபடர் அதைக்கைக்கொண்டு தமது தலைவனாகிய தர்மனிடத்தில் கொட்டித் தள்ளிக்கொணடுபோய நிறுத்த, மேலே ஒற்றை மயிரால் கட்டப்பட்ட பெரியமலையும் கீழே என்றும் அவியாத நெருப்பாறும் இவற்றிற்கிடையில் இடப்பட்டு அநதரமாக விளங்குகின்ற தர்ம சிம்மாசனத்தில் வீற்றிருக்கும தென்றிசைக் கோன் தன் கையிலிருக்கும் காலதண்டத்தைத தன்முன் நிறுத்தப்பட்ட சூக்ஷ்மசரீரத்தோடுகூடிய அப்பாபியின் தலையின் வைத்தவுடனே உன்னதப் பிரதேசத்திலுள்ள ஏரியின் கரையினுடைய விளிம்பு வரையில நீர் நிறைந்திருக்கையில் அதன் அடிப்புறத்தில் ஒருசிறுமடை திறநதுவிட்டாற்போல் மடமடவென்று தாம்செய்த பாபங்களில் ஒன்றேனுங்குறையாதபடி தமது நாவினின்று வெளிப்

படை அத்தருமன் 'இக்கொடும்பாவிகளை மறு உத்தரவு வரையில் யிக்கொடிய தாமிச்சிரநரகில் போட்டு வதைத்து வாட்டுங்கள்' என்று ஆஞ்ஞாபிக்கிறான். அந்தயமபடர்கள் அப்பாபிகளைச்செக்கி லிட்டாட்டியும், ரம்பத்தாலறுத்தும்; வாளால் குத்திக்கோத்து நெருப்பில் வாட்டியும், வெருட்டிப் பார்த்த கண்களில் பழுக்கக் காய்ச்சிய இருப்புச் சலாகையைச் சொருகியும், கேளாதிருந்த காதுகளில் ஈயத்தைக்காய்ச்சி ஊற்றியும், பேசாதிருந்த நாவை அறுத்தும், அசையாதிருந்த உடலை உரலிலபோட்டு உலக்கை யாற் குத்தியும் படாதபாடு படுத்தும்போது 'ஐயையோ, பாவஞ் செய்தாலிவ்வளவு கொடிய துன்பத்தில் ஆழ்ந்து வருந்தவேண்டு மென்று தெரியாமல் போயிற்றே, மதிகெட்டுச் செல்வச்செருக்கி லாழ்ந்து அதினின்றும் கரையேறும் வழியறியாது விழித்த தற்கு இதுதானோ பயன்? இத்தண்டனை பொறுக்கமுடியவில்லையே, எப்போது தொலையுமித்துன்பம். இனி வரும் பிறவி எப்போது கிடைக்கும். இன்னும் எவ்வளவுகாலம் இந்நரகத்தில் வருந்த வேண்டி யிருக்குமோ தெரியவில்லையே. அறியாமற் செய்த பிழைகளைப் பொறுத்தருள வேண்டுமென்று கைகூப்பிப் பல முறை தெண்டனிட்டுக் கெஞ்சினாலும், இனி வரும் பிறவியில் ஒழுங்கு தவறி நடப்பதில்லையென்று உறுதியாய்ச் சொன்னாலும் இத்துன்பம் ஒழிவதில்லையே போதும் போதும் இத்துன்பம் இனி பூமியில் பிறந்தால் வெகுவாகத் தருமங்களைச் செய்து முத் தியடைந்துய்யவேண்டுமேயன்றிப் பாவத்தைக் கனவிலும் நினைப் பதில்லை, கடவுளை என்றும் மறப்பதில்லை. செல்வம் பிறர்க்குத வும்பொருட்டுக் கொடுக்கப்பட்டதென்றும், அது பணமுடையவ னுக்குச் சொந்தமல்லவென்றும் அப்பணக்காரன் அப்பொருளை நல்வழியிற் செலவிட்டுவரக் கடவுளால் நியமிக்கப்பட்ட கணக்குப் பிள்ளையென்றும், திரிகரண சுத்தியாய் நினைப்பதேயன்றி வேறு விதமாக நினைப்பதே யில்லை' என்று மனத்தைத் திட்டஞ்செய்து கொண்டு இனிவரும் பிறவியின் காலத்தையே தியானித்துக் கொண்டிருக்கையில் கருணைக்கடலாகிய கடவுள் 'இப்பாவிகளுக்கு இனியாவது அறிவு தோன்றாதா' எனத் தமதருளால் ஒரு மானி டப்பிறவியைக் கொடுத்தால் மறுபடியும் அப்பொன்னாசை அற்பர்

களைவிட்டு நீங்குவதில்லை. அறிவுடையோராயின் மனத்தை அவ்வாசையின் வழிச் செல்லவிடாது தம்வசப்படுத்தி முத்தியடைகுவர். அறிவிலாப்பேதைகள் இவ்வாறே உழன்று உழன்றுவருந்துவர். ஆகையால் செல்வம் நம்முடையதென நினைக்கக்கூடாது. யாவரும் பிறருக்கு உபதேசிப்பதில் வல்லவராவர். ஆனால் தாம் அவ்வுபதேசத்தின் பயனை யடையமாட்டார். எவரும் தமது குற்றங்களைக் களைந்து குற்றமற்றவராயின் அவர்களைப்பார்த்து மற்றவர்களும் தம்மைத்திருத்திக் கொள்ளும் தன்மையடைவார். புட்கர நாசனே, என செல்வங்களை யான இழந்ததில் எனக்குச் சற்றேனும் மனத்தாங்கலில்லை. நான் உன்னை என் துன்பத்தை நீக்க வந்த கருணைக்கடலாக நினைத்திருக்கிறேனேயல்லது வேறல்ல. இந்நாடுமுழுதும் உன்னால் கவரப்பட்டதால் உனக்குச் சொந்தமென்பதற்குச சந்தேகமே இல்லை. இனி நான் இந்த நாட்டினுமிருப்பதில்லை. உன் அரசாக்ஷிககு என்னால் ஒருவிதத் தடையும ஏற்படவேண்டாம" என்றுசொல்லிக கட்டிய ஆடையுடன் மலர்ந்த முகததோடு காட்டுக்குப்போகததுணிந்தான்.

நளன் உத்தமனாகையால் அததுணைப்பெருஞ் செல்வத்தையும் தனக்குரிய சிறப்புகளுமிழந்தும் அவனுககு மனக்கவலையாவது முகவாட்டமாவது உண்டாகவில்லை. ஏனெனில் உத்தமர்கள் வாழுங்காலததில் மகிழ்ச்சியும், தாழுங்காலத்தில் இகழ்ச்சியுமடைவதில்லை. 'பரிவுமிடுக்கணும் பாங்குற நீக்குமின்' என்றபடி அவர்கள் இன்ப துன்பம் இரணடையும சமமாகவே பாவித்து ஒன்றையேனும் தமக்குரியதாககிகொள்வதே இலலை.

வைதிடினும் வாழ்த்திடினும் இன்பதுன்பம் வந்திடினும் வம்புகோடி
செய்திடினும் தன்னிலை நீணெறியார்தம் செயலென்றே தெளிவதல்லால்
செய்தவிர அவர்செய்தார் இவர்செய்தா ரெனநாடி வெறுக்கலாமோ
எய்தவர்தாம் அருகிருக்க அம்பைநோந்த கருமமென்ன இயம்புவீரே

என்றடி, எல்லாவற்றிற்கும் முதற்காரணமானவனும், யாவற்றையும் காண்பானும், காட்சியுமானவனும், எதையும் செய்வானும் செயலானவனும், அருள்வானும் அனுபவிப்பானுமாகிய முழுமுதற்கடவுளெங்கும் வியாபித்து யாவரையும் இயக்கித் திருவிளையாடல் செய்தலால் உலகின் தோற்றம் அக்கடவுளன்றி வேறல்லவென அவ்வுத்தமர்கள் நினைத்து உலகத்தால் செய்யப்படுவனவெல்லாம் அக்கடவுளின் செய்கையே என மதித்துத்தான் என்பதும் எனதென்பதும் அற்றுத் தாமரை இலைநீர்போல் உலகத்தைப்பற்றியும் பற்றாமலும் நின்று சுமக்கத்தகாத இவ்வெற்றுடல் வீயுங்கால் யாதொருபற்றுமின்றிப் பரிசுத்தமாக விளங்கிப் பற்றற்றார்க்குப் பற்றிடமாகிய பரமபதத்தையடைவார்கள். அவர்க்கு விருப்பும் வெறுப்பும் இல்லை. பகையும் உறவுமில்லை. எல்லாரும் சமானர். சந்தோஷமும் துக்கமுமில்லை சந்தோஷம் துக்கம் வெறுப்பு விருப்பு முதலியன மனிதராலேயே உண்டுபண்ணிக் கொள்ளப்படுகின்றன. அவற்றிற்கு மூலம் பற்று. அது அகப்பற்றுப் புறப்பற்று எனஇருவகைப்படும். மானிடர் அப்பற்றுக்களைத் திருப்திசெய்தகாலையில் இனிப்பும், இல்லாவிடின்கசப்புமடைவர். அவற்றை ஒழித்தக்கால் மனிதனது தோற்றத்தை ரேந்துக்கு ரோம் மாற்றும் உலக இன்பதுன்பங்களும் ஒழியும், அவை ஒழிந்தக்கால் வினைநீங்கும். வினைநீங்கப் பிறவிநீங்கும். பிறவி நீங்கச் சாயுச்சிய பதவிகிட்டும். சாயுச்சிய பதவியே பேரின்பம். மற்ற உலக இன்பங்களெல்லாம் சிற்றின்பமெனப்படும். இதில் மனஞ்செலுத்துவோர் சிறியோர். இச்சிற்றின்பங்களை வெறுத்தவரே பெரியோர். அவர்க்கே உரியது பேரின்பம். அவர் எத்துணைப் பொன்னுடையரேனும் பொருளுடையரேனும் அவற்றைப் பொருளாக நினைப்பதில்லை. அவர் எல்லாமிழந்து ஏகமாய் நின்றேனும் அதையும் குறைவாக நினைப்பதில்லை. தமது விரல்களினின்று களையப்பட்ட நகம்போல அப்பொருளிற் பற்றற்று நிற்பர். நளனும் அவ்வாறே எல்லாவற்றினும் பற்றற்று முகம் வாட்டமின்றி எப்போதும்போல் தமயந்தியின் அந்தப்புரத்திற்குச் சென்றான்.

கற்றையங் கவரியுங் கால்செய் வட்டமுங்
கொற்றவெண் கவிகையு மின்றிக் கோதைவேல்
மற்றடந் தோளினான் வருதல் கண்டலும்
உற்றதை யென்கொலென் றுள்ளத் தெண்ணினாள்.

புதுவேடங்கொண்டவன்போல் ஆடையாபரணமுதலிய அரசகோலத்தை நீக்கிக்கட்டிய ஒற்றை ஆடையோடு, சாமரை இரட்டுநர் ஆலவட்டம் வீசுவோர் குடைதாங்குவோர் முதலியோரின்றித் தன்னந்தனியாகத் தன மாளிகைக்கு வந்துகொண்டிருக்கும் மன்னனை தமயந்தி திடுக்கிட்டு "இஃதென்னபுதுமை. எனதுவள்ளல், இதுகாறும இக்கோலத்தோடு என் மாளிகைக்கு வந்ததைக் கண்டறியேனே; மனம்பதருகிறதே. வலதுதோளும் வலதுகண்ணும் துடிக்கின்றனவே; என்னையறியாமல்துக்கம நெஞ்சடைக்கிறதே; யாதேனும அசுபங்கள் நேரிட்டிருக்கின்றனவோ; அன்றி எனக்கே ஏதேனும் வராததீங்கு வரப்போகின்றதோ; மன்னன் இங்குவருவது மந்திரிமார்களுக்கும் மற்றோருக்கும் தெரியாதோ; என் மன்னனை விட்டு மந்திரிகள் நீங்கிய காலமும் உண்டோ; அவையவர்கள் தம்முடைய தந்தையினும் மேலாகக் கருதியிருந்தார்களே; ஒருகால் அரசன் அவர்களெல்லோரையும் வெறுத்து நீக்கினரோ; விளைந்தது இன்னதென்று தெரிந்துகொள்ளக் கூடவில்லையே; பாவியாகிய என்னுடைய காதுகள் என்ன விபரீதத்தைக் கேட்கப்போகின்றனவோ அறியேனே" என்று தத்தளித்துக்கொண்டிருக்கையில் நளன் தமயந்தியின் மாளிகையை அடைந்தான்.

தமயந்தி, வழக்கப்படி மிகவும் வணக்கத்துடன் நளனை வணங்கி அவனுடைய புதுமையான தோற்றத்துக்குரிய காரணத்தைக் கேட்டால் ஏதாவது மிகுந்த துயரத்தை விளைக்கும் விஷயங்கள் தன் காதிற்படுமோ என அஞ்சி ஒன்றும் பேசாமல் நளனைப் பார்த்துக்கொண்டே நின்றுகொண்டிருந்தாள். அதையுணர்ந்த நளன் தமயந்தியைநோக்கிப் "பெண்மணி, நான் புட்கரனோடு சூதாடி நாடு நகரம் முதலிய யாவற்றையுந் தோற்று

இந்நாட்டில் எள்ளத்தனையிடமும் இப்பெருஞ்செல்வத்தில் காதற்ற
ஊசியுங்கூட எனக்குச் சொந்தமில்லாமல் அவனுடையதாக்கி
விட்டேன். எனக்குச்சொந்தமானவர்கள் நீயும் நமது குழந்தை
களுமே. உனக்குரிய தோழிமார்களும் இப்போது உனக்கு உரி
யவரல்லர். நான் அவர்களையுந் தோற்றுவிட்டேன்" என்றான்.

இதைக்கேட்ட தமயந்தி உடல் நடுங்கித் திடுமெனக் கீழே
விழுந்து கண்ணீர் அருவிபோலோட வாய்குழறிப் பேச வகை
யறியாது, எதிரிற்போனைக் காணுதவாறு கண்ணீர் கண்ணொளி
யை மறைத்துப் பெருக்கெடுக்க, அக்கண்ணீரைத் துடைக்கவும்
கைபெழாது தவித்து அரசனது செந்தாமரைபோன்ற முகத்தைப்
பார்த்து "வள்ளலே, தமக்கும் இக்கதி நேரிடலாமோ? இது
யாரிட்ட சாபமோ, எவருடைய கோபமோ; யானிழைத்த
பாபமோ. என்னைப்போன்ற மகா கொடும்பாவி உலகில் யாரு
மில்லை. நான் பிறந்தநாள் முதல் துக்கத்துக்காளானேனே யல்
லது சுகப்பட்டதில்லை. எனக்கு விவாகம் ஆகும்வரையில் எனக்
குத் தகுந்த நாயகன் கிடைக்கவேண்டுமே என்று எனது பெற்
றோர்களை வருந்தும்படியாகச் செய்தேன். நான் புகுந்த இடத்தி
லும் துரும்புகூட இல்லாமல் துடைத்தேன். இத்தோஷியைக்
கைப்பிடித்ததினு லல்லவோ தமக்கும் துயரம் உண்டாயிற்று.
சுயம்வரமண்டபத்தில் தமக்கு மாலைசூட்டியதைக்கண்ட என்பிதா
வும், அக்கூட்டத்துள் ஏமாறாமல் தம்மைக்கண்டு கணவனாகக்
கொண்ட நானும் மனம் பூரித்தோமே. எங்கள் பூரிப்புக் குலைந்
ததே. இக்கேடு தேவர்களால் விளைந்ததோ. இப்போது அவர்
கள் மனம் குளிர்ந்ததோ. என் நீங்காக்கவலை தம்மை மணந்த
அன்றுமுதல் நீங்கியதென மனங்களித்திருந்தேனே. நான் களிப்
படையலாகாதோ, அது தெய்வத்துக்கும் பொறுக்காதோ. அத்
தெய்வத்துக்கு நானிழைத்த தீங்கு யாதாயினு முண்டோ. உல
கில் நான் ஒருத்திதானா அத்தெய்வத்துக்குச் செய்யத்தகாத
பிழை செய்துவிட்டேன். இப்பிறவியைக் கண்ணுங்கண்ணீருமாக
நிற்கத்தான் எடுத்தேனோ. இப்பெருவாழ்வுக்குத் தகுதியில்லாத
நான் இதை அடைந்தால் இது எனக்குத் தக்குமோ. அவரவர்
நிலைமைக்குத் தக்கபடி அவா ஏற்பட்டால் அது ஒருவேளை கை

கூடினாலும் கூடும். அளவுக்கு மிஞ்சி ஆசைப்பட்டால் உள்ளதும் போகும் என்பதற்கு நான் உலகுள்ளளவும் உதாரணமாயினேனே. நான் யாதேனும் கற்புநிலை தவறினேனோ. அன்றி என் பெற்றோர்களின் தவக்குறைபோ. அப்பாவியின் வயிற்றிற் பிறந்ததால் எனக்கு இக்கதி நேரிட்டதோ. ஏனெனில் மாதா பிதாக்கள் செய்தது மக்கள் தலையிலல்லவா விடியும். வீணாகப் பிறரை நோவதில் யாது பயன். முன்செய்ததீவினை இப்பிறப்பில் வந்து மூண்டதுவே என்றபடி முற்பிறப்பில் எவர் செல்வதில் பொறாமையுற்றேனோ. அதன்பயன் இப்பிறப்பில் என்னைககண்டு யாவரும் நகைக்குமபடியாயிற்று' என்று கதறி அழுவதைககண்ட நளன் சற்று மனங்கசிந்து அவளுக்கு ஆறுதல் சொல்லத் தமையந்தி, ஊழ்வினைப்பயனை வெல்வதற்கு வேதமுதலாம் எனைத்தாய நூலகத்துமில்லை. ஊழ்வினையை யனுபவித்தாலன்றி அது நீங்குவதில்லை. ஆகையால் நாம் கலங்குவதால் அரசன் மனம் இன்னும் அதிகமாகப் புண்படுமேயன்றி அதனால் அடையும் பலன் யாதுமில்லை" எனச சற்று மனந்தேறினாள்.

பின்பு, நளன் தமையந்தியை நோக்கி "நீ மேலும் மேலும் முன்னிருந்த நிலைமையை நினைதது நினைத்து வருத்தப்படுவதிற் பயனில்லை. காலத்துக்குத் தக்கபடி நாம் நம்மைச் சரிப்படுத்திக் கொள்ள வேண்டுமேயன்றி நமது எண்ணப்படி காலத்தைத் திருப்பமுடியாது. காலத்துக்கு உயர்ந்தோனென்றும் இழிந்தோனென்றும், சத்தியமென்றும் அசத்தியமென்றும், நன்மை என்றும் தீமையென்றும் வலியோரென்றும் மெலிந்தோரென்றும், முதியோரென்றும் இளையோரென்றும் பாகுபாடில்லை. அது ஊழ்வினையின் கால்வழிப் பிறப்பதால் அதற்கு எல்லாம் சரிதான். ஆகையால் இப்போது நானடைந்திருக்கும் நிலைமை, புதுமையானதல்ல. உலகத்தில் மானிடராகப் பிறந்த எல்லோருக்கும் மிகச் சாதாரணமானது. இதற்காக வருந்துவோர் அறிவீனராவர். நீ உன் துக்கத்தை ஒழித்து நமது அருமைக் குழந்தைகளாகிய இந்திரசேனனென்னும் பிள்ளையையும் இந்திரசேனை (நளாயணி) யையும் அழைத்துக்கொண்டு உன் தந்தை நகராகிய குண்டின

புரத்துக்குச் செல். நான் காட்டுக்குப் போகின்றேன்" எனப் புறப்பட்டான்.

இக்கொடுஞ்சொல் காதிற்பட்டவுடனே தமயந்தி, ஆழ்ந்த புண்ணில் பழுக்கக் காய்ச்சிய சலாகை நுழைந்தாற்போல் பதை படைத்துத் தன் இருகாதுகளையும் பொத்திக்கொண்டு "தரும மூர்த்தியே, இக்கொடுஞ்சொற்களைக் கேட்பதற்குத்தானே காதைப் படைத்தேன். இக்காதுகள் என்ன பாவஞ் செய்தனவோ. இச் சொற்களைக் கேட்ட காதுகளையுடைய யான் இனி இவ்வுலகில் நிற்கத்தகாது. இப்பூமியும் என்னைப் பொறுக்கத் தகாது இவற் றைப்போன்ற கொடுஞ் சொற்களையும் என்னால் கேட்கத் தகாது. கேட்பினும் இவ்வுலகில் வாழத்தகாது. வாழினும் நான் கற்புடை யாளென்று சொல்லத்தகாது. கற்புடைய பெண்களுக்குக் கண வனிலும் மேலானதும் அக்கணவனை விட்டுப் பிரிதலினும் கொடி யதும் வேறொன்றுளதோ. பதியினுடைய தேகத்தில் ஒரு பாதி பத்தினியல்லவோ. பார்வைக்கு மாத்திரம் இரண்டு உடலாகத் தோற்றமேயன்றி உண்மையில் வேறாகப் பிரிந்தவர்களாவார் களோ. ஒருடலில் ஒரு பாகம் சுகப்படுவதும் மற்றொரு பாகம் வருந்துவதுமுண்டோ. சுகம் துக்கம் இரண்டையும் இரண்டு பாகமும் அனுபவிக்குமேயல்லது ஒன்று மற்றொன்றோடு மாறு படுவது கண்டதில்லை. அதனாலேயே மனைவி தன் கணவனு டைய இன்ப துன்பம் யாவற்றிற்கும் உரிமையுடையவளென்று சொல்லப்படுகிறாள். இவ்வுண்மையைத் தானே பரமசிவன் அர்த்த நாரீசுவரத் திருவுருக்காட்டி விளக்கினார். கணவனுடைய சுகதுக்கங்களுக்குப் பாத்தியப்படாத பெண் கணவனுடைய உட லில் பாதியாக மாட்டாள். அதனால் அவள் அக்கணவனுக்குப் பத்தினியுமாகமாட்டாள். காமக்கிழத்தியரில் ஒருத்தி யென்றே சொல்லவேண்டும். இக்கருத்தை மனத்துட்கொண்டு தான் என் தந்தை என்னைத் தமக்குத்தாரை வார்த்துக்கொடுத்த போது 'உமையும் உமாபதியும்போல்வாழக்கடவீர்' என்றாரே. அப்போது வாயை மூடிக்கொண்டிருந்தீர்களே. மேலும் தாம் காட்டுக்குச் சென்று கல்லிலும் முள்ளிலும் காட்டு மிருகங்களின் மத்தியிலும் வதிந்து வருந்த நான் மாத்திரம் என் தந்தை நகருக்குச் சென்று

மிருதுவான பஞ்சணையில் அநேக தோழியர் எனக்கின்பம் விளை விக்க உறங்குவது தர்மமோ. கற்புடைய பெண்களுக்குத் தன் கணவன் அருகிலிருக்கும் போது காடும் மருதநாடாகும்; கணவன் நீங்கியபோது நாடும் காடாகும்; இன்பமும் துன்பமாகும்; இனிப் பும் கசப்பாகும்; மேன்மையும் தாழ்மையாகும். இரவு பகலா கும்; சந்திரனும் சூரியனாவான்; செம்மையும் வறுமையாகும். ஆனதால் நான் தம்மை விட்டு க்ஷணப்பொழுதுங்கூடப் பிரியமாட் டேன்" என்று சொல்லிக்கொண்டு தானும் காட்டுக்குப் போகப் புறப்பட்டாள்.

நளன் "தமயந்தி, நீ சொல்வதுசரியே. காட்டின் தன்மையை அறியாமல் பேசுகிறாய். இந்த அரண்மனையில் சலவைக் கற் களால் தளவரிசை யிடப்பட்ட இம்மாளிகையில் பட்டைவிரித்துக் காம்பறிந்த மலர்களைப் பரப்பி மிருதுவாக்கிய விடத்தும் தவறி ஒரு காம்பு உன்காலில் உறுத்தினால் கொப்புளிக்கும் தன்மையோடு கூடிய பஞ்சினும் மிருதுவான பாதங்களால் கரடு முரடானதும் கூரிய பல அரும்புகளையுடைய பருக்கைக் கற் களும் முட்களும் நிறைந்ததுமான காட்டில் நீ எவ்விதம் நடப்பாய். அந்த துன்பத்தைக் கண்டு என்னால் சகிக்க முடி யுமோ. என்னுயிர் நிலைக்குமோ. மாதர்கள் மிருதுவான தன்மை யுடையவர்களாகையால மெல்லியலார் என்றழைக்கப்படுகிறார். அவர்கள் புருஷர்களைப் போலப் பொதுவாக திடகாத்திர முடை யவரல்லர். அவர்கள் தேகம் கடினவேலைகளுக்கு உரித்தானதாக அமைக்கப்படவில்லை. சித்திரமான காரியங்களால் பிறரைக் களிக் கச் செய்கிறவர்கள். இத்தன்மையையுடைய மாதர்கள் ஆடவர் களும் வருந்தும்படியான காரியங்களிற் பிரவேசிப்பார்களா. துக் கம் ஒருமையாக இருக்கக்கூடாது என்பதற்காகவோ நீயும் என் னைப் பின்பற்றிவரத் துணிகிறாய். தவிர நமது மக்கள் தந்தை யாகிய என்னைவிட்டுப் பிரிந்திருந்தாலும் தாயாகிய உன்னைவிட்டு ஒரு விநாடியாவது பிரிந்திருப்பார்களோ. அவர்கள் உன் கை யால் ஊட்டப்பட்டு உன்முகத்தைப் பார்த்தவண்ணமாகவே உன் னருகிருந்து உறங்கும்போதும் உன்னைவிட்டுப் பிரியாதிருந்தவர்க

ளல்லவோ. அவர்களுக்கு உன்னிலுஞ் சிறந்தார் இவ்வுலகில் யாரிருக்கிறார்கள். அவர்கள் என்னைவிட்டுப் பிரிந்த துக்கத்தை நீ சமீபத்திலிருந்து ஆற்றினாலொழிய அவர்களுக்கு அத்துக்கம் ஆறுமோ. குழந்தைகளை வெறுக்கலாமோ. அவர்கள் நிரபராதிகள் அல்லவோ. நாமே வெறுத்தால் அவர்களை வேறு யார்தாம் விரும்புவார்கள். பிள்ளையின் அருமை பெற்றவளறிவாளேயல்லது வேறொருவர் அறியக்கூடியதோ. தம்மக்களை இகழும் மானிடரும் உண்டோ; மக்கள் கூன் குருடு செவிடாயினும் பெற்றவர்களுக்குரிய அன்பு அவரிடத்தில் குறையுமோ. செல்வத்துட் செவ்வம் மக்கட் செலவம்.

> பொன்னுடையரேனும் புகழுடையரேனுமற்
> றென்னுடையரேனு முடையரோ—இன்னடிசில்
> புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
> மக்களையிங் கில்லா தவர்.

வறுமை யுற்றோராயினும் மக்களுடையார் செல்வரென்றே அழைக்கப்படுகிறார். அமிழ்தினுமினிய தம்மக்கள் சிறுகை யளாவிய கூழ் அக்குழந்தையின் மிருதுவான உடலைப் பரிசிப்பதே பெற்றோர் உடற்கின்பம். அவர் இனிய மழலைச் சொல் கேட்பதே செவிகட்கின்பம். பெற்றோர்க்குத் தெவிட்டாத இன்பத்தை விளைவிக்கும் அம்மழலைமொழியினும் சிறந்த இசைக்கருவி வேறொன்றுமில்லை. அக்குழவிகளின் பால்நாறும வாயையும் உச்சியையும் முகர்வதே அவர் மூக்குக்கின்பம். அவர் மலர்ந்த முகத்தைக்காண்பதே கண்களுக்குச் சிறந்த காக்ஷி. மக்களுடையார்க்குத் துக்கமில்லை. எவ்வகைத் துக்கமும் அவர்களைக் கண்டவளவில் நீங்கும். மக்களுடையாரே இவ்வுலகிற் பெரும் பேறுடையார். அவர்களே புண்ணியசாலிகள். புதல்வரைப் பெறும் புண்ணியமிலார் புனிதமான தவப்பேறுடையரேனும் புதல்வரடையார். புத்தேளுலகமில்லை. புத்திரருடையார் புத்தென்னும் நரகமடையார். புத்திரரே யந்நரகத்தை ஒழிக்கத்தக்க கருவி. மற்ற நரகங்களைத் தவ ஒழுக்கத்தால் நீக்கினாலும் இந்நரகம் புத்

திரின்றி நீங்காது. ஆகையால் இம்மை மறுமை இரண்டையும் அளிக்கத்தக்க செல்வமாகிய மக்களை இகழ்வாருமுண்டோ. அவர்களை நீக்கும் பெற்றோர்களினும் கொடியோர் வேறொருவருண்டோ. பாதகங்களி னிழிந்தது இதனினும் வேறுளதோ. மனிதர் எவரையும் விட்டுப் பிரியத் துணிந்தாலும் புத்திரரைவிட்டுப் பிரியத் துணிவாரோ. புத்திரசோகம் எவரால் பொறுக்கத்தக்கது. ஆகையால் இக்குழந்தைகளோடு நீயும் குண்டினபுரஞ் சென்று மனம் வருந்தாது அக்குழந்தைகளின் அழகிய முகங்களைப்பார்த்து உன் துக்கத்தை மாற்றுவாயாக" என்றான்.

அதற்குத் தமயந்தி,

கூற்றுறழ் குருதிவேற் குரிசில் மக்கடா
மாற்றினு மாற்றலா தளரின் மூழ்கினு
மாற்றருங் கற்பினோர் மகிழ்நர் காண்செல
வேற்றுநா ளுறைவது விழுமிதோ வென்றாள்.

"அண்ணலே! இக்குழந்தைகள் தங்களுக்குப் பின் ஏற்பட்டவர்களேயன்றி முன்னலல. பின்னுற்றவர்களுக்காக முன்னுற்றவர்களை மறத்தல் தகாது. மக்கள் கணவனைப்போல எழுமையினுந் தொடரும் சுதந்தர முடையவர்களோ. தன்னுயிரேயான கணவனை விடடு மக்களை நச்சுவோரினும் கன்னெஞ்சர் உலகிலுண்டோ. உயிர் பிரிந்த உடலுக்கு இயக்கமுண்டோ. கணவனைப் பிரிந்த கற்புடைய மாதுக்கு ஆறுதலுமுண்டோ. இக்குழந்தைகள் நம்மைவிட்டுப் பிரிந்து ஆற்றினாலும், ஆற்றாது வருந்தினாலும் தம்மைவிட்டுப் பிரிவதாலுண்டாகும் மிகுந்த துக்கத்துக்கு ஈடாகாது. அத்துக்கத்தை நீக்க என்னால் சற்றேனு மேலாது தங்களைவிட்டு ஒரு நாளும் பிரிந்திருக்க மாட்டேன். ஆனால் இக்குழந்தைகள் நம்மைவிட்டுப் பிரியாதிருக்கத் தமக்கு மனமிருக்குமாயின் இக்குழந்தைகளோடு நாமிருவரும் என் தந்தை நகராகிய குண்டினபுரஞ் செல்வோம். தயங்கவேண்டாம், என் மீது தயைகூர்ந்து புறப்படுங்கள்" என்றாள்.

சினக்கதிர்வேல் கண்மடவாய் செல்வர்பாற் சென்றீ
எனக்கென்னு மிம்மாற்றங் கண்டாய்—தனக்குரிய
தானந் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானந் துடைப்பதோ வாள்.

*அதற்கு நளன், "தமையந்தி, பெண்களுக்குரிய பேதமைக் குணம் எவ்வளவு நுட்ப புத்தியுடையோரையும் விட்டு நீங்குவதில்லை. அதுதான் பெண் தன்மைக்கு அறிகுறிபோலும். ஆடவர்கள் எதைவிட்டாலும் மானத்தை விடலாமா? மானமே ஆடவருக்குச் சிறந்த ஆபரணம். அணிகலனிழந்த மாதருக்கு அழகு குன்றுவதுபோல் இவ்வாபரணம் நீங்கிய ஆடவருக்கும் அழகு குன்றும். அவர் யாவராலும் வெறுக்கப்படுவார். நான் சக்கரவர்த்தியாக இருந்தபொழுது இப்பூமண்டலம் முழுதும் ஒரு குடைக்கீழாண்டு எல்லா அரசரும் என்னை வணங்கும்படியான உன்னத நிலைமையிலிருந்தேன். இப்போது வறுமையால் இழிந்த போது என்னை வணங்கியவரை நான் வணங்கித் தலை குனிந்து நின்று என் வறுமையை அவர்க்குச் சொல்லி அவரிட்ட உணவை உட்கொண்டு வயிறு வளர்ப்பதிலும் விஷமுண்டு உயிரைவிடுவது ஆண்மை யுடைத்து.* தனஞ் சிறியராயினுந் தார்வேந்தர் கேட்டால் மனஞ் சிறியராவரோ *என்றபடி புறச்செல்வமாகிய பொருள் குறைந்த காலத்தில் அரசர் அகச்செல்வமாகிய மானம் திடம், வண்மை, பொறுமை, ஞானம், ஆண்மை, நீதி, புகழ் முதலியவற்றை இழப்பார்களோ. அவ்வாறிழந்தோரும் மேன்மக்களாவரோ.* ஏற்பதிகழ்ச்சி *என்பதை மறந்து தம் உடலை வளர்ப்பதே தமக்குரிய தொழிலாகக் கொண்டு செல்வமுடையாரை யடைந்து யாசித்துத் தம் பெருமையை அழிக்கும் மேன்மக்களும் மேன்மக்களோ.*

பல்லெலாம் தெரியக்காட்டி பருவரன் முகத்திற்கூட்டிச்
சொல்லெலாம் சொல்லிநாட்டித் துணைக்கரம் விரித்துநீட்டி
மல்லெலா மகலவோட்டி மானமேன் பதனைவீட்டி
யில்லெலா மிரத்தலந்தோ விழிவிழி வேந்தனொன்றும்.

எவன் வறுமையுற்ற காலத்துத் தன் மானமழிந்து யாசித் தலையே பெருமையாகக் கொள்ளுகிறானோ அவன் அதுவரையில் செய்த புண்ணிய பலனை இழக்கிறான். அதனால் அவன் அடை வதற்குக் கருதியிருந்த உன்னதத தானமாகிய மோக்ஷத்தையடை வதற்குச சோபானமாகிய தர்மத்தை யிழப்பதால் அத்தானமும் கிட்டுவதில்லை. இத்துணைச்சிறுமையுற்ற இவ்விரத்தற் றொழிலை நான் கைக்கொள்வது மிகவும் இழிந்ததென்பதை அறியாமல் பேசுகிறாய். மேலும் புக்கு வேட்டகத்தினி லுண்ணும் புன்மை யோர் மக்களுட் பநடி என்றுரைக்கும் வையமே. உலகத்தில் வேட்டகத்தில சென்று தங்கியிருந்து அவ்வுணவே அமுதமெனக் கொண்டு அருநதி உயிர்வாழ்பவன் அற்பனென்றும் மனிதர்களில் பதரென்றும் சொல்லப்படுவான். அவன் கனமுடையானல்லன். இது எனக்கு விலக்கானதோ. இதைப்பார்க்கிலும வேறொருவ ரிடத்தில் சென்று குற்றேவல் செய்து அதற்குரிய கூலியைக் கொண்டு உயிர் வாழ்வது உத்தமமானது. இதனால் தாழ்வில்லை. ஆகையால் உன்தாதை நகரில் நான் இந்த நிலைமையோடு போயத் தங்கியிருப்பது எனக்குத தகாது நீ வேறு விதநியாசமாக நினைத் துக்கொள்ளாதே என்றான்.

தமயந்தி, நளன் வறுமையுற்றாலும தன்மனவலி குறையான் என்பதை உணராது சொல்லியதற்காக வருநதிப் பினபு நளனை நோக்கி "அரசரேறே தமது பெருமையை நான் நன்றாக உணர்ந் திருந்தும் வறுமையுற்ற காலததில் மதியும் கெடும் என்பது போல் ஒன்றுந தோன்றாதவளாயப் பிதற்றிய என் வார்த்தைகளை மனதுட் கொள்ளவேண்டாம். தமது திருவுள்ளம் எதுவோ அதுவே எனக்கும் சரி. ஆனால் நமது குழநதைகளை நாம் இல் லாதபோது இவ்விடத்தில் பாதுகாப்பவர் யாவர்? குழந்தைக ளிடத்தில் உண்மையான காதலுடையோர் பெற்றோரும், குழந் தைப்பருவமுதல் ஒருவரை தமது குழநதையெனவே நினைத்து வளர்த்தவருமே. மற்றோர் பிரதிப்பயனைக் கருதியாவது தாக்ஷண் யத்துக்காகவாவது விருப்பங் காட்டுவார். ஆகையால் இக்குழந்தை களை நம்மைப்போலப் பாதுகாக்க நம்மைப் பெற்ற தாய்தந்தை

யாராவது இருக்கவேண்டும். அவர்கள் நம்மீதுள்ள காதலை நமது குழந்தைகளிடத்தில் காண்பித்து அக்குழந்தைகள் கண் கலங்கி ஞல் தம்மனங் கலங்கி வருந்தி அவர் துக்கத்தை மாற்றி அன்புடன் ஆதரிப்பார். ஆதலால் இக்குழந்தைகளையாவது என் தந்தை நகரில் கொண்டு போய் விட்டுவரக் கட்டளையிட்டால் அவர்களுடைய கவலை ஒருவாறு நீங்கும்" என்ருள்.

நளன் அதற்கிணங்கித் தனனிடத்து நீங்காத அன்புமிகுந்த சாரதியை அழைத்து அவனுக்குப் பிரியவசனஞ் சொல்லி "நீ குழநதைகளுக்கு யாதொருகெடுதியும் நேரிடாவண்ணம் இவர்களை வீமராஜனிடம ஒப்புவிததுவிடு" என்று அக்குழநதைகளை மார் போடு தழுவி அவர்கள் முகங்களைப் பார்த்து மனங்கசிந்து "இவ் வருமை மக்களை இனி எக்காலததில் மறுபடியும் திரும்பக்காணும் புண்ணியம் செய்திருககிறேனே; அக்காலம வரையில் இவர்களை விட்டுப் பிரிந்த மனம் உடையாமலிருக்குமோ" என வருநதிப் பின்பு ஒருவாறு தேறி அததுக்கததைத் தனக்குள்ளே அடக்கிக் கொண்டு அககுழநதைகளை விட்டுப் பிரிய மனநதுணியாமல் அவர் களைப் பார்ததுக கொண்டிருககையில் அக்குழநதைகள் தம்மை விட்டுப் பிரியப் போகின்ற தமது தந்தையின் முகததைப் பார்த் துப் பார்த்துக் கண்களினின்று நீர்வழிய விம்மி விம்மி அழத் தொடஙகினர்கள். இதைக்கண்டோரெல்லாம் மனம் புண்ணுகி அக்குழநதைகளின் முகத்தைப்பார்ததுக் கண்ணீர்பெருக்கி ஆழ்நத துன்பக்கடலில் மூழ்கினர்கள்.

அப்போது தமையந்தி, கண்ணுங் கண்ணீருமாக நிற்கும் குழந்தைகளைக கட்டியணைதது முகததோடு முகம் வைத்து உச்சி மோநது தன் கண்களினின்று நீர் ஆருகப் பெருக அக்குழந்தை களை நோக்கி "என் அருமை மக்காள்" நான் உஙகளை விட்டுப் பிரியுங் காலமும் எனக்குச சம்பவித்ததே. உங்கள் தந்தை உத் தமராயினும பெரும்பாவியான என் வயிற்றில் கருவுற்றமையால் நான் செய்த பாவம் உஙகளையும் விடவில்லை போலும நாஙகள் யாவற்றையுமிழநது ஆண்டிகளானபோதிலும் உங்கள் முகத்தை யாவது பார்த்துக்கொண்டிருந்து எங்கள் கவலையை நீக்கப் போது

மான புண்ணியங் கூடச் செய்யவில்லையோ. மனிதர்களில் மகா பாவிகள் நாங்கள்தானே. உங்களைப் பார்க்குந்தோறும், என்னைப் போல் பாக்கியசாலி உலகில் வேறொருவருமில்லையென்று மகிழ்ந் திருந்தேனே. அம்மகிழ்ச்சியின் பலன் இதுதானே. உலகப் பற் றுக்களினின்று பிறக்கும் மகிழ்ச்சி நிலைதநிராதென்பதை மறந் தேனே. அம்மறதிக்குக் காரணம் உங்களால் உண்டுபண்ணப்பட்ட களிப்பேயன்றி வேறல்ல. இதைக் கடவுள் பொறுக்கவில்லை போலிருக்கிறது. உங்களைப்பிரிந்து கண்கலங்கிப் பித்துப்பிடித் துத்திரிவதுதான் தெய்வத்துக்கும் சம்மதமாக இருக்கிறது. நான் உங்களை இந்த இளம்பருவத்தில் விட்டுப்பிரிந்து வருந்தும்படி யாக எந்தப்பிறவியில் எந்தத் தாயினிடத்திலிருந்த குழந்தையைப் பிரித்தேனோ. எந்த எந்தப் பிறவியில எத்தனை குழந்தைகளைக் கண்கலங்கச் செய்தேனோ. இப்போது என் குழந்தைகளாகிய நீங்கள் என் முன்னே கண்கலங்கி நிற்கிறீர்கள். நான் உயிரோ டிருந்தும் தாயில்லாக்குழந்தைகளானீர்களே. மகா பாவியான என்னைப்போன்ற தாய உங்களுக்கு வேண்டியதில்லை என்பது கடவுள் திருவுள்ளமோ. நான் எனக்குரிய செல்வமெல்லாமிழந்து சீதைகலங்கி நிற்கவேண்டுமென்று எனக்கு விதித்திருப்பதால் மக்கட்செல்வமாகிய உங்களையும் விட்டுப்பிரிய நேர்ந்ததுபோ லிருக்கிறது உலகத்தில் என்னைப்போன்ற கொடும்பாவிகள் யாருமிருக்கமாட்டார்கள். என் கண்மணிகளே ! உங்களிருவரை யும் என் இரு கண்களாக நினைத்திருந்தேனே. இப்போது உங் களை விட்டுப்பிரிய நேர்ந்த காலகதியால் கண்ணிழந்த பாவியா னேனே. நான் உங்களைமறக்கத்துணிந்தாலும் அல்லும் பகலும் உங்களையே பார்த்துக்களித்த இப்பாவி கண்கள் மறக்குமோ. உங்களைப் பார்க்குந்தோறும் உங்கள் வனப்பைக் காண்பதிலும் சிறந்த காக்ஷி உலகில் வேறொன்றுமில்லையென மதித்து உலகில் எவ்விதக் காக்ஷியையும் வெறுத்தேனே. உங்களைக் காணாத ஒரு க்ஷணத்தை ஒருயுகமாகக் கழித்தேனே. உலகில் பிள்ளையில்லா தவர்களைக் கண்டு பழித்தேனே. உங்கள் சுகத்தைநாடி என் சுகத் தையெல்லாம் அழித்தேனே. என்னைப்போல மக்கட்செல்வமுற் றோர் உலகிலுண்டோவெனக் கொழித்தேனே. உங்களையடைந்த

நாள் முதல் என் பெற்றோரிடத்துள்ள காதலையும் ஒழித்தேனே. என்தேனே, இளங்கோனே, பால்மணம்மாறாத இளமானே, இனி நான் எவ்விதம உயிர்வாழ்வேன். பெற்ற என் வயிறு பற்றி எரிகிறதே. உங்கள் பிரிவு என்னுயிரை வாட்டுகிறதே. என்னை எமலோகத்துக்கோட்டுகிறதே. சோபததை ஊட்டுகிறதே. என்நெஞ்சம் பிளக்க உன் மீதுகொண்ட காதலாகிய கத்தியைத தீட்டுகிறதே. எதிலும் காவலகொள்ளக்கூடாதென்பதைக் காட்டுகிறதே. எசசெல் வமும் நிலைத்ததல்ல என்பதை நாட்டுகிறதே. பிள்ளைக்கலி தீர்க்க வந்த என் பெருஞ்செல்வர்களே! நான் எக்காலத்தில் உங்கள் அழகிய முகத்தைத் திரும்பவும் பார்ப்பேன். உஙகள் இனிமையான சொற்களைக் காதுகுளிரகேட்பேன். உங்களை என்மனம் பூரிக்கத்தழுவி முத்தமிடுவேன். இனி ஒருமுறை நீஙகள் என்னை 'அம்மா' என அழைக்கவும் அதைககேட்டு மகிழவும போதுமான புண்ணியம் நான் செய்தேனோ இல்லையோ அறியேனே. என் பெற்றோர்கள் உங்கள் தாயதநதையரோடு உஙகளைப் பார்த்தக்க பாக்கியசாலிகளல்லவோ. என் காலடிபட்ட விடமெல்லாம், என் பாவமே சூழ்நதிருக்குமே. அதனாலே அவர்களும் பாவிகளானார்கள் போலும். சதுரங்க சேனைகளுஞ்சூழச் சநதிரவட்டக்குடை நிழற்ற சகல சம்பிரமததுடன் பாட்டன் நகருக்குச செல்லவேண்டிய நீங்கள் ஒற்றைத்தேருடன் ஒரு துணையுமின்றி யாருமற்ற அநாதைக் குழந்தைகள்போல் செல்லுங்காலமும உங்களுக்கு நேரிட்டதோ. என்னைவிட்டுப் பிரிந்தும் மனம்பொறுத்து வாழ்வீரோ. உங்களுக்கு என் நினைவு உண்டாகாதவண்ணம் உங்களைப் பாதுகாப்பாரு முண்டோ. நித்திரையிலுங்கூடச் சற்று விலகினால் 'அம்மா' வெனக் கூவித் திடுக்கிட்டெழுந்து அழுவீர்களே. இனி யாரை அழைப்பீர்கள். யார் உங்கள் கூவுதலுக்ிரங்கித் தழுவி யணைப்பார்கள். உங்களுக்குத் தெயவநதான் துணை. ஆ! தெய்வமே!. என் மக்கள் யாருமற்ற அநாதைகளாகிவிட்டார்கள். அவர்களுக்குத் தந்தையும் தாயும் சுற்றமும் எல்லாம் நீயே. இக்குழந்தைகளை உன் வசத்தில் ஒப்புவிக்கிறேன். அவர்கள் துக்கத்தை மாற்றிக்காக்க வேண்டியது உன் பாரம்" என்று பலவாறாகச் சொல்லிப் புலம்பிக் கண்ணை இழக்

கும் பசுவைப் போல் கதறுகையில், தேர்ப்பாகன் இப்பரிதாபக் காக்ஷியைப் பார்க்கச் சகிக்காதவனாகி அரசனையும் அரசியையும் நோக்கித் "தங்களைப் போன்ற எல்லாமறிந்த பெரியோரே இவ்வளவு துக்கத்தைப் பாராட்டுவார்களாயின் அவர்களுக்கு ஆறுதல் சொல்பவருமுண்டோ. இத்துக்கம் தங்களாலேயே பொறுக்கக் கூடாததாயின இச்சவலைகள் அதை எவ்வாறு பொறுப்பார்கள். அவர்களுக்குத் தேறுதல் சொல்வதைவிட்டுத் தாங்களே கலங்கினால் அவர்களைத் தேற்றுவதற்குந் தங்களினும் உற்றாரும் உண்டோ? பிள்ளைகளின் பாசத்தைப் பாராட்டத் தொடங்கினால் அது நீங்குந் தன்மைத்தோ? காலத்துக்குத் தக்கபடி நாம் நம்மைச் சரிப்படுத்திக்கொண்டு மனவேறுபாடின்றி ஒரே நிலைமையில் நிற்கவேண்டுமேயன்றி மனந்தளர்வது மாண்புடையார்க் கழகோ. உலகத்தில் தோற்றும் சந்தோஷமே துக்கம் நிறைந்ததென்றால் துக்கத்தின் தன்மையைச் சொல்லவும் வேண்டுமோ. அது கரையில்லாத தொடுகடலன்றோ. அதைக் கடப்பதற்குரிய சிறந்த சாதனம் கல்வியாகிய தெப்பம். அத்தெப்ப முடையோரும் அதை உபயோகித்துக் கடக்காமல் கையில் வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க் கழுவார்போல் வருந்துவதுமுண்டோ. உலகத் தோற்றமே துன்பக்காக்ஷி. எவ்வளவுக்கெவ்வளவு பிள்ளைகளும் உறவினரும் அதிகப் படுகிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு துன்பம் அதிகம். அத்தொகையில் ஒன்று குறைந்தால் துன்பத்தில் ஒரு பாகம் குறையும். பிள்ளைகளே துன்பத்தை அழைக்கும் தூதரென்றால் மற்றோரைச் சொல்லவும் வேண்டுமோ.

மதலையைப் பெறுநாள் துன்பம் வளர்த்திடு நாளுந் துன்பம்
விதலைநோ யடையிற் றுன்பம் வியன்பரு வத்துந் துன்பம்
கதமுறு காலர்வந்து கைப்பற்றிற் கணக்கி றுன்பம்
இதமுற லெந்நாள் சேயாலெற்றைக்குந் துன்ப மானால்,

இப்படியே உலகில் ஒவ்வொன்றும் துன்பம்விளைவிப்பதுவே, இத்துன்பக்காக்ஷிகள் தங்கள் கண்களில் படாதிருப்பதற்காகவே அறிவுடையோர் கானகத்தையடைந்து கவலையற்றிருக்கின்றனர்.

உலகில் வாழும் உயிர்க்குச் சுற்றத்தாரால் செய்யப்படுவன யாவை?
‘தந்தை, தாய், தமர், தாரம், மகவென்னும் இவையெல்
லாம் சந்தையிற் கூட்டமன்றோ! ஒரு சந்தையில் எத்தனையோ
மனிதர்களைச் சந்தித்து முன் பின் பழக்கமில்லாவிடினும் பல
நாட் பழகியவர்போல் வார்த்தையாடிச் சந்தையில் தமது சாமர்த்
தியத்துக்குத் தக்கவாறு மேன்மையோ தாழ்மையோ வாய்ந்த
பொருளைக்கொண்டு நாம் சந்தித்தவர்களின் பிரிவினால் ஒருவித
மனவேறுபாடுமின்றி நமதிருக்கைக்குத் திரும்புவதுபோல், உலக
மாகிய சந்தையில் முன்பின் அறியாதவரையும் பழக்க விசேஷத்
தால் முறையிட்டழைத்தோமாயினும் பற்றற்று நின்றுகொள்ளக்
கடவதை அறிவின் அளவுக்குத் தக்கபடி கொண்டு அதற்குரிய
இடத்தை அடையவேண்டுமேயல்லது ஒருவர் பிரிவினால் வருந்
துவது தகுமோ. அவ்வருத்தத்தால் ஆவது முண்டோ. நான்
தங்களுக்குச் சமாதானம் சொல்லுவது கடலுக்கு நீர் பாய்ச்சுவது
போல் இருக்கிறது. யாவரையும் காத்து எல்லாம் தமதெனக்
கொண்டு தங்குமிடம் எனவும் எல்லாவற்றிற்கும் தலைவனென
வும் பொருள்வாய்ந்த பேர்படைத்த பசுபதி இவ்வரிய குழந்தை
களைமாத்திரம் காவாது மறந்து விடுவாரோ. அவரே எல்லாவற்
றிற்கும் களைகணன்றோ. அவரிருக்க நாம் வருந்தவும் வேண்
டுமோ. ஆகையால் குழந்தைகளை இன்னும் அதிகமாகச் சஞ்சலப்
படுத்தாமல் தங்கள் துக்கத்தை ஒழிக்கவேண்டும்” எனப்பிரார்த்
தித்து வணங்கி அவர்களைத் தேற்றி இரண்டு உயிர்களைக் கைக்
கொண்டு போவதுபோல் அவ்வழகிய இரண்டு குழந்தைகளையும்
உதயகிரியில் சூரியர் சந்திரர் இருவரும் ஒரே காலத்திலுதித்தாற்
போல் தேரிலேற்றிக்கொண்டு அத்தேரை வீமன் நகரை நோக்கி
நடத்திச் சென்றான்.

குழந்தைகள் பிரிந்தவுடன், எவ்விதத் துக்கத்தையும் எப்போ
தும் பாராட்டாத இயல்புடைய அரசன் மெய்ம்மறந்து மனம்
பதறித் தன் கண்ணுக்கெதிரே தன் கையிலிருந்த மாணிக்கங்
களை யிழந்த மிடியன்போல “என் கண்மணிகளே! நான் நும்
மைவிட்டுப் பிரிந்து பிள்ளையில்லாப் பாவிபோல் நிற்கவும் நேரிட்
டதோ. எனனுயிர் இன்னும் போகவில்லையே. இனி எக்காலத்

தில் காண்பேனே. இதுவும் கடவுள் திருவருளோ!" என உயிரில்லாத உடல்போல் சோர்வுற்றாரெனில் மக்கட் பிரிவினும் கொடிது வேறொன்றுளதோ. அப்பிரிவினால் கடந்த ஞானியும் கடப்பரோ தம் மக்கள்மேற் காதல்.

இவ்வாறு அரசனும் அரசியும் குழந்தைகளைத் தேர்ப்பாகன் வசமாகக் குண்டினபுரத்துக்கனுப்பினபிறகு ஒருவாறு அத்துக்கத்தை ஆற்றிக்கொண்டு கட்டின வஸ்திரத்தோடு பாதசாரியாகக் காட்டுக்குப் போகப் புறப்பட்டு இராஜவீதி வழியாக வந்தார்கள்.

இவர்களைக் கண்ட அந்நகரத்தார் திடுக்கிட்டு இடியேறுண்ட அரவம் போலேங்கி நின்று கண்களினின்றும் நீர் ஆறாகப் பெருக "ஐயோ எமது வள்ளலுக்கும் அன்னைக்கும் இக்கதி வரலாமோ. திருமாலும் திருமகளும் போன்ற அரசனும் அரசியும் ஒற்றைத் தேர் கூட இல்லாமல் கால்நடையாகக் காட்டுக்குப் போகும் கொடிய காக்ஷியைக் காண்பதற்காகவோ இக்கண்கள் படைக்கப்பட்டன. அவர்கள் பாதத்தைச் சுமக்கவேண்டுமென்று இவ்வீதி தவஞ் செய்ததோ. நம்மிடத்தில் நீங்காத அன்போடு எப்போதும் நமது க்ஷேமத்தையே முதன்மையாகக்கொண்டு அரசுபுரிந்த மகானுபாவனும் அவருடைய தர்ம பத்தினியும் நாட்டை இழந்து காட்டுக்குப் போவதைக் கண்டும் நமது கண்கள் ஒளி குறையவில்லையே. அதை உணர்ந்த நமது நெஞ்சும் ஒடியவில்லையே. இவ்வளவு கடின சித்தத்தையுடைய நமக்கு இளகிய மனமுடைய இப்புண்ணியவான் சக்கரவர்த்தியாக இருக்கக் கடவுளுக்குத்தான் சம்மதமாகுமோ. தாயினும் அருள் சுரந்து செங்கோல் கொண்டாண்ட இப்பூமியைக் கொடும் பாவியாகிய புட்கரனிடத்தில் இழந்து நமது கருணாலயம் காட்டுக்குப் போகிறது என்று கேட்டபொழுதே நாம் உயிரைவிடவில்லை என்றால் நம்மைப் பார்க்கிலும் நன்றியில்லாப் பிராணி உலகில் வேறொன்றுண்டோ. நாயினுங் கடையானோம். இந்நன்றியில்லா உடலை வளர்ப்பதிலும் அதை வீட்டி நன்றியுள்ள உடல் எதுவாயினும் அதைக் கொள்ளுதல் இருமைக்கும் பெருமையுடைத்து. ஐயனே தாம் அறியாததும் ஒன்றுண்டோ. சூதினால் வரும் தீங்குகளை அறிந்திருந்தும்

அதைக் கைக்கொண்டது எம்மைக் கலக்கித் திண்டாடவிடவோ இந்நாட்டையும் எம்மையும் வெறுத்து நீங்குவதற்கு நாங்களி ழைத்த தவறுகளுண்டோ. அப்படி இருந்தாலும் அவற்றைத் தாமே பொறுக்காவிட்டால் அவற்றைப் பொறுத்து எம்மைக் காப்பவருமுண்டோ. காத்தற்றொழிலின் வரம்புகாட்டுங் கலைகணே! இந்த நாட்டுக்கு இத்தகைய பழி இதுகாறும் நேரிட் டதென்று கேள்விப் பட்டோமில்லையே. இவ்விதப் பழி தம்மை அடையுமென்று நாங்கள் கனவிலும் நினைக்கவில்லை. எங்கள் முன்னோர்கள் காலத்தில் நடவாத ஒரு தீங்கு இப்போது நேரிட்டதால் நாங்கள் அவர்களைப்போல புண்ணியசாலிகளல்ல போலும். எங்கள் பாவமே கூனெனும் பேரோடு தோன்றி யதோ. இக்கொடும் பாவிகளைக் கொடுங்கோலரசனிடத்தில் ஒப்புவிக்க வேண்டுமேயல்லது நாம ஆட்கொள்வது தகாது என நினைத்து எம்மை வெறுத்தீரோ. தம்மைத் தந்தை யெனவும் அரசியைத் தாயெனவும் கொண்ட நாங்கள் தமமுடைய மக்களல் லவோ. நாங்கள் தம்மால் வளர்க்கப்படவில்லையோ. ஒருவர் தாம் வளர்த்தது நச்சுமாமரம் எனினும் அதை வெட்டத் துணி யார். அதுபோல் தம மக்களாகிய எமது குற்றங் கடிந்து எமக் குக் குணத்தைப் புகட்டி ஆசரிக்கவேண்டியது உமது கடமை யன்றோ. அண்ணலே வாய் திறந்து ஒரு வார்த்தையாவது பேசக் கூடாதா. எந்நாட்டுக்கும் தாயகமாகிய இந்த நாடு இத்துன் பத்தை அடையவேண்டுமென்று எவர் பிரார்த்தித்தாரோ. அத் தீயோர் எண்ணமுங் கைகூடிற்றே. உலகத்தில நன்மை தீமை இரண்டுக்கும் வித்தியாசமில்லையா. விதி விலக்கு என்பனவும் தர்மம் அதர்மம் என்பனவும், மெய்ம்மை பொய்ம்மை என்பன வும் பாகுபாடின்றி எல்லாம ஒன்றானால் மோக்ஷம் என்பதும் நரகம் என்பதும் எது. வேதவேதாந்த சாஸ்திரங்கள் எதற் காகவோ. சத்தியமே மானிடர் அடையக் கூடியவற்றில் சிறந்த தெனக் கைக்கொண்ட தரும மூர்த்தியாகிய தமக்கு இக்கதி நேரிடுமாயின் சத்தியத்துக்குப் பெருமை ஏது. சத்தியமும் தலை காக்கவில்லையென்றால் சற்குணர்களுக்கு உற்ற துணை யேது. இல்லறத்திலிருப்பவர்கள் தமக்கு ஆபத்து நேரிட்டவிடத்தில்

பொய்ம்மையால் உயிர் தப்புவதாக இருந்தாலும் தமக்குரிய மாதர் பிணங்கினாலும், சூதாட்டத்திலும் பொய் சொல்லலாமென்பது சாஸ்திர சம்மதமாயினும் சூதாடுவேன் என்று உறுதியாகச்சொன்னபிறகு அதை மறுப்பது தகுதியன்று என்றும் வாய்மை அல்லாதது எதுவாயினும் விலக்குக்குட்பட்டதே என்றும் உறுதியாகக் கொண்டு சத்தியத்தை நிறுத்திய தயாளசீலர் அடையும் பயன் இதுவானால் வாய்மையினும் பொய்ம்மையே மேலானதன்றோ. உண்மைக்கு உபத்திரவம் அதிகம்போலும். அன்றி நம தரசனைத்தெய்வம் சோதிக்கிறதோ. அச்சோதனை இத்துணை கொடுமையுள்ளதெனின தெய்வத்தின் திருவருளும் வெறுக்கத்தக்கதாகுமே ஐயோ, திருமகள் போலும அரசியை நமது அரசன் மணந்துவந்த அக்காலத்தில் அவருடைய வைபவத்தைக் கண்டு களித்த கண்கள், இப்போது அவர்கள் யாருமற்றுப் பாதசாரியாக நாட்டைத் துறந்து காட்டுக்குப் போவதைக் கண்டு கலுழ என்ன பாவஞ் செய்தனவோ. சற்று நேரத்துக்கு முன் இப்பூமண்டலேசுவரனுக்கும் அளந்து செலவிட்டாலும் ஒழிப்பதற்கு அனேக வருஷங்கள் செல்லும்படியான சங்கையில்லாசசொத்துக்கு அதிபதியாகவும இருந்த நமது சக்கரவர்த்தி இப்போது ஒற்றை வஸ்திரத்தோடு காணப் படுவாராயின் மனிதருடைய பெருவாழ்வு அநித்யமானது என்பதற்கு வேறு சாக்ஷியும் வேண்டுமோ. சாத்திரங்களைப் படித்துத்தான் அறிந்துகொள்ள வேண்டுமோ. செல்வத்துக்கு நல்லவரென்றும் கெட்டவர் என்றும் வித்தியாசமில்லை. இச்சங்கை கெட்ட செல்வத்தை விரும்புவதினும் வெறுப்பதே மேலானதன்றோ. அதனாலேதான் அதை வெறுக்கை என்று பெயரிட்டழைக்கிறார்கள் இத்திருமகளாகிய அரசி இந்நாட்டை விட்டுப் போனபினனும இந்நாட்டில் திரு விளங்குமோ. இனி எக்காலத்தில் இவ்வன்னையையும் பிதாவையும் காணப் போகிறோம். அதுவரையில் உயிர்தாங்கி நிற்றலாகுமோ" என்று அமைச்சர் முதலாயினோரும் அந்நகரமாந்தரும் தெருக்களில் நெருங்கிச் சூழ்ந்துகொண்டு கடல்மடை திறந்தாற்போலக் கதறிக் கண்ணீர் ஆறாகப் பெருகவிட்டு அவர் களைப்பார்க்குந்தோறும் நெருப்பிலிட்ட வெண்ணெயபோலுருகித்

தஞ்சம் பெறாமல் வருந்திச் சோர்வையடைந்து தாமும் நாட்டை வெறுத்துத் தமது அரசனும் அரசியும் ஏகியும் இடமே தமக்குச் சிறந்த சுவர்க்கமெனக் கருதி எப்பற்றும் நீங்கி அவர்களை அனேகர் பின்பற்றிச் சென்றார்கள்.

வையகத்தில் பிறமன்னரை வாட்டுவதற்கு வாய்மையிடத்த வாகிய பலவழிகளுண்டெனினும், அவற்றில் ஒன்றையேனும் கைக் கொள்ளும் வகையறியாது வஞ்சனைச் சூதாடி வளநாடு முழுதும் வெளவிய வன்கணாளனாகிய புட்கரன் தான் எதிர்பார்க்காத வண்ணம் தனக்குத் திடீரென்று கூடிய அதிர்ஷ்டத்தையும் அதன் பயனாகிய செல்வப் பெருக்கையும் கண்டு களித்துக் கள்ளுண்ட வன்போல மயக்கங்கொண்டு தலைதடுமாறித் தனது நிலைமை அனைத் தையும் மறந்து மிகவும் கண்ணியமான குணம் மிகுந்த ஒரு ஆண்சிங்கம் வீற்றிருந்து அழகுசெய்த திவ்வியசிம்மாசனத்தில், ஒரு அற்ப நரி உட்காருவதற்குக் கூடத் தெரியாமல் குந்தி அத்திவ்விய ஆசனத்தின் பொலிவையழிப்பதுபோல் ஏறி உட்கார்ந்து, சத்திய வன்மையால் ஆக்கினைச் சக்கரம் உலகத்தில் தருமம் தவறாது பார்த்துக் காத்த தனக்கொரு வேலையுமின்றித் தருமதேவதைபோல பூமிமுழுதும் ஆண்டளித்த சக்கரவர்த்தி அணிந்த கிரீடத்தை வேடன் தலையில் கவித்ததுபோல் நளனது கிரீடத்தைத் தான் தலையில் சுமந்து கிடந்து நாட்டுக்குத் தானே அதிபதியென விளம் பரஞ் செய்தான். தனது முன்னிலைமை அனைத்தையும் மறந் தான். தான் வெகுநாளாகக் கொண்டிருந்த எண்ணம் நிறைவே றிற்றெனக் களித்தான். இத்துணை வரம்புகடந்த செல்வத்துக் கும் இவ்வகன்ற பூமிக்கும் தான் அதிபதியல்லவா என்று நினைக் கும்போதெல்லாம் குதித்தான். இப்போது அனேக சிற்றரசர் வணங்கும்படியான சக்கரவர்த்தி யல்லவா, எனத் தன்னைத் தானே மதித்தான். ஏனெனில் புட்கரன், 'செல்வம் சகடக் கால் போல வரும்' என்பதையும், ஒருவரிடத்திலும் நிலைத்திரா மல் அடிக்கடி சென்றுகொண்டேயிருக்கும் தன்மையுடையதாத லால் அதற்குச் செல்வம் எனப் பெயரிடப் பட்டிருக்கிறது என்பதையும் அறியாத அறிவிலி. தவிரச் செல்வமானது,—

பொருவறு பந்தமெல்லாம் புணர்த்திடுந் தெய்வசிந்தை
யொருவ மேலிட்டுநிற்கு முறக்கமு மிறக்கச் செய்யுங்
கருவினுட் புகுத்து மின்னகரிசு கண்டதனு லன்றோ
விருநிலத் திடைவெறுக்கை யென்மனுர் புலமைசான்றோர்.

என்பதைக் கற்றும் கேட்டுமறியாத கசடன். சத்தியத்தின் மகிமையறியாத மசகம. இரக்கம் என்பதேயறியாத ஈனன். பாவமே உருவெடுத்த பாதகன். வஞ்சனையே குடிகொண்ட மாபாவி. குற்றமே கைக்கொண்ட குமார்க்கன். சூதே துணையாகக்கொண்ட துரோகி. இவன் நளன் நாட்டைவிட்டுப் போகும்போது அவனுடைய பிரிவைச சகிககாத அநநகரததார் அவனேடு காட்டுக்குச் செல்கின்றுர் எனக் கேள்வியுற்று அடங்காக் கோபங்கொண்டு வள்ளுவரை அழைதது ‘இநதநாட்டில எவரேனும நளனுககாகப் பரிதாபபபட்டாலும் அல்லது அவனேடு காட்டுக்குச சென்ருலும் அவாகளுககு மரண தண்டனை விதிககப்படும்’ என்று முரசறையச செயதான.

இதைக்கேட்ட அநநகரத்தார் பறையொலிகேட்ட அசுணமாப்போல உயிர் சாமபி இனனது செயவதெனத தோனருது மயங்கிக் கண் கலஙகிஞாகள.

நளன் தன்னைப பின்பற்றிவநத அமைசசர் முதலியோரை நோக்கி “நீவிர், இதுகாறும் சததியததின் வரமபு கடவாதவர் என்றும் தர்மந்தவிர வேருென்றும் கனவிலும அறியாதவரென்றும் அழியாப்புகழ் பெற்றீர். சததியத்தின முற்பாகம் ஒவ்வொருவரும் உலகில் தம் கடமையைச செயவதே அதைவிட்டு மறறவற்றைக் கைக்கொண்டால் அசசியம் தலையில்லாத முண்டமாகும். ஆகையால் இப்போது நீவிர் எநத அரசன் நாட்டிலிருக்கிறீர்களோ அந்த அரசனுக்குக் கீழ்ப்படிநது அவன் ஆணைப்படி நடக்கவேண்டுமே யல்லது என்னைவிட்டுப் பிரிதலாற்ருமையால் அவ்வரசனை அவமதித்து என பின்னே வருவது தகுதியன்று நீவிர் திரும்பிப் போகலாம்” என்ருன்.

அமைச்சர், "அண்ணலே, இக்கொடுங்கோல் அரசனிடத்தில் எம்மைக் காட்டிக் கொடுக்கும்படியாக நாங்கள் தமக்கிழைத்த தவறுகளுண்டோ. எங்கள் மனதார நாங்கள் ஒன்றும் செய்யவில்லையே. தம்மை எமது தந்தையினும் பன்மடங்கதிக மெனக் கருதித் தமது சொல்லுக்கு மிஞ்சிய மந்திரம் வேறொன்றுமில்லையெனக் கொண்டு அதற்கிணங்க நடப்பதே எமதுயிர்க்குறுதியெனத் திரிகரண சுத்தியாய் நினைத்து நடந்தோமாகிய நாங்கள் அடையும்பயன் இதுதானோ. தவிர, தாம் இப்புவிக்கதிபதியாய்ச் சகல சம்பிரமத்தோடு வாழ்ந்த காலத்தில் தம்மையே தெய்வமாகவும் நினைத்து அச்சுகத்தைப் பங்கிட்டுக்கொள்ளும் உரிமையுடையவர்களல்லவா. நாங்களும் நீர்ப்பறவைகளா. எங்களுக்குப்பகுத்தறிவில்லையா. நாங்கள் இனிமேலும் ஒரு அரசனிடத்திலமர்ந்து அமாத்தியத் தொழில் நடத்தி இவ்வுடலை வளர்க்கவும் வேண்டுமோ. இதுவரையில் நாங்கள் சத்தியந்தவறாதிருந்தது போதாதா. எமது ஐயனே! இக்குற்றத்தை மாத்திரம் மன்னித்து எம்மையும் தம்மோடு காட்டுக்குக் கூட்டிச் செல்லவேண்டும்" என்று கண்களில் நீர்பெருக மிக்க ஆவலோடுரைத்தனர்.

நளன், "அமைச்சரே, நீர் சொல்வது பொருத்தமானதன்று. அனேகவருஷகாலம் ஜலத்திலேயே வாசஞ் செய்யும் ஒரு மீனை ஒரு க்ஷணம் நெருப்பிலிட்டால் அம்மீன் அவ்வுஷ்ணத்தைப் பொறுத்து அதில் வாழுமோ. அதுபோல உயிருள்ளவரையில் எவன் சத்தியவழியில் நிற்கின்றானோ அவன்தான் சத்தியவான். சௌக்கியப் பட்டபோது சத்தியத்தைக் கைக்கொள்வோம் என்பது சான்றோர் கொள்கையன்று. மேலும் நீவிர் அமாத்திய குலத்திற் பிறந்தவர். இக்குலத்திற் பிறந்தவரையே அரசர் மந்திரிகளாகக் கொள்வது மரபு. நீர் இவ்வரசனுக்கு மந்திரியாக உட்படாவிட்டால் நுமது குல தர்மத்தைக் கைவிட்டவராவீர். அப்போது நீர் நுங்குலத்தைக் கெடுக்கவந்த கோடரிக் காம்பன்றோ. எவன் தன் கடமையைச் செய்கிறானோ அவனே தர்மியாவான். ஏனெனில் கடமை யென்பதும், தருமம் என்பதும் ஒரு பொருளைக் கொடுக்கும் பல மொழிகளல்லவா. தவிர, இழந்த இந்நாட்டை மறுபடியும் வென்றாலன்றி இதில் திரும்பவும்

அடி வைக்கமாட்டேன். ஒருவரை ஒருவர் வெல்லுவதும் எவ ரெவர் எவ்வெவற்றில் வல்லவரோ அவ்வவற்றில் அவரை வெல் லவேண்டுமேயன்றி அவரறியாத ஒன்றினால் ஒருவரை ஒருவர் வெல்ல நினைப்பது தருமமன்று. ஆகையால் என்னிடத்தில் பற் றுடையவர்கள் என்பது உண்மையாயின் இப்போதே திரும்பி நகருக் குச்சென்று அவ்வரசனுக்கு உதவியாக இருந்து தர்மந் தவறாது நாட்டைப் பரிபாலிப்பீராக" என்று சொல்லி அவ்வமைச்சர்களை அனுப்பிவிட்டுக் காட்டுக்குப் போய்விட்டான்.

முளரியால் வெந்தவெங் கானின் மொய்த்துக
ளளியொடு புலம்பின ரழுத கட்கடைத்
துளியினி லவித்தனர் தொடர வெந்திறற்
களிமதக் களிற்றினான் கானிலேகினான்.

அப்போதும் நளனுடைய பரிசனங்கள் 'எவ்வித தண்டனை விதிக்கப்பட்டாலும் அரசனைவிட்டுப் பிரிவதில்லை' என அவனைப் பின் தொடர்ந்து அவன் நிலைமையை நினைக்குந்தோறும் வருந்திக் கண்ணீர்விட்டு அக்கண்ணீரால் சூரிய வெப்பத்தால் கரிந்து போன அக்காட்டிலுள்ள புழுதியெல்லாம் அடங்கும்படியாக அவன் காலடியைப் பற்றிச் சென்றார்கள்.

ஆனால் கலியானவன் நளன் தமயந்தி ஆகிய இருவரையும் துணையின்றித் தனியே காட்டுக்கனுப்ப எண்ணங்கொண்டு ஒரு மாயையினால் அவர்கள் போனவழியைப் பின்னால் சென்றவர்களுக் குத் தெரியாமல் செய்துவிட்டான். அதனால் திடீரென்று அரச னும் அரசியும் மறையவே பின்சென்றோர் ஆற்றொணாத் துயரங் கொண்டு 'இது யார்செய்த வஞ்சனையோ அல்லது இந்திரசாலமோ, 'இப்போது நமது கண்முன்னே சென்றவர்கள் அதற்குள் எங் கே மறைந்திருப்பார்கள். எந்த வழியைப் பற்றி இருப்பார்கள். அவர் கள் அடிச்சுவடுகூடக் காணப்படவில்லையே' என்று நாலா பக்கங் களிலும் தேடித் திரிந்தும் போனவழி தெரியாமையால் உயிரை இழந்த உடல்போல் திடீரெனக் கீழே விழுந்து விம்மி விம்மி அழுது, இனி அரசனையும் அரசியையும் எப்போது காணப்போகி

னோம், என்று ஏக்கம் மேலிட்டு அதற்கப்பால் போகுமிடம் தெரி
யாமல் தாயைப் பிரிந்த கன்றுபோல் தமதுடைய நகரத்தை
அடைந்தார்கள்.

அந்நகரத்துள்ளார் யாவரும் துக்க சாகரத்தில் மூழ்கினவ
ராய் அன்னபானாதிகளை மறந்து மனம் ஒன்றிலும் செல்லாமல்
தமது அரசன் நீங்கின துக்கத்தையே பாராட்டிக் கொண்டிருந்
தார்கள். அதனால் அவர்களுடைய குழவிகளும் அவர்களால்
வளர்க்கப்பட்ட பிராணிகளும் ஊணிழந்தன. பக்ஷிகளும் தாம்
அழகாகப் பேசுவதை ஒழித்தன. இராஜ வீதிகள் திருவிழாக்
களையும் அவற்றிற்குரிய அலங்காரங்களையும் இழந்தன. மாளிகை
களெல்லாம் பொலிவழிந்தன. பாவலர் பரிசிழந்தனர். நிடத
நாட்டில் கலியின் தீமை மிகுந்தமையால் தேவர் அவி இழந்தனர்.
புட்கரனது கொடுங்கோன்மையால் நிடத நாட்டார் இன்பமிழந்
தனர். எங்கணும் அறங் குறைந்தது. மறம் மிகுந்தது. பொய்
மை பலித்துத் தீமை முதிர்ந்தது. எங்கேயும் மனு நீதி மறைந்து
கலி நீதி நிறைந்தது. வானம் பொய்த்தது. நாட்டின் வளங்
குன்றிப் பஞ்சம் மிகுந்தது. நல்லோரேங்கினர், தீயோரோங்
கினர்.

இஃது இவ்வாறிருக்கக் காட்டில் நளன் போகும் இடங்களி
லெல்லாம் மயில்களாடின. மேகங்கள் மிருதுவான துளிகளைச்
சிதறின. பூங்கொடிகள் புஷ்பித்தன. காய்ந்த மரங்களெல்லாம்
தளிர்த்தன. தரையிலிருந்த பருக்கைக் கற்களெல்லாம் குழைந்து
மிருதுவாயின. நல்லோரைக் கண்டால் மனங் குழையாதார்
யாவர்? பாலை நிலமெல்லாம் மருத நிலம்போல் செழித்து
விளங்கின. வழிப்பறிப்போரும் தமது கொடுமை யொழித்து
அருள் சுரந்தவரானார். கொடிய மிருகங்களும் தமது இயற்கைக்
குணம் மாறின. ஆகையால் நளனும் தமயந்தியும் போன இடங்
களெல்லாம் ரமணீயமான சோலைகளாக இருந்தனவே யன்றி
காடாகத் தோன்றவில்லை. அதனால் அவர்கள் காட்டில் வெகு
தூரம் போய்விட்டார்கள். அப்போது கலி அவர்கள் போன
வழியில் ஒரு வாவியின் கரையோரமாய் ஒரு அழகான அன்னத்

தின் உருவெடுத்துக்கொண்டு நின்றான். அதைக் கண்ட தமயந்தி அதன் அழகுக்காக மெச்சி அரசனைப் பார்த்து 'ஐயா, இதோ தோற்றுகிற இவ்வன்னம் முன்பு நாமிருவருக்கும் மணம் முடித்த அன்னத்தைப் பார்க்கிலும் மிக்க அழகுடையது. நான் அரண்மனையில் வளர்த்த பக்ஷியின் ஞாபகம் இன்னும் என் மனத்தை விட்டு நீங்கவில்லை. அதை மறக்கும்படியாக இவ்வன்னத்தை எனக்குப் பிடித்துத் தரவேண்டும்'' எனப் பணிவோடு கேட்டாள்

அப்போது நளன் ஒற்றை ஆடையோடிருந்தமையால் அவ்வன்னத்தை எதனால் பிடிப்பது என ஆலோசித்துக் கொண்டிருக்கையில் அதை அறிந்த தமயந்தி ''அண்ணலே, தாங்கள் எதற்காகத் தயங்கவேண்டும். நாமிருவரும் ஒரு வஸ்திரத்தை உடுத்திக்கொண்டு மற்றொரு வஸ்திரத்தால் வளைத்துப் பிடிக்கலாம்,'' என்றாள்.

நளன் கலியின் வயத்தனாதலின், தையல சொற்கேளேல் என்பதையும் மங்கையர் பொருட்டாலெய்தும் மாந்தர்க்கு மரணம் என்பதையும் மறந்து தமயந்தி சொல்லியதை வியந்து இருவரும் ஒரு வஸ்திரத்தை உடுத்திக்கொண்டு மற்றொன்றால் அப்பறவையைப் பிடிப்பதற்காக அதை அதன்மேல் விசிறி எறிந்தான்.

உடனே அந்த வஞ்சனை உருக்கொண்டு நின்ற அன்னபக்ஷியாகிய கலி 'இவ்வரசனது ஆடையையும் பறித்துக் கட்டத்துணியுமற்று வருந்தச்செய்வதற்குச் சமயம் இதுதான்,' என மனத்துட்கொண்டு தன்மேல் எறியப்பட்ட வஸ்திரத்தோடு ஆகாயத்திற் பறந்தது.

அரசன் வியப்புற்று 'இச்சிறிய பறவை இவ்வாடையைச் சுமந்து செல்லும் வலிமையுடையதா' எனத் தனக்குள்ளே சிந்தித்துக் கொண்டிருக்கையில் அஃது ஆகாயத்திலிருந்து ''அரசனே, நான் அன்னபக்ஷியல்ல. நானதான் கலி என்பவன். முன்னேயுன் செல்வமெல்லாம் பறித்துப் புட்கரனுக்குக் கொடுத்தவனும் நானே. வீணாகப் பறவையை வெறுப்பதில் பயனென்ன'' என்றது.

ஆநத நூதனக் காட்சியைக்கண்டு தமையந்தி ஆடை யற்றவர்களுக்கு எல்லாம் ஆடையளிக்கும ஐயன ஆடையின்றி இறக்கவும நேரிட்டதோ. என்ன காலம். இவ்வெளற்றையாடைகூட அவருடையதாக இருக்கக்கூடாமோ. பட்டுப் பீதாம்பரங்களைப் பரிசாகக்கொடுத்த பார்த்திபன் டம்பவஸ்திரமின்றிப் பரிதவிப்பதைப்பார்க்கவோ கண்டேன். ஆ, தெய்வமே என் மன்னனது சத்தியந் தவறாத நிலைமைக்காவது அவரை நீ காக்கவேண்டாமோ.'' என மனம் புண்ணாகி வருந்தி நின்ற தமையந்தி, கலி சொல்லியதைக் கேட்டுத் திடுக்கிட்டு "ஆ! ஆ!! இவையெல்லாம் அவ்வஞ்சகச் சனியினால் நேரிட்டன. இக்கலிக்கு நாங்கள் செய்த தீங்கு யாது. நாங்கள் ஒருநாளும் தேவர்களை இகழ்ந்ததில்லையே. தெய்வமிகழேல் என்பதை நாங்கள் மறந்த க்ஷணமும் உண்டோ. அவர்களுக்குச் சிறப்பு செய்வதையே எமது முதன்மையான கடமையாகக் கொண்டிருந்தோமே. அதன் பயன் இதுதானோ. கால வேறுபாட்டால் நன்மையுந் தீமையாகுமோ. அநியாயமாக, நிரபராதிகளான எங்களை வருத்தியதால், வஞ்சனைக் கொடிய கலியே!

அறம்பிழைத்தார் டோய்த்தார் அருள்சிதைத்தார் மானத்
திறம்பினழத்தார் தேய்வ மிசழ்ந்தார—புறங்கடையில்
சென்றார் புதநரகஞ் சேர்வாய்கோ லென்றழியா
நின்றாள் விதியை நினைந்து."

இவ்வாறு தமையந்தி கலியைச் சபித்து மனம்புழுங்கி வருந்துவதைக் கண்ட நளன், கலியின் வஞ்சனையை அறிந்தும் தான் மனந் தளராது, தன்னிலைமையைக் கண்டு வருந்திய தமையந்தியை நோக்கி "நீ வருந்துவதிற் பயனென்ன. அற்ப மானிடராகிய நாம் ஒன்றை ஆக்கவும வல்லேம் அல்லேம். எல்லாவற்றையும் ஆட்டுவிக்கும் சர்வ வல்லமையுடைய கடவுளின் சித்தமே இதுவானால் அதைக் கடக்க நம்மாலாகுமோ. அவர் கட்டளையை மறுப்பவர் எவர். உலகில் வருத்துபவனும் வருந்துபவனும் அக்கடவுளன்றோ. நாம் உலகில் எதை உரிமை பாராட்டக்

கூடும். எல்லாம் அவனே. எல்லாம் உண்மை. இன்பதுன்பங்கள் இரண்டையும் அறிந்து சுதந்தரமுடையவனாகிய அவனிடத்தில் ஒப்புவித்துவிட்டு, அவனிஷ்டப்படி நாம் நடந்து மன வேறுபாடின்றி உலக இன்பத்தில் மயங்காது தப்புவிக்கவேண்டும். கடவுள் செய்வதெல்லாம் நமது நன்மைக்காகவெனக் கொள்ளல் வேண்டும். கஷ்டம் வந்தபோது கடவுளை வெறுப்பவர் அறிவீனர். ஆதலால் நீ ஒன்றுக்கும் சஞ்சலப்படவேண்டாம். நாம் வருந்துவதால் வரவேண்டியது வராமற் போகாது. எட்டி மரத்திலேறியவன் எட்டிப்பழத்தை அடைவானேயல்லது கட்டிமாங்கனியை அடையக் கூடுமோ? அதுபோல உலகத்தில் அடையக் கூடியது துன்பமேயன்றி இன்பமல்ல. இவ்வுலகத்தில் பிறந்த நாம் துன்பமன்றி வேறெதை அடையக்கூடும். அதனால் இத்துன்பத்துக்காக நீ வருந்துவது என்னை வருத்துகிறது. அதை ஒழித்து இன்ப துன்பமிரண்டையும் சமமாகக் கொள்வாயாக" என்று இனிய மொழிகளால் அவள் துக்கத்தை மாற்றி ஒரே ஆடையுடன் சற்று தூரம் செல்லுகையில் அங்கே ஒரு சாலை பிரியலுற்றது. நளன் தமயந்தியின் முக வாட்டத்தையும் மெலிவையும் பார்த்து 'இவள் என்னைத் தொடர்ந்து வந்துகொண்டேயிருந்தால் இவள் இக்கற்களிலும் முட்களிலும் படும் துன்பத்தை கண்ணாற்கண்டு சகிக்க முடியாது" எனத் தனக்குள்ளே தீர்மானித்துக் கொண்டு தமயந்தியை நோக்கி "இதோ பிரிகிற இவ்வழி உன் தந்தை ஊருக்குச் செல்லுகின்றது. நிடத நாட்டிலிருந்து விதர்ப்ப நாட்டுக்குக் காட்டு வழியாகச் செல்லும் பாதை இதுதான். இதன் வழியாகப் போனால் நீ நிச்சயமாக விதர்ப்ப நகரை அடையலாம்" என்றான்.

தமயந்தி இவ்வார்த்தைகளைக்கேட்டு அனலிலிட்டமெழுகு போலுருகி "ஐயனே! தாங்கள் என்னைவிட்டுப் பிரியவேண்டுமென்ற எண்ணம் தங்களுக்குண்டாகும்படி நானிழைத்த குற்றம் யாதாயினும் உண்டோ? அல்லது என்னால் தங்களுக்கு இடையூறுகளுண்டோ. தங்களைவிட்டுப் பிரியாமலிருப்பதே எனக்குப் பெரும் பாக்கியமென நினைத்திருக்கிற என்னைவிட்டுப் பிரிவதால் தாங்களடையும் பெரும்பயனுண்டோ? ஏழைமையும் தங்களைவிட்

டிப் பிரியாமலிருக்கவேண்டுமென அல்லும் பகலும் அநாத ரக்ஷகனைத் துதிக்கும் என்னைத் தாங்கள் நீக்க முயல்வது தர்மமா" என்று வருந்தினாள்.

நளன் அவள் வருத்தத்தைக் கண்டு மனம் பொறுமல் "நான் அவ்வழியைக் காண்பித்ததேயன்றி உன்னை நான் உன் தந்தை நகருக்குப் போகச் சொல்லி வற்புறுத்தவில்லை. உன்னை நீக்க வேண்டும் என்ற எண்ணமும் எனக்கில்லை. உன்னைவிட்டுப் பிரிவதால் நானடையும் பெரும் பாக்கியமும் ஒன்றுமில்லை. நீ வருந்த வேண்டாம். உன்னைவிட்டுப் பிரிந்தபிறகும் என்னுயிர் நிலைத்திருக்குமோ" என்று ஆறுதல் சொல்லி அவளைத் தேற்றினான்.

இவ்வாறு இவர்களிருவரும் அக்காட்டில் போய்க்கொண்டிருக்கும்போது இவர்களுடைய கால வித்தியாசத்தையும் அதனால் படும் துன்பத்தையும் கண்டு சகிக்காதவனாய்ச் சூரியனும் போய் மறைந்தான். புஷ்கரனுடைய மனம்போன்ற இருளானது சூழ ஆரம்பிக்குந் தருணத்தில் இவர்களிருவரும் அன்றிரவு தங்குவதற்காக ஓரிடத்தைத் தேடிக்கொண்டே போகையில் வழியில் ஒரு பாழ்மண்டபத்தைக் கண்டார்கள்.

அம்மண்டபம் ஒரு பக்கத்தில் இடிந்து விழுந்த கற்குவியல்களையும் சுற்றிலும் சுவர்கள் உப்புப்பூத்துக் கொட்டிய சாந்துப் பொடிகளையும் உடையது. சுவர்களெல்லாம் வெடித்துவெடித்துப் பெரும் பாம்புகளுக் கிருப்பிடமாகவும் இருந்தன. ஒரு பக்கத்தில் அஸ்திவாரம் உட்கார்ந்துபோனதால் அப்பக்கத்தில் அம்மண்டபம் விழுவதற்குச் சாய்வது போன்ற தோற்றத்துடனிருந்தது. மேலேயுள்ள மண்டபம் உட்புறத்திலுள்ள கல் சாந்து முதலியவற்றில் பெரும்பாகம் உப்புப் பூத்துக் கொட்டிக்கொண்டே இருந்தபடியால் தும்முதல் அல்லது இருமுதலினால் உண்டாகும் அதிர்ச்சியினால் கீழே விழுந்துவிடுமோ என அயிர்க்கும்படியாக அவ்வளவு அபாயகரமாக ஒட்டிக் கொண்டிருந்தது. அதனுள் தரைப்பாகம் சூரியன் வெம்மையால் கருகிய புற்களின் வேர்களையும் அவற்றினிடையே பருக்கைக் கற்களையும் உடையது. சற்று உட்காருவதற்குக் கூட இடமில்லாத அக்காட்டில் இம்

மண்டபத்தைக் கண்ட நளனும் தமயந்தியும் அன்றிராப்பொழு தைக் கழிக்க அதாவது சமயத்தில் காணப்பட்டதே எனமனங் களித்து அதிற் றங்கினார்கள்.

அன்றைக்கு முதல் நாள்வரையில் சந்திர காந்தக் கல்லால் கட்டப் பட்டு அகிற்புகை ஊட்டப்பட்ட நிலாமணி முற்றத்தில் நவரத்தினங்க ளிழைத்த கட்டிலில் அலங்கரிக்கப்பட்ட பஞ்சணை யின்மீது அனறலாந்த மணமிகுந்த காம்பரிந்த புஷ்பங்களைப் பரப்பி மெல்லிய பட்டாடை விரித்து அன்னத் தூவியால் நிரப்பப் பட்ட தலையணையோடு பணிவிடைக்காரா அனேகர் சோடச உப சாரமும் செய்ய ஆனந்த நித்திரை செய்த அரசனும் அரசியும் மறுநாள் நிற்க நிழலுமின்றிக் கட்டத் துணியுமின்றி உண்ண உணவுமின்றி நடக்கச் சக்தியுமின்றி வருந்துவாரானா யானால் ஊழினும் வலிது யாது. அதை நீக்குபவரும் உளரோ.

நிற்க, அரசனும் அரசியும் தமமுடைய நிலைமையை நினைத்து ஒருவரை ஒருவர் பார்த்துப் பரிதாபப் பட்டார்கள். தமயந்தி நள னைப் பார்த்து "அரசரேறே! எப்பக்கத்திலும் வளைந்த கடலால் சூழப்பட்ட விசாலமான நாட்டிலுள்ள மன்னரெல்லாம வந்து வணங்கத் திவ்விய சிமமாசனத்தில் வீற்றிருந்த தாம வறியவர் போல முட்செடிகள் நிரமபிய இப்பாழ் மண்டபத்தில் வீற்றிருக்க வும் நேர்ந்ததே" என்று விம்மி விம்மி அழத் தொடங்கினாள். நளன் அவளைப் பலவாற்றாலும சமாதானப்படுத்தி அவள் அழு கையை மாற்றித் தன கொடுவளையில் அவள் தலையை அமாத்தி நித்திரை போகச் செய்தான.

# பிரிவுறு படலம்.

அரண்மனையில் தன் தோழிகளால் மிகவும் அன்புடன் பரப்பப்பட்ட புஷ்ப தளத்தின்மீது நடக்கும்போதும் வருந்துகின்ற மிருதுவான கால்களால் அன்று பகல் முழுதும் கற்களிலும் புற்களிலும் நடந்துவந்த சிரமத்தினாலும் ஆகாரமில்லாமையாலும் களைப்படைந்து நித்திரைபோனாள்.

அப்போது நளன் தமயந்தியின் மின்னலைப்போன்ற சரீரம் புழுதியில் கிடப்பதையும், தூக்கமே ஒருருக்கொண்டாற்போல அவள் வாட்டமுற்று உறங்குவதையும், அலர்ந்த செந்தாமரை போன்ற முகம் வெயிலினால் பொலிவழிந்து விளங்குவதையும் கண்டு நெஞ்சு புண்ணாகிப் புலம்பி "இப்பெண்மணி என்னோடு இன்னும் செல்லுதற்கரிய காடுகளிலெல்லாம் தொடர்ந்துவருமே யானால் இவள் படும் துன்பத்தைக் கண்ணாற்கண்டு சகிக்கமுடியாது. இவளை யிவ்விடத்திலேயே விட்டுப் பிரிந்தால் இவள் தகப்பன் நகருக்குச் செல்லும் சாலை சமீபத்திலிருக்கிறது; அவ்வழியைப்பற்றி எப்படியாவது அந்நகருக்குப் போய்ச் சேருவாள். ஆகையால் இவளை யிப்போது இவ்விடத்தில் விட்டுப் பிரிவதே அறிவுடைமை. இவள் விழித்துக்கொண்டால் இவளை விட்டுப் பிரிவது முடியாத காரியம்" என்று தனக்குள்ளே தீர்மானித்து எழுந்திருக்க நினைக்கையில் அவர்களிருவருக்கும் ஒரே வஸ்திரமாக இருப்பதை உணர்ந்து "இதென்னதொல்லை. எங்களிருவருக்கும் ஏற்பட்ட அன்பையும் உயிரையும்போல இந்த ஆடையும் ஒன்றாயிற்றே; இதையும் விட்டு விட்டுப்போனால் ஆடையின்றித் திரியவேண்டுமே. ஏ! காலமே உன்னை வெல்பவருமுண்டோ. எத்தனை அறிவுடையோரையும் உன் இஷ்டப்படி அவருடைய அறிவை மாற்றி உன் வசப்படுத்திப் பதுமைபோல் ஆட்டும் உன் வல்லமையைப் புகழ்வதற்கு நான் யார்.

வாட்டினும் வாட்டுவை வன்மை கெடத்திரு
ஊட்டினும் ஊட்டுவை உம்பர்ப் பெரும்பதி
காட்டினும் காட்டுவைக் கண்ணிற் றரும் விட்
டாட்டினு மாட்டுவை யாரையும் புசாலமே.

என்று தனக்கு நேர்ந்த காலத்தை வெறுத்துப் பின் "இவ் வாடையை இரண்டாய்த் துண்டிக்கப் புகுந்தாலும் அதற்குரிய கருவி ஒன்றேனும் என்னிடத்தில்லையே! நான் என்ன செய்வேன்; எதை ஆயுதமாகக் கொள்வேன்; இருட்டோ ஒன்றும் தெரியவில்லையே" என்று நிதானித்துப் பார்த்தான்.

இவளைப் பிரியவேண்டுமென்று இவ்வளவு காரியங்கள் செய்தும் தன் எண்ணம் கைகூடவில்லையே என்று இரவும் பகலும் நித்திரையின்றி அதற்குரிய சமயம் பார்த்துக்கொண்டிருந்த கலி, தான் தேவர்களிடத்தில் செய்த சபதம் நிறைவேறிற்றெனக் களித்துத் தன் எண்ணமே ஒருருக்கொண்டாற்போலப் பிரிக்குந் தொழிலையுடைய ஒரு வாளாயுதமாக நளனுக்கருகில் கிடந்தான். நளன் அவ்வாளைக் கைக்கொண்டு,

> ஒற்றைத் துகிலு முயிரு மிரண்டாக
> முற்றுந்தன் னன்பை முதலோடும்—பற்றி
> அரிந்தா னரிந்திட் டவணிலைமை நெஞ்சிற்
> றெரிந்தா னிருந்தான் றிகைத்து.

அவர்களிருவரும் பிரியாதபடி சேர்த்திருந்த அவ் வஸ்திரத்தை இரண்டு துண்டாக்கித் தமயந்தியை விட்டு நீங்குவதற்காகத் தன் கொடுங்கையில் அமர்த்தியிருந்த தலையை அவள் விழித்துக்கொள்ளாதபடி மெதுவாக எடுத்துத் தரையில் வைத்துவிட்டுச் சந்தடி செய்யாமல் எழுந்திருந்தான். 'அவள் சமீபத்தில் இருக்கும் வரையில் அவளைவிட்டுப் பிரிந்தே தீரவேண்டும் எனச் சங்கல்பம் செய்துகொண்டு ஒன்றாக இருந்த உயிரை இரண்டாக்கினாற்போல் ஒரே வஸ்திரத்தை இரண்டு துண்டாக்கித் திடமனத்தோடு பிரிய எண்ணங்கொண்ட நளன் பிரியப்போகும் தறுவாயில் பிரிவினாலுறுந் துன்பத்தை உள்ளபடி உணர்ந்து "ஐயோ, என்ன காரியஞ் செய்யத் துணிந்தேன். இவளைத் தன்னந்தனியாக இக்காட்டில் விட்டு நான் நீங்கினால் இவளுக்கு என்ன நேரிடுமோ. மிகவும் கொடிய பிராணிகள் நிறைந்த இக்காட்டில் இவளுக்கு ஒரு அபாயம் நேரிட்டால் இவளைக் காப்பாற்றுபவர் யார். இவள் விழித்துக்கொண்டால் என்னைப்பற்றி என்ன நினைப்பாளோ.

இவள் மனம் என்ன பாடுபடுமோ. ஒருவேளை உயிரையுமிழக்கத் துணிவாளோ. இவள் உயிர் விட்டபிறகு நான் என் உயிரை வைத்திருக்கவும் வேண்டுமோ. என் உயிர் தான் நிற்குமோ. இது வரையில் இவளுக்குத் தனிமை என்பதே தெரியாதே. கண்மணி, இவற்றை எல்லாம் அறிவதற்காகவோ தேவர்களையும் வெறுத்து எனக்கே மாலை சூட்டினாய். செங்காந்தள் போன்ற கையினழகையும், மாலை சூட்டிய தருணத்தில் காணப்பட்ட உன் முகமலர்ச்சியையும் புன் சிரிப்பையும் கடைக் கண்ணோக்கையும் இனி எக்காலத்தில் கண்டு மகிழ்வேன்" என்று அழுது அவசமேற் கொண்டு மேலெழுந்து புரண்டு "ஏ! வனதேவதைகளே! உலகத்தில் சத்தியமே நிலைத்த தென்பதும் அச்சத்தியமே விரதமென நான் இதுகாறும் கொண்டதும் உண்மையாயின் இக்கற்புக்கரசிக்கு ஒருவித துன்பமும் உண்டாகாதபடி காக்கவேண்டிய கடன் நும்மைச் சேர்ந்தது" என்று மெலிந்து தொழுவான். பின்பு மிகத் துயரத்தோடு சற்றுத் தூரம்போவான். நெடுகச் செல்லக் காலெழாமையால் உடனே திரும்பி வந்து தன் மனைவியை நோக்கிப் பெருமூச்செறிவான். இவள் மலைகள் நிறைந்த தனிவழியில் போவாளானால் அங்குள்ள பேய்க் கூட்டங்கள் இவளைக்கொன்றுவிடுமே என உயிர் குழைந்து வருந்துவான். இவ்விதமாகப்

போயொருகான் மீளும் புகுந்தொருகான் மீண்டேகும்
ஆயர் கொணர்ந்த அடுபோலின் — தோயல்
கடைவார்தங் கைபோல வாயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம்.

போவதும் வருவதுமாகத் தயிர் கடைபவர் கைபோல அங்குமிங்கும் அலைந்து கடைசியில் நளன் முற்றும் கலியின் வசத்தானபடியால் தன் அன்புக்கிருப்பிடமாகிய அரிய காதலியைவிட்டுப் பிரிந்துபோக மனங்கொண்டு பித்தனைப்போல் ஒன்றுந் தோன்றாமல் போய்விட்டான்.

நளன் பேய்களும் உறங்கும் நடு இராத்திரியில் கொடிய காட்டிலே தன்னந் தனியாகத் தமயந்தியை விட்டுப் பிரிந்து போன

வுடன் மிகுந்த சிரமத்தினால் அயர்ந்து நித்திரை போனதை யறிந்துக் கொஞ்சம் தூக்கம் கலைந்து தன் அருகில் நித்திரை செய்த அரசனைத் தடவிப் பார்த்தாள். அந்த இடத்தில் அரசனைக் காணாமையால் நெஞ்சம் பதறி எழுந்து கைக்கெட்டிய வரையில் மறுபடியும் தேடிப் பார்த்தும் அவ்விடத்தில் எங்கும் காணாமையால் நெருப்பிலகப்பட்ட புழுவைப்போல் துடிதுடித்துப் பெருமூச்செறிந்து தேடித் தேடிப் பார்த்து மனம் புழுங்கிச் சிவந்த கண்களினின்றும் கண்ணீர் ஆறுபோல் பெருகத் தன் மலர்போலும் கைகளை நெறித்து வயிற்றைப் பிசைந்து வாய்விட்டுக் கதறியழுது "ஏ! அரசே, ஏழையாகிய என்னிடத்தில் இப்படி விளையாடலாமா. இதுதானா விளையாட்டிற் குரித்தான காலம். உயிர் போகும்படி அம்பு பட்ட மான்போல் கண்ணீர் வழிய வருந்துகின்ற என் கண்ணுக்கு முன்னேவர இன்னும் மனம் வரவில்லையோ. ஏ! பகைவர் சிங்கமே! நிடதநாட்டார் கோமானே! என்னுயிர்க்குயிரே! அகன்ற மார்பழகா! இந்தக் கரிய இருளில் நான் தனியே நின்று புலம்பக் காட்டகத்தில் நித்திரை செய்யும்போது விட்டுப் போனதுமன்றி இப்போது நான் வருந்தி அழைத்தாலும் வாராதிருத்தல் தங்கள் கருணைக்குத் தகுதியோ? தங்களுடைய தாமரை மலர்போன்ற முகத்தையும் பருத்த தோள்களையும் காணாது மனம் வாடுகின்ற என்னிடத்தில் ஆதியில் தேவேந்திரன் கற்றுக்கொடுத்த உருத் தெரியா மந்திர சத்தியால் மறைந்து விளையாடுவது தாமோ" என்று பலவாறாக இராத்திரி முழுதும் புலம்பி அருணோதயத்தில் "ஏ மன்னர் பெருமானே, என் மனமுருகச் செலுக்கிரங்கி என் முன்னே வரத் தங்களுக்கு மனமில்லாவிடினும் இப்போது விடியற்காலம் ஆகப் போகிறபடியால் காலைக் கடன் கழிக்கவாவது வரக்கூடாதா. என்னால் தங்களுக்குப் பலவித துன்பங்கள் நேரிட்டன. என்னைக் கலியாணம் செய்திராவிட்டால் தங்களுக்கு இவ்விதத் துன்பங்கள் நேரிட்டிருக்க மாட்டாது. நான் அருகிலிருந்து தங்களுக்குப் பலவித இடையூறுகளை உண்டுபண்ணினேன். ஆகையால் பேதையாகிய என்னைவிட்டுப் பிரிவதே தங்களுக்குச் சர்வசௌகரியத்தை உண்டுபண்ணுமென்று நினைத்தீர்கள் போலும். ஆயினும் இப்

பிறப்பில் இனித் தங்களைக் கண்டு களிக்கப் போதாமால் புண்ணியம் செய்திராவிடினும் மறு பிறப்பிலாவது கடுந்தவஞ் செய்து தங்களையே மணப்பேனேயன்றி மறப்பவளும் வெறுப்பவளுமல்ல. என்று தன்னாலானமட்டும் கதறியும் தான் பேசும் வார்த்தைகளின் எதிரொலியே யன்றி மறுமொழி கேளாமல் துக்கித்தும் பைத்தியம் பிடித்தவள் போல் அங்கிருந்த பிராணிகளைப் பார்த்து

வாவுமிள மான்காள் மயில்காள் மடப்பிடிகாள்
கூவுங்கரிய குயில்காள் மென் புள்ளினங்காள்
ஆவியேன மேவி யகலேமென வகன்ற
காவலன்றன் போன வழியெனக்குக் காட்டீரே.

என்று தன் வாயில் வந்ததையெல்லாம் சொல்லிக்கொண்டும் தமியளாய்ப் புலம்பிக்கொண்டும் போகும்போது அரசனுடைய அடிச்சுவட்டைக் கண்டு திடீரெனக் கீழே விழுந்து உயிர் சோர்ந்தாள்.

இவ்வாறு துன்பக்கடலில் மூழ்கி அதனின்றும் கரையேற வகையறியாது மூர்ச்சித்துக் கிடக்கின்ற தமயந்தியை அக்காட்டிலுள்ள மலைப்பாம்பொன்று விழுங்கியது. தமயந்திக்குச் சற்று உணர்ச்சி ஏற்பட்டு அவள் பார்க்கையில் ஒரு கொடிய பெரும்பாம்பு தன்னை விழுங்குவதைக் கண்டு நடுக்கங்கொண்டு நாத்தடுமாறி மெய்சோர்ந்து செயலற்றவளாய் "ஏ! சந்திரகுல திலகரே! என் சற்குணசீலரே! எவ்வுயிரையுந் தன்னுயிர் போலக் காக்குங் கருணைக் கடலே! என் ஏக்கத்தைத் தீர்க்கும் ஏந்தலே! அரசர் பெருமானே! என்னை ஒரு பெரிய மலைப்பாம்பு விழுங்குகின்றது. நான் என்னைக் காத்துக்கொள்ள வகையறியாது விழிக்கிறேன். இந்தக் காட்டில் என்னைக் காப்பாற்றுபவர் யாருமில்லை. இப்பொழுதே என்னைக் காக்காவிடின் நான் இந்தப் பாம்பின் வாயிலகப்பட்டு இறப்பது நிச்சயம். இப்போதாவது என்னை இவ்வாபத்திலிருந்து விடுவித்துக் காப்பாற்றக் கூடாதா. என் பேரில் இவ்வளவு வர்மம் உண்டாகும்படி நான் தங்களுக்கிழைத்த குற்றம் யாதுமில்லையே. என் பிராணநாதா, மிகவும் விரைவாக வந்து இப்பாம்பைக் கொல்லாவிடில் இன்னும் சற்று

நேரத்தில் இது என்னை விழுங்கிவிடும். ஐயனே! இந்தச் சமயம் என்னைப் பரீக்ஷிக்கவேண்டாம். கருணை கூர்ந்து இப்போதே என்னை ரக்ஷிக்கவேண்டும். என்று நாலாபக்கங்களிலும் தலையைச் சுற்றிச் சுற்றிப் பார்த்து அரசனைக் காணாமல் மிக்க ஏக்கங்கொண்டு "ஆ! தெய்வமே! இப்பாம்பின் வாய்ப்பட்டிறக்க நான் என்ன பாதகம் செய்தேனோ? என்னுயிருக்குயிரான நாயகனை விட்டுப் பிரிந்து தனித்து உயிர் வாழ்வதினும் இக்கொடிய பாம்பின் வாய்ப்பட்டிறப்பதே மேன்மையெனினும், நான் உயிரோடிருந்தால் எப்போதாவது ஒரு சமயம் அவரது திருமுகத்தைக் கண்டு களிக்கலாமே என்ற எண்ணம் பாழாய்ப்போகுமே. அல்லது இறந்தாலும் இனி எப்பிறவியில் இதே ஞாபகத்தோடு அவரோடு கூடி வாழ்வேன். ஐயோ பாவம், இந்த வனத்தில் ஒருவருமில்லையா பெண் என்றால் பேயும் இரங்குமே. ஆபத்துக்குதவுதல் எல்லாருக்கும் பொதுவன்றோ. வழியோடு போகும்போதே தர்மம் கைகூடுமாயின் அதை விலக்குவாரும் உண்டோ. அனாதையாய் இந்தப் பாம்பின் வாயிலகப்பட்டு இறக்கப்போகிற என்னைக் காப்பாற்றுவது தர்மமல்லவா" என்று பிரலாபித்துக் கொண்டிருந்தாள்.

அப்போது அக்காட்டில் ஒரு வேடன் இவ்வழு குரலைக் கேட்டுக் கையில் வில்லையும் அம்பையும் எடுத்துக்கொண்டு அந்த இடத்துக்கு ஓடி வந்தான். அத்தருணத்தில் அப்பாம்பு தமயந்தியை விழுங்கும் சமயமாக இருப்பதைக் கண்டு அதிக பரபரப்புடன் தன் வில்லில் ஒரு கூரிய அம்பைத் தொடுத்துவிட்டு அப்பாம்பை இரண்டு பிளவாகப் பிளந்து யமன் கையிலகப்பட்ட உயிரை விடுவிப்பதுபோல் தமயந்தியை அப்பாம்பின் வாயினின்றும் நீக்கினான்.

அவ்வேடனைத் தமயந்தி, கஜேந்திரன் என்னும் யானையை முதலை வாயினின்றும் விடுவித்துக் காத்த அனாத ரக்ஷகன்போல கருதி "வேடர்குலாதிபனே! உன் குலம் உன்னால் சிறப்புற்றது. இக்கொடிய காட்டில் உன்னைப்போன்ற கருணாநிதி ஒருவன் இல்லையானால் என் கதி என்னவாகியிருக்கும். உன்னால் நான் இவ்வுலகத்திலேயே யாதொரு மாறுபாடுமின்றி மறுபிறவி யடைந்

தேன். பிரமனும் அறியாத இப்பெருங் காரியத்தைச் செய்த உன்னை அப்பிதாமகனைக் காட்டிலும் மேலாகவே நினைக்கின்றேன். நான் திருப்பிச் செய்ய முடியாமல் நீ எனக்குச் செய்த உதவி என்றும் மறக்கற்பாலதன்று" என ஆக்கக்கூறி அவனிடத்திலிருந்து விடை பெறும்போது நூலந்நூபேயாருங்குணம் என்றபடி அவ்வேடன் தன் ஜாதி புத்தியைக் காண்பிக்க ஆரம்பித்தான்.

நாய் முழுத்தேங்காயை அடைய நினைத்ததுபோலவும், முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டது போலவும், புறு ராஜாளியை அடிமைகொள்ள நினைத்ததுபோலவும் அக்கொடியவேடன் தமயந்தியினிடத்தில் சேட்டை பண்ணிக்கொண்டு அவளைப் பார்த்துச் சிரித்து, "பெண்பிள்ளையென்றால் சரியான பெண்பிள்ளை நீ தான். உனக்கு இவ்வளவு தான் தெரியுமோ, இன்னும் அதிகமாகவும் தெரியுமோ! இதுவரையில் உனக்கு ஒருவருமில்லையென்றும் யாராவது உன்னைக் காப்பாற்றக் கூடாதா என்றும் வாய்கிழியக் கத்தினாய். ஆபத்து நீங்கினவுடன் 'போய் வருகிறேன்' என்கிறாயே பரிகாசம் பண்ணுகிறாயோ. நான் வேலையற்றவனோ; என்னைப் பார்த்தால் மனுஷனாகத் தோற்ற வில்லையோ. உன்னைப் பார்த்தால் நல்ல பெண்ணாகத் தோற்றுகிறது. சிறு வயதிலே ஏன் இப்படித் துணையில்லாமல் அலைகிறாய். வீணாகக் கெட்டுப்போகாதே. நான் சொல்வதைக் கேள். என் வீட்டுக்கு வா. என் மனைவியை உனக்கு வேலை செய்யச் சொல்லுகிறேன். நீ கால் நீட்டிக்கொண்டு சாப்பிடலாம். கட்டிக்கொள்வதற்கு நல்ல தோலெல்லாம் தருகிறேன். சோழிகளிருக்கின்றன. நகையாய்ப் போட்டுக்கொள்ளலாம். கொடிய மிருகங்களின் பற்களையும் நகங்களையும் மாலையாய்ப் போட்டுக்கொள்ளலாம். கையில் சங்குவளைபோட்டு விடுகிறேன். நீ வேறே ஒன்றுக்கும் மலைக்கவேண்டாம். நான் சொல்லுவதைக் கேள். இந்தக் காட்டில் என்னை மீறி நடப்பவர்கள் ஒருவருமில்லை. நல்லவார்த்தையாய்ச் சொல்லும்போதே கேள். அப்புறம் என்னைக் கெட்டவன் என்று சொல்லாதே" என்றான்.

அதைக்கேட்ட தமயந்தி "இக்கிராதகன் இரக்கமுடையவன் போல் அதிக விரைவாக வந்து என்னை அப்பாம்பின் வாயினின்றும் விடுவித்தானே! இவன் செய்த இக்காரியம் இரக்கத்தாலன்றென்பதும் முற்றிலும் காதல் மிகுதியினால் செய்யப்பட்டதென்பதும் எனக்கு விளங்குகின்றது. காதல்கொள்ளத் தகாதவரிடத்துக் காதல் கொள்ளுதல் அழிவையுண்டாக்கும் என்பதை அறியாத இப்பாவிக்குப் புத்தி சொல்பவர் யாவர்? பிறன்மனைவியை இச்சிப்பவன் மகாமூடன். அவன், பரத்தையரையும் இழிகுலமகளிரையும் விரும்பி ஒழுகும் அறிவீனனைக் காட்டிலும் மிகவும் தாழ்ந்தவன். அயலான் பத்தினியை விரும்புகிறவன்

அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும்
பிறன்றார நச்சுவார்ச் சேரா—பிறன்றார
நச்சுவாரச் சேரும் பகைபழி பாவமென்
றச்சத்தோ டிந்நாற் பொருள்.

அறம், புகழ், நட்பு, பெருமை முதலியவெல்லாமிழந்து அதற்குப் பதிலாகப் பகை, பழி, பாவம், அச்சம் முதலிய நான்கையும் கைக்கொள்ளுவான். எல்லாவற்றிலும் மிகக்கொடியது யாருமற்று அநாதையாய் வருந்தும் கற்புடைய மாதரை விரும்புவது. அதனால் உண்டாகும் பழி அவ்வாறு விரும்புகிறவனைப் பற்றி என்றும் அழியாது நிற்பதன்றி அவன் குலத்தையும் பற்றும். பிறன்மனைவியை விரும்பாதவனே அறத்தின் வழியே இல்லறம் நடாத்துபவனென்றும், பேராண்மை யுடையவனென்றும், இம்மையில் எவ்வித நன்மைகளையும் அடைவதற்குரியவனென்றும் சொல்லப்படுகிறான். எவ்வித பாபம் செய்தபோதிலும் அப்பாவங்களிலெல்லாம் மிகக்கொடியது அயலான் மனைவியை விரும்புவதேயாம். ஏனெனில் அதுவே நாசத்துக்கினம். இவற்றை அறியாத இப்பாவி, நீறுபூத்த நெருப்பைச் சாம்பலென நினைத்து மடியில் கட்டிக்கொள்ள நினைக்கின்றானே! இளைத்தவன் பெண்சாதி எல்லாருக்கும் மைத்துனி என்பது சரியாக இருக்கிறது. பெண்களைத் தனிமையாக விடுவதே பெரும்பிசகு. அவர்கள் தனிவழி

நடப்பது அபாயகரமானது.' ஐயோ! என் தலைவிதி ஒரு அற்ப வேடன் கையில் அகப்பட்டு விழிக்கவும் அவன் அடாதன பேசவும் ஆயிற்றே. அவ்வார்த்தைகள் பேசிய இப்பாவியின் நாக்கு இற்று விழவில்லையே! என்பீதி கெட்ட என்னையுங்கொண்ட நெஞ்சம் பிளவுபடவில்லையே! கொடிய வஞ்சகக் கலியனை சூழ்ச்சியால் என் சிறப்பின் வலியும் என் கணவன் சக்தியும் நிலை குலைந்தனவோ! தேவர்களாலும் மாற்றப்படாத என் பற்றை ஒன்றுக்கும் பற்றாத இவ் வேடப்பதரால் மாற்றலாகுமோ! என் செல்வமெல்லாம் நீங்கினபோதிலும் என் கற்பு என்னைவிட்டு நீங்கத் தக்கதோ! அது என்னுடன் கூடப்பிறந்து என் உயிருள்ள வரையில் என்னை விட்டகலாதிருக்கும் உரிமையுடைத்தன்றே! இக்கொலைகாரன் எனக்குச் செய்தது நன்றியேயன்று. நன்றியாவது

> மனத்துக்கண் மாசிலனாத லனைத்தற
> னாகுல நீர பிற.
> அழுக்கா றவாவெகுளி யின்னாச் சொனான்கு
> மிழுக்கா வியன்ற தறம்.

மனத்தில் ஒரு குற்றமுமில்லாமல் செய்யப்படுவது. அவ்வாறன்றி செய்யப்படும் தானம் செய்தவனுக்குத் துன்பத்தையுண்டுபண்ணும். மேலும் அறமானது பொறாமை, ஐம்பொறிகளால் உண்டாகும் அவா, கோபம், அதனாலுண்டாகும் கடுஞ்சொல் முதலியவற்றை அடியோடு ஒழித்துச் செய்யப்படவேண்டும். அன்றேல் அவ்வறம் அறமெனப்படமாட்டாது. இப்புலையன் புலனடக்கும் வகையறியாது அதனின்று விளையுங் காதலாகிய ஓரவாயினால் என்னை உயிர் வாழ்வித்தானே யல்லது தயையால் என்னைக் காத்தவன் அன்று. ஆனால் அவன் என்ன எண்ணத்தோடு என்னைப் பிழைக்கச் செய்தபோதிலும் அவன் என்னை இரக்ஷித்தது ஒரு நன்றி எனக்கொண்டு அவனுக்குச் சில நன்மொழிகள் சொல்லிப் பாக்கிறேன். கடவுளை நம்பினோர் கைவிடப்படார். ஏ அநாதரக்ஷகா! நான் நாதனற்று நலங்கெட்டு நிற்பதை நீ அறியாயோ! அப்படி அறியாயானால் உனக்குரிய பரிபூரணன் என்னும் பெயர் பொய்யாகுமே. என்னைப்போன்ற தீனர்களிடத்தில் கருணை பிறக்கா

விடின் உனக்குரிய தீனதயாளு என்னும் பெயர் பரிகசிக்கக்கூடிய தன்றே! இப்போது என்னைக்காப்பவர் யாருமில்லை. என்னை முற்றிலும் உன் வசத்திலேயே ஒப்புவித்தேன். இனி என்னை இரக்ஷிப்பவனும் சிக்ஷிப்பவனும் நீ தான்” என்று கடவுளைத் தியானித்துக்கொண்டு தரையைப்பார்த்த வண்ணமாகவே “ஏ கிராதக வீரனே, என்னைப்போன்ற தங்கைகள் உனக்கு இருக்கலாம், அவர்களில் நான் ஒருத்தி அல்லவா! எனக்கு நல்ல சமயத்தில் வந்து உதவி உயிர்கொடுத்த உன்னை என் பிதாவாக நினைத்திருக்கிறேனேயன்றி வேறல்ல. மேலும் குருபத்தினி, அரசன் பத்தினி, சகோதரன் பத்தினி, சிநேகிதன் பத்தினி ஆகிய இவர்களை ஒவ்வொருவரும் தன்னைப்பெற்ற தாயெனவே நினைக்க வேண்டும். ஆகையால் அடாதகருத்தால் தம்மைப் பெற்ற தாயோடு அனேகமாய் ஐந்து தாயமார்களாகின்றார்கள். நானோ இப்பூமண்டலம் முழுதும் ஒரு குடைக்கீழாண்ட நளச்சக்கரவர்த்தியின் மனைவி. நீ இப்பூவுகத்தில் இருப்பதால் அவர் உனக்கும் அரசனாகவே இருந்திருப்பார், அதனால் நானுனக்குத் தாயல்லவா? தாயென்று நினைக்காவிட்டாலும் என்னை உன் புத்திரியென்றேனும் நினைக்கக்கூடாதா? அதனால் தோஷமுண்டாகுமோ? அப்படி நினைக்கிறவர்கள் தாம் பூமியில் நீண்டகாலம் வாழ்கிறார்கள். மற்றவரைப் பூமிகூடப் பொறுப்பதில்லையே! இவர்களுக்கென்று தனிநரகம் ஒன்றிருக்கின்றதே! அதனாலுண்டாகும் துன்பம் பொறுக்கத்தக்க தன்று. அற்ப இன்பத்தை விரும்பி இப்பெருந் துன்பத்தை மறப்பதுண்டோ! பெண்களைப் பெருநெருப்பென நினைக்கவேண்டும். அவர்களோடு பழகுவதும் நெருப்போடு பழகுவதுபோல் பழகவேண்டும். எதனினும் அவா உண்டாவது இயல்பாயினும் அதை வெறுத்து அறுப்பதே அறிவுடைமை. நீ என்னை அப்பாம்பின் வாயினின்று விடுவித்தது பெரியகாரியமல்ல. எனக்கும் என் கற்புக்கும் யாதொரு தீங்கும் நேரிடாதபடி காப்பதே உன்னுடைய கடன். நிராமானுஷியமான இக்காட்டில் நீ காக்காவிடின் என்னைக் காப்பவர் வேறு யார்? இதனால் உனக்குண்டாகும் புகழுக்கு அளவுமில்லை, அழிவுமில்லை. தீமைசெய்யத்தகுந்த சமயம் கிட்டியவிடத்தும் அத்தீமையைச் செய்யாது விடுபவனே

நல்லவன். அவனைத் தெய்வமெனவே நினைக்கவேண்டும். இச்
சமயம் இக்காட்டில் எனக்கு நீயே தெய்வம், தந்தை, சகோதரன்
முதலிய யாவரும் ஆகிறாய். ஆகையால் எனக்கு யாதொரு அச்ச
முமில்லை. நான் போய்வருகிறேன். நீயும் உன் பெண்சாதி பிள்
ளைகள் முகத்தைப்போய்ப் பார்த்து ஆனந்தப்படுவாயாக. அடுத்த
விநாடியில் நமக்கு நேரிடுவது இன்னதென்று தெரியாது. நீ
எனக்குச் செய்த உதவிக்கு அனேக வந்தனம் செய்கிறேன். வன
சரனே, கற்புடைய மகளிரைக் கடவுளென நினைத்து அவர்கள்
மனத்தைப் புண்படுத்தாதபடி காப்பதே உன் உயிர்க்குறுதி"
என்றாள்.

வேடன் "உன்னைப்போன்ற பெண்பிள்ளைகள் அனேகம்
பேரை நான் கண்டிருக்கிறேன். அவர்கள் இப்படித்தான் பேசு
வது வழக்கம். மயிலே மயிலே இறகு போடென்றால் போடுமோ.
என்னைக் கையாலாகாதவனென்று நினைத்தாயோ! யமனாயிருந்தா
லும் என்னைக்கண்டால் பயப்படுவான். நீ பெரிய கைக்காரி. நீ
தனிமையாக இந்தக்காட்டில் இருந்துகொண்டு என்னுடன் இவ்
வளவு வாதாடுகிறாயே! நான் உன்னை விட்டுப்போகிறவனல்ல.
என் கண்ணிலகப்பட்டது தப்பியும் போகுமோ? நான் வேடனா?
என்னை நீ ஏமாற்றிவிட்டுப் போகப்பார்த்தால் உன்னை நான் விடு
வேனா? போனால் போகிறதென்று பார்த்தால் எனக்கா நீ புத்தி
சொல்கிறாய். உன்னைப்போல நூறுபேருக்கு நான் புத்தி சொல்ல
வேன். எனக்கு எல்லாம் தெரியும், எல்லாருடைய சங்கதியும்
தெரியும். பெண்பிள்ளைகள் முதலில் அப்படித்தான் சொல்லு
கிறது வழக்கம். நீ பெருங்கள்ளியாக இருக்கிறாய். மரியாதை
யாக என் வீட்டுக்கு வருகிறாயா அல்லது என் குணத்தைக் காட்ட
வேணுமோ?" என்றான்.

தமயந்தி "இச் சண்டாளனிடத்தில் இனி நின்று பேசினால்
எனக்குக் கெடுதிசெய்ய நினைப்பான், இவனை விட்டு நீங்குவது
மேலானது" என்று நினைத்து அவன் சொல்லிய வார்த்தைகளுக்
கு விடைபகராது மௌனமாகவே அவ்விடத்தைவிட்டுப் பெயர்ந்
தாள்.

அப்போது பாதகனாகிய அவ்வேடன் சுயமாய்ப்போகிற யமனைத் தன்னுயிரைக் கொள்ளை கொள்வதற்காக வரவழைப்பவன் போல், வாய்பேசாது சென்ற கற்புக்கரசியாகிய தமயந்தியைப் பார்த்து 'ஏ கள்ளி, உனக்கு இவ்வளவு ஆணவமா! உன் நெஞ்சில் உப்பைத் தந்த கூடாலென்ன? என்ன துணிவோடு நீ வாயைத் திறக்காமல் போகிறாய்? இதுவரையில் கொஞ்சமாவது பரியாசகம் பார்த்தேனே, இன்னும் சற்றுநேரம் சகித்தால் பார்; உன்னைச் சின்னபின்னப் படுத்துகிறேன். பாம்புவாயிலே அகப்பட்டிருந்தபோது என்னைப் பார்த்தால் நன்றாக இருந்ததா? அப்போது என்னைக் கையெடுத்துக் கும்பிட்டாயே! காரியமாகிற வரையில் காலைப்பிடிப்பது பிறகு எட்டி குடுமியைப்பிடிப்பது என்ற பழமொழிப்படி செய்யத் துணிந்தனையே! நீ இப்படிப் பட்டவள் என்பது தெரிந்திருந்தால் அப்போது எனக்கென்ன என்று பேசாமல் போயிருப்பேன். நான் சொல்லுகிறது உன் காதில் விழவில்லையா? ஏனடீ பதில் சொல்லு. போகாதே, போகாதே. போனால் உன்னை இன்னது செய்வேனென்று எனக்கே தெரியாது ஏ பெண்மணியே, என் வார்த்தை உனக்கு அவ்வளவு அசட்டையாய்ப் போயிற்றா? இதோ பார், உன் கொழுப்பை அடக்குகிறேன்" என்று வில்லையும் அம்பையும் எறிந்து ஒரு வெறிபிடித்த வேட்டைநாயானது அழகிய பெண்மானைத் துரத்திச் செல்வதுபோல் அதிவேகமாக ஓடித் தமயந்திக்கு எதிரே சென்றவளைப் போகவொட்டாதபடி மறைத்து வாயில் வந்தபடியெல்லாம் பேசித் தனிமையாக வந்த ஒரு மானைப்பிடிப்பதற்கு நாலா பக்கங்களிலும் துரத்தித் துரத்திக் கலக்குவதுபோல் கலக்கத் தமயந்தி வலையில் அகப்பட்ட மான்போல் துடிதுடித்து எப்பக்கத்தில் ஓடினாலும் யமசொரூபமாக நிற்கின்ற அவ்வேடப்பயலைக் கண்டு உடல்பதறிக் கண்ணீர்விட்டு, "ஐயோ! இந்தக்காட்டில் ஒருவருமில்லையா! இவ்வேடன் அடாத்காரியம் செய்ய எத்தனிக்கின்றானே! எனக்கு இந்தச்சமயம் ஒருவரும் உதவிசெய்யக் கூடாதா! ஏ வனதேவதைகளே, நீங்களும் இச்சண்டாளனுக்குப் பயந்து இந்தக் காட்டைவிட்டு ஓடிப்போனீர்களோ! ஐயோ! பாதகன் கிட்ட நெருங்குகின்றானே! ஏ குடிகெட்டவனே, என்னைத்

தொடாதே! தொட்டால் உன்குலமுழுதும் அழிந்துபோம். போ
சொல்வதற்குக்கூட ஒருவரும் நீ்ரியாகமாட்டார்கள். நீயும் சாம்ப
லாய்ப் போய்விடுவாய்" என்று சொல்லிக்கொண்டிருக்கையில்,
அவ்வேடன் அதைக் காதில் போட்டுக்கொள்ளாமல் விட்டிற் பற
வை விளக்கைப் பழமென்று நினைத்துத் தின்னப்போவது போலும்,
அழகான சண்பகப்பூவை நாடி வண்டுகள் போவது போலவும்,
குளிரை நீக்குவதற்காக நெருப்பைக் கட்டிக்கொள்ளத் துணிபவன்
போலவும், யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக்
கொள்வது போலவும் தனக்கு முடிவுகாலம் சமீபித்ததை அறி
யாது வெறிபிடித்தவனைப்போல் கற்புக்கடவுளாகிய தமயந்தியைத்
தொடுவதற்கு அதிவேகமாய்ப் பாய்ந்துவருகையில், தமயந்தி,
**தன்னைக் கொல்லவருவது பசுவாயினும் அதைக் கொல்லலாய்,**
எனும் தர்மத்தைக் கைக்கொண்டு, தன்னைக் காத்துக்கொள்வ
தற்கு வேறு வழியில்லாமையால், தேவர்கள் அவளுக்குக் கொடுத்
திருக்கும் வரத்தை மனத்துட்கொண்டு கண்கள் சிவந்து அவ்
வேடனை முட்டிய அக்கினியே போதுமானதாகக் கொண்டு முகத்
தில் நெருப்புப்பொறி பறக்கக் கடுகடுத்து 'ஏ சண்டாளா, நீ சாம்ப
லாகக் கடவாய்' என்று சபிக்க, அக்கணமே அக்காமப்பேயாகிய
வேடன் குபீரென்று தீப்பிடித்து உடல்முழுதும் எரிந்து நீறானன்.

உலகில் கற்புடைய மங்கையரைக் கருதுகிறவர்களுக்கு யாது
பயன் என்பதை நமக்கு விளக்க இதைவிட வேறு சாஸ்திரமும்
சாக்ஷியும் வேண்டுமோ?

பின்பு தமயந்தி உடல் முழுதும் வியர்த்து மெய்சோர்ந்து
களைப்புற்றுப் பின் தெளிந்து தன்னை அப்பெரிய ஆபத்தினின்றுங்
காத்த ஆபத்சகாயனுடைய திருவருளை நினைக்குந்தோறும் ஆனந்
தக்கண்ணீர் பெருக அவருடைய திருவடிகளை மனத்தில் தியா
னித்துத் தெண்டனிட்டு, இனி இவ்விடத்தில் இருப்பது பழுதுடை
யது என்று எண்ணி அவ்விடத்தைவிட்டு நீங்கித் தன்னாயகன்
சென்ற வழியைத் தேடிக்கொண்டே அக்காட்டில் போய்க்கொண்
டிருந்தாள். அப்போது அங்கே உலகப்பற்றை யொழித்து உண்
மையை நாடி, ஐம்பொறிகளையும் அவித்துக், காம வெகுளி
மயக்கம் என்னும் முக்குறும்புகளையும் அழித்து, மனம் வாக்குக்

காயமெனும் திரிகரணசுத்தியாய்ச் சித்தத்தை எங்கும் நிறைந்து நித்தியமாய் விளங்கும் பரமபொருளிடத்தே நிறுத்தி எல்லாவற்றையும் அதுவாகவே நினைத்துத் தவஞ் செய்துகொண்டிருந்த முனிவர்களைக் கண்டாள். அவர்கள் தமயந்தியின் முகவாட்டத்தையும் தூய்மைத்தன்மையையுங் கண்டு இரக்கமுற்று "அம்மணி நீ யார்? உன் கணவன் பெயரென்ன? உன்னைப் பெற்றோர்கள் யார்? உன்னைப்பார்த்தால் இராஜஸ்திரீயாகத் தோற்றுகிறதே! நெருப்புப்பொறி பறக்கும் இக்காட்டில் தனிமையாக வரக்காரணமென்ன? நீ எதற்காகக் கண்ணீர்பெருகப் புலம்பவேண்டும்? உன் முகம்வாடி மெய்சோர்ந்திருக்க உனக்கு நேரிட்ட விபத்து என்ன?" என்று கேட்டார்கள்.

தமயந்தி அவர்களுடைய கனிந்தமொழியில் சற்று மனந் தேறி அவர்களை வணங்கி நடந்த விஷயங்களை அவர்களிடத்தில் சொல்லித் துக்கித்துக்கொண்டிருந்தாள்.

அதைக்கேட்டவளவில் அம்முனிவர்கள் மனமுருகித் தமையந்தியை நோக்கி "கற்பாலயமே, நீ ஒன்றுக்கும் கவலைப்பட வேண்டாம்; இத்துக்கம் நீடிக்காது. இன்னும் கொஞ்சகாலத்துக்குள் நீ உன் நாயகனை அடைந்து முன்போல வாழ்வாய். உன் குறையெல்லாம் நீங்கும். உன் பெயர் உலகுள்ளளவும் அழியாது நிற்கும். உத்தமப் பெண்களெல்லாம் உன்னை வணங்கும்படியான பெருமையையடைவாய்" எனச்சொல்லி அவளை ஆசீர்வதித்துத் தமக்கிஷ்டமான இடத்துக்குச் சென்றார்கள்.

தமயந்தி அம்முனிவர் வாக்கைத் திருவாக்காகக்கொண்டு தன் கணவனைக் கூடிய சீக்கிரத்தில் பார்க்கலாமென்ற களிப்பால் சற்று மனக்கலக்கம் நீங்கி அக்காட்டின் வழியாகப் போய்க் கொண்டிருந்தாள். அக்காலத்தில் இப்போ திருப்பதுபோல் அழகிய ராஸ்தாக்களும் இருப்புப்பாதைகளும் தந்திதபால்களும் அதி துரிதமாகச் செல்லும் வண்டித்தொடர்களும் இல்லாமையால் வணிகர்கள் தங்கள் சரக்குகளைக் காளைகள் கோவேறுகழுதைகள் முதலிய சுமைதூக்கும் மிருகங்களின் மீது ஏற்றிக்கொண்டு காடுகள் மலைகளின் வழியாகச்சென்று ஊர் ஊராய்த்திரிந்து வியா

யாருஞ் செய்வது வழக்கம். அப்போது காடுகளிலெல்லாம் வழி பறிபோர் நிறைந்திருந்தமையால் அவர்கள் கூட்டங் கூட்டமாகச் செல்வது வழக்கம். அவ்வகைக் கூட்டத்தில் ஒன்று தமயந்தி சென்ற காட்டின் வழியாகச் சேதிநாட்டுக்குச் செல்ல, அவர்களைத் தனக்கு வழித்துணையாகக் கொண்டு கண்களினின்று நீர் சொரிந்த வண்ணமாகவே போய்க்கொண்டிருந்தாள். வழியில் அஸ்தமித்தபடியால் அவ்வணிகர்கள் அன்றிரவில் அங்கேயுள்ள ஒரு காட்டாற்றின் கரையில் தங்கிச் சாக்குப்பொதிகளை இறக்கி அம்மிருகங்களைப் பக்கத்தில் மேயவிட்டு அந்த ஆற்றங்கரையிலேயே படுத்துறங்கினார்கள். தமயந்தியும் களைப்பினால் ஒரு புறத்தில் அயர்ந்து நித்திரை போயினள். நடுராத்திரியில் அக் காட்டிலுள்ள மதங்கொண்ட யானைகளில் ஒன்று இவர்கள் படுத்துறங்கும் இடத்துக்கு வந்து தமயந்தியைத் தவிரப் பெரும்பாலும் மற்றெல்லோரையும் மிதித்துத் துவைத்துக் கொன்றுவிட்டுப் போய்விட்டது.

அக்கொடும்பாவிகள் யாருக்கு என்ன தீங்கு செய்தார்களோ அல்லது தமயந்திக்கே ஏதாவது கெடுதிசெய்ய எண்ணங் கொண்டார்களோ அவர்களுக்கு இவ்வாபத்து நேரிட்டது. மனம் வாக்குக் காயம் என்ற மூன்றனுள் யாதாயினும் ஒன்றால் குற்றம் ஏற்பட்டால் அதற்குரிய தண்டனை இயல்பாகவே சம்பவிக்கும். நாம்செய்யுங் குற்றங்களை மனிதர் அறியாமலிருக்கலாமேயொழிய எங்கும் நிறைந்து எப்பக்கத்திலும் கண்ணும் காதுமுடைய கடவுளும் அறியமாட்டாரோ? நெருப்பில்லாமல் புகை எழாதது போல உலகில் காரணமின்றி எக்காரியமும் நடவாது. இதை உணராதார் உலகத்தின் சம்பவங்களை விசித்திரமாகவும் தரும விரோதமாகவும் நினைத்து, எல்லாம் வல்லகடவுள் துஷ்டநிக்கிரகம் சிஷ்டபரிபாலனம் என்னும் இருதொழிலையும் ஒழுங்குபெறச் செய்வாரென்பதை அறியாது அவர் செயலைப் பரிகசிப்பதும் குற்றங்கூறுவதுமாகத் தமது அறியாமையை வெளிப்படுத்திக் கொள்ளுகிறார்கள்.

பின்பு, தமயந்தி விழித்தெழுந்து பார்க்கையில் யானையின் அடிச்சுவட்டையும் பெரும்பாலார் அவ்யானையால் மிதிப்புண்டு

இறந்து கிடப்பதையுங்கண்டு திடுக்கிட்டு "ஐயோ பாவம், இவர்கள் எனக்குத் துணையாக வந்ததற்கு இதுதானு பலன். எனக்கு அயலார்கூட உதவிசெய்யக்கூடாதா? அவ்யானை மகாபாவியாகிய என்னைக்கொன்று அவர்களைக் காக்கக்கூடாதோ! என்னைக் கொன்றுவிட்டால் இன்னும் நான் அனுபவிக்கவேண்டிய துன்பங்கள் மீதியாக நின்றுவிடுமோ! இயல்பாக இறந்தாலாவது துன்பம் ஒழியுமே என்றால் அதுவும் நேரிடவில்லையே. செய்கையால் இறப்பதை சாஸ்திரங்களில் விலக்கியிருக்கிறார்கள். ஏனெனில், என்றும் அழியாத ஆத்துமாவானது தான் தங்கியிருக்க ஏற்பட்டுள்ள காலத்துக்கு முந்தியே தானிருந்த சரீரத்தைவிட்டு நீக்கப்பட்டால் அது அசசரீரத்தையு மிழந்து பின்பற்றுவதற்கு வேறு சரீரமும் அசசரீரத்தையடையுங்காலமும் அணுகும் வரையில் சரீரமின்றி அலகையாகிப் பிறரையும் வருத்தி அன்னம் முதலியன இன்றித் தானும் வருந்திப் பிறரால் கடுண்டு மிகுந்த துன்பத்தை அடைகிறது. அதனால் இயற்கையான மரணமே சிறந்தது. கடவுளின் செயலை எவரால் அறியமுடியும். எதையும் குறைவற நடத்தும் கோதிலாத கூத்தனது கூத்தை உணர்பவர் யார்? ஆகையால் என் இஷ்டப்படி நடக்கவில்லையே என வருந்துவதில் பயனென்ன?" என்றுதேறி அவ்விடத்தை விட்டு நீங்கி அவ் வழியாகச்சென்ற உத்தமப் பிராமணர்களின் துணைக் கொண்டு சேதிநகரம் போய்ச்சேர்ந்தாள்.

அந் நகருக்கரசன் சுவாகு என்னும் பெயர் வாய்ந்த சுசீலன். அவன் செங்கோன் முறைப்படி நீதிநெறி தவறாமல் அரசாண்டமையால் அந்நகர் செழிப்பு மிகுந்து அறப்பெருஞ் செல்வனுக்கு ஓராலயமாக விளங்கியது. அந் நகரத்தார் அறத்தினுயர்ந்ததில்லையென அறிந்து அதுவே தமமை இருமையிலும பற்றி நிற்பதென உறுதியாகக்கொண்டு, காதற்ற ஊசியும் வாராது காண் பின் கடை வழிக்கே என்பதை முற்றுமுணர்ந்து, செல்வத்தை அறத்தாற்றில் செல்லவிட்டுப் புகழ்கொண்டு வெளுத்து, மகிழ்வுற்றுக் களித்தார்கள். அதனால் அந்நகரில் துக்கம் என்னும் கொடும்பாவி எங்கும் காணப்படவில்லை.

அத்துணை மகிழ்ச்சி யிருந்த அந்நகரில் தமையந்தி வாடிய முகத்தோடும், இடையறு தொழுகுகின்ற கண்ணீரோடும், ஓயாது துடிக்கின்ற உதட்டோடும், சோர்ந்த கைகளோடும், காட்டுமுட்களால் கீறுண்டு மெலிந்த உடலோடும், தளர்ந்த நடையோடும் தள்ளாடிய கால்களோடும், முட்செடிகளால் கிழிப்புண்டதும் கூறு செயயப்பட்டதுமான ஆடையோடும், தன் நாயகனையே நினைத்துக் கவன்று ஒடுகின்ற நெஞ்சோடும் பைத்தியம் பிடித்தவள்போல் இராஜவீதியில் போயக்கொண்டிருந்தாள்.

அப்போது அரணமனையின் மேல் உபரிக்கையி லிருந்து பார்த்துக்கொண்டிருந்த அசசேதிபதியின் தாய தமையந்தியின் உருவத்தைக்கண்டு " இவள் யாரோ இராஜஸதிரீபோல் தோற்றுகிறாள். இவள் தேகம் ஒளிமழுங்கிய இரத்தினமபோல் இருக்கிறது. இவள் தனியே பித்துப பிடித்தவள்போல் அலைவதற்குக் காரணம் என்ன?" என்று சந்தேகித்துத் தன் பக்கத்திலிருந்தவர்களை ஏவி அவளை அழைத்துவாக கட்டளையிட்டாள்.

அமமாதரிற பலா ஓடிவந்து தமையந்தியினிடத்தில் தமது பெருமாட்டியின விருப்பத்தைத தெரிவித்து வருந்தியழைக்க, தமையந்தி அசசேதிபதி தாயின அந்தப்புறத்துக்குப் போயசசேர்ந்தாள்.

சேதிபதியின் தாய் தமையந்தியின் வனப்பையும் அவள் அப்போதிருந்த நிலைமையையும் கண்டு கிலேசமுற்று " அமமா, குழந்தாய்! நீ யார்? உன் பெயரென்ன? உன் தகப்பன் யார் உன்னை மனைவியாகக்கொண்ட மனனவன் யார? நீ இவ்வாறு முகம்வாடி மனங்கலஙகக் காரணம் என்ன? நீ என்னைத் தாய் எனவே நினைத்து வித்தியாசம் பாராட்டாமல் உன்விஷயஙகளை, தெரிவிப்பாயாக " என்று கேட்டாள்.

தமையந்தி " அன்னையே, வீமராஜன்புத்திரியும் நிடதநாட்டு சக்கரவர்த்தியின் மனைவியுமான தமையந்தியானவள் தன்நாயகன் பகையரசனோடு வஞ்சனைசசூதாடி வளநாடு முதலிய வெல்லாம இழந்து நாட்டில் தனக்கு நிற்கக்கூட இடமில்லாமையால் காட்டுக்

போக அம் மாதுசிரோமணியும் அவரைவிட்டுப் பிரிய மனமில்லா
தவளாய்த் தானும் பின்னே சென்றாள். அக்கொடியகாட்டில்
அவள் அயர்ந்து நித்திரை செய்ய நடுஇராத்திரியில் அவளைத்
தனியேவிட்டு அவள் நாயகன் பிரிந்து போனதால் அவ
ளைத் தேடிக்கொண்டு அவள் எங்கேயோ போய்விட்டாள்.
நான் அத்தமையந்திக்கு உயிர்த்தோழி யாகையால் அவளைப்பிரிந்
திருக்க மனமில்லாமல் அவள் பிரிவை நினைந்து நினைந்து மனம்
வருந்தி அவளைத் தேடிக்கொண்டே இந்நகரக்குவந்துசேர்ந்தேன்'
னென்றாள்.

இதைக்கேட்ட அப்பெருமாட்டி அவள் அன்புக்காக அவளை
மகிழ்ந்து "பாவாய்! கற்புக்கருப்தலமாகிய உன் தலைவியை நீ
காணும் வரையில் இவ்விடத்திலேயே உன்னிஷ்டப்படி இரு.
நீ ஒன்றுக்கும் வருந்தவேண்டாம்" என்று இனிய வார்த்தை
களைச் சொல்லித் தன்புத்திரியாகிய சுனந்தை என்பவளை அழைத்து
"இம்மாதை மிகவும் பக்ஷத்துடன் நடத்தி அவள் துக்கத்தை
ஒழிப்பாயாக" என்று தமயந்தியை அவளிடத்தில் ஒப்புவித்
தாள். சுனந்தையும் தமயந்திக்கு ஒருவித குறையுமின்றித்
தன்னைப்போலவே பாதுகாத்துவந்தமையால் தமயந்தி அங்
கேயே தங்கியிருந்தாள்.

---

## வேற்றுருவமைந்த படலம்.

---

முன்பு காட்டில் நடுராத்திரியில் தன் காதலியைத் தனி
யேவிட்டு நீங்கிய நளன் நீக்கமுடியாத துயரத்தோடு தன் மனம்
போனவழியே போய்க்கொண்டிருந்தான். அப்போது அக்காட்
டின் ஒருபுறத்தில் பரந்தெரிகின்ற காட்டுத் தீயையும் அதினின்
றெரியும் புகைப்படலங்களையும் மிக்க வியப்போடு சற்று நின்று
பார்த்தான், அப்பெருந் தீயினின்று வெளிவரச் சக்தியற்று
வருந்தி மெலிந்த குரலோடு "ஓ அரசனே, உன்னையே நான்

தஞ்சமென்றடைகிறேன். இப்போது என்னை இவ்வாபத்தினின்றும் நீக்கக்கூடிய கருணாகரன் உன்னையன்றி வேறொருவருமில்லை. என்னைக் காவாதொழிந்தால் இத்தீயில் நானிறப்பது நிச்சயம். இப்படி உன்னைச்சாரும் ஒருவனுக்குச் சம்பவித்த அபாயத்தைக் கண்ணால் கண்டும் கருணையினறிக் காக்காமல் செல்பவன் கடு நரகுக்காளாவான். என்னை இந்த ஆபத்தினின்றும் நீ நீக்கினால் அதற்குத் தக்கபடி உனக்கு உதவி செய்ய எனக்குத் தெரியும். என்னை எப்படியாவது இத்தீயினின்று அப்புறப்படுத்தவேண்டும்'' என்று பிரார்த்திக்க ஒலி ஒன்று நளனுக்குக் கேட்டது

அவ்வொலியைக் கேட்ட நளன் தனக்குற்ற துன்பத்தை முற்றிலும் மறந்து மனம்பதைத்து "இத்தீயில் யாதோ ஒரு பிராணி அகப்பட்டு வருந்துகிறது போலிருக்கிறது. இதைக் காவாதொழின் அப்பிராணி இறந்துவிடும்" என்று தனக்குள்ளே தீர்மானித்து 'பயப்படாதே, பயப்படாதே'' என்றுசொல்லிக் கொண்டு மிகவும் விரைவாக ஓடி அக்காட்டினுட் புகுந்து அக்கினி பகவான அளித்த வரத்தின் மகிமையால் தீயினுட் சென்றுபாரக்கையில் ஒரு பெரிய பனைமரம் கீழேவிழுந்து கிடந்தாற்போல ஒரே சுறுபாக ஒரு பெரும்பாம்பு கிடந்து உழன்றது. அதைக் கண்டு நளன் வியப்புற்று ஆலோசித்துக் கொண்டிருந்தான். அப்போது அப்பாம்பு அரசனைப்பார்த்து "ஏ மன்னவா! என் ஆலோசிக்கவேண்டும். நீ என்னைக்கண்டு அஞ்சவேண்டாம். நான் நாகவேந்தன். அஞகசன் என்னும் முனிவரது சாபத்தால் நான் இருந்த இடம்விட்டுப் பெயரமுடியாமல் வருந்துகிறேன். ஒரு கால நீ என் உருவத்தைக்கண்டு சற்றுமயங்கலாம். வேண்டுமானால், நான் இந்த உருவத்தைச் சற்று சுறுக்கிக்கொள்ளுகிறேன். நீ என்னை எடுத்துப் பத்தடிக்கப்பால கொண்டுபோய் விட்டுவிடு'' என்று தான் சொல்லியபடித் தன் உருவத்தைச் சுறுக்கிக் கொண்டது.

நளன் அவ்வரவின் மொழியைக்கேட்டு அருள்கூர்ந்து அதைத் தனது கைகளால் எடுத்துப் பத்தடி எண்ணிக்கொண்டே வந்து

பத்தாவது அடி வைக்குமிடத்தில் தச என்று சொல்லிக் கீழே விட்டான். அந்தக்ஷணமே அப்பாம்பு வெகுண்டு சீறி அரசனைக் கடித்தது. ஏனெனில் 'தச' என்னும் சொல்லுக்குப் பத்து என்றும் கடி என்றும் பொருள்களிருப்பதால் அரசன் 'தச' என்று கீழே விட்டவுடன், 'கடி' என்று அரசனே கட்டளையிட்டாற் போன்ற பொருளும் பொருந்துவதால் அந்நாகவேந்தன் சற்று நேரங்கூடத் தாமதிக்காமல் நளனைக் கடித்துவிட்டது.

நளன் திடுக்கிட்டுப் "பாங்கறியாப் புல்லறிவாளர்க்குச் செய்த உபகாரம் கல்லின்மேலிட்ட கலம் என்பது உண்மையாயிற்றே! உபகாரஞ் செய்யவேண்டியது அவசியமானாலும் இடமறிந்து செய்யவேண்டும் என்பதை மறந்தேனே! இப்பாம்பு பேசிய இனிய வார்த்தைகளாலல்லவா மனமிரங்கி இக்கொடிய பிராணிக்கு உதவிசெய்ய உடன்பட்டேன்! வஞ்சகர்களுடைய இதவார்த்தைகளும் தீங்கை விளைவிக்கும் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்குகிறது" என்று வருத்தமுற்றுத் தன்தேகத்தைப் பார்த்தான்.

பத்தரைமாற்றுத் தங்கத்தை உரைத்தாற்போலக் காந்தியையுடைய அவனது அழகிய தேகத்தின் நிறம், அக்கொடிய விஷவேகத்தினால் மாறி உடல் கருமைநிறமுற்றதைக் கண்டு வெறுப்புற்று "இந்தத் தேககாந்திகூட எனக்குச் சொந்தமில்லையோ! இதையும் இழக்கவேண்டுமென்பது கடவுளின் திருவுள்ளமோ!" எனத் தன் காலவித்தியாசத்தை நினைத்துத் துக்கித்தான்.

அப்போது அந்நாகவேந்தன் அரசன் துக்கிப்பதைக் கண்டு "அரசனே, நீ என் வருந்தவேண்டும்? என் பெயர் கார்க்கோடகன். நான் உனக்குத் தீங்கு செய்யவேண்டும் என்ற எண்ணத்தோடு உன்னைக் கடிக்கவில்லை. நீ என்னைத் துஷ்டனென்று இகழாதே. உன் இயற்கையான தேக ஒளியோடு நீ அயலார் நாட்டுக்குச் சென்றால் உன் பகையரசர் உனக்குத் தீமை விளைவிப்பார்கள். ஆதலால் உன் உருவத்தை மாற்றுவதற்கே நான் உன்னைக் கடித்தேன். இவ்வுருவம், என் உதவியின்றி நீ அடை-

யக்கூடுமோ? இச்சமயம் உனக்கு நான் செய்யக்கூடிய உதவி இதைத் தவிர வேறொன்றுமில்லை. இந்த விஷாக்கினியைப் பொறுப்பது உனக்கு அரிதாக இருந்தால் நான் கொடுக்கின்ற இந்த வஸ்திரத்தை உடுத்திக்கொள். இந்த அவ்விஷத்தின் கொடுமை நீக்கிச் சீதளத்தை உண்டுபண்ணும். இவ்வுரு நீங்கி உன்னுடைய பழைய உருவத்தை நீ அடைய விரும்புங்கால் இந்த மற்றொரு வஸ்திரத்தை உடுத்திக்கொண்டால் உன் எண்ணப்படி உன் அழகியவுருவத்தை அடைவாய்" என இரண்டு வஸ்திரங்களைக் கொடுத்தது.

அரசன் மிக்க மகிழ்ச்சியோடு அத்தெய்வத்தன்மை பொருந்திய இரண்டு ஆடைகளையும் பெற்றுக்கொண்டு அதில், முதலில் கொடுத்த ஒன்றை உடுத்திக்கொண்ட அளவில் மிகவும் இனிமையான குளிர்ச்சியுண்டாக நளன் அப்பாம்பைப் பார்த்துப் "பணி அரசே, இதற்குமேல் நான் செய்யவேண்டியவற்றையும் தெரிவித்தருள வேண்டும்" எனக் கேட்க அப்பாம்பு,

> வாது குறைந்தமையால் வாகுகனென் றுன்றுமம்
> ஆக அயோத்தி நகரடைந்து—மாகனகத்
> தேர்த் தொழிற்கு மிக்கான்நீ யாகென்றான் செம்மணத்
> பாரத் தொழிற்கு மிக்கானைப் பார்த்து. [தாற்

"அரசே, உன் சத்தியமும், செங்கோன்மையும் உன்னைக் காக்கும். அழியும் பொருளெல்லாம் இழந்ததற்கு வருந்தாதே. மேற்சொல்லியவிரண்டும் அழியாச்செல்வங்களாம் இன்னும் கொஞ்ச காலத்துக்குள் இழந்தவற்றை வட்டியுடன் கொண்டுவந்து சேர்க்கும். அதுவரையில், நீ அயோத்தி நகரடைந்து அதை ஆளும் அரசனாகிய இருதுபர்ணனிடத்தில் தேர்ப்பாகனாக அமர்ந்திருந்தால், ஒருகாலத்தில் நீ அவனுக்குக் குதிரைகளின் மனத்தை அறியும் சக்தியைப் போதிக்கவும், அதற்குப் பதிலாக அவன் உனக்குச் சூதில் வெற்றியடையுந் திறமையைப் புகட்டவும் சமயம் நேரிடும். அதுவே, உன் விவாகத்தில் பொறாமை கொண்டு உன்னைப்பற்றிய கல்நெஞ்சனாகிய கலி உன்னை விட்டு நீங்குங்கால

மாகும். அதற்குப் பிறகு நீ தமையந்தியை அடைந்து உன் பகை
வனை வென்று நீ இழந்தவற்றைக் கைக்கொண்டு பழைய நிலை
மையை அடைவாய். நீ ஒன்றுக்கும் கலங்கவேண்டாம். உனக்கு
ஒரு குறையும் வராது” என்று சொல்லித் தன் பழைய உருவத்
தோடு அப்பாம்பு மறைந்து போயிற்று.

நளன் அவ்விடத்தை விட்டு நீங்கிப் போகும்போது எதைப்
பார்த்தாலும் தமயந்தியின் உருவமாகவே அவனுக்குத் தோற்
றியபடியால் அவள் ஞாபகமே மேலிட்டு “ஐயோ! நடு இராத்
திரியில் அப் பாழ்மண்டபத்தில் நான் தனியே அவளை விட்டு
வந்தேனே. அவளுக்கு என்ன நேரிட்டதோ. விழித்துப் பார்த்து
என்ன நினைத்தாளோ. என்னைப் பார்க்கிலும் கல் நெஞ்சனும்
உலகிலுண்டோ வென என்னை வெறுத்தாளோ; அல்லது என்
பிரிவைச் சகிக்க மாட்டாது தன் இன்னுயிர் துறந்தாளோ! இது
வரையில் என்னை விட்டுப்பிரிந்தறியாப் பாவையை வெறுத்
தேனே என்னைப் போன்ற விசுவாசகாதகன் உலகிலுண்டோ?
என்னைத் தேடிக் கொண்டு எந்த வழியாகச் சென்றாளோ? அது
நிர்மானுஷ்யமான காடாயிற்றே அங்கே அவளுக்கு வழித்துணை
யாவர்? ஒருகால் அவள் தந்தை நகருக்குச் சென்றிருக்க
லாமோ. அங்கே போக விரும்பினால் நான் சொன்னபோதே
போயிருக்கலாமே?. ஏ தமயந்தி, உன்னை விட்டுப் பிரியவும்
என் மனம் துணிந்ததே. என் மீது நீ அளவிடற்கரிய காதலுற்ற
தற்கு நீ அடைந்த பலன் இது தானோ. நீ காட்டில் தனியே நின்று
கண் கலங்கவும் அவ்விடத்தில் உன் துக்கத்தை மாற்றி உன்
னைத் தேற்றக்கூட ஒருவருமில்லாதபடி அநாதையாயிருக்கவும்
பிரமன் விதித்தானோ! இக்கொடிய காக்ஷியைக்கண்டபின் தான்
கடவுள் திருவுள்ளமும் மகிழ்ந்ததோ” எனத் துயரமிகுதியால் வழி
யெல்லாம் புலம்பிக்கொண்டே போகும்போது வழியில் கடலி
னின்றும் பிரிந்து வரும் உப்பங்கழிகளிலுள்ள அன்னம், தாமரை
முத்து, பவழக்கொடிகள், முதலியவற்றைக் கண்டு தமயந்தி
யின் அவயவம் எனத்தீர்மானித்து, ‘என்னுயிர்க்குயிரே, நீ கட
லில் விழுந்து இறக்கும்படியாகவும் நேரிட்டதோ! நான் உயி

ரோடிருக்க மாட்டேனென்று நினைத்தாயோ! நீ நினைத்தது பிச
கல்ல. உன்னை நான் என்னுயிராகவே நினைத்திருந்தது உனக்கு
நன்றாகத் தெரியும். உன்னை விட்டுப் பிரிந்த பிறகு நான் உயிரி
ழந்தவன் என்று நினைப்பது தவறாகுமோ. ஐயோ! நான் இன்
னும் கொஞ்சகாலத்துக்குள் காணலாம் என்னும் அவாவினால்
என்னை விட்டு நீங்கும் உயிரை விடாது மனமுருகுகின்றேனே.
இனி என் உயிர் நிற்குமோ. பிறந்த வீட்டிலும் புகுந்த வீட்
டிலும் தேவபோகம் அனுபவித்த உனக்கு நேர்ந்த இக்கலி
காலம் கூடியவுடன் பொறுக்காது மனமுடைந்து மாண்டாயோ.
பைத்தியம் பிடித்தவன் போல ஒன்றுந்தோன்றாது உன்னைத்
தனியே விட்டு வந்த நான் இப்பழியை மாத்திரமா ஏற்றுக்கொள்ள
வேண்டும்? அதனோடு பாவமும் என்னையன்றி வேறு யாரை
அடையும். இப்பாதகத்துக்கு நான் என்ன செய்வேன் என்று
வாயில் வந்தவாறெல்லாம் சொல்லிக்கொண்டு அக்கழியினிடத்
தில் போகையில், அங்கிருந்த அன்னத்தின் நடையைக்கண்டு தமை
யந்தி என நினைத்து 'ஆ, தமையந்தி,' நீ இறந்து விட்டதாக
நினைத்து இதுகாறும் என் உயிர் துடித்துக்கொண்டிருந்தது.
என்னைத் தேடிக்கொண்டு எங்கும் அலைந்து திரியாமல் நானிருக்
கும் இடந்தேடி நீ வந்தது என் முன்னோர்கள் செய்த தவப்பயனே
யன்றி வேறல்ல' என்று சொல்லி மனங்களித்து அருகிற் செல்
லும் போது அவ்வன்னங்கள் பறந்து செல்ல அவற்றைக்கண்டு,
அவைகள் பக்ஷிகள் என்றும் மற்றவை தமையந்தியின் அவயவத்
தைப்போன்ற வஸ்துக்கள் எனவும் அறிந்து மனந்தேறிப்பின்னும்
போய்க் கொண்டிருக்கையில் அக்காட்டிலுள்ள மான்கள் நளனைக்
கண்டு வெருண்டோடின. நளன் அவற்றை நோக்கி, 'அழகிய
மான்களே, உங்கள் கண்கள் தமையந்தியின் கண்கள் போலிருக்
கின்றனவே' நான் உங்கள் கண்களையாவது பார்த்தானந்திக்கக்
கூடாதா? நான் வேடனா. என்னைக் கண்டு ஏன் பயந்து ஓடுகி
றீர்கள்.? என்னுயிரனைய காதலியை அநாதையாக அடவியில்
விட்டு வந்தமையால் என்னை மாகாபாவி என நினைத்து என் முகத்
தில் விழிக்காது செல்கிறீர்களோ' என்று மறுகிய நெஞ்சத்

தோடு நாகவேந்தன் சொல்லியபடி அயோத்தி நகரை நோக்கிப் பல காததூரம் கடந்து பத்தாம் நாள் அந்நகரையடைந்தான்.

அந்நகர் தஞ்சமென்றடைந்தோரைக் காக்கும் வண்மையுடையதாய் யாவற்றையும் தன்னகட்டில் வைத்துக் காக்கும் அருளுடையதாய் தேவர்களும் விரும்பும்படியான பல்வளங்களும் நிறைந்து கொடும் பாவிகளை அணுகவொட்டாத ஆக்கினையுடையதாய், எப்பற்றும் அற்ற முனிவர்களும் தாமடைய விரும்பும் முத்திவீட்டினை நினைக்கும் மாண்புடையதாய் விளங்கிற்று. அதன் அழகைப்பார்த்தவுடன் நளன் தன்னகரின் ஞாபகம் அடைந்து மனம் வருந்தி அந்நகரத்தாரைத் தன் குடிகள்போல் அன்புடன் பார்த்துக் கொண்டே சூரியமண்டலம் போல் விளங்குகிற பிரகாசம் பொருந்திய அரண்மனையை அடைந்தான். அதனுள்ளே சென்று பலவகை இரத்தினங்களிலிழைக்கப்பட்டு சூரியனைப் போல விளங்குகின்ற சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் இருதுபர்ண மகாராஜனிடத்தில் போய்ச்சேர்ந்தான்.

அவ்வரசன் நளனைப் பார்த்து "நீ யார். உன் பெயரென்ன நீ எத்தொழிலில் வல்லவன்" என்று கேட்டான்.

அதற்கு நளன் தன் பெயர் வாகுகனென்றும், தனக்குத் தேரோட்டவும் தேவாமிர்தம்போலச் சமையல் செய்யவும் தெரியுமென்றான். இருதுபர்ணன் "நீ குதிரைகளின் மனமறிந்து தேரோட்ட வல்லவனாயின் நீயும் இங்கிருக்கும் மற்ற இரண்டு தேர்ப்பாகர்களோடு இங்கேயே இருக்கலாம். உனக்கு ஒரு நாளைக்கு ஆயிரம் பொன் சம்பளம் கொடுக்கிறேன்" என்றான்.

நளன் அதற்குட்பட்டு அவ்விடத்திலேயே தேர்ப்பாகனாக அமர்ந்துவரும்நாளில் தினந்தோறும் அவனுக்குத் தமயந்தியின் ஞாபகமின்றி வேறொன்றுந் தோன்றாமையால் அத்துக்கம் அதிகரித்த போதெல்லாம் "ஐயோ பாவம், அவளுக்கு என்ன நேரிட்டதோ" எனப் பெருமூச்செறிவான்.

உயிர்த்து மெய்தளர்ந் துருகிய வேந்தனை யுளத்தில்
அயிர்த்தோர் சாரதி யுற்றதை யெவன் கொலென்றறைய
வெயிற் கோடுங் கதிர் மறைந்தழி வெவ்வழற் கானிற்
பயிர்ப்பில் கோதையைத் தீர்ந்தனன் பரிவிலேனென்றான்.

இவ்வாறு நளன் தினந்தோறும் அரண்மனையில்பெருமூச்சுவிட்டுக் கொண்டிருந்ததையும் அவன் சொல்லித் துக்கப்பட்ட வார்த்தைகளையும் கவனித்துக் கேட்டுக்கொண்டே வந்த மற்றொரு தேர்ப்பாகன் நளனை அணுகி "நீ எதற்காக வாடிய முகத்தோடும் ஏதோ ஒன்றைச் சொல்லிப் பிரலாபித்துக்கொண்டும் இருக்கிறாய். உனக்கு நேரிட்ட துன்பம் ஏதாவதுண்டா. அப்படி இருந்தால் அதை என்னிடத்தில் சொல்லக் கூடாதா. நான் உனக்கு உற்ற தோழனல்லவா" எனப்பரிவுடன்கேட்டான். அதற்குநளன்"தோழனே என்னிடத்தில் மறைக்கக்கூடியது ஒன்றுமில்லை. நானும் என் மனைவியும் இரவில் ஒரு காட்டில் தங்கி இருக்கும்போது அவளைத் தனியே விட்டு எதையோ நினைத்துக்கொண்டு இங்குவந்து விட்டேன். அதை நினைக்கும்போது மனம் வருந்துகிறது" என்று சொல்லி அதற்குமேல் அத்தேர்ப் பாகன் அதிகமாகக் கேட்காதபடி வேறு விஷயங்களைப்பேசி அதை அவன் மறக்கும்படி செய்தான்.

---

## வீமன்றேடவிட்ட படலம்.

---

இனையனாகிய மன்னவ னிவ்வழி யிருப்ப
வனைகருங்கழல் விதர்ப்பர்கோன் மறையவர்க் கூயென்
றனையை தன்னொடு நளனையுந் தேடி நீர்தந்தால்
நினைவயாவையுந் தருதுக னெனவவர் நேர்ந்தார்

முன்பு நளசக்கரவர்த்தியின் குழந்தைகள் இருவரையும் தேரிலேற்றிக்கொண்டு விதர்ப்ப நகருக்குச் சென்ற தேர்ப்பாகன் வழிநெடுக அக்குழந்தைகளுக்குப் பராக்குக் காட்டி அவர்களுடைய துக்கத்தை மாற்றி அத்துக்கமுழுதையும் தான் ஏற்றுக் கொண்டு அவர்களுக்கு யாதொரு துன்பமுமின்றி வீமராஜனிடத்தில் கொண்டுபோய் ஒப்புவித்து, நடந்த விருத்தாந்தங்களை முற்றும் தெரிவித்து அவ்வரசனிடத்தில் விடை பெற்றுக் கொண்டு

எமது அரசர்பெருமான் நிடதநாட்டைக் கைக்கொள்ளும்வரையில்
அந்த நாட்டில் அடிவைக்க மாட்டேன்' என்று முடிவுசெய்து
கொண்டு வேறொரு அரசனிடத்தில் தேர்ப்பாகனாக அமர்ந்தான்.

வீமராஜன், தேர்ப்பாகன் சொல்லிய வார்த்தைகளைக் கேட்ட
வுடன் மனங்கலங்கி ஒன்றுந் தோன்றாமல் அக்குழந்தைகளைத்
தனது இருபுயங்களாலும் தழுவி எடுத்து மார்போடணைத்தவர்
கள் முகத்தைப் பார்த்தபோது அக்குழந்தைகள் தமது பெற்
றோரை நினைத்து விம்மி விம்மி அழத் தொடங்கினார்கள். அதைக்
கண்ட வீமராஜன் உயிரற்ற உடல் போலாகித் தன் கண்ணி
னின்று வழியும் நீரால் அக்குழந்தைகளிருவரையும் மூழ்குவித்தான்.
பின்பு இச்செய்தியைத் தமயந்தியின் தாய்க்குத் தெரிவிக்க, அம்
மூதியாள் இதைக் கேட்டவுடன் வேரற்ற மரம்போல் கீழே
விழுந்து உயிர்நீங்கிய உடலெனவே கிடந்தாள். அப்போது பக்கத்
திலிருந்த தாதிமார்கள் அவளை எடுத்து மூர்ச்சையைத் தெளிவித்துப்
பலவிதமான இனிய சொற்களால் அவளைத் தேற்றினார்கள். இவ்
வாறே அரண்மனை முழுதும் துக்கமே சூழ்ந்து பொலிவிழந்தது.

வீமராஜன் உடனே தன்னாட்டிலுள்ள பிராமண சிரேஷ்டர்
களை அழைத்து "அந்தணரே, அரசனாக இருப்பதிலும் ஆதுலனா
வதே மேன்மை. ஆதுலனுக்கு அன்னவிசாரம் நீங்கினால் வேறு
விசாரமின்றி முற்றிலும் மனச்சமாதானம் அடைகிறான். அரச
னுக்குச் சமாதானம் என்பது எப்போதுமில்லை. எவ்வளவு
பொருளுடையவனாயினும் மனச்சமாதானம் பெறாதவனுக்குச் சந்
தோஷமேது. உலகத்தில் பெண்ணைப் பெற்றவர்களை மகா
பாவிகள் என்று சொல்லவேண்டும். பெண்கள் குழந்தையாக
இருக்கும்போது அவர்களை வளர்க்கவேண்டிய துன்பமும்,
மங்கை பருவத்தில் அவர்களுக்குத் தக்க நாயகன் கிடைக்கவேண்
டும் என்ற கவலையும், கணவனோடு சேர்ந்து வாழுங்காலத்தில்
அவர்களுக்குக் கணவனாலும் கணவனைச் சார்ந்தவராலும்
யாதொரு தாழ்ச்சியுமில்லாமலிருப்பதற்கு அவர்களுக்கு வேண்
டிய பொருளுங்கொடுத்து அவர்களுடைய கோபத்தையும் மனத்
தாங்கலையும் சதா நீக்க முயல்வதுமாகிய கவலையும், பிறகு வேறு

கெடுதி நேரிட்டால் தனித்திருக்கும் அப்பெண்களைப்பார்த்து மனவாட்டமும் அடைந்து அச்சத்துக்கமும் கவலையும் அப்பெண்களோடு செல்லாமல் நானும் அப்பெண்களின் சந்ததிகளிடத்திலும் தொடர்ச்சியாகி உயிருள்ள வரையில் பெண்களைப்பற்றி வருந்துவம்ப மனியாக இருக்கிறதேயன்றி அவர்களால் சந்தோஷமானது எக்காலத்திலுமில்லை. ஏதோ புண்ணியவசத்தால் பெற்றோர்களின் எண்ணப்படியே அப்பெண்களுக்குத் தகுதியும் கணவனும் நேர்படினும் அப்பெண்களும் அப்பயனை அநுபவிக்கக்கொடுத்துவைக்காதவர்களாகிறார்கள். தகுந்தகணவன் கிடைத்தமாத்திரத்தில் களிப்படைகின்ற பெற்றோர்கள் கரையில்லாத துன்பக்கடலில் சொற்பகாலத்துக்குள் மூழ்கி வருந்துகிறார்கள். அதற்குச்சாக்ஷி நானே. என் குலதெய்வமாகிய தமயந்திக்குக் கிடைத்த நாயகனைப்போல இப்பூமண்டலத்தில் வேறுயாருக்குக் கிடைக்கும். செல்வமோ பூமண்டலமும் அதிலுள்ளவைகளும் அவருடையன. பெருமையிலோ அவரே சக்கரவர்த்தி; அவருக்குமிஞ்சினவரிப் பூவுலகத்திலில்லை. ஆக்கினையிலோ காற்றும்புகாத இடமிருந்தாலும் இருக்கலாம் அவருடைய ஆக்கினைச்சக்கரம் அறியாத இடம் ஒன்றுமில்லை. அழகிலோ, மன்மதனும் ஈடல்ல! அவரழகைக் கண்ட தேவர்கள் அத்தனை அழகு தமக்கில்லையேயென நினைத்து அவரைப்போலவே உருவெடுத்தார்கள். வன்மையிலோ, அவர் தோள்வலிக்குத் தேவர்களும் நிகரல்லர். சத்தியமோ, அந்த ஆக்கினைச்சக்கரத்தைக் கேட்டால்தான் தெரியும். அச்சத்தியத்தின் அளவை முற்றும் அறிந்தது அதுவே. வண்மையிலோ, பூவுலக கற்பகம். இத்தனை பெருமை வாய்ந்து எல்லாம் நிறைந்து ஏகச்சக்கரேசுவரனாய் எத்திக்கிலும் தன் புகழ் பாய்ந்து பரவிய சிறப்போடு செங்கோன்மை நடாத்திய நளச்சக்கரத்திக்குக் நீடொன்று மதிகுறைந்து வஞ்சனைச் சூதில் விருப்பம் மிகுந்து வளநாடு முதலிய செல்வமெல்லாம் துறந்து காட்டுக்குப் போகுங் காலமும் வந்தது என்றால் அது யார்செய்த பாபம் என்று நினைக்கிறீர்கள். நான் நல்ல புண்ணியம் செய்து பெரியோர்களைப் பணிந்து நல்ல ஆசீர்வாதம் பெற்றிருந்தால் இவ்வித அருங்கேடுகள் நேரிடுமோ. என் பெண்ணும் கண்

கலங்கி நிற்பாளோ. அவளுக்குத் துக்கம் என்பதே தெரியா
தே. அவளுக்கு இவ்வளவு பெரிய துன்பம் நேரிட்டால் அதை
அவளால் பொறுக்கக் கூடுமோ. அவள் உயிர் நிலைத்து நிற்கு
மோ. எனக்கு இதைப் பார்க்கிலும் பெரிய துக்கமும் உண்டா
கவேண்டுமோ. அவர்கள் இருக்கும் இடம் இன்னதெனத் தெரி
யவில்லை. காட்டில் எங்கே தங்குவார்கள். யாரை அடுத்துப் பிழைப்
பார்கள். மகானுபாவன் சக்கரவர்த்தியாக இருந்தவரல்லவா,
அவர் மானமே பெரிதென நினைக்கும் இயல்புடையரல்லவா.
அவர் யாரை யாசிப்பார். என்ன பாடுபடுகிறார்களோ தெரிய
வில்லையே. அவர்களிருவரும் தமக்கு நேரிட்ட கேட்டை
நினைத்து உயிரையும் மாய்த்துக்கொள்வார்களோ என நினைக்
குந்தோறும் என்னுயிர் இவ்வுடலில் நில்லாது வெளிப்பட்டுப்
போவதும் வருவதுமாக இருக்கிறதே. என் செல்வமாகிய தம
யந்தியை இழந்தேனே. அவர் சென்ற இடமும் இப்போது
அவர்களிருக்குமிடமும் அறிந்து சொல்வார் ஒருவருமில்லையே.
இக்காரியத்திற்கு நான் யாரைத் துணைக்கொள்வேன். வேதி
யரே, எனக்கு உங்களைத் தவிர வேறு கதியில்லை. உங்களைப்
பார்க்கிலும் அறிவால் மேலான வருணத்தாருண்டோ. நீங்கள்,
பூமியிலுள்ள தேவர்களல்லவா. பூசுரராகிய நீங்கள் எதையும்
வேதத்தால் அறிந்து சொல்லும் தன்மையுடையவர்களல்லவோ.
நீங்கள் முயற்சித்தால் முடியாத காரியங்களும் முடியுமே.
நீங்கள் என்மீது கருணைகூர்ந்து என் அருமைப் புதல்வியையும்
அவள்நாயகனையும் தேடிக்கொண்டுவந்து சேர்த்தால் நீங்கள் எது
வேண்டுமென நினைக்கிறீர்களோ அவற்றையெல்லாம் என
மனமாரக் கொடுப்பேன். இப்பெரும் புண்ணியத்தை ஏற்றுக்
கொண்டு என் மனக்கவலையை ஒழிக்கும் மகாபுண்ணிய சாலி
கள் இச்சபையில் ஒருவருமில்லையா" என மனம் வெதும்பிக்
கண்ணீர் ததும்பிக் கேட்டோர் மனம் உருக மிகுந்த ஏக்கத்
தோடு அச்சபையை நோக்கிச் சொன்னான்.

இதைக் கேட்ட அந்தணர் பலர் மனம் உருகிச் சரேலெ
ன்றெழுந்து "அரசரே, தாம் எதற்கும் கலங்கவேண்டாம்.

தமது துக்கம் நீடிக்காது. கூடிய சீக்கிரம் இவளுக்கு இவ்வளவு சந்தோஷம் உண்டாகும். தமக்கு ஒருகுறையும் உண்டாகாது. தமக்கு மங்களமுண்டாகட்டும்” என அவனை ஆசீர்வதித்து நளனையும் தமயந்தியையும் தேடப்புறப்பட்டார்கள். அவ்வந்தணர்கள் அநேக காடு வனம் மலை நாடு நகரம் முதலியவைகளிலும் தேடியும் அவர்கள் அகப்படாமையால் காலேயந்து மனந்தளர்ந்து முகவாட்டத்துடன் திரும்பி விட்டார்கள். அவர்களில் சுதேவனென்னும் ஒரு மறையோன் எங்கேயும் நளன் தமயந்தி இருவரையும் தேடியும் காணாமல் கடைசியாய்ச் சேதிநகரத்தை அடைந்து அந்நகரத்தில் இரகசியமாக விசாரித்தபோது தமயந்தியின் உயிர்த்தோழி என்பாளொருத்தி அந்த அரசனுடைய தாயின் அந்தப்புரத்தில் வந்திருக்கிறாளென்று தெரிந்து அவ்விடத்துக்குச் சென்று தமயந்தியையும் அப்போது அவளிருந்த நிலைமையையும் கோலத்தையுங் கண்டு மனம் புழுங்கித் தன்னையறியாமல் கண்ணீர் சொரியா நின்றான்.

இதைக் கண்ட தமயந்தி அவ்வேதியரைத் தானறிந்திருந்தும் அறியாதவள்போல அவரை நோக்கி ‘நீர் யார்! எதற்காக என்னைக் கண்டு வருந்தப்படவேண்டும்’’ என்று கேட்டாள்.

அதற்கு அவ்வேதியர் “அம்மணி, நான் உன் தந்தையாகிய வீமராஜனுடைய அன்புக்குரிய தோழன். என்னை நீயும் அறிந்திருக்கலாம். உன் தாய்தந்தை மற்றுமுள்ள சுற்றத்தாரும் உன் அருமைக்குழந்தைகளும் சௌக்கியமாகவே இருக்கிறார்கள்’ என்று சொல்லி முடிப்பதற்கு முன்னே தமயந்தி விம்மி விம்மி அழத்தொடங்கினாள்.

இவ்வாறு இவர்களிருவரும் அழுவதைக்கண்ட சேதியரசன் தாய் அந்தணரைப்பார்த்து “வேதியரே, இவள் தாய் தந்தையர் யாவர்? இவள்நாயகன் பெயரென்ன? இவள் இவ்வாறு தனித்து வரக் காரணமயாது? இவளைக்கண்டு நீர் அழக்காரணம் என்ன? இவளை உனக்கு எப்படித்தெரியும்’’ என்று வியப்புடன் கேட்டாள்.

அந்தணர் "பெருமாட்டி, இவள் வீமராஜன் அருமைப் புதல்வி. இவள் நாயகனை நளசக்கரவர்த்தி சூதாடி நாடுகள் முதலிய எல்லாம் தோற்றுக் காட்டுக்குச் சென்றாராம். அவ்விடத்தில் இப்பெண்மணியைத் தனியே விட்டுப்போயிருக்கவேண்டுமென்று நினைக்கிறேன். அதனால் இப்பெண்கள் நாயகம் இவ்விடத்தில் தனித்துவந்திருக்கவேண்டும். வீமராஜன் இவர்களிருவரும் காட்டுக்குப் போயிருக்கிறார்களென்று கேள்வியுற்று இவர்களிருவரையும் அழைத்துவரும்படி அனேக பிராமணர்களை அனுப்பியிருக்கிறார். அவர்களில் நான் ஒருவன். நானும் பல இடங்களிலும் தேடிக்காணாமல் கடைசியாக இந்நகரத்தை அடைந்து இவ்விடத்தில் கண்டேன். நானும் முதலில் பார்த்தபோது இம்மாது சிரோமணியைத் தெரிந்துகொள்ளக் கூடவில்லை. பின்பு கவனித்துப் பார்த்தபோது இவள் நெற்றிப்புறத்திலுள்ள மறுவை அடையாளமாகக்கொண்டு இவள்தான் தமயந்தி என்று தெரிந்து கொண்டேன்" என்றான்.

சேதிபதியின் தாய் மனங்கலங்கித் தமயந்தியின் மாசுபடிந்த முகத்தைக் கழுவிப் பார்க்கையில் அம்மறு விளங்கியதைக் கண்டு கண்களில் நீர்பெருக அவளைக்கட்டிக்கொண்டு முகத்தோடு முகம் வைத்து "என் அருமை மகளே! நான் உனக்குத் தாயல்லவா உன் தாயும் நானும் சுதர்மன்றன் புத்திரிகளாகையால் நாங்களிருவரும் சகோதரிகள். என்னிடத்தில் ஒருவார்த்தை சொல்லக் கூடாதா. அயலார்போலப் பற்றற்றுப் பழகினது உனக்கே நியாயமாகத் தோன்றுகிறதா, என் பெண்ணுக்கும் உனக்கும் என்ன வித்தியாசம். எனக்கு இருவரும் சரிதான். உன்னை நான் அழைத்துவந்து கொஞ்சநாளைக்கு இவ்விடத்தில் வைத்திருந்து அனுப்பவேண்டும் என்ற எண்ணம் வெகுநாளாக என் மனதில் கிடந்து போராடிற்று. அதற்குச் சமயம் இதுதானே. நீ சந்தோஷமாக இருக்குங் காலத்தில் உன்னையும் உன் குழந்தைகளையும் பார்த்துச் சந்தோஷமடையப் போதுமான புண்ணியம் நான் செய்யவில்லையோ. கண்மணி, நானாவது உன் சகோதரியாவது அறியாமை

யாலேயானாலும் குற்றம் செய்திருந்தாலும் அதை மனதில் வைத்துக்கொள்ளாதே" என்று மிகவும் துக்கத்தோடு சொன்னான்.

தமயந்தி, அத்தாயை வணங்கி "அம்மா, என்னை இன்னாளென்று தெரிந்துகொள்வதற்கு முன்னமேயே தாங்கள் என்னைத் தங்கள் பெண்ணாகவே நடத்தினீர்களே. அந்த அன்புக்கு ஈடுண்டோ? தாங்கள் என்னை அனுசரித்திராவிடில் என் உயிர் இத்தனைநாள் நிலைத்திருக்குமோ? தங்களுடைய அன்பு மிகுந்த ஆதரிப்பினாலும் வார்த்தைகளினாலுமல்லவா என் நீங்காத துக்கம் அடிக்கடி நீங்கிக்கொண்டேயிருந்தது. நான் என் தாயினிடத்தில் அடையக்கூடிய அனைத்தையும் இவ்விடத்திலும் குறைவின்றி அடைந்தேன். தாங்கள் கவலைகொள்ளவேண்டாம். என் அருமைத்தாயே, எனக்குக் குழந்தைகளைப் பார்த்து வெகுநாளாயிற்று. அவர்களுடைய ஞாபகமும் என்னை ஒருபுறத்தில் வருத்துகிறது. அவர்கள் முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாலாவது என் கவலை ஒருகால் ஒழியுமோ என நினைக்கிறேன். ஆகையால் தயவுசெய்து உத்தரவுகொடுத்தால் நான் என் தந்தை நகருக்குப் போய்வருகிறேன்," எனக் கண்களில் நீர்வழியக் கேட்டாள்.

சேதிபதியின் தாய் அவள் மன்றாடுதலுக்கிரங்கி அவளை ஒரு பல்லக்கிலேற்றி அவளுக்குத் துணையாக அநேக தோழிமார்களையும் அனுப்பி அவளை விட்டுப்பிரியாமனத்தோடு விடைகொடுத்து அனுப்பினாள்.

தமயந்தி தன் தாயைக் கண்டடைந்து குனிந்த தலையும் பொங்கியெழுகின்ற துயரமும் அழுத கண்ணும், அறுபட்ட வஸ்திரமும் புழுதிபடிந்து சடைத்த கூந்தலுமாய்க் கண்டோர் மனத்தை உருக்கும்படி தள்ளாடிக்கொண்டே அரண்மனைக்குட்புகுந்தாள்.

அக்கோலத்தோடுசென்ற தமயந்தியைக்கண்ட வீமராஜன் மனம் பதறிக் "கடவுளே, இவ்வவஸ்தையைக் காணும்பொருட்டே இத்தனைநாள் என்னை இப்புவியில் ஜீவித்திருக்கச்செய்தாயோ. நான் குருடனாக இருந்தாலும் குற்றமில்லையே. இக்கண்கள் இக்கோலத்தையுங் காணலாமோ" என்று தன் கண்ணைப் பொத

திக்கொண்டு மனம் நெக்குவிட்டுருகி உடல்சோர்ந்து அயர்ந்தா
னென்றால், மற்றும் தாய்மாரின் செய்கையைச் சொல்லவும்
வேண்டுமோ. அரண்மனை முழுதும் கடல் கரைபுரண்டாற்போ
லக் கண்ணீர் விட்டுப் புலம்புவதாயிற்று.

தமயந்தியின் தாய் தன் மகளின் பார்க்கச்சகியாத வேஷத்
தைக்கண்டு கண்ணிலும் முகத்திலும் அறைந்துகொண்டு "என்
செல்வமே! உனக்கும் இக்கதி நேரிட்டதோ. தேவர்களும்
விரும்பும்படியான அழகை எங்கே இழந்தாய். உன்தேககாந்தி
யையும் வைத்து உன் கணவன் சூதாடினனோ. நீங்கள் சூதாட்
டத்தில் இழந்ததைப் போக உனக்கு மிகுந்தது இந்தப் பாதி கந்
தைதானோ. உன்னைப் பார்க்கும்தோறும் என் வயிறு பற்றி எரி
கிறதே. இதுகடவுளுக்கும் சம்மதமாக இருக்கிறதோ. உன்
கணவன் உன்னை விட்டுப் பிரிந்து போனனோ. அவருக்கு
எப்படித் தான் மனந்துணிந்ததோ. எங்கள்குலம் உன்னால்
விளங்கவேண்டுமென்று இடைவிடாது என் குலதெய்வத்தைப்
பிரார்த்தித்தேனே. அதற்குப் பலன் இதுதானோ. நீ விவா
கம் செய்துகொண்டு உன் அன்புமிகுந்த கணவனோடு செல்
லும்போது உன் வைபவத்தைக் கண்டகண்கள் இப்போது
உன்னை இந்த நிலைமையில் காணவும் வேண்டுமோ. நாங்கள்
மகாபாவிகள். எங்களுக்கு எப்போதும் சந்தோஷமே இல்லை."
என்று பலவாறாகப் புலம்பிப் பின்பு ஒருவாறு தன் துக்கத்தை
அடக்கிக்கொண்டு, அருவிபோல் கண்ணீர் சொரிந்துகொண்டி
ருந்த தமயந்தியைப் பலவாற்றாலும் தேற்றித் தைரியப்படுத்தி
தன்னருகிலிருத்தி அவள் கண்ணீரைத் துடைத்து, அவள் கண
வனுகிய நளச்சக்கரவர்த்தியின் விருத்தாந்தங்களையும் அவனை
விட்டுப் பிரிந்தபின் தமயந்திக்கு நேரிட்ட சம்பவங்களையும்
அவள் சொல்லக்கேட்டு அத்தாய் உலைவாயின் மெழுகைப்போல்
மனங்கரைந்து ஒன்றுஞ்சொல்ல நாவெழாதுபேசாதிருந்தாள்.

பின்பு வீமராஜன் சுவேதனென்னும் அந்தணருக்கு அவர்
விரும்பியவற்றை எல்லாம் கொடுத்து அவன் மனங்களிக்குமாறு
செய்தான்.

தமையந்தி தன் குழந்தைகளின் அழகிய முகத்தைப் பார்க்குந்தோறும் கண்ணீர் விட்டு நளனது பிரிவால் மனம் நொந்து வேறு சிந்தனை இல்லாமல் அன்னத்தை வெறுத்து அறுபட்ட வஸ்திரத்தை விட்டு வேறு வஸ்திரம் உடுக்கவும் உறங்கவும் உடல் மாசைக் கழுவவும் மனஞ்செல்லாமல் அவனையே சிந்தித்துக்கொண்டு, காட்டில் முனிவர்கள் திருவாய் மலர்ந்தருளியபடி நளனை மறுபடியும் காணலாம் என்னும் பேராவலினால் உயிரைமாத்திரம் விடாது தன் ஆவியான கொழுநனைக் காணும் காலம் எப்போதுவரும் என நாளெண்ணிக் கொண்டிருந்தாள்.

இதை உணர்ந்த அவள் தாய் வீமராஜனிடத்தில் சென்று "நளசக்கரவர்த்தியைக் கூடிய சீக்கிரத்தில் தேடிக் காணாவிட்டால் இவளை நாம் வேண்டியதில்லை. அவள் படுந்துயரத்தைக் கண்ணாற் கண்டு சகிக்கக்கூடவில்லை. அவள் நாயகனைத் தேடிப்பார்த்துக்கொண்டிருந்தாலாவது அந்தக்காலம்வரையில் தமையந்தியின் முகத்தைப் பார்த்துக்கொண்டிருக்கலாம். அநேகர் சிக்ஷைச் சொல்லும் சமாதானமெல்லாம் பயன்படவில்லை. அவளுக்கு அவளுடைய கணவனைக் காண்பதுதான் சமாதானம். நாம் செய்த புண்ணியமோ அல்லது நமது முன்னோர்கள் செய்த தவப் பயனோ தமையந்திக்கு இன்னும் தன் உயிரில் மாத்திரம் வெறுப்புண்டாகவில்லை. என்னுயிரோ அவளாசையால் அவள் வாட வாட என்னுயிர் வாடுகிறது. இனி எப்போது அவளைப் பழைய தமையந்தியாகக் காண்பேனோ. அவ்வளவு புண்ணியமும் நான் செய்திருக்கிறேனோ" எனக் கண்களில் நீர்வழிய வீமராஜனை வணங்கிச்சொன்னாள்.

வீமராஜன் மனம் புழுங்கி ஒற்றரை ஏவி நளனிருக்குமிடத்தைத் தேடி வரும்படி கட்டளையிட்டான்.

இதை அறிந்த தமையந்தி அவ்வொற்றரில் மிகவும் நுண்ணிய அறிவையுடைய பருணாதன் என்னும் வேதியரை அழைத்து "வேதியரே, தாம் போய்த்தேடும் இடங்களில

காரிருளிற் பாழ்மண்ட பத்தேதன் காதலியைச்
சோர்துயிலி னீத்த துணிவன்றே—தோவோதற
கென்றறைந்தா னோர்சின் றேதிரமாற்றந் தந்தாரைச்
சென்றறிந்து வாவென்று டேர்ந்து.

நடுக்காட்டிலே கரிய இருளிலே ஒருபாழ்மண்டபத்திலே தன் மனைவி அயர்ந்து நித்திரை செய்துகொண்டிருக்கையில் அவளை விட்டுவிட்டு அவளறியாமல் பிரிந்துபோவது பெருமையுடைய அரசர்களுக்குரிய தைரியமோ என்று ஒவ்வொரு இராஜ சபையிலும் சொல்லிப்பார்த்தால், இதற்குப்பதில் யாரேனும்விடை கொடுப்பார். அவர்களை அழைத்து அரசனிடத்தில் என்ன தொழி லில் அமர்ந்திருக்கிறார்களென்றும் இன்னும் அவர்களைப் பற்றி தெரிந்து கொள்ளத்தக்கவைகளையும் தெரிந்துகொண்டுவர வேண்டும்,'' என்றாள்.

அவ்வாறே அவ்வேதியருள் பருணாதன் என்னும் அந்த ணரும் அநேக இடங்களிலும் சென்று தேடியும் காணாமல் அயோத்தி நகரடைந்து அந்த அரசனது சபையில் தமயந்தி கற்பித்தபடியேசொல்ல அங்கே உருமாறி இருந்த நளன் இதைக் கேட்டு மனக் கிலேசமுற்று அவ்வேதியனைத் தனியே அழைத்து '' ஒற்றரே,

ஒண்டோடி தன்னை உறக்கத்தே நீத்ததுவும்
பண்டை விதியின் பயனே காண்—தணடாளப்
பூத்தாம வெண்குடையான் பொன்மகளை வெவவனத்தே
நீத்தானென் றையுறே னீ.

தாம் எல்லாம் அறிந்து அறியாதவர்போல் பேசுகிறீரே. யாரோ ஒரு அரசன் தன் மனைவியைக் காட்டில் விட்டுப்போய்விட்டால் அதை இங்கு எதற்காக சொல்லவந்தீர். இராஜசபைகளில்பேச வேண்டிய விதமே உமக்குத்தெரியவில்லையே. இந்த அரசன் சற்குணனாகையால் நீர் ஏதோ பிதற்றுகிறீரென்று அலக்ஷிய மாக இருந்துவிட்டார், வேறிடங்களாக இருந்தால் நீர் இத்

தனைநாழி படுகிறபாடு அப்போதல்லவா தெரியும். இதேமாதிரி எங்கேயும் சொல்லிக்கொண்டு திரியாமல் ஊர் போய்ச்சேரும். ஒரு அரசன் தன் மனைவியை விட்டுப் போய்விட்டானென்று சொல்லுகிறீர், உலகத்தில் மனிதன் செய்வது என்ன இருக்கிறது. ஒருவனைச் சேர்ப்பதென்பதும் பிரிப்பதென்பதும் மனிதன் செய்கிற காரியமா. இவையெல்லாம் முன் செய்த தீவினையல்லவா. அந்தணரே வயதுமுதிர்ந்தால் அறிவும் கிழமாகிப் பகுத்தறியும் சக்தியும் போய்விடுமோ. தீவினையால் சூழப்பட்ட ஒருவனே தன் மனைவியை நீக்குவதாகிய இக்காரியம் செய்திருப்பானேயல்லது நல்வினையுடையவன் ஒருநாளும் செய்யமாட்டான். ஆதலால் அந்த வினையை வெறுக்கவேண்டுமேயல்லது அந்த அரசனை வெறுப்பதில் பயனென்ன? இதனால் இப்போது நீர் அடைந்த லாபம் என்ன? உலகத்தில் பெண்சாதியாவது பிள்ளையாவது கொடுத்து வைத்தவனுக்கல்லவா கிடைக்கும். நீரும் நானும் ஆசைப்பட்டு என்ன செய்கிறது. ஏதோ தவறிக்கிடைத்தாலும் அவர்களும் ஓடுகிறதில்லை, நம்மைப் போல அலைந்து திரியவேண்டியதுதான். யார் எப்படிப்போனால் நமக்கென்ன. நம்முடைய காரியத்தை நாம் பார்த்துக்கொண்டு போகவேண்டியதேயொழிய தகாத காரியத்தில் தலையிடக்கூடாது. வினை யாரைப் பற்றாது விடுகிறது'' என்று வாட்டத்துடன் சொன்னான்.

இவ்வொற்றர் இதைக் கேட்டு வியப்புற்று "இதென்ன புதுமையாக இருக்கிறது, இது வரையில் இப்பூமண்டலத்திலுள்ள அரசசபை ஒவ்வொன்றிலும் இதே விதமாகச் சொல்லிக்கொண்டுவந்தும் அதற்கு விடைபகர்ந்தவர் ஒருவருமில்லை. இவ்விடத்தில் இவ்வார்த்தைகளைக் கேட்டவுடன் மனம் பதைத்துத் துடிதுடித்துத் தன் வேலையையும் விட்டுவிட்டு மிகவும் விரைவாக வந்து நம்மைத் தனியே அழைத்து இவ்வளவு அனுதாபப்பட்டு நமக்குச் சொல்லிய இவர், யார் என்று தெரியவில்லையே. இவர் உருவத்தையும் உடையையும் பார்த்தால் எவரும் வெறுக்கத்தக்கவராயும் இவர் மடைப்பள்ளியில் காரியம்

உடையவராகவும் தோற்றுகிறாரேயன்றி வேறுவிதமாக நினைப்பதற்கு இடமே இல்லை. வார்த்தைகூட அத்தொழிலுக்குரிய தானதாகவே இருக்கிறது. இவர் நளச்சக்கரவர்த்தியா? குருடன் கூடத் துணியமாட்டானே. சக்கரவர்த்தியாக இருந்தால் ஒரு சின்னமாவது இல்லாமல் போய்விடுமா. ஆயினும் இவரைப் பற்றி இன்னும் விசாரித்துப் பார்ப்போம்" என்று அங்கிருந்தவர்களை வினவி அவருடைய அப்போதைய தொழில்களையும் தெரிந்துகொண்டு அதிவிரைவாகச் சென்று விதர்ப்ப நகரடைந்து தமயந்தியின் அந்தப்புரத்தை அடைந்தார்.

பருணாதனென்னும் வேதியர் தமயந்தியைக் கண்டு "அம்மணி, சுபம், தாம் சொல்லியபடியே ஒவ்வொரு இராஜசபையிலும் சொல்லிக்கொண்டு அநேக நகரங்களிலும் தேடிப்பார்த்துக்கொண்டே வருகையில் ஓரிடத்திலும் ஒருவரும் அதற்கு விடை சொல்லவே இல்லை. கடைசியாக அயோத்திநகரையடைந்து இருதுபர்ணன சபையில் சொன்னபோது யாரோ ஒருவர் என்னைத் தனியே அழைத்து 'இவைகளெல்லாம் முன்செய்த தீவினையேயன்றி வேறல்ல. இராஜசபையில் சொல்லிக்கொண்டு திரியாதே' என்று வாடிய முகத்தோடு என்னைக் கண்டித்தார். அவர் அயோத்தி அரசனுடைய தேர்ப்பாகனாம். குதிரைகளின் மனமறிந்து தேர் செலுத்துவதில் அவருக்கு நிகரானவர் உலகத்திலேயே ஒருவருமில்லையாம். நெருப்பில்லாமல் திவ்வியமாகச் சமைப்பாராம். அவரை மற்றவர் புகழ்வதைப் பார்த்தால் மிகவும் ஆச்சரியமாகவே இருக்கிறது. அவரைப் பார்த்தால் இந்த சாமர்த்தியங்களில் ஒன்றாவது இருக்குமென்று நினைப்பதற்கு இடமே இல்லை. வஸ்திரமோ வெகுநாளைய கந்தை—உருவமோ, கரிசற்று வெண்மையாக இருக்கும் என்றும் சொல்லலாம். ஆனால் அறிவும் சாமர்த்தியமும் வஸ்திரத்திலும் உருவத்திலுமில்லை—அவைமுற்றிலும் வேறுபட்டவை. அவருக்கு அங்கே வாகுகன் என்று பெயராம். எப்போதும் தன் மனைவியை நினைத்து நினைத்துப் பெருமூச்செறிந்து ஏங்கி வருந்துவதுதான் வேலையாம்" என்றார்.

---

# கலி நீங்கு படலம்.

---

அதைக்கேட்ட தமயந்தி தம்மனைபரியால் விம்மி விம்மி அழுது சற்றுத் தன்னை மறந்து பின் தெளிந்து தன் கணவனை நினைத்து அவனுடைய நிலைமையை உணர்ந்து மனம் பொருது வருந்தி அவ்விடைபகர்ந்த வாகுகனே தன் கணவனெனத்தெரிந்து அங்கு சென்றுவந்த ஒற்றர்களுக்கு அவர்கள்மனம் வெறுப்பப் பொருள் கொடுத்தனுப்பிவிட்டுப் பருணாதனென்னும் அந்தணரை அழைத்து "ஐயரே, அருமை அந்தணரே என் தந்தையும நீரே. தம்மாலாகக் கூடிய சிறிய காரியம் இன்னும் ஒன்றுளது. அதையும் செய்து முடித்தால் தமது நன்றியை நான் எப்பிறவியிலும் மறவேன." அதாவது தாம் மறுபடியும் அயோத்தி நகரடைந்து இருதுபாண ராஜனிடத்தில் "வீமராஜன் புத்திரியாகிய தமயந்தி பரமசிவனைக் குறித்துக் கடுந்தவஞ் செய்து அக்கடவுளருளால் மீண்டுங்கன்னியாகி இரண்டாம் சுயவரம் ஏற்படுத்தி இருக்கிறாள். அத்தினமும் நாளைய தினமேயாகையால் அதற்காக எல்லா அரசர்களும் அந்நகர்க்கு வந்து சேர்ந்துவிட்டார்கள். தாமும் அச்சுயம்வரத்துக்குப் போக விரும்பினால் இப்போதே போகலாம் என்று தெரிவித்துவர வேண்டும்" என்றாள்.

எங்கோன் மகளுக் கிரண்டாஞ் சுயவரமென்
றிங்கோர் முரச மறைவித்தான்—செங்கோலாய்
அந்நாளு நாளை யளவென்றா னந்தணன் போயத்
தெந்நாளுந் தாரனைச் சேர்ந்து.

தமயந்தி சொல்லியவாறு தெரிவித்தும் பின்னும் அவ்வரசனை நோக்கி" அரசே நளச்சக்கரவர்த்தியைப்பற்றி தாம் சந்தேகிக்கவேண்டாம் அவர் உயிரோடிருப்பதும் இல்லாததும் தெரியவில்லை. இப்பூமண்டலம் முழுதும் தேடிப்பார்த்த பிறகு தான் இந்த ஏற்பாடு செய்யப்பட்டது; ஆனதால் அச்சுயவரத்

ளுக்கு எழுந்தருள மனமிருந்தால் இப்போதே புறப்படவேண் டும். காலதாமதஞ் செய்வதிற்பயனில்லை" என்று துரிதப்படுத் தினார்.

அதைக் கேட்ட இருதுபர்ணன் மனமகிழ்ந்து இருபுயங் களும் பூரித்து அவ்வந்தணருக்கு வேண்டிய பொருளுதவிப் பின்வருமாறு சொல்லலுற்றான். "இந்த இரண்டாம் சுயம் வரத்துக்குக் காரணம் நானேதான். ஏனெனில் முதல் சுயம்வ ரத்தில் தமயந்தி என்னை விரும்பி என் கழுத்திலிட்ட மாலை தவறிப் பக்கத்திலிருந்த நளன் கழுத்தில் விழுந்தது. அத னால் நளன் வரிக்கப்பட்டானென்று பெயராயிற்று. தமயந் தியும் அப்போது வேண்டாவெறுப்போடு தான் நளனைக் கலி யாணம் செய்துகொண்டாள். ஆனால் அவள் அவ்விருப்பத்தை இதுவரையில் மனத்திலேயே வைத்துக்கொண்டிருந்து இப்போது நளன் அவளைவிட்டுப் பிரிந்துபோனவுடன் அவ்விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக இந்தச் சுயம்வரம் ஏற்படுத்தியிருக்கிறாள்," என்று தன் பெருமையெல்லாம் சொல்லிக்கொண்டு வாகுவனா கிய நளச்சக்கரவர்த்தியை அழைத்து வாகுவனே வீமன் புதல் வியாகிய தமயந்திக்கு நாளைக்கே இரண்டாம் சுயம்வரமென்று ஒற்றர்கள் வந்து சொல்லிப்போகிறார்கள். நான் அதற்கு அவ சியம் போகவேண்டும். நீ குதிரைகளின் மனமறிந்து அதி விரைவாகத் தேரோட்டவல்லையாதலின் இந்தக்ஷணமே தகுந்த குதிரைகளைத் தேரிற்பூட்டிக்கொண்டுவரவேண்டும்" என்றான்.

தமயந்திக்கு இரண்டாம் சுயம்வரம் என்று காதிற் பட் டவுடனே நளன் வெட்கி மனங்கலங்கி மானம் வேர்பறிய

முன்னை வினையான் முடிந்ததோ மொய்குழலா
ளென்னைத்தான் காண விசைந்ததோ—தன்மரபுக்
கொவ்வாத வார்த்தை யுலகத் துரைப்பட்ட
தெவ்வாறு கொல்லோ விது.

தமயந்தி, இஃது என்ன! குலத்துக்கொவ்வாத வார்த்தையாக இருக்கிறதே. இதுவும் முன் செய்த தீவினையோ! அல்லது

என்னைக் கண்டுபிடிப்பதற்காகச் செய்த உபாயமோ! ஒருவேளை நான் உன்னைக்காட்டில் விட்டுப்பிரிந்ததினாலே உன் மீதுள்ள காதல் ஒழிந்து இனி நீ வேண்டியதில்லையென நீக்கினதாக எண்ணினையபோலும். ஒன்றும் தெரிந்துகொள்ளக் கூடவில்லையே! நீ கற்புக்கரசியென்றும், கற்பின் பெருமையையும் வன்மையையும் அதை அனுசரிக்கவேண்டிய முறையையும் உலகத்துக்கு வெளிப்படுத்திக்காட்டும் உத்தமியென்றும் நினைத்தேனே! நீ இவ்வாகவே என் மனமறிந்து எனக்கிதமானவற்றையே செய்துவந்த இல்லக்கிழத்தியன்றோ! உனக்கும் கற்பெனப்படுவதைப் போதிக்க வேண்டுமோ! மீன்குஞ்சுக்கு நீந்தக் கற்றுக்கொடுப்பாருண்டோ! ஒருவேளை நான் இறந்ததாக நினைத்திருப்பாயானால் நீயும், அவ்வாறு நினைத்த அக்கணமே, உயிரை விட்டிருக்கவேண்டும். ஏனெனில் உலகத்தில் முதன்மையான கற்புடைய மாதர் தமது கணவனிறந்த செய்திகேட்டபோதே பொறுக்கலாகாத துக்கத்தால் கொல்லுலைத் துருத்திபோல் பெருமூச்செறிந்து அமரச் சோர்கூடவே தமது இனிய உயிரையும் விட்டுவிடுவார். அவ்வாறு இயல்பாக உயிர்போகாவிடின் தீமூட்டித் தமது காதலரைத் தியானித்துக்கொண்டே குளிர்ந்த தடாகத்திலிறங்குவதுபோல் மனக்கிலேசமின்றி அத்தீயிலிறங்கி இறப்பார்கள். ஒருகால் தமது இளங்குழவிகளைவிட்டு நீங்குவதால் அவர்களைக் காப்பாற்றுவோரின்றி அவர்கள் இறந்துபோவாரென நினைத்தால் அம்மாதர் தமது இன்பங்களை முற்றுந்துறந்து இறந்துபட்ட தமது கணவரோடு மறுபிறவியில் சேர்ந்து வாழ்வதற்குரிய விரதங்களைக் கைக்கொண்டு ஆகாரத்தையும் குறைத்து நாளுக்குநாளுடலைக் கெடுத்துக்கொள்வார்கள். இவை தாம் கற்புடைமாதர்க்குரிய கடமைகளே.

காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி
யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா
தின்னுயி ரீவ ரீயா ராயி
னன்னீர்ப் பொய்கையி னளியெரி புகுவர்
நளியெரி புகா ராயி னனையரோ
டுடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்
பத்தினிப் பெண்டிர் பரப்புநீர் ஞாலத்து.

இவ்வகைப் பெண்டிர்க்குப் பஞ்சபூதங்களும் வசமாகும். பெய்யென்றால் மழைபெய்யும். சூரிய சந்திரரும் அவர்கள் நினைத்தபோது உதித்து வேண்டும்போது மறைவர். மேற்சொல்லியவாறு பத்தினிப் பெண்களுக்குரியவற்றில் ஒன்றேனும் கைக்கொள்ளாது மறுவிவாகத்தை நீ கைக்கொண்டது புதுமையாக இருக்கிறது. ஒருவேளை என் நிலைமையைக் கெடுத்த ஊழ்வினையானது உன் மனத்தையும் கெடுத்ததோ!

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.

என்றாற்போல நான் என் நிலைமைகெட்டவுடன் நீ என்னையிகழ்ந்து என்மீதுகொண்ட காதலொழிந்து என்னையும் மறந்தாயோ! ஹா! ஹா! இது பரதையர் இயல்பல்லவா! இன்னும் எது சம்பவித்தாலும் அதை அனுபவிக்க உரியவனேயன்றி ஒழிக்க என்னாலாகுமோ. ஊழ்வினையை நீக்கினவா யாவர்," என்று மனம் புழுங்கிப் பின் ஒருவாறுதேறிப் "பயனின்றி இதைச் சிந்திப்பதைவிட அரசனிட்ட கட்டளையைச் செய்வதே எனக்கு மேலானது. அது தான் சத்தியம் என்று நினைத்து. தமையந்தி கற்பழிப்பாளென்றாலும் எனக்குரிய கடமையை விடலாமோ" என்று குதிரை லாயத்துக்குச் சென்று தனக்குப் பிடித்த குதிரைகளை அலங்கரித்து அழகிய தேரிற் பூட்டித் தேரைப் பயணத்துக்குத் தயாராகக் கொண்டுவந்து நிறுத்தினன்.

இருதுபர்ணன் குதூகலத்துடன் அதிக விலையுயர்ந்த ஆபரணங்களாலும், ஆடைகளாலும் அலங்காரஞ் செய்துகொண்டு தேரேறும்போது வாகுவனையழைத்து, "வாகுவ, வீமன் நகருக்குச் செல்ல எத்தனைநாளாகும்" எனக்கேட்டான்.

வாகுவன் 'அரச, இன்று பகலுக்குள் வீமன் நகரில் கொண்டுபோய்ச் சேர்க்கிறேன். அதைப்பற்றிக் கவலைகொள்ளவேண்டாம், காலதாமதம் செய்யாமல் தேரில் ஏறவேண்டும்" என்றான். அவ்வாறே இருதுபர்ணன் தேரேற வாகுவனும் முன்தட்டில் உட்கார்ந்து குதிரைகளின் கடிவாளத்தைப் பிடித்தவுடன்

தேவர்களும் மெச்சும்படியான வில்லாளியாகிய நளன் கையி னின்று விடுபட்ட அம்புபோலும், இருதுபர்ணன் தமயந்தியின் சுயம்வரத்துக்கு இப்போதே செல்லவேண்டுமெனத் துடிக்கின்ற அவன் மனம்போலும், நளன் விதர்ப்பநகருக்குப் புறப்பட்டுவிட் டான் என்பதைத் துன்பக்கடலில் மூழ்கிக் கலங்கிநின்று வருந் தும் தமயந்திக்கு முன்னமேயே தெரிவிக்கப் புகுந்தோடிய வாயுவைப்போலும் மிக்க வேகத்தோடு சென்ற அக் குதிரைக ளின் போக்கையும் அவற்றைச் செலுத்தும் வாகுவனுடைய சாமர்த்தியத்தையும் கண்டோர் யாவரும் வியப்புற்று வாகு வனைப் புகழ்ந்தார்கள். இவ்வாறு சற்றுத் தூரம் சென்றவுடன் குதிரைகள் களைப்படைவதைக் கண்ட வாகுவனாகிய நளன் தனக்கு முனிவர்களால் கற்றுக்கொடுக்கப்பட்ட மந்திரத்தை அவற்றின் காதுகளில் உச்சரிக்க அக்குதிரைகள் முன்னினும் கடுங்கதிகொண்டு பாய்ந்தன. அப்பொழுது இருதுபர்ணன் அக் குதிரைகளின் வேகத்தைக் கண்டு வியப்புற்று ‘ இப்போது தேரோட்டுபவன் சாலிகோத்திரனோ அல்லது மாவலியோ, ஒரு வேளை அசுவசாஸ்த்திரம் முற்றுமுணர்ந்த நளச்சக்கரவர்த்தியே வேற்றுருவமைந்து வாகுவனெனப் பேர்கொண்டு வந்திருக் கிறாரோ ” எனச் சந்தேகித்து வாகுவனை மெச்சினான்.

இவ்வாறு தேர் மிகவும் விரைவாகச் செல்லுகையில் இருது பர்ணனுடைய மேலாடையானது தேர் சென்ற வேகத்தால் கீழே விழ இருதுபர்ணன் அதிவிரைவாக வாகுவனை யழைத்துத் தேரை நிறுத்தி உத்தரியத்தை எடுத்துவரச் சொன்னான்.

வாகுவன் “ ஐயா, தாம் சொல்லி வாய்மூடுமுன்னே இத் தேர் பத்து யோசனை தூரம் கடந்து வந்துவிட்டதே. இனி யான் செய்வது யாது,” என்றான்.

இருதுபர்ணன் அதைக் கேட்டு வியப்பினால் சிரக்கம்பஞ் செய்து வாகுவனிடத்தில் அன்புகொண்டு இவ்வளவு விரைவாக தேரோட்டுபவரும் உலகிலுண்டோவெனத் தனக்குள்ளே மகிழ்ந் தான்.

பின்னும் தேரானது பத்துக்காத தூரம் சென்றவுடன் வழியில் இலைகளாலும் பூங்கொத்துகளாலும் செழித்து ஆகாயத்திற் பரவிய ஒரு பெரிய தான்றி மரத்தைக் கண்டு இருதுபானனை அதனருகில் தேரை நிறுத்தச் செய்தான். பின்பு வாகுவனை நோக்கி "வாகுவா, இம்மரத்தில் இலைகளும் பழங்களும் உள்பட மூன்றுகோடியே முப்பத்திரண்டிருக்கின்றன" என்றான்.

வாகுவனாகிய நளன் வியப்புற்று "இஃதென்ன ஆச்சரியம்! ஒரு மரத்தைப்பார்த்தவுடன் அதிலுள்ளவற்றின் தொகையைச் சொல்லுவது சாமானியமான காரியமல்ல. அதை ஒருவரிடத்திலிருந்து கற்றுத்தான் அறியவேண்டுமே யல்லது எளிதில் அறியக்கூடியதல்ல. இதுதான் சூதில் வெற்றியளிக்கும் வித்தை. காட்டில் கார்க்கோடகன் சொல்லியதும் உண்மையே. இனி வருங்காலமாவது எனக்கு நற்காலமாகுமோ. எனக்குக் கடவுள் அருளும் உண்டோ! எனக்குத் தெய்வ பலங்கூட இல்லாமற் போயிற்றன்றோ! கடந்ததைக் கருதி வீணே வருந்துவதிற் பயனில்லை. ஆனால் இவ்வரசன் சொல்லியதுண்மையோ என இம்மரத்திலேறி அதிலுள்ள இலை பழங்களை எண்ணிப்பார்த்துப் பின்பு அவ்வித்தையைக் கற்கவேண்டும்" என எண்ணங்கொண்டு அம்மரத்திலேறி அவற்றில் ஒன்றுவிடாது எண்ணிப் பார்க்கையில் அத்தொகை கொண்ட பழங்களும் இலைகளும் இருக்கக்கண்டு மனமகிழ்ந்து இருதுபானனைப் புகழ்ந்தான். பின்பு வாகுவனாகிய நளன் இருதுபானனை நோக்கி "அரசே, உலகில் 'முற்றுமுணர்ந்தவரில்லை' என்பதும் 'எல்லார்க்கு மொவ்வொன்றெளிது' என்பதும் உலகில் பழகின பிறகுதான் யாவரும் அறிவார்கள். அதுவரையில் தமக்குரிய கல்வியே எல்லாவற்றிலுஞ் சிறந்ததென இறுமாந்து தம்மைத்தாமே புகழ்வார்கள். அத்தகைய இறுமாப்பு, அவரவர் கற்கும் கல்வியோடு கூடவே அக்கொள்வோர் அறியாதவாறு உட்சென்று கல்வி முதிர முதிர அச்செருக்கும் முதிர்ந்து பிறகு பயனளிக்கத்தக்கதாகிறது. அதனாலடையும் பயன் இகழ்ச்சியே. ஆனால் அது கல்வி கற்றோர்

எவரையும் விடுவதில்லை. அவரவர் அறிவின் முதிர்ச்சிக்குத் தக்கவாறு அது தன் அளவில் மாறுபடுமேயன்றி எவரையும் பற்றாது விடாது. அதற்காகவே, **கடலே யனையம் யாமே கல்வியா லென்னும், அடலே றனையசெருக் காழ்த்தி—விடலே** எனக் கல்விகற்றோர் எச்சரிக்கப்படுகின்றார்கள். அறிவுடையோர் அதைத்தெரிந்து அச்செருக்கைக் களைவதுமுண்டு. அனேகர் அதன் வலிமையடக்கித் தம் வசப்படுத்துவது திண்ணம். அது போல நானும் இதுவரையில் என் கல்வியே மேன்மையுடைத் தெனக் கருதியிருந்தேன். இப்போது தமது வித்தையைக் கண்டவுடன் அது என் கல்விக்குக் குறைந்ததாகத் தோற்ற வில்லை. ஆனால் ஒருவர் கற்ற விசேஷக் கல்வியைப் பிறர்க்குக் கற்பிப்பதே மேன்மையுடைத்து. அதைக் கற்கும் ஆர்வம் உடை யார்க்குப் போதிக்காது மறைத்தால் அக்கல்வி அவனோடு மறைவதன்றி அவனும் கொடிய பிரமராக்ஷதனாகப் பிறந்து வருந்துவானெனச் சொல்லப்படுகிறது. ஆகையால் தமக்கு மனமிருக்குமாயின் தம்முடைய வித்தையை நான் கற்கவும் என் வித்தையைத் தமக்குப் போதிக்கவும் தயாராக இருக் கிறேன்” என்றான்.

இதுபர்ணன் வாகுவன் சொல்லிய முதுமொழிகளையும் இனிய வசனங்களையும் கேட்டு மனமகிழ்ந்து ‘அவ்வாகுவன் சொல்லியபடியே அக்ஷவிருதயம் என்னும் வித்தையை வாகு வனுக்குப் போதித்துக் குதிரைகளின் மனமறியும் சிறந்த வித்தை யைத் தான் கற்று மகிழ்ந்தான்.

வாகுவனாகிய நளன் இருதுபர்ணனிடத்திலிருந்து அவ் வித்தையைக் கற்றவுடன் அதுவரையில் அந்நளனை அவன் நிழல்போல் இடைவிடாது அவனைப்பற்றிக் கொண்டிருந்த கலி அவனை விட்டு நீங்கி அவன் உட்கொண்டிருந்த விஷத்தைக் கக்கிக்கொண்டு அப்பால் நின்றான்.

அக்கலியைக் கண்ட நளன் வெகுண்டு கண்களில் நெருப்புப் பொறிபறக்க விழித்துப்பார்த்துத் தானடைந்த துன்பத்துக்கும்

சிறுமைக்கும் காரணமாகிய அவ்வஞ்சகக்கலியைச் சபித்தது வருத்த எண்ணங்கொண்டதை அறிந்த கலி பயந்து "இனி நான் சும்மா இருந்தால் இச்சக்தியவானுடைய சாபத்தாலும் வருந்த வேண்டும். இவன் அடைந்த துன்பத்துக்குத் தக்கபடி என்னைச் சபிக்கப்புகுந்தால் என்றேற் பொறுக்கவும் நீக்கவும் கூடுமோ" என நினைந்து நளனைப்பார்த்து 'அரசனே, உன்னிலுஞ் சிறந்த சத்தியவானும் தயாநிதியுமுண்டோ? நீயே என்னைச் சபிக்கப்புகுந்தால் நான் அதை மறுக்கவும் கூடுமோ? உன்பெருமையையும் தமையந்தியின் கற்பையும் அறியாமல் உங்களுக்குத் தீங்கு செய்யத் துணிந்தேன். அதற்குப் பலன் அனுபவித்து விட்டேன். இதுவரையில் என் வயிற்றில் வைத்திருந்து இப்போது கக்கிய விஷத்தை நின் கண்ணாலேயே பார்த்தாய். இக் கார்க்கோடகன் விஷத்தால் எரியுண்டு நான் பட்டபாடு எனக்குத்தான் தெரியுமே அல்லது வேறொருவர் உணரவும் முடியாது, அதை வர்ணிக்கவும் என்னாலாகாது. உன்னையே நான் பற்றி இருந்தமையால் கார்க்கோடகன் உன்னைக் கடித்தூட்டிய விஷத்தை யான் உட்கொள்ள நேரிட்டது. அதுவும் பதிவிரதையுமாகிய தமையந்தி இட்ட சாபத்தின் பலனே. இவ்விஷத்தை உட்கொண்டு இன்றுவரையில் அச்சாபத்தால் வருந்தி இப்போது தான் அதினின்றும் நீங்கினேன். உன் முறையில் நீயும் சபித்தால், கருணைக்கடலே! அதை ஏற்கும் வலியற்றவனாக இருக்கிறேன். இளைத்தோரைக் காப்பது உன் இயல்பன்றோ? தேவேந்திரன் வற்புறுத்திச் சொல்லியதையும் கேளாமல் காம மயக்கத்தால் பின் விளைவதை அறியாது தலையிட்டுத் தவித்தேன். உலகில் வஞ்சகர்கள் தமது வஞ்சகத்தால் பிறருடைய அழியும் பொருளை ஒழித்து அவர்களை வருத்தினபோதிலும் தாம் செய்த வஞ்சனையின் பலனாகப் பிறர் துன்பத்தைவிட அநேக மடங்கு அதிகமாக வருந்துவார்களென்றும் கடைசியில் தம்மால் வஞ்சிக்கப்பட்டவர்களையே அடைந்து அவரை வணங்கித் தமது குறைகளை நீக்கிக்கொள்ளவேண்டும் என்றும் யாவரும் அறிந்துகொள்ளும்பொருட்டு நானே உதாரணமானேன். நீ சான்றோனாகை

யால் தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉ", வெங் குறைதீர்க்கிற்பார் விழுமியோர்'' என்றபடி, இப்போது உன் சாபத்தால் வருந்தப்போகிற என் துன்பத்தை நீக்கவேண்டும். உன் முன்னோர்கள் தேவர்களுக்கு நேரிட்ட விபத்துக்களை நீக்கி அவர்களை மகிழ்விப்பதே தமது கடமையாகக் கொண்டவர்கள். நீயும் உனது முன்னோர்கள் கொள்கையைப் பற்றியவன் என்பதற்கு நீ தேவர்களுக்காகத் தமையந்தியினிடத்தில் தூது சென்றதே போதுமான சாக்ஷியன்றோ! நானும் தேவர்களில் ஒருவனல்லவா? தகாத காரியத்தைச் செய்ததால் தலைகுனிந்து நிற்கின்றேன். அது நியாயந்தானே. சத்தியத்துக்குமுன் அசத்தியம் தலையெடுக்குமா? தலையெடுத்தாலும் அது நீடித்திருக்குமோ? அது மின்னல்போல் தோன்றுவது கணப்போது; துஞ்சுவது எப்போதும். அதன் தன்மை முற்றுமறிந்திருந்தும் அவ்வறிவழிந்து அதைக் கைக்கொண்டதற்காக இதுவரையில் நான் பட்ட துன்பத்தைப் போல் எவரும் படமாட்டார்கள். அவ்வாறு வருந்திய என்னைக் காத்தால் உன் புகழ் கறைபடுமோ; உன் சத்தியம் குறைபடுமோ. ஆடவர்க்குச் சத்தியமும் பெண்களுக்குக் கற்புமே சிறந்த அழியாச் செல்வம். இவை நீங்கிய மற்றவை எல்லாம் அழியுஞ் செல்வம். இவற்றைக்கொண்ட நீயும் தமயந்தியும் அழியாத புகழுடம்பு படைத்தீர்கள்.

ஆடவாக்குச் சத்ய மரிவைக்குக் கற்பும்போற்
பீடமைந்த செல்வம் பிறிதுண்டோ—தேடரிய
அப்பொருளே யெப்பவத்து மோப்பில்லா வைப்பெனவே
செப்புவதே உன் சரித்திரம்.

உங்கள் பெருமையைச் சொல்ல என்னாலாகுமோ. நான் உனக்குச் செய்த தீங்கைப் பாராட்டாதே. இனி நான் உன் பெயரைச் சொன்னவர்களைக் கூடப் பீடிப்பதில்லை. அருட்கடலே, உனக்குற்ற சிறுமையானது உன் பெருமையை விளக்கிற்றென்று மதிப்பாயாக. எவரும் பிசகுவது பெரும்பான்மை; அதைப் பொறுப்பதே மிக மேன்மை. ஆகையால் என் பிசகைப் பொறுத்

துக்கொண்டு உன் கோபத்தைத் தீர்ப்பாயாக" என்று கலி இரந்து கேட்டனன்.

நளன் இயற்கையாகவே கருணைக் கடலானமையால் தானடைந்த துன்பமெல்லாம் மறந்து கலியின் பரிதாபக்காட்சியைக் கண்டு மனமிரங்கித் தன கோபம் தணிந்து "தேவ, தம்மைக் கோபிப்பதில் பயனென்னை. என் ஊழ்வினையை என்னைத்தவிர வேறு யாரா அனுபவிப்பார்கள். ஊழ்வினைக்கு எவரை வெறுப்பது? உம்மீது எனக்குக் கோபமில்லை. நான் போயவருகிறேன்" என்று விடைபெற்றுக்கொண்டு தேரேறினான்.

அக்கொடிய சனியும் அத்தான்றிமரத்தின் மீதேறித் தன் துன்பம் நீங்கிக் களித்திருந்தான்.

---

# தேவியைக் கண்ணுற்ற படலம்.

---

விண்டமென்மலர் நறவினை விளரியஞ் சுரும்ப
ருண்டுதுஞ்சுதார் நிடதர்கோன் றேர்கடி தோட்டி
மண்டு தீம்புனலகழிசூழ் மாமதிக் குடுமிக்
கொண்டல் கண்படு குண்டினபுரத்தில் வந்தடைந்தான்.

நளன் கலிநீங்கியபின் களிப்படைந்து சத்தியத்தின் பெருமையையும் அதன் வலிமையையும் உணர்ந்து மனமகிழ்ந்து தமையந்தியின நிலைமையை அறிய மனங்கொண்டு தேரை முன்னிலும் பன்மடங்கு விரைவாகச் செலுத்தி அனேக யோசனை தூரத்தை அரைநாழிகை வழியாகக்கடந்து விதர்ப்பநாட்டுத் தலைநகராகிய குண்டினபுரத்தின் மாளிகைகளின் கொடிமரங்களையும் உயர்ந்த கோபுரங்களையும் வெகுதூரத்திலிருந்து பார்க்கப்பார்க்கத் தமையந்தியின் மீது காதல் மிகுந்து அவளைக்காணக் காற்றுகப்பறந்து வருபவன்போல் பூமியில் கால்படாது பாய்ந்து செல்லும் குதிரைகளால் ஈர்க்கப்பட்ட அழகிய தேரிலமர்ந்து அதைச் செலுத்திக்கொண்டு குண்டினபுரத்தின் அகழியையும்

மதிலையும் கடந்து வருகையில் அநேக நீருண்ட மேகபடலங்கள் கடலினின்றெழுந்து ஆகாயத்திற் பரவியபோது ஒன்றை ஒன்று உராய்ந்து குமிறுவதுபோன்ற ஒலியுடன் செல்ல அவ்வொலியைக் கேட்ட தமயந்தி தானிழந்த செல்வம் தனக்கு மீண்டுங் கிடைத்தாற்போல விரைந்தெழுந்து "இப்போது வருவது தேராயின் இவ்வொலியோடு தேரோட்டுபவர் நிடதநாட்டுச் சக்கவர்த்தியன்றி வேறொருவருமல்ல. என் காதலரை இந்த உபாயத்தால் காணாவிடில் இனி உயிர்வைத்திருப்பதில்லை" எனத் தீர்மானித்துக்கொண்டு அத்தேரொலியைக் கேட்டுக்கொண்டே மனம் பூரித்தாள்.

வீமன் நகருக்குள் தேர் வந்துகொண்டிருக்கும்போது நளனும் இருதுபர்ணனும் தமயந்தியின் சுயம்வரத்திற்கேற்ற மனமுடையவரானமையால் நளன் முதல் சுயம்வரகாலத்தில் அந்நகரின் அலங்காரங்களைக் கண்ணுற்றிருந்தபடி அப்போதும் இருந்ததாவென்று சுற்றிச் சுற்றிப் பார்க்கும்போது கொடிச்சீலை இழந்த கம்பங்களும் பொலிவழிந்த மாளிகைகளும், விழாவிழந்த வீதிகளுமாகக் காணப்பட்டன. அந்நகரத்தார் தமது குமாரத்திகளுக்கு விபத்து நேர்ந்தாற்போல வாடிய முகத்தோடு தோன்றினர். உற்சாகம் என்பதே அந்நகரத்தில் உதிக்கவில்லை. பெற்றோர்கள் தமது பிள்ளைகளையும் வெறுத்தார்கள். எவரும் வெறுப்பும் விரக்தியுமிகுந்த வார்த்தைகளோடு சஞ்சரித்தனர். கடல் முழக்கத்தோடு ஒப்பிடக்கூடிய ஒலிமிகுந்த அந்நகரமானது இடிமுழக்கங்கேட்ட அரவமாயிற்று. சோதியாரின்மையால் சோலைகளெல்லாம் சுரமாயின. முன்னே சுயம்வரப்பந்தலிட்ட விஸ்தாரமான பாகமும் பாழடைந்து பொட்டலாயிற்று. இவற்றைப் பார்த்துக்கொண்டே அரண்மனைக்குப் போகும்போது அவ்வரண்மனை அனேக வருஷமாக அரசனைவிட்டுப்போன மாளிகைபோலவும், திருமகள் நீங்கிய தாமரைபோலவும், ஒளிமழுங்கி வளங்குறைந்து மங்கலியமிழந்த மாதைப்போலவும் தோற்றியது. இவற்றைக்கண்ட நளன் சந்தேகித்து "இரண்டாம் சுயம்வரம் நடக்கும் நகரம் இதுதானோ; அல்லது நான் பிரிந்தமையால் தமயந்தி

அடைந்த துன்பம் இவ்வளவு என்பதை அளவிட்டுக் காட்டும் நகரோ! தமயந்தி என்னைக் காண்பதற்காகத்தான் இவ்வுபாயம் செய்தாள்போலும், ஆராய்ந்துபாராமல் அவள்மீது குற்றஞ் சுமத்தினேனே" என்று தமயந்தியின் கற்பின் வன்மையைப் புகழ்ந்துகொண்டே தேரை அரண்மனை வாயிலில் நிறுத்தினான்.

இருதுபர்ணன் மிகவும் விரைவாக விதர்ப்பன் நகருக்குச் செல்லவேண்டும் என்ற எண்ணமே முதன்மையாகக்கொண்டவனாகையால் அங்கே வேறு தேர்கள் ஒன்றும் காணப்படாமல் தான் எல்லாருக்கும் முன்னாலேயே வந்து விட்டதைக் குறித்து மனமகிழ்ந்து வாகுவனுக்குப் பிரியவசனங்கூறி அவனைப் புகழ்ந்து "வாகுவ, உன்னையன்றி வேறொருவர் இந்தத் தேரைச் செலுத்தியிருப்பாராயின் நான் இவ்வளவு சீக்கிரம் எல்லா அரசர்களுக்கும் முன்னாலே வந்திருக்கமுடியாது. நான் உன்னாலேயே மேன்மையடையப் போகிறேன். நீ எனக்கு இந்தச்சமயம் சாரதியாகக் கிடைத்தது நான் அநேக பிறவிகளில் செய்த புண்ணியமேயன்றி வேறல்ல என்பதற்குச் சந்தேகமில்லை. நீ இத்தேரை இவ்விடத்திலேயே நிறுத்தி விட்டு இங்கேயே இரு. நான் வீமராஜனைப்பார்த்து வருகிறேன்" என்று மிகவும் விரைவாக உட்புகுந்து வாயில் காப்போர்க்குத் தெரிவித்தான்.

அதை அக்காவலர் வீமராஜனுக்குத் தெரிவிக்க வீமராஜன் எதிர்கொண்டழைத்து இருதுபர்ணனுக்குச் செய்யவேண்டிய மரியாதைகளைச்செய்து ஓர் அரி ஆசனத்திலிருத்தி "அரசே, தன்னியனானேன். தமது நாடு சுபிக்ஷமாக இருக்கின்றதா? தமது குடிகள் சமாதானமாகத் தமது செங்கோலை விசுவாசித்திருக்கிறார்களா? தம்மைக் கண்டு அநேக வருடங்கள் ஆயின. தாம் அன்புகூர்ந்து இந்நகருக்கு எழுந்தருளிய காரணம் யாதானுமுண்டோ? என்னாலாக வேண்டிய காரியம் யாதேனுமிருந்தால் தடையின்றிச் சொல்லலாம். தமது நல்வரவினால் என்னையறியாமலே என் மனம் பூரிக்கிறது. என் வலது கண்ணும் தோளும் துடிக்கின்றன. ஆனால் தாம் திக்விஜயம் செய

தமயந்தியாள் உள்ளக் கருத்தைத் தெரிந்து கொள்ள விரும்புகி
றேன்" என்றான்.

இதைக் கேட்ட இருதுபர்ணன் ஒன்றுஞ் சொல்லத்தோன்
றாமல் அம்மாளிகையைச் சுற்றிப் பார்க்கும்போது மணக்கோலம்
ஒன்றும் காணப்படாமையாலும் அவனைத் தவிர வேறு அர
சர்கள் அங்கே வாராமையாலும் இது ஏதோ விந்தையாக இருக்
கிறது, என்று நினைத்துக்கொண்டு வீமராஜனைப் பார்த்து
"அரசே, தமது எண்ணப்படி எனக்கு மகிழ்ச்சிக்குக் குறைவில்லை.
தம்மைப் பார்த்து வெகு நாளாயிற்று என்று எண்ணம் சில
நாட்களுக்கு முன் என் மனத்தில் தோன்றி விருத்தியடைந்து
வந்தது, அதற்காகத் தம்மைப் பார்த்துப் போகலாம் என்ற
எண்ணத்துடன் இங்கு வந்தேன்" என்றான்.

வீமராஜன் அவ்வரசனுக்குப் பிரியவசனங் கூறி அவனுக்குத்
தனியாக ஒரு மாளிகையை அலங்கரித்து அங்கே தங்கும்படி
செய்ய இருதுபர்ணன் அம்மாளிகைக்குச் சென்று மனக்கிலேச
முற்றுப் படுத்துக்கொண்டு மேலே பார்த்துப் பின் வருமாறு
தானே எண்ணத்தொடங்கினன். "இதென்ன விந்தையாக இருக்
கிறதே. பிராமணன் தமயந்திக்குச் சுயம்வரம் என்றுதானே
சொன்னான். அதுவும் இரண்டாம் சுயம்வரம் என்றும் அதற்குக்
காரணமும் விபரமாகச் சொல்லினனே. இங்கே என்னைத்
தவிர வேறொருவரையும் நான் காணவில்லையே. ஒருவேளை
சுயம்வரம் முடிந்து போய்விட்டதோ. ஐயோ, தமயந்தி, நான்
வருவேன் வருவேனென்று எதிர்பார்த்திருப்பாளோ. மாலைசூட்ட
வந்தபோது அந்த அரசர் கூட்டத்தில் என்னை எங்கெங்குந் தேடி
னளோ. என்ன என்ன நினைத்தாளோ. என்னைப்போல் நம
பிக்கைத் துரோகி உலகில் ஒருவருமில்லை. அவள் என்மேல்
கொண்டகாதலை மறக்கமாட்டாள். என்னைப்பார்க்கிலும் எல்லா
விதத்திலும் சிறந்த நளசக்கரவர்த்தியை மணந்தும் என்னை
மறவாதிருந்த தமயந்தியா என்னை இனிமேல் மறக்கப்போகி
றாள். அது ஒருநாளுமில்லை. ஆனால் பிராமணன் நாளைக்குச்

சுயம்வரம் என்றல்லவோ சொன்னான். ஒருவேளை அந்தப் பிரா
மணனுக்குப் பைத்தியம் உண்டோ. இல்லாவிட்டால் வீமராஜன்
என்னை "நீ வந்த காரியம் என்ன, என்று கேட்பாரே. அவ
ருக்குத் தெரியாமல் சுயம்வரம் நடக்குமோ. அவர் என்னைக்
கேட்டதை நினைக்குந்தோறும் என் மனம் புண்ணாகிறதே. ஒரு
கால், தமயந்தி இரகசியமாக எனக்கு மாத்திரம் சொல்லியனுப்
பினளோ. அப்படி இருந்தாலும் வீமராஜனிடத்தில் இதைநான்
தெரிவிக்காமல் அவர் கேட்டதற்குச் சாதுரியமாகப் பதில்
சொல்லிவிட்டு வந்தது நல்லதுதான். வேறொருவராக இருந்தால்
ஏமாந்து இரகசியத்தை வெளிப்படுத்திவிட்டு வந்த காரியம் நட
வாமல் போய்ச்சேருவார்கள். ஆனாலும் நளன் தமயந்தியைவிட்
டுப்போய் எத்தனை வருஷகாலமாயிற்றென்பது உலகம் முழுதும்
தெரிந்த விஷயம். அவன் இத்தனைநாள் இறந்துபோயிருப்பான்.
அதற்குத் தடையே இல்லை. ஒருவேளை திரும்பி வந்தாலும்
அவனுக்கு நாடுமில்லை நகருமில்லை! அவன் பிழைப்பு ஆண்டி
யைப் பார்க்கிலும் கேடாகப் போய்விடும். ஆகையால் தமயந்தி
அவனை இனிமேல் விரும்பமாட்டாள். இனி எனக்குத்தான்
தமயந்தி, நாளைக்கு எல்லாம் தெரிந்துவிடும். ஏன் நான் அவ
சரப்படவேண்டும்" என்று பைத்தியம் பிடித்தவன்போல் பிதற்
றிக்கொண்டிருந்தான்.

வாகுகனாகிய நளன் குதிரைகளைத் தேரினின்று அவிழ்த்து
விட்டு இளைப்பாற்றித் தண்ணீர் காட்டிக் கட்டிப்புல்போட்டு அர
சனுக்குச் சமையல் செய்வதற்கு அன்றோடு அவனைப் பிடித்த
சனியும் துன்பமும் தொலைந்ததென்ன தலைமுழுகுபவன் போல்
ஸ்நானஞ்செய்து மடைப்பள்ளியிற் புகுந்து சமையல்செய்து
கொண்டிருந்தான்.

முன்பு தேரொலியைக் கேட்டுச் சந்தேகப்பட்டுக்கொண்
டிருந்த தமயந்தி தன் உயிர்த்தோழியை அழைத்து "அன்
னமே, இப்போது இங்கு வந்திருக்கும் அரசனுக்குத் தேரோட்
டிக்கொண்டு வந்தவர் நமது நிடதநாட்டுச் சக்கரவர்த்திதானோ

என்பதனைத் தெரிந்து அவர் செய்யுங் காரியங்களையும் நுட்பமாக அறிந்து வரவேண்டும்" என்றாள்.

அந்தத் தோழி அதிவிரைவாக நளன் சமைத்துக்கொண்டிருக்கும் மடைப்பள்ளியை யடைந்து நளனைக்கண்டு "ஐயா, தங்களைப் பார்த்தால் பகுவமான குணசாலியாகத் தோற்றுகிறது. தாம் யார்? தங்கள் வேலை என்ன? இங்கு எதற்காக வந்திருக்கிறீர்கள்" என்று நயமாகக் கேட்டாள்.

நளன் அந்தத் தோழியை நோக்கி "நங்காய், நான் இங்கு வந்திருக்கும் இருதுபர்ணமகாராஜனுக்குரிய ஊழியன். உலகத்தில் கணவனைப் பிரிந்த கற்புடைய மாதர்களெல்லாம் புனர்விவாகம் செய்துகொள்வது வழக்கமல்லவா. கணவன் சமீபத்தில் இருக்கும் வரையில் தானே கற்போடிருக்கவேண்டும். சாஸ்திரங்களிலும் அப்படித்தானே சொல்லப்பட்டிருக்கிறது. அதன்படியே இந்நகரத்து அரசன் புத்திரியும் தன் கணவனைப் பிரிந்த பிறகு வேறொருவரைக் கலியாணம் செய்துகொள்ளும் பொருட்டு இரண்டாவது சுயம்வரம் ஏற்படுத்தியிருப்பது உனக்குத் தெரிந்திருக்கலாமே. அதற்காக அவளை விரும்பி வந்திருக்கிற என் அரசனுக்குத் தேரோட்டிக்கொண்டு வந்தேன். என் பேர் வாகுவனென்று சொல்வார்கள். எனக்கு ஒரு நாளைக்கு ஆயிரம் பொன் சம்பளம். எனக்குச் சமைக்கவும் தெரியும்" என்றான்.

தோழி "ஐயா, தாம் பேசுவது வேடிக்கையாக இருக்கிறது. சமைப்பதென்றால் நெருப்பில்லாமலாகுமோ. இவ்விடத்தில் புகையைக்கூட இல்லையே. இனித்தான் சமையலாகப் போகிறதோ. நீங்கள் வந்து நெடுநேரம் ஆய்விட்டதுபோலிருக்கிறதே. இதுவரையில் எமது அரசன் புத்திரியின் தவறு தலைபற்றி ஆலோசித்துக்கொண்டிருந்தீரோ. இது மிகவும் சாதாரணமல்லவா. விவாக காலத்தில் அக்கினிக்கு முன்பாக நின்று தன் உயிருள்ள வரையில் அம்மணமகளைக் கைவிடுவதில்லையென உறுதிமொழிகூறிய மணமகன் யாதுகாரணமுமின்றித் தன் மனைவியைவிட்டுப் பிரிவதும் பிரிவதற்கனுகூல

மான குற்றஞ்சாற்றுவதும் சாஸ்திரங்களில் ஒப்புக்கொள்ளப் பட்டவைகளோ. பெண்களுக்குரிய கற்புநெறியைப்போலப்புருஷர்களுக்குரிய சத்தியநெறியும் அவர்களைக் கட்டுப்படுத்தக் கூடியதாமே. அப்போது தானே இருவருக்கும் ஒற்றுமையும் காதலும் விருத்தியாகும். பெண்கள் மாத்திரம் தமக்குரிய நன்னெறிகடவாதிருந்தும் புருஷர்கள் அதை யுணராது அப்பெண்களை வெறுத்துத் தம் மனம்போன வழியே போவாராயின், அவர்கள் செய்கையே பெண்கள் தமக்குரிய நல்லொழுக்கத்தினின்றும் மாறுவதற்குரிய வழிகாட்டும் கருவியாமன்றோ. எவருக்கும் பிறர் செய்த குற்றந்தானே பிரகாசிக்கும். உலகில் கற்புடைய பெண்களும் கற்பை விரும்பும் பெண்களும் எமதரசனுடையபுத்திரியின் பெயரைக் காலையிலும் மாலையிலும் துதிக்கவேண்டும். அம்மாதரசியின் உட்கருத்தை அறியாத நாம் வாயில் வந்தபடி பேசுவோமே யானால் கற்புடைய பெண்ணை இகழ்ந்த பாவத்துக்காளாகிச் சுடுநரகில் விழுந்து அழிவோம்” என்றாள்.

நளன் “பெண்ணே, நீ சொல்வது மெய்தான். எனக்கென்னதெரியும் முன்பின் அறியாமல் ஏதோ சொல்லிவிட்டேன். இவற்றை எல்லாம் வெளியே சொல்லாதே. நான் சமைக்கப்புகுந்தால் எனக்கு நெருப்புவேண்டியதில்லை. என் கைபட்ட அளவில் தித்திப்பு புளிப்பு உவர்ப்பு துவர்ப்பு கார்ப்பு கைப்பு எனும் அறுசுவையோடு கூடிய உணவாகும். இம்மாத்திரமோ! நீர் வற்றிய பாலைவனமாயினும் நீர் சுரக்கச் செய்வேன். எவ்வளவு தெரிந்தாலென்ன எல்லாவற்றிற்கும் அதிர்ஷ்டம் வேண்டும் எனக்குத் தெரிந்தவைகள் பெரிய அரசர்களுக்குத் தெரிந்திருந்தால் எவ்வளவோ பெருமையடைவார்கள்” என்று சொன்னான்.

தோழி “நீர் சொல்லியவைகளெல்லாம் சாமானியர்க்குத் தெரிந்த விஷயமாகத் தோற்றவில்லை. இவை எமது மன்னரின் மன்னராகிய நளசக்கரவர்த்தி ஒருவருக்குத் தான் தெரியுமே யல்லது வேறொருவருக்கும் தெரியாது ஒருவேளை நீர் அவரிடத்தில் பல நாள் தொண்டு செய்து இவற்றைக் கற்றுக்கொண்டீரோ? அப்படி

யானால் அவரிப்போது எங்கே இருக்கிறார். தமக்குத் தெரிந்திருந்தால் தயவுசெய்து அவ்விடத்தையாவது எனக்குத் தெரிவிக்க வேண்டும்" என்று விநயமாகக் கேட்டாள்.

நளன் "மாதே. உலகத்தில் சாமர்த்தியம் ஒருவரிடத்திலேயே தங்கி இருக்குமென நினையாதே. தனைவிடக் கெட்டிக்காரன் உலகில் இல்லையென நினைத்து இறுமாந்திருப்பவன் மகா மூடன். அவன் அவ்விறுமாப்பால் கற்றோரை இகழ்ந்து அவரிடத்திருந்து தெரிந்து கொள்ளக்கூடியவற்றை இழந்து பட்டுப்போன மரம் துளிர்விடாது மடிவதுபோல் அவன் கற்ற கல்வியும் பெருகாமல் நாளுக்கு நாள் குறுகியழிந்து போமாறு செய்துகொள்கிறான். ஆகையால் எதுவும் நளசக்கரவர்த்திக்குத்தான் தெரியும் என்று நினையாதே. நளச்சக்கரவர்த்தியின் பேர்மாத்திரம் கேட்டிருக்கிறேனேயல்லது அவரை நான் பார்த்ததுமில்லை, இவைகளை அவரிடத்தில் கற்றுக்கொள்ளவுமில்லை, அவர் இருக்கும் இடமும் எனக்குத் தெரியாது" என்றான்.

இவற்றைக் கேட்ட தோழி தமயந்தியை அடைந்து தனக்கும் வாகுகனுக்கும் நடந்த சம்பாஷணையை முற்றுந்தெரிவித்து "அம்மணி, அவர் பேசுவதும் இரண்டாம் சுயம்வரத்தில் கோபங்கொள்ளுவதும் பார்த்தால் நமது சக்கரவர்த்தியாக இருக்கலாமோ எனச்சந்தேகிக்கலாம். உடையும் உருவமும் வெறுக்கத்தக்கனவாக இருக்கின்றன. அவர் தரித்திருக்கும் ஆடை தண்ணீரைக் கண்டுபல தலைமுறையாகியிருக்கும்போலிருக்கிறது. நமது சக்கரவர்த்தியின் அடையாளங்கள் ஒன்றாவது காணப்படவில்லை. அரசர் கெட்டாலும் அரசர்களுடைய கம்பீரமும் அழகும் போகுமோ? அவரைப்பார்த்தால் சரியான சமையல்காரனாகவே ஒரே கறுப்பாக இருக்கிறாரே! அவர் தலைமயிருக்கும் உடம்பின் நிறத்துக்கும் வித்தியாசம் தெரியவில்லையே. திரிலோகத்தரசரும் விரும்பும்படியான திவ்விய காந்தியையுடைய நமது சக்கரவர்த்தியின் நிறம் எவ்வளவுகாலமானாலும் இந்த நிறத்துக்கு வருமோ. ஆனால்

நெருப்பில்லாமல் சமைக்கத் தெரியும் என்றும் சொல்லுகிறார். எதையும் நம்பவும் கூடவில்லை. நம்பாமலிருக்கவும் கூடவில்லை" என்றாள்.

தமயந்தி சற்று ஆலோசித்து "வாகுவனென்னும் பெயரையுடைய இவர்தாம் மகாசக்கரவர்த்தியாக இருக்கவேண்டும். அவரன்றி வேறொருவரும் நெருப்பின்றிச் சமையல் செய்யமாட்டார்கள். ஆனால் உருமாறி இருப்பதற்குக் காரணம் தெரியவில்லை. இன்னும் சோதனைகளால் சந்தேகமின்றி அறிந்து அவரை வரவழைக்கலாம் என்று தீர்மானித்துத் தோழியையழைத்து "தோழி, அவர் நெருப்பில்லாமல் சமைக்கத் தெரியும் என்பதை நாம் பரிசோதித்துத்தான் தெரிந்துகொள்ளவேண்டுமேயல்லது அவர் சொல்லும் வார்த்தையினால் நாம் எதையும் தீர்மானிக்கக் கூடாது. ஆகையால் நான் கொடுக்கும் அரிசி முதலியவற்றை இப்பாத்திரங்களில் எடுத்துக்கொண்டுபோய் அவரை யெப்படியாவது சமைத்துத் தரும்படியாகக் கேட்டு வாங்கிக்கொண்டு அவர் சமைக்கும் விதத்தையும் தெரிந்துவா" என்றாள்.

தோழி அவற்றைக் கைக்கொண்டு வந்து நளனுக்கெதிரில் வைத்து வாடிய முகத்தோடு "ஐய, தமக்குத் தாமறுண்டு, எமதரசி சுமார் ஏழு வருஷகாலமாக அன்னம் என்றால் வேப்பங்காயென நினைத்து வெறுத்து வந்தாள். இன்று தாம் சமைத்த உருசியுள்ள பதார்த்தங்களின் வாசனையால் அன்னத்தின்மேல் விருப்பமுண்டாகி என்னை அழைத்து, இவ்வகை உருசியுள்ள ஆகாரமாக இருந்தால் கொஞ்சம் சாப்பிடலாம்போலிருக்கிறது. உன்னால் கூடுமானால் எப்படியாவது கொஞ்சம் வாங்கிவந்தால் உனக்குப் புண்ணியமுண்டு எனக்கெஞ்சுகிறாள். அவ்வார்த்தைகளைக் கேட்கும்போது என்மனம் குழைகிறது. தமக்கும் சமைப்பதென்றால் பெரிய காரியமல்ல. ஆகையால் இச்சாமான்களைத் தம்மிடத்துக்குக் கொண்டுவந்தேன். தயவுசெய்து என்மன்றாடுதலை அங்கீகரிக்கவேண்டும். ஏழைகளாகிய மாதர்களைக் காப்பது பெரும் புண்ணியமல்லவா" என்று கெஞ்சினாள்.

நளன் பெண்களின் தந்திரம் அறிந்தவனாயினும் ஒருவேளை தமயந்தி தன் கைப்பாகத்தை விரும்பியிருக்கலாமென நினைத்து அப்பொருள்கள் வைக்கப்பட்ட பொற் பாத்திரங்களைக் கேளைக்கச்சொல்லி தனது திருக்கரத்தால் தொட்டவளவில் அப்பாத்திரங்களில் அறுசுவையோடுகூடிய நறுமணமிருந்த நால்வகை உண்டிகள் நிரம்பின.

இதைப் பார்த்துக்கொண்டிருந்த தோழி வியப்படைந்து அவற்றை எடுத்துக்கொண்டு விரைவாக ஓடித் தமயந்தியினிடத்தில் வைத்து "அம்மணி, இதென்ன ஆச்சரியம்! நெருப்பில்லாமலே இப்பாத்திரங்களை அவர் தொட்டவுடனே இவ்வகைப் பதார்த்தங்களாயின. இது ஜாலவித்தையே அல்லாமல் வேறல்ல. அவர் செய்தவற்றையெல்லாம் என் கண்ணாலேயே பார்த்தேன். இது விஷயத்தில் நாம் சந்தேகப்படவேண்டியதில்லை" என்றாள்.

அவள் சொல்லியதைக் கேட்டு மனமுவந்து அப்பதார்த்தங்களின் சுவையும் மணமுங்கண்டு மனமுருகி "என்னையறிந்து இவ்விதியும் வந்ததோ" என மனம்பதைத்துத் தனக்குள் ஒருவாறு பொறுத்துக்கொண்டு தன் குழந்தைகளிருவரையும் அந்நளனிடத்தில் அழைத்துக்கொண்டு போகும்படியாகத் தோழிக்குக் கட்டளையிட அவள் அக்குழந்தைகளை அழைத்துக்கொண்டு நளனிடத்தில் வந்துசேர்ந்தாள். அக்கால்

மக்களைமுன் காணா மனநடுங்கா வெய்துயிராய்
புக்கெடுத்து வீரப் புயத்தணையா—மக்காணீர்
என்மக்கள் போல்கின்றீர் யார்மக்க ளென்றுரைத்தான்
வன்மக் களியானை மன்.

அந்தக் குழந்தைகளைப் பார்த்தவுடன், ஏழரை வருஷ காலம் அவர்களின் முகத்தைக்கூடக் கண்டுகளிக்கக் கொடுத்து வைக்காமல் அயல் நாட்டில் உருமாறிச் சஞ்சரிக்க வேண்டிய வினைசூழ்ந்தமையால், தான் வெகுநாளைக்கு முன்னே விட்டுப்பிரிய மனமில்லாமல் வருந்திச் சோகத்தால் மயங்கி இருந்தபோது தன்னையறியாமற் சென்ற பொருளானது தாயை மடு

படியும் தன்னைத் தேடிக் கொண்டு வந்தாற்போலவும், இனி அடையப்போவதில்லை யென நினைத்திழந்த தனது இரண்டு கண்களும் திடீரென்று தனக்குக் கிடைத்தாற் போலவும், மனமகிழ்ந்து இருபுயங்களும் பூரித்துத் தன்னை அறியாது எழுந்திருந்து ஓடி அவர்கள் இருவரையும் தனது இருகைகளாலுந் தழுவிச் சங்கநிதி பதுமநிதி யென்னும் இரண்டு நிதிகளையும் தனது இரண்டு கரங்களில் கொண்டவன்போல அக்குழந்தைகளிருவரையும் மார்போடணைத்து அவர்களுடைய மிருதுவான உடலானது தன் தேகத்தில் பட்டமாத்திரத்தில் புளகாங்கிதனாகி முகத்தோடு முகம்வைத்து உச்சிமோந்து செந்தாமரை போன்ற அவர்களுடைய கைகளிலும் கண்ணாடிபோன்ற அவர்களுடைய இருகன்னங்களிலும் முத்தமிட்டு அலர்ந்த செந்தாமரை சூரியனைக் காணாது குவிவதுபோல் தன்னைக் காணாததனால் அக்குழந்தைகளின் முகவாட்டத்தையும், துக்கக்குறியையும், களிப்பின்மையையும், தேசொளி குன்றியதையும் கண்டு தன்னை அறியாது தன்கண்களினின்றும் நீர் ஆறாகப்பெருக அவர்களை உண்ண விரும்புபவனைப்போல தன் காதலின் அன்புக்குத் தக்கபடி அவர்களிடத்தில் கொஞ்சி விளையாடத் தகுதியான நிலைமையில் அவன் அப்போது இல்லாமையால் அவர்களுடைய அழகுவாய்ந்த முகத்தையும் தான் விட்டு நீங்கிய காலத்துக்குள் விருத்தியடைந்திருக்கிற சரீரத்தன்மையையும் விடாது பார்த்துப் பார்த்துப் பேசுவதற்கு நா எழாமல் தத்தளித்துப் பின் ஒருவாறு தன்னைத் திடப்படுத்திக் கொண்டு அக்குழந்தைகளைப் பார்த்து "குழந்தைகாள் உங்களைப் பார்த்தால் சாமானியராகத் தோன்றவில்லையே. ஒருவாறு என்குழந்தைகள் போல நீங்கள் காணப்படுவதால் உங்களைக் கண்டவுடன் என் குழந்தைகளின் ஞாபகம் எனக்குண்டாகி அவர்களைத் தழுவுதுபோல உங்களைத் தழுவி முத்தமிட்டேன். உங்களைப் பார்த்தால் அரசவம்சத்தைச்சேர்ந்த குழந்தைகளாகத் தோன்றுகிறீர்கள். உங்களைப் பெற்றசத்தியவானும் சத்தியவதியும் யாவரோ? உங்கள் நாடு இந்நாடல்லபோலிருக்கிறதே. உங்கள் அழகிய முகம் வாட்டமுற்றிருக்கக் காரணம் என்ன? அடுத்ததுகாட்டும் பளிங்குபோல் நெஞ்சம் கடுத்தது

சயமகள் வாழச் சமைந்த தோளன்
கற்பக மென்னக் கரவாக் கொடையன்
சத்திய நெறியே நித்திய மெனவே
பற்றிய புகழே முற்றிய கோல்கொடு
நிடதநா டனைத்து நேர்பட வளித்த
மதிகுல தீப மன்ன மன்னவன்
புவிபல புரக்கும் புரவலர் கோமான்
எம்மையே யீன்ற வெமதுநற் றந்தை
கருதலர்ச் செற்ற கழற்கா லண்ணல்
நளனெனப் பெயரிய நாம வேலோன்
அன்னைத மயந்தி அருந்ததி யனையாள்
தன்னொ டில்லறந் தகைவர நடாத்தி
மன்னுயி ரெல்லாந் தன்னுயி ரெனவே
மாறா வருளொடு வாழு நாளில்
மாற்றா னொருவ னாற்றாப் புலையன்
புட்கர னென்னும் பொருட்பேய் பிடித்த
துர்க்குணத் தோசியெந் தந்தையைக் கூவி
வஞ்சனைச் சூதால் வளமலி நாடொடு
எஞ்சுத லின்றி யெல்லாங் கவர்ந்து
பஞ்சை யாக்கிப் பாத சாரியாக்
காட்டி லோட்டக் கருணையெம் வள்ளல்
வோட்ட மின்றித் தாட்டிக மாகக்
கட்டிய உடையொடு கற்புக் கரசியைக்
கைக்கொடு பொல்லாக் கானக மேவிப்
பாழ்மண் டபத்திற் படுத்துறங் குங்கா
லெம்பெருந் தந்தை இருளிராப் போதி
லொற்றை யாடையி லொருதுண் டறுத்து
மற்றதை யுடுத்துப் பற்றின் றகலத்
துயிலுணர்ந் தன்னையுந் துன்பக் கடலின்
மீளா தழுந்தித் தாளா தழிக்கெம
மன்னவன் றன்னை யொன்னல ரேற்றைக்
காணலா மென்னு மாறு விருப்பா
லிக்கட் டடைந்து தன்னுயிர் சுமந்து

கண்ணீர் பெருக்கிக் காவலனை பெயரோ
நண்ணிய துதியென நவின்றனள் வதிய
ஆதர விலலா வாண்டிக ளானேம்
பாதக ரெமபோற் பாரினி லுண்டோ
ஏதமில் வாசுவ விதுவே
ஆதுலாரானேம் வாலாருமே.

என்று அக்குழந்தைகள் கண்ணூறுங் கண்ணீருமாக நின்றுகொண்டு தேம்பித் தேம்பி அழுதுகொண்டே சொல்லிய அவ்வார்த்தைகளைக் கேட்ட நளன் மனமழிந்து கண்களினின்று அருவி போல நீர்வழிய உயிர் நீங்கிய உடல்போல் சற்று அசைவற்றிருந்து பிறகு இந்திரசேனனென்னும் ஆண்குழந்தையை நோக்கி 'குழந்தாய்! நீ சொல்வது வேடிக்கையாக இருக்கிறது. அவ்வளவு பெரிய அரசனுடைய குழந்தைகளா இப்படி இருக்கிறீர்கள்? உம் தந்தை ஆண்மகன் தானோ? கையாலொன்று மாகாதோ. உன் மூதாதைகளால் சேகரித்து வைக்கப்பட்ட நாட்டைப் பகையரசர் விரும்பாத வரையில் ஆண்டுகொண்டிருந்து பகையரசர் அதைக் கைக்கொள்ள வந்தவுடன் அவர்களை எதிர்க்கும் வகையறியாது நாட்டை விட்டு விட்டுக் காட்டுக்கோடினரோ? அவர் க்ஷத்திரியர் தானே. இதைக் கேட்டால் அயலார் சிரிக்கமாட்டார்களா. பேடியாக இருந்தபோதிலும் க்ஷத்திரிய குலத்திற் பிறந்தவனாயின் யுத்தகளத்தில் புறமுதுகிடாது வெற்றி அல்லது வீரசுவர்க்கம் ஆகிய இரண்டிலொன்றில் கைக்கொள்வானேயன்றி உன் தந்தையைப் போல் நாட்டைப் பகைவர் வசம் ஒப்புவித்து விட்டு அற்பமானதும் என்றும் நீங்கத்தக்கதுமான உயிர் பிழைப்பதை விரும்பிக் காட்டுக்கு ஓடமாட்டான். உயிரைப் பார்க்கிலும் மானம் பெரிதல்லவா! மானம் போனபிறகு உயிரை எதற்காகக் காப்பாற்றுவது. உன்னிடத்தில் கூட க்ஷத்திரிய வீரத்தன்மை காணப்படவில்லையே! ஆனால் நீயும் தகப்பனைப்போலத் தானே இருப்பாய். உனக்குப் புதிதாக வந்துவிடுமா? உங்கள் நாட்டை வேறொரு அரசன் ஆளக்கொடுத்து விட்டு நீங்கள் அயல் நாட்டில் வசிப்பது உனக்குக் குறைவாகத் தோற்றவில்லையா? அதைக்கேட்ட எனக்கே வெட்கமாக இருக்

கிறதே. ஆனால் மெய்வலி இல்லாதவன் வெட்கப்பட்டு என்ன செய்கிறது? உங்கள் கதையை வேறு யாராவது கேட்டால் சொல்லாதே. இது என்னோடு போகட்டும்" என்று அக்குமாரனுடைய மனத்தை ஆராயவும், அவனுடைய இனிய மொழிகளைக் கேட்டானந்திக்கவும், அவர்களை விட்டுப் பிரிய மனம் எழாமையால் அவர்களோடு வார்த்தையாடிக் கொண்டே அவர்களழகைக் கண்டு களிக்கவும், எண்ணங்கொண்டு கடுஞ்சொல் உரைப்பவன் போல் பேசினான்.

இச்சொற்கள் காதிற் பட்டவுடனே இந்திரசேனனாகிய அச்சிறுவன் படபடத்து முகம் இரத்தம்போற் சிவக்கக் கண்களில் நெருப்புப்பொறி பறக்க உதடு துடிக்கக் கோபாவேசங் கொண்டு நளனைப் பார்த்து "அடே, மடையா? என் தந்தையின் வேலை உன் வேலையைப் போன்றதென்று நினைத்தாயோ? அவரைப் போரில் வெல்லுபவருமுண்டோ? இப்புவி மன்னர் யாவரையும் அடக்கி ஏக சக்ராதிபத்தியம் வகித்த சக்கரவர்த்தியன்றோ. அவருடைய தந்தையாகிய வீரசேனமகாராஜன் இந்திரனாலும் அடக்க முடியாத அசுரரைத் தொலைத்து அவ்விந்திரனுக்குச் சுவர்க்கபோகத்தை உறுதிப்படுத்திய மகாவீரனன்றோ. அவருடைய குமாரரும் பகைவர் சிங்கமுமாகிய என் தந்தையைச் செயலற்றவரென்று சொல்லிய உன் நாவைத் துண்டித்தாலென்ன?

எந்தை கழலிணையி லெம்மருங்குங் காணலாங்
கந்து களியுஞ் சடாக்களிற்றின் — வந்து
பணிமுடியிற் பார்காக்கும் பார்வேந்தர் தங்கள்
மணிமுடியிற் றேய்ந்த வடு.

இவ்வுலகத்திலுள்ள கணக்கற்ற அரசர்கள் தாங்கள் செலுத்த வேண்டிய கப்பத்தைச் சுமந்து வந்து என் தந்தைக்கெதிரில் வைத்துத் தமது முடிகள் என் தந்தையின் காலில் படும்படியாக எல்லாப்பக்கங்களிலும் விழுந்து வணங்கும்போது அம்முடிகள் இடைவிடாது படுவதால் அவர் காலில் எப்பக்கங்களிலும் தழும்புகளைக் காணலாம்.

அவர்களெல்லாம் என்னுடைய வலியறியாதவர்களோ! அவர் சத்தியத்தையே கடைப்பிடித்த சற்குணராகையால் அக்கயவனாகிய படகரனுடைய சூதுப்போருக்கிணங்கி க்ஷத்திரிய தர்மத்தைக் கைப்பற்றினாரோ? க்ஷத்திரிய தர்மம் இன்னதென்பதை அறியாத நீ என்னைப்பார்த்து உன் தலைவன் க்ஷத்திரியன்தானா, என்று கேட்கத் துணிந்தாயே! உன் பெருமையெல்லாம் என்ன? 'தான்கற்ற நூலளவே யாகுமாம் நுண்ணறிவு' என்றபடி உன் கல்விக்கும் தொழிலுக்கும் தக்க அறிவு தானே உனக்கு ஏற்படும். மன்னர் பெருமை மடையர் அறிவாரோ? அவரைக்கட்டல்லது சத்தியமேயன்றி வேறொன்றுமன்றோ? ஒருவேளை, புலியைப் போல என் தலையையும், சூதுகாயும் கையுமாக ஊரூராய்த் திரிந்து சத்தியவான்கள் தலையில் கையை வைத்து ஏமாற்றும் நாடுகளை அபகரிக்கச் செல்லுகிறாரோ. இதைவிட காட்டிலிருந்துகொண்டு வழிப்பறிக்கத் துணியலாமே. அவ்வாறு பிறரைச் சடிலத்தை வளர்ப்பதினும் அதை வாட்டுவது மேலானதன்றோ! சான்றோர் எவர் என்னைச் செய்தாலும் அதைத் தாம் மெய்யாகத் துணிவார்களா? அது குரங்கின் செய்கையல்லவா! வாய்மையையே உறுதியாகக் கொண்டவர்களல்லர் பொய்மையைப் போற்றுவதுமுண்டோ? எல்லா அரசர்களோடும் என் தம்மையும் சேர்த்துவிடாதே. அவர் சத்திய வலியால் அவருடைய ஆக்கினைச்சக்கரமானது நாடு முழுதும் சுற்றிச் சுற்றிக் குடிகளுக்கு யாதொரு தீங்கும் அணுகாதபடி காத்துவரவும், முப்பத்திரண்டு தர்மங்களும் முறை பிறழாது நடாத்தி வரவும், தர்மதேவதை நாலு பாதங்களாலும் நடக்கும்படியாகவும் செங்கோல்கொண்டு சிறக்கக்காத்த சீமானன்றோ. அவருடைய வலியையறிய நீ யார்? அரசர்கூட அவரைப்பற்றி இழிவாகச் சொல்ல இன்னும் துணியமாட்டார்களென்றால் நீ அவரை இழிவாகச்சொல்ல எந்த விதத்தில் சிறந்தவன். உன் மடமையின் அளவு இவ்வளவு என்பதை வெளிப்படுத்துகிறாய் போலும். போதும் உன் வாயை மூடு. தகாத காரியத்தில் தலையிட்டால் மரப்பிளப்பிலிட்ட ஆப்பைப் பிடுங்கிய குரங்கு பட்டபாடு படவேண்டும். ஆகையால் உன் வேலையைப் பார்" என்று கடிந்து சொல்லிற்று.

அப்போது நளன் அக்குழந்தையின் வீராவேசத்தைக் கண்டு கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருகத் தன் குலவிளக்காகிய தன் குமாரனைக் காணுந்தோறும் மகிழ்ந்து அக்குமாரன் சொல்லிய கடுமொழிகளால் வருந்தியவன் போல் தலையைச் சாய்த்துக் கொண்டு "குழந்தாய், நீ சொல்லியபடி, உங்கள் பெருமையை அறிய மடையனாகிய என்னாலாகுமோ. அதை அறியாமல் பேசத்துணிந்தது என்பேரில் பிசகுதான். 'பட்டுப் பார் கெட்டுப்பார், பத்தெட்டு விட்டுப் பார்' என்றபடி எல்லாம் பட்டால் தானே தெரிகிறது. அனுபவ அறிவே அழியாதது என்பது இப்போது தான் தெரிந்துகொண்டேன். நான் அறியாமையினாலே பேசிய வார்த்தைகளால் கோபமடையாதே" என்றான்.

மழலை மென்மொழி மக்களைக் காண்டலு மன்ன
னழுது துன்புற லாயவனைத் தோழிகண் டேகித்
தொழுது சொற்றலுங் கொழுநனே மென்பது துணிந்து
முழுவ லன்புடைத்தாயொடு தந்தைபான் மொழிந்தாள்.

இங்கு நடந்தவற்றில் ஒன்றேனும் விடாது பார்த்துக்கொண்டிருந்த தோழி அக்குழந்தைகளை அழைத்துக் கொண்டு தமயந்தியினிடம் வந்து சேர்ந்து குழந்தைகளைக் கண்டவுடன் நளன் தன்னையறியாது விம்மி விம்மி அழுததையும் அவர்களைக் கட்டிக் கொண்டு அன்பு பாராட்டியதையும் அவர்களைக் கோபமூட்டியபோது இந்திரசேனன் சொல்லிய கடுமொழிகளால் புளகாங்கிதனாகிக் கோபங் கொள்ளாது வெட்கியவன் போல் தலைகுனிந்து இனிய சொற்களால் விடையளித்த நயத்தையும் அவளுக்குத் தெரிவித்தாள்.

தமயந்தி "இனி யாதொரு சந்தேகமுமில்லை. இங்கு வாகுகனாக வந்திருப்பவரே நளச்சக்கரவர்த்தி, இப்போதே அவரை அழைத்து வரச் செய்யவேண்டும். ஆனால் நளச்சக்கரவர்த்தி எவரும் அறியாமல் உருமாறி இருப்பவரை, எப்போதும் சுவாதீனம் என்பதில்லாத பெண்பிள்ளையாகிய நான் எவ்வாறு அவரை இங்கு வரவழைப்பேன். நான் அவரைத் தெரிந்து கொண்

டதுபோல் மற்றெவரும் இவ்வரண்மனையில் அவரைத் தெரிந்து கொள்ளவில்லையே. நான் தலைமை கொண்டு அவரை வரவழைப்பேனாயின் என்னை உலகம் பழிக்குமே. அவரும் என்ன நினைப்பாரோ! எவரும் எவ்வளவு நல்லொழுக்கமுடையவரேனும் உலகத்துக்கொத்த காரியங்களை மாத்திரம் செய்யவும் அதனால் உலகத்தைத் திருப்தி செய்யவும் வேண்டும் என் வரையில் நான் ஒழுங்காக இருக்கும்போது நான் ஏன் உலகத்தைத் திருப்தி செய்யவேண்டும்" என்று சொல்வது மதியீனம். உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே என்றபடி உத்தமர்களினிடையில் வசிக்கிற ஒவ்வொருவரும் அவர்களுக்குப் பொருத்தமான காரியத்தையே செய்யவேண்டும். உலகத்தோ டொத்து வாழ் என்பதும் ஒப்புரவொழுகு என்பதும் மேற்சொல்லியவற்றையே புகட்டும் புனித மொழிகள். எத்துணைக் கல்வியுடையாராயினும் உலகத்தில் பழகவேண்டிய விதத்தைக் கற்று அதன்படி நடப்பவர் மிகச் சிலர். அதன்படி நடந்து கொள்ளத் தெரியாதுழன்று பட்ட மரத்தினுங் கேடாகத் தடுக்கெட்டுத் தலைதடுமாறிப் பயனடையாது தமது பெருங்கல்வியையும் பாழ்படுத்தித் திரிபவர் பலர். ஆகையால் உலகத்துக்கொத்த வழிப்படி என் காரியம் நிறைவேற வேண்டிய ஓருபாயத்தைத் தேடவேண்டும். ஆனால் நான் இப்போது என் தந்தை வசத்திலிருக்கிறேன். அவருடைய உத்தரவின் பேரில் அவ்வாகுவனாகிய நள சக்கரவர்த்தியை அழைத்து வரச் செய்தால் அதனால் யாதொரு குற்றமுமில்லை. இதனினுஞ் சிறந்த உபாயமும் வேறொன்றுமில்லை என்று தனக்குள்ளே நிர்மாணித்துக் கொண்டு தன் தாயை அணுகி விஷயத்தைத் தெரிவித்து வாகுவனாகிய நளனை அழைத்து வரத் தந்தையாகிய வீமராஜனிடத்தில் உத்தரவு பெற்றுத் தருமபடியாக வேண்டிக்கொள்ள அவள் தாய் வீமராஜனிடத்தில் சென்று தமயந்தியின் மன்றாடுதலைத் தெரிவிக்க அவ்வரசன் அனுமதி கொடுத்த பிறகு தமயந்தி தன் தோழிகளில் ஒருத்தியை அனுப்பித் தன்னாயகனை வாகுவனை அழைத்து வரக் கட்டளையிட்டாள்.

தோழி நளன் தங்கி இருக்கும் மடைப்பள்ளியை அடைந்து “ஐயா, தமது இனிய மொழிகள் மனத்தை உருக்குகின்றன. ‘ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்’ என்றபடி இவ்வரண்மனைக்குழந்தைகளைக் கண்டவுடன் தமது மக்களைக் கண்டாற் போலக் கண்கலுழ்ந்து கட்டியணைத்த அருமையை நினைக்குந்தோறும் இவ்வித பொதுமனம் உடையவர்களுக்கும் இத்தொழில் தகுமோ! என மனம் புண்ணாகிறது. தமது நூதனமான அடுதொழிலைப் பற்றி வியந்து பேசாதவர் இவ்வரண்மனையில் யாருமில்லை. தம்மையும் தமது சாமர்த்தியத்தையும் பற்றி எமதரசனிடத்தில் தெரிவித்த போது அவர் தம்மைக் காண விருப்பங் கொண்டு இந்த க்ஷணமே தம்மை அரண்மனைக்கு அழைத்து வரும்படி எனக்குக் கட்டளையிட்டார். அவர் சொல்லிய வேகத்தைப் பார்த்தால் நான் இவ்விடத்தில் கொஞ்சம் காலதாமதம் செய்தால் கூடப் பொருக்கமாட்டார் போலிருந்தது. அவருக்குத் தம்மிடத்தில் உண்டாகி இருக்கும் அன்பின் அளவை என்னால் எடுத்துரைக்கமுடியாது. தாம் காலதாமதஞ் செய்யாமல் உடனே புறப்படவேண்டும். தாம் என்னை ஒரு அற்ப பெண்பிள்ளை என்றும் என் வார்த்தையை நம்பி இராஜ சபைக்குப் போகலாமா எனவும் நினைக்கக்கூடாது. எமதரசன் இவ்வரண்மனையில் என்னைத் தவிர வேறொருவரையும் நம்பவேமாட்டார். இது மெய்தானென்பதைத் தம்மிடத்தில் இவ்வரண்மனைக் குழந்தைகளை அழைத்துவரவும் என் அரசிக்குத் தமது கைப்பாகத்தாலான உணவைக் கொண்டுபோகவும் என்னையே அனுப்பியதைக்கொண்டு தாம் நன்றாகத்தெரிந்துகொள்ளலாம். மன்னன் மனமகிழும்போதே அவர் மகிழ்ச்சிக்குத் தாம் பாத்திரராவது தமக்கு மேன்மேலும் புகழையுண்டாக்கும். ஏழைமீது கருணைகூர்ந்து விஜயம் செய்தால் தமக்கும் எனக்கும் பெருமையுண்டு” என்று பணிவோடு அழைத்தாள்.

நளன் அத்தோழியின் இனிய மொழிகளைக் கேட்டு மனமிரங்கி “இம்மாதின் அழைப்பதற்கிணங்கிப் போவதால் யாதொரு குறையுமில்லையெனத் தோற்றுகிறது. ஆலோசிக்கு மிடத்து

இவள் என்னைச் சமைக்கச் செய்ததும் குழந்தைகளைக் கொண்டு வந்து காட்டியதும் என்னை அறிவதற்கே என்பது நன்கு விளங்குகின்றது. இப்போது என்னை வருந்தி யழைப்பதும் என்னை நேரிற் கண்டு தெரிந்துகொள்வதற்கேயாகும். ஆகையால் இவள் மன்றாடுதலுக் கிணங்கிப் போவதே மேலானது" என்று தீர மானித்துக் கொண்டு தன் நூதன உத்தியோகத்தை அன்றோடே விட்டு விட்டுத் தோழியின் பின்னே சென்று தமையந்தியின் அந்தப்புறத்தை யடைந்தான்.

வாகுவனாகிய நளனைக் கண்ட தமையந்தி வியப்படைந்து ஓரழகிய சிம்மாசனத்தை எடுத்து வாகுவனை இடச்செய்து தான் ஒருபுறமாக நின்றுகொண்டு கண்களினின்று முத்துக்கள் போல கண்ணீர் உதிரக் குனிந்த தலையோடு "இவர் தேகம் பத்தரை மாற்றுத் தங்கத்தை உருக்கி வார்த்தாற் போலவும் உதயகிரியினின்று வெளிப்படும் இளஞ்சூரியனைப் போலவும் காந்தியுடையதாயிற்றே. ஆ! ஆ!! அது இவ்வண்ணம் கறுக்கக் காரணம் என்னவோ தெரியவில்லையே" என்று மனக்கிலேசமடைய நின்றாள்.

அப்போது நளன் அங்கிருந்த தோழியைப் பார்த்து "மாதரசி, இப்பெண் யார்? இவள் என்னைக் கண்டு அழக் காரணம் என்ன? எதற்காக என்னை இங்கு அழைத்து வந்தாய்? எனது அரசன் உத்தரவில்லாமல் நான் இங்கு வந்திருக்கிறபடியால் அவர் என்னைத் தேடுவதற்கு முன்னமேயே என்னிருப்பிடத்துக்கு நான் செல்லவேண்டும். ஒருவேளை என் மூலமாக இருதுபான மகாராஜனுக்குத் தெரிவிக்கவேண்டியது யாதாயினும் உளதாயின் அதை உரைத்தால் நான் அதுவே முதற் காரியமாகக் கொண்டு அவ்வரசனிடத்தில் தெரிவித்து அக்காரியம் முடியும்படியான ஏற்பாடு செய்வேன். என் வார்த்தையை அவர் இதுவரையிலும் அசட்டை செய்ததில்லை. அவர் மனதுக்கிசைந்த ஊழியனாகிய நான் அவரை விட்டு இவ்வளவு நாழிகை இங்கே இருந்ததே பிசகு. விஷயத்தைத் தெரிவித்தால் நான் இப்போதே என்னிருப்பிடத்துக்குப் போய்ச்சேருகிறேன்" என்று துரிதப்பட்டான்.

தமயந்தி தலையைக் குனிந்து கொண்டே "நான் இன்றைக்குத் தானா அழுகிறேன். வருஷக்கணக்காக அழுவதே வேலையாக் கொண்ட எனக்கு இன்றைக்கு இது ஒரு புதுமையல்ல. என்னைப் போலப் பெண் பிறந்தால் அழாமல் ஆனந்தப் படுவதுமுண்டோ. மேலும் அநேக நாள் தவமிருந்து நளச்சக்கரவர்த்தியையே கல்யாணம் செய்துகொண்ட எனக்குக் கிடைக்கக் கூடிய பலன் இதனிலும் மேலானதுண்டோ. அவருடைய மனைவியாகிய நான் நடுக்காட்டில் ஒரு பாழ்மண்டபத்தில் அயர்ந்து நித்திரை போகும்போது என் வஸ்திரத்திலும் பாதி அரிந்துகொண்டு என்னையும் அக்கரிய இருள்மூடிய இரவில் தன்னந்தனியே விட்டு அவர் போனதுபோல வேறு எந்த அரசர் அவ்வாறு செய்யத் துணிவார். அது ஒன்றை நினைத்தாலும் நான் அநேக வருஷம் அழவேண்டாமா" என்று வழிந்தோடுகின்ற கண்ணீருடன் சொன்னாள்.

நளன் தான் விட்டுப்போனது முதல் தண்ணீரறியாமையால் அழுக்கடைந்து ஒளிகுன்றிய அழகிய தேகத்தையும், ஓயா அழுகையால் வீங்கிச் சிவந்த கண்களையும் உணவின்மையால் வாடி வதங்கிய உடலையும், அன்று காட்டில் மீதியாக விட்டுப் போன துண்டான கந்தையையும் தன்னைக் காணாது ஏங்கிய முகத்தையும் கண்டு மனமுருகி பெருமூச்செறிந்து நாக்குழறத் தமயந்தியை நோக்கிப் "பெண்கள் நாயகமே! உத்தமப்பெண்கள் தமது கணவனுடைய குற்றத்தை வெளிப்படுத்தி இகழமாட்டார்கள். நளச்சக்கரவர்த்தி உன்னைவிட்டுப்பிரிந்தது அவருடைய விருப்பத்தின்படியல்ல. அப்போது அவர் தம்வசமற்றுக் கலியின் வசத்திலிருந்தமையால் அக்கலி நினைத்தவாறெல்லாம் அவனுக்கு இவரொரு ஆயுதமாகிச் செயலற்றிருந்தமையால் அவ்விதம் நடந்துவிட்டது. அவருக்குப் பழியூட்டுவதில் பயனில்லை. அக்கலி நீங்கியவுடன் அந் நளச்சக்கரவர்த்தி தானே இவ்வரண்மனைக்கு வந்து இச்சிம்மாசனத்தில் வீற்றிருக்கமாட்டாரா? அதற்குள்ளாக இரண்டாம் சுயம்வரம் ஏற்படுத்திய காரணம் என்ன ! இதுதான் தற்காலக் கற்புடைய பெண்களின் கொள்கையோ. பஞ்சு அறி

வோடு பகுத்தறிவும் தம் வசத்திருக்க அக்கினி சாக்ஷியாய் அன்று
கைப்பிடித்தவனை நாயகனென்பதை மறக்கும் கற்புடைய பெண்
கள் செய்யுங் காரியம் நியாயமாகும்போது தன் வசமற்றுக் கலி
வசத்திலிருந்த நிரபராதியாகிய நளசக்கரவர்த்தி செய்த காரியம்
மாத்திரம் அநியாயமாகப் போகுமோ" என்றனன்.

இவ்வார்த்தைகளைக் கேட்ட தமயந்தி அவரே தன் நாயக
னென்ற ஐயமின்றித் தீர்மானித்து மிகுந்த ஆவலோடு ஓடி
வந்து நளனுடைய பாதங்களில் விழுந்து, புவியரசர் தமது
சிரங்களுக்கு அணிகலமாகச் சூடிய அத்திருவடிகளைத் தன் கண்
களில் ஒற்றிக்கொண்டு "என் அரசே! என்னாருயிரே! என்
னருங்கலமே! என் அன்பே! என் ஆனந்தமே! எனக் காவி
தந்தருளிய அருட்கடலே! மன்னாதிமன்னா! மாற்றார் கூற்றே!
நான் தங்களுக்குச் செய்த குற்றம் யாதாயினும் உண்டோ? பேதை
யாகிய நான் தங்களைவிட்டுப் பிரிந்து தனித்திருக்க மனமில்லா
மையாற் பின்பற்றினேனே யன்றித் தங்களுக்கு இன்னும் அதிக
துன்பம் உண்டுபண்ண வேண்டுமென்ற எண்ணம் எனக்குச் சிறி
தேனுமில்லை. இதைத் தாங்கள் அறிந்திருந்தும் அக்காட்டில்
என்னைவிட்டுப் பிரிந்தால் அப்போது அங்கு என்னைக் காப்பவர்
யார்? அவ்வாறு தாங்கள் என்னை இகழ்ந்து வெறுத்த போதிலும்
அவ்விகழ்ச்சியையும் வெறுப்பையும் மனத்திற் கொள்ளாது தங்
களை அக்காட்டில் பலமுறை கூவி அழைத்துப் படாத பாடு
பட்டுக் கடைசியாக இந்நகரடைந்தேன். இங்கு வந்து சேர்ந்த
நாள் முதல் தங்களைக் கண்டுபிடிப்பதற்கு வேண்டிய உபாயங்
களை நாடுங்கால் நம்மிருவருக்கும் மாத்திரம் தெரிந்த அவ்விஷயத்
தை இராஜசபைகளில் உரைக்கச்செய்து இதற்கு விடையளித்த
வரை அறிந்துவரச் செய்தேன். இதுவே தாங்கள் இருந்த இடத்
தை அறிவதற்குத் தக்க உபாயமாயிற்று. இடம் தெரிந்த பிறகு
தங்களை இந்நகருக்கு வரவழைப்பதற்கு நாடிய உபாயமே இரண்
டாம் சுயம்வரம். அதுவும் நாளைக்கே என்று சொல்லியதன் கார
ணம் என்னவெனில், அந்த அரசன் இச்சுயம்வரத்தை உண்மை
யென நினைத்து இங்கு வருவதாக இருந்தால் இவ்வளவு துரித
மாகத் தேரோட்டுபவரை அவ்வரசன் வேண்டும்போது தங்களைத்

தவிர வேறொருவரும் உட்படமாட்டார்கள் என்று நிச்சயமாகத் தீர்மானித்தேன். இச்சுயம்வரச்செய்தியும் தாங்கள் மறைந்திருந்த அயோத்தி அரசனுக்கு மாத்திரம் தெரிவிக்கப்பட்டதே யன்றி வேறொருவரு மறியாரென்பது மற்றொருவரும் இங்கு வராமையினாலேயே நன்கு விளங்குமே! இரண்டாம் சுயம்வரம் என்பது எங்கேயாவது வழக்கமுண்டா. என் உபாயங்களும் நிறைவேறித் தாங்கள் தேரோட்டிக்கொண்டு வந்தபோது அவ்வொலியைக் கேட்டு அத்தேரை ஓட்டிவந்தவர் தாங்களே எனத்தீர்மானித்துப் பின்னும் முற்றிலும் தெரிந்துகொள்வதற்காகவே என் தோழியை அனுப்பித் தாங்கள் செய்யும் விந்தையான தொழிலை அறிந்துவரச் செய்தேன். பின்பு ஒன்றுக்கும் கலங்காத தங்கள் உள்ளத்தையும் அக்காலத்தில் கலங்கிப் பிரிந்து இந்நகருக்கு வந்து இதுவரையில் எனக்கு உயிர்த்தண்ணீர் ஊற்றிக்கொண்டிருக்கும் சந்திரகுல நேத்திரங்களாகிய இரண்டு குழந்தைகளையும் தங்களிடத்திலனுப்பித் தங்கள் மனத்தைப் பரிசோதிக்கச் செய்தேன். இவற்றில் ஒவ்வொன்றிலும் தங்களை என்னுருயிர்க் காதலரெனத் தெளிந்து என் தந்தையின் உத்தரவுபெற்றுத் தங்களை இங்கு வரவழைத்தேன். நேரில் கண்டபிறகு இத்திருவுடலின் நிற வேறுபாட்டால் ஐயமுற்றுக் காட்டில் நடந்தவைகளைச் சொல்லித் தங்களை ஆராய்ந்தேன். அவ்வாராய்ச்சியால் ஐயம் நீங்கிக், காணாமற் போன ஒரு காதற்பெருமணி என்கையிற் கிட்டினாற்போலக் களித்துத் தங்கள் திருவடியைப் பற்றினேன். என்னை அங்கீகரிக்கவேண்டியது தங்கள் கடமை. இன்னும் என்னை வருத்துவது தங்கள் கருணைக்கு ஏற்றதன்று. தங்கள் மனைவியான எனக்கும் தகாத காரியத்தில் புத்தி செல்லுமோ? நான் என் கற்புக்கு மாறான ஒழுக்கத்தை மனத்தினாலும் நினைத்திருப்பேனாயின் என் எண்ணங்கள் நிறைவேறுமோ? தருமதேவதையாகிய தங்களை என்கண்ணால் திரும்பவும் காணும் புண்ணியமும் எனக்குச் சித்திக்குமோ. தங்கள் சத்தியம் என்னை அந்தக்ஷணமே அழித்திராதா. அரசே, நானும் என் குழந்தைகளும் இதுவரையில் இந்நகரில் அனாதைகள் போல் இருந்தது போதும். எங்களைக் காக்கவேண்டும். எமக்கு வேறு கதியில்லை” என்று தன்னாலியன்ற வரையில்

மன்றாடி இரந்தும் நான் பராமுகமாக இருப்பதைக் கண்டு மனம் புழுங்கி "கருணைக் கடலே, கற்பகத் தருவே, இப்பிறப்பில் எப்படியாவது தங்கள் திருமுகத்தை இன்னுமொருமுறை பார்த்தானந்திக்கவேண்டும் என்ற விருப்பமிகுதியால் இது வரையில் என்னாவி இவ்வுடலில் நின்றதே யொழிய எனக்கு இவ்வுலகத்தில் வேறு விருப்பமில்லை. கணவனையே தெய்வமாகக் கருதிய கற்புடைய மகளிர்க்குக் கணவனிலும் மேலானதுண்டோ? தமது அன்பே உருக்கொண்டாற் போன்ற தமது கணவன் இகழ்ந்தாலும் அதை இகழ்ச்சியாகக் கொள்வதுமுண்டோ? கருப்பு கொண்டால் கசப்பதுண்டோ. ஆனதால், தங்களுக்கு என்னை அங்கீகாரம் செய்துகொள்ளத் திருவுளமில்லையாயின், அதுவும் சந்தோஷந்தான். நான் தங்கள் மனத்தின்படி நடக்கக் கடமைப்பட்டவளே யன்றி அம்மனக் கோட்பாடுகளின் காரண காரியங்களை வினவுந்தரமுடையவளோ. நான் நினைத்தபடி மறுபடியும் தங்களைக் காணும் படியான புண்ணியமும் ஒரு சிறிது எனக்கும் மிகுந்திருந்தது. அதன் பலனும் கைகூடிற்று. இனி நான் இறந்தாலும் எனக்குத் துக்கமில்லை. ஆனால் இப்பிறப்பில் நான் தங்களை விட்டுப் பிரிந்தேனாயினும் இனி வரும் பிறவிகளிலாவது தங்களை விட்டுப் பிரியாதவாறு கடுந்தவஞ் செய்து என் எண்ணத்தைப் பூர்த்தி செய்துகொள்வனே யல்லது இதோடு தங்களை மறந்துவிட மாட்டேன். கணவனைக் கசந்த மனைவிக்கு உலகில் உயிர் வாழ்க்கையும் வேண்டுமோ? அரசே, நிரபராதியாகிய என்னைத் தாங்கள் வெறுப்பதில் எனக்குத் துக்கமே இல்லை. இது வரையில் நான் அனுபவித்த சுகம் போதும். ஆனால் என்னைத் தாங்கள் இகழ்ந்தபோதே பெண்களுக்குரிய கற்புக்குப் பெருமை யற்றுப் போவதுடன் சாஸ்திரங்களுக்கும் மதிப்புக் கெட்டுத் தங்கள் உத்தமத் தன்மைக்கும் பழி சேருமே என்பவற்றை மாத்திரம் நான் நினைக்குந்தோறும் என்மனம் வாடுகிறது. கற்புடைய மகளிரைக் கணவன் காவாவிடில் கடவுளும் அவர்களை இகழ்வதுண்டோ. கற்புடைமைக்குப்பலன் இதுதானோ. இதற்குத்தானோ பெண்கள் படைக்கப் பெற்றார்கள். ஏ, என்னைப் பெண்ணாகப் படைத்த பரம்பொருளே, நான் படுந்துன்பம் உன்னு

லறியக்கூடாதோ. இதுவரையிலும் நான் என் நாயகனையே எனக்குக் கடவுள் முதலிய யாவுமென நினைத்துத் தொழுது அவரைச் சிந்திப்பதே திருமந்திரமெனக் கொண்டு என் ஒழுக்கங்குன்றாது நடந்ததற்காக நான் அவரால் வெறுக்கப்பட்டால் இனி என்னைக் காக்கவேண்டிய கடன் உன்னுடையதல்லவா? உலகத்தில் நல்லொழுக்கத்துக்குப் பெருமையழிந்ததுபோல உன் கருணையும் தீனர்களினின்று நீங்கிவிட்டதோ. தீனதயாளு என்ற உனது நாமம் பொய்யாகுமே. என்னைச் சடுதியில் காவாவிடில் நான் உயிர் விடுவது திண்ணம்" என்று கன்னபுரண்டாற்போலக் கண்ணீர் விட்டுப் புலம்பினாள்.

அப்போதும் நளன் உயிரற்ற உடம்பு போல் யாதும் பேச வகையற்றவனாய் வீற்றிருந்தபோது ஆகாயவாணி "இனிப்பேசா திருந்தால் தமயந்தி சபிப்பாள். அவள் சாபத்தை எத்தகைய தேவர்களாலும் நீக்க முடியாது" என்று நளனைக் கூவி "அரசனே, நீ சத்திய சீலன் உன் மனைவியாகிய தமயந்தி கற்புக்கரசி இவள் பெண்ணாகப் பிறந்தவர்களெல்லாம் வணங்கும் படியான பெருமை வாய்ந்த பத்தினிக் கடவுள். இவளை அருந்ததியினும் சிறந்தவளென்றே சொல்லவேண்டும். இப் பெண் மணியை நீ விட்டுப் பிரிந்தது முதல் இது வரையில் இவளுக்கு யாதொரு இடையூறும் உண்டாகாத வாறு நாங்கள் இவளைக் காப்பாற்றி வந்தோம். இவள் இரண்டாஞ் சுயம்வரம் என்று ஏற்படுத்தியது உன்னைக் காணும் பொருட்டே யன்றி வேறல்ல. அவள் பேசுவதெல்லாம் சத்தியமே. அவள் நடந்ததெல்லாம் உத்தமமே. இப்பெரும்பத்தினியைக் குற்றங்கூறுவோர் பாழ்த்த படு நரகிற் பட்டுப்பன்னாள் வருந்துவர், ஆகையால் இவளிடத்தில் எள்ளத்தனை சந்தேகமுங் கொள்ளாமல் உன் சத்தியம் பலிக்கச் செங்கோல் தழைக்க உலகம் களிக்க தருமந் துலங்க இத் தமயந்தியை இப்போதே அங்கீகாரஞ் செய்து கொண்டு மறு படியும் ஏகசக்கிராதிபத்தியம் வகித்து வாழக் கடவாய்" என உரைத்தது.

அதைக்கேட்ட நளன் மனம்பூரித்துக் களிப்பு மீதூரத் தன் னுயிரன்ன நாயகியாகிய தமயந்தியைக் கருணையுடன் பார்த்து

யன் மொழிமெய்களால் அங்கீகாரஞ்செய்து அவளுடைய பலநாள் துயரத்தைப் போக்கி ஆற்றினன். அப்போது தேவதுந்துபி முழங்கிற்று. தேவர்களும் அத்தம்பதிகளின்மீது பூமாரிபொழிந்து நின்று ஆரவாரித்தார்கள்.

தமயந்தி நளனைநோக்கி அரசே, இக்கரிய உருவம் தங்களுக்கு எவ்விதம் உண்டாயிற்று. இதுவும் இக்காலத்துக்குரிய கோலமோ. இதை நீக்கும் வகையுமுண்டோ, நான் தமது திருமேனியின் அழகைக் கண்டு வெகுகாலமாயிற்றே. நான் "அதை மறுபடியும் கண்டு களிக்கும் பொருட்டுக் கருணைசெய்யலாமோ" என்னை, அக்கரிய நிறத்துக்குரிய காரணத்தை உரைத்துக் கார்க்கோடகன் கொடுத்த மற்றொரு அழகிய உடையை உடுத்தவுடன் சூரியனைக் கண்ட இருள் போலும் வள்ளலைக் கண்ட வறுமை போலும், அக்கரிய உருமாறித் திவ்விய காந்தியிகுந்த தேகத்தோடு விளங்கிய தன்னாயகனைக் கண்ட தமயந்தி பலநாள் பலவாறு வருந்தித் தவஞ்செய்த ஒருதவசிக்குத் தானே துதித்த கடவுள் தோற்றினாற்போல, ஆனந்தக் கடலில் மூழ்கி இணையற்றிருந்தாள்.

இவ்வாறு நளன் தன்னுடைய உருவோடு விளங்கியதைக் கண்ட தோழிமார் தமயந்தியின் தாயினிடத்தில் தெரிவிக்க அவள் தன் கணவனாகிய வீமராஜனுடன் தன்னினத்தோரும் மற்றோரும் சூழ்ந்துவரத் தமயந்தியின் அந்தப்புரத்தையடைந்து, கேதுவினால் பிடிக்கப்பட்டு வருந்தி அப்போதுதான் முற்றிலும் வெளிப்பட்டுப் பிரகாசிக்கின்ற பூரணசந்திரனைப் போல விளங்கும் நளசக்கரவர்த்தியைக் கண்டு தமது கலிநீங்கியவராக யாவரும் ஆரவாரித்துக் களிப்பின் எல்லையறியாதவராய் விளங்கினார்.

வீமராஜன், தன்புத்திரியின் புலம்பு நீங்கிய புமானைக்கண்டு இருபுயங்களும் பூரித்து அதிவிரைவிற் சென்று நளனைத் தன் புயங்களாரத் தழுவிக் கண்களில் ஆனந்தபாஷ்பம் பெருக "மன்னா, தாம் இருந்த இடத்தை அறிவதற்கே இவ்வளவு காலமாயிற்று. தருமமூர்த்தியாகிய தமக்கும் இக்கதி நேரிடலாமோ. ஆயினும் சத்தியம் என்றும் தலை காக்கும் என்பது உண்மையாயிற்று.

ரவை யற்ற இன்று தான், சந்திரனில்லாத இரவைப்போல், பொலிவிழந்த என்குலம் பொலிவுற்றது. இதுவும் என் முன்னோர்கள் செய்த புண்ணியப் பலனே யன்றி வேறல்ல. தமயந்தியின் கற்பின் பெருமைக் காவது அவள் மனம் வருந்திக் கண் கலங்காது என்றும் வாழ வேண்டுமென்று நினைத்த என்னெண்ணம் முழுதும் நிறைவேறுதுபோகவே, ஒரு தரித்திரன் பல நாள் வருந்தித் தானடைந்த ஒரு புதையலைத் திடீரென இழந்தது போல், ஏங்கி வருந்தினேன். அத்துக்கத்தை நீக்கி எனக்கு உயிர்ப் பிச்சை கொடுக்கத்தோன்றிய என் தொல்குலத் தெய்வமென விளங்கும் தம்மை நான் எவ்விதமாகக் கொண்டாடுவேன். இச் சிறியநாடும் தம்முடையதே. தாம் எவ்விதம் அதைச் செய்யநினைத் தாலும் எனக்குச் சம்மதமே. தாம் செங்கோல் கொண்டு இந் நாட்டை ஆளப்புகுந்தால் இது நிடத நாடாவதற்கு எத்தனை நாளா கும். மற்றும் நானும் என் செல்வங்களும் தம்முடையனவன்றோ. தாம் சொல்லியபடி நடப்பதில் எனக்கு எக்காலத்தும் பெருமையே யன்றிச் சிறுமையேயில்லை. தமயந்தியைப் பெண்ணாகப் பெற் றதால் தம்மை யடைந்தேன். தமதுறவினால் எவரும் எளிதி லடையமுடியாத பெரும் பேறுற்றேன். இவ்வளவு பெருமையை எனக்குண்டு பண்ணிய தாம் என் அருகிலிருந்து என் செங்கோல் கோணாது காக்கவேண்டியகடனை மறந்து அயல்நாட்டில் வாழ்வது தமது கருணைக்கழகோ. அறம் விளையும்சபூமியாகிய ஐயனே! தம்மைக் கண்ட இன்று தான் என் மனம் ஆறுதலுற்றது. இந் நிலைமையையே தாம் எனக்கு எப்போதும் அளித்தருளவேண் டும்" என்று கல்லும் கரைய நளசக்கரவர்த்தியைப் புகழ்ந்து போற்றினன்.

இவ்வாறு நளன் வெளிப்பட்ட செய்தி எங்கும் பரவிய உடன்

மண்களித்தது மாதிரங் களித்தன மலர்மேற்
பெண்களித்தனள் பேரறங் களித்தன கண்டோர்
கண்களித்தன களித்தன கலைவலோர் நெஞ்சம்
விண்களித்தன களித்தது வீமன்மா நகரம்.

எங்கே பார்த்தாலும் களிப்பின் ஆரவாரமும் தேவர்கோயில்களில் திருவிழா வொலியும் பொலிவு மலிந்த வீதிகளெல்லாம் பொலிவுற்று விளங்குங் காக்ஷியும் மிகுந்து அந்நகரத்தார் நளசக்கரவர்த்தியுந் தமயந்தியும் போலவே பேரானந்தமுற்று எவரும் நளசக்கரவர்த்தி வெளிப்பட்டதையே பேசுவதும் பாடுவதுமாகக் கொண்டாடினபடியால் அப்பேரொலி, தமயந்தியின் இரண்டாஞ் சுயம்வரத்தைப்பற்றி நினைத்த தனக்குள்ளே ஒருவித சமாதானமும் அடையாமல் அயர்ந்து படுத்துப்போய்க் கனவு கண்டுகொண்டிருக்கும் இருதுபர்ண மகாராஜனுடைய காதிற்பட்டவுடனே சற்று நிதானித்து வெளியேவந்து அங்கிருந்த காவலாளர் முதலியோரை வினவியபோது தனக்கு [illegible]டி வந்த வாகுகனே நளசக்கரவர்த்தியென அறிந்து [illegible] நளனைத் தேடிக் கொண்டே பாதசாரியாக அவனிருந்த விடத்தை அடைந்து அந்நளசக்கரவர்த்தியினுடைய திவ்விய வடிவைக் கண்டு பிரமித்துத் தன்னை மெறத்து அவன் பாதங்களில் விழுந்து "அரசர்க்கரசே, நான் தம்மை அறியாமையால் அபராதியானேன். என் முன்னோர்கள் செய்த புண்ணிய பலனே என்னும் தமது பாதங்களைச் சுமக்கும் பாக்கியம் பெற்றது. மகா பாவியாகிய நான் என்னுடைய செல்வச் செருக்கால் தம்மைத் தெரிந்து கொள்ளாமல் மோசம் போனேன். தாம் என்வீட்டில் வசித்த நாட்களிலெல்லாம் இயல்பாக எனக்கு உற்சாகமே மேலிட்டிருந்தது. அந்தணர்கள் தமக்குரிய அறுதொழிலையும் விருப்பத்தோடு செய்துவந்தனர். பசுக்கள் பலித்தன. வானம் மறவாது மாதம் மும்மாரி பெய்தது. அரசிறையும் அனேக மடங்கு அதிகமாக அளக்கப்பட்டது. போக்கியம் எக்காலத்தும் நிறைந்த வண்ணமாகவே இருந்தது. இவற்றிற்குக் காரணம் தமது திருவடிஸ்பரிசம் என்பதை உணராது என் செங்கோலின் வன்மையென நினைத்து இறுமாந்திருந்தேன். ஐயோ! கொடிய பாவியாகிய நான் தம்மைத் தேரோட்டவும் அடுதொழில் புரியவும் அமைத்தேனே. இப்பாவத்தை நான் எவ்விதம் போக்குவேன். நான் பிழைக்கும் வழியுமுண்டோ. நான் தமக்குச் செய்த தீமைகளே என்னை எவரும் இகழும்படியாகச் செய்து விடுமே. தம்மை அறிந்து என் குலதெய்வமாக மதித்து இதனை

நான் ஆராதித்திருப்பேனுயின் என்குலம் விளங்கத்தோன்றி என் புகழும் வேருென்றுமே ஒன்றுக்கும் பற்றுத என்னையும் ஒரு பொருளென மதித்து என்தலைவாயிலில் தானே வந்த தனஇலக்குமியை அறியப் பக்குவமில்லாமையால் பராமுகமாக இருந்து இப்போது கைத்திடங் கொண்டவன்போல வாயில் வந்தபடியெல்லாம் பிதற்றிப் பதறுகின்றேனே. என் செய்கையானது, கையிற் கிடைத்த அமுதத்தைப் பிறவிக் கஜோதிரவனுறைது நழுவ விட்டு; கதறுப்பவனது பேதைமையினும் இழிந்தது. என்னினும் மதியீனர் உலகினுண்டோ. தருமத்தை வைதலைப் பலவற்கொண்ட என்னை இத் தாரணி பொறுக்குமோ. ஆ! நான் அறியாது செய்த குற்றங்களைத் தமது மக்கள் செய்ததாகத் தாம் மன்னித்தருளாவிடின் எனக்கு வேறு பற்றுக்கோடில்லை. என்னைக் காப்பது தமது கடனே. தாமே என்னை வெறுத்தால் என்னை விரும்புவாருமுண்டோ. தாயால் வெறுக்கப்பட்ட மகவு தழைப்பதுண்டோ. எக்குற்றமும் குணமாகக் கொள்ளும் குணக்குன்றே, சிறியோர் பெரும் பிழை செய்தனராயினும் சகித்தருளுங் கருணைக்கடலே அறியாது செய்த பிழை ஆயிரமாயினும் குறியாமற் காக்குங் கோமானே, நான் உமதடிமையே தஞ்சமென அடைந்தேன். தமது கருணைக்குட்பட்ட என்னைப் பொறுப்பதும் ஒறுப்பதும் தம்மைச் சார்ந்ததே" என்று பயந்து நடுநடுங்கிப் பலவாறு புகழ்ந்து வேண்டினன்.

கருணைக்கடலாகிய நளன் அவ்வரசனிடத்தில் பரிவு கூர்ந்து தன் நீண்ட கரங்களால் அவனைத் தழுவிக் கடைக்கண் சாத்தி "இருதுபர்ணா! நீ மகா உத்தமன். நீ அக்காலத்தில் என்னை வறங்கா விடில் என் நிலைமை என்னவாகுமென்று சொல்லவுங் கூடுமோ. நான் யாசகரிலும் தாழ்ந்தவனாக மாறுவேடங்கொண்டு தங்க இடமில்லாமல் தத்தளித்து உன்னை அடைந்தபோது எனக்கு அன்னமுமிட்டுப் பொருளுங் கொடுத்துதவிய அவ்வுபகாரத்துக்கு பிரதியும் உண்டோ. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர். உப்பிட்டவரை உள்ளளவும் நினைக்கவேண்டும். எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மக

றது என்றபடி நீ எனக்குச் செய்த நன்றியை மறந்தால் எனக்கு நல்லகதி கிடைக்குமோ. உன் அன்னத்தை உண்டு சில வருஷம் இவ்வுடலைப் போற்றிய நான் உன்னை வெறுத்தலும் கூடுமோ நான் என் [illegible] கடனைக் கழிப்பதற்கே உனக்குத் தேரோட்டிக் கொண்டும் அத்தொழில் செய்துகொண்டும் இருந்தேன். நீ எனக்குச் செய்தனவெல்லாம் நன்மையேயன்றித் தீமை என்பது ஒரு சிறிதும் இல்லை. நீ வருந்தவேண்டாம். நீ மகிழ்வோடு உன் நகரை அடைந்து அறநெறி பிறழாது செங்கோல் நடாத்தி நீடூழி வாழ்வாயாக" என்று இனிய மொழிகூறி அனுப்ப இருதுபர்ணன் விடை பெற்றுக்கொண்டு தன் நாட்டுக்குப் போய்ச் சேர்ந்தான்.

---

# அரசாட்சிப் படலம்.

---

நளன், வீமன் நகராகிய குண்டினபுரத்தில் தன் அருமைக் குழந்தைகளின் இனிய மொழிகளாலும் தமயந்தியின் காதல் மிகுந்த ஊழியத்தினாலும் இன்புற்று ஒரு மாதம் வரையில் அவ்விடத்திலேயே இருந்து, பிறகு,

> மழை மதக்களி யானையுங் கலினவாம் பரியுஞ்
> செழுமணித் தடந்தேர்களும் வயவருஞ் செறிய
> வெழு கடற்புவி மன்னரு மிறைஞ்சினர் செல்ல
> வழலுயிர்க்கும் வேலரசனு நிடத நாடடைந்தான்.

தன்னிடத்தில் என்றும் அன்பு நீங்காத கணக்கற்ற சிற்றரசர்களான, தான் வெளிப்பட்டதை அறிந்து தன்னைக் கண்டுகொள்ள வந்தவர்களையும், வீமராஜனுடைய நால்வகைச் சேனைகளையும் கூட்டிக்கொண்டு நிடத நாட்டை நோக்கிச் சென்றான்.

நளன் போகும் வழியெல்லாம் வழிப்பறிப்போரும் காட்டுமிருகங்களும் மிகுந்து மழையின்மையால் பயிர் பச்சைகளைக் காண்

டமே அநீதாகி எங்கும் பஞ்சமும் பிணியும் வியாபித்துப் பாவி
யாகிய புட்கரனுடைய மனம்போல் காணப்பட்ட தன் நாட்டைப்
பார்த்தவுடன் மனம்வருந்தி தான் பட்ட கஷ்டங்களை எல்லாம்
மறந்து தன் குடிகளுடைய துன்பத்துக்கிரங்கி அதிவிரைவாக
மாவிந்த நகரடைந்து கோட்டைக்குள் நுழையாது புறத்தேயுள்ள
ஒரு பெருஞ் சோலையில் தன் சேனையைத் தங்கச்செய்து சில
தூதரை அழைத்து "நீவிர் விரைவிற் புட்கரனிடத்திற் சென்று
நான் இங்கு வந்திருப்பதை அறிவித்து அவன் இப்போதே அஸ
திர சஸ்திரயுத்தத்துக்காவது, சூதுப் போருக்காவது என்னோடு
எதிர்த்து வரவேண்டும் என்றும் இல்லாவிடில் ஒரு க்ஷத்திரிய
அரசன் போருக்கழைக்கும்போது வராமல் க்ஷத்திரிய தர்மத்தை
அழிப்பதற்காக அப்புட்கரன் உடனே தண்டிக்கப் படுவானென்
பதையும் தெரிவித்து வரவேண்டும்" என்று அவர்களை அவ
னிடம் அனுப்பினான்.

அத்தூதர்கள் நளனது மனத்தைக்காட்டிலும் வேகமாக ஓடி
அரண்மனையையடைந்து புட்கரனை அணுகி "அரசர்பெருமானே!
வந்தனம் செய்கின்றோம். நாங்கள், இவ்வுலகம் முழுதும்
முன்பு ஒருகுடைக்கீழாண்ட நளச்சக்கரவர்த்தியினுடைய தூதர்
கள். அக்குணசீலர் இப்போது இந்நகர்ப்புறத்தே நால்வகைச்சேனை
யோடும் வந்திருக்கிறார். தாம் சூதுப்போர்முதல் எவ்வகைப்
போருக்காவது உடன்படவேண்டும் என்றும், இல்லாவிடில் க்ஷத்
திரிய தர்மத்துக்கு அழிவுண்டாகுமாகையால் அது அவரால்
பொறுக்க முடியாதென்றும் சமூகத்தில் தெரிவிக்கக் கட்டளை
யிட்டார். அவர் சொல்லியதைப் பார்த்தால் தாம் மிகவும் துரித
மாகவே போருக்கு எழுந்தருளவேண்டுமென்பது அவருடைய கருத்
துப் போலிருக்கிறது. தமது பாத தூளியாகிய எம்மேற் கருணை
கூர்ந்து விடையளித்தால் அதைத் தலைமேற் சுமந்துகொண்டு
போய் அவருக்குத் தெரிவிக்கக் காத்திருக்கின்றோம்" என்றார்கள்.

இதைக்கேட்ட புட்கரன் மதிகுலைந்து மனமழிந்து முன்பு
தான் கைப்பற்றிய பொருளைக் கைவிடக் காலம் நெருங்கிய
தை நினைத்துக் கலங்கித் தன் அமைச்சரை அழைத்து அவர்

களோடு பின் வருமாறு சிந்திக்கலுற்றான். "அமைச்சர்களே! இதுவரையில் நான் கொண்ட ஏகாதிபத்தியம் முடிவுபெறுங் காலம் கிட்டியது. மனிதவாழ்க்கை ஏற்றச் சால்போன்றது; மண்ணில் மனிதவாழ்க்கை ஒரே நிலையில் நில்லாமல் உயர்வதும் தாழ்வது மாகவே இருக்கிறது. நளனிடத்தில் யான் பொறாமை கொண்டே னேயினும் அவன் அதை ஒரு பொருட்டாக நினையாமல் என்னிடத் தில் சகோதரனென்னும் அன்பு குறையாதிருந்தான். இடையில் குடிகெடுத்த கலியினுடைய துர்ப்புத்தியால் நான் நளனது சத் தியவலிமையையும் பெருமையையும் மறந்து அக்கலியின் போதனைக் கிணங்கி என்னை நானே கெடுத்துக்கொண்டேன். எனக்கு ஆபத்து நேரிட்டிருக்கிற இக்காலத்தில் அக்கலியைக் காணேன். அவன் தன் எண்ணம் நிறைவேறுதற்கு என்னைக் கையாளாகக் கொண்டானென்றதை யுணராது பேராசைக் கடலில் வீழ்ந்து மூழ்குமென்னைக் கரையேற்ற வந்த கடவுளென நினைத்துமோசம் போனேன். கலிக்கு நல்லவனென்பதும் கெட்டவனென்பதும் இல்லை. அக்கலி புகுந்த இடமெல்லாம் பாழ்தான் போலிருக்கி றது. அவன் முன்பு, தன்னால் வெறுக்கப்பட்ட நளனை ஆண்டி யாக்கினான். இப்போது அக்கலிக்கு உதவியாக இருந்த என்னை எனக்குள்ளதும் போக்கிப் பரதேசியாக்குவான் போலிருக்கிறது. நளன் நகரப் புறத்தில் வந்திருக்கிறான். கடந்த விஷயங்களை நினைத்து இப்போது வருந்துவதிற் பயனில்லை. ஆனால் கலிமாத்தி ரம் என்னை விட்டு நீங்கினானேயல்லது என்னுடைய சூதாட்டம் என்னையெப்போதும் விட்டு நீங்காது. ஆகையால் அதை இன்னும் ஒருமுறை அந்நளனோடு ஆடிப்பார்க்கிறேன்" என்று சொல்லிக் கொண்டு சொக்கட்டான் பலகையையும் சூதுக்காய்களையும் கைக் கொண்டு தன் அமைச்சர்கள் புகழ நளனிருந்த சோலைக்கு வந்து சேர்ந்தான்.

நளன் புட்கரனைக் கண்டு "அரசனே, நீ இப்போது எவ்வகைப் போருக்குத் தயாராக வந்திருக்கிறாய்?" எனக்கேட்கப் புட்கரன் "நான் சூதுப்போருக்கு வந்திருக்கிறேன். அதில் என்னைத்தோற் கடித்தால் அப்போதே நான் எவ்வகைப் போரிலும் தோற்றவ

னென்பதற்கையமில்லை. அதற்குப் பந்தயமாகத் தமயந்தியைத் தாம் வைத்தால், நான் என்னுடைய கடல்சூழ்ந்த பூமி முழுவதையும் என் ஆருயிரையும் ஈடாக வைப்பேன்" என்றான்.

நளன் அதற்குட்பட்டுக் காய்களைக் கைக்கொண்டு தான் இருதுபர்ணனிடத்திலிருந்து கற்ற அட்சவிருதயம் என்னும் கணக்கு வித்தையின் வலியால் மிகவும் சுலபமாக வெற்றியடைந்து தானிழந்த செல்வமும் விஸ்தாரமான நாடும் கைக்கொண்டு வஞ்சனையாலடையும் பயனுக்குதாரணமாகத் தனக்கு முன்னிற்கும் புட்கரனைப்பார்த்துப் பின்வருமாறு பகரலுற்றான்.

"சகோதரனே! உன் நிலைமையை இப்போது சற்று நிதானித்துப் பார். நீ எல்லாவற்றையும் இழந்து தனி ஆளாக நிற்கிறாயே. உனக்கு இப்போது யார் துணை. முன்னே உன்னுடைய சூதுக் காய்களில் புகுந்து உருண்டுருண்டு புரண்ட கலியை எங்கே விட்டாய். கெட்டவர்கள் ஆபத்துக் காலத்தில் உதவமாட்டார்கள் என்பதை உணர்ந்தாயோ. அவர்களுடைய வெல்லம் போன்ற வார்த்தைகளுக்கிணங்குவது மீளா விபத்தை வருவிக்கும் என்பதை அறிந்தாயா. சீரழிக்கும் செல்வச் செருக்கினின்றும் ஒழிந்தாயா. பொறுமையை அறிந்தாயா. மறத்தை மறந்தாயா. அறத்தை நினைந்தாயா. என்னிடத்திலிருந்து நீ கவர்ந்த அந்நாடும் உன்றவியும இப்போது என்னுடையவை. நான் உன்னை எவ்விதமாகச் செய்வதற்கும் உரியவன். வஞ்சனை, தான் குடிகொண்ட இடத்தையே கொளுத்தும் என்பதை அறியாது அதைக் கைக்கொண்டு பஞ்சையாகிப் பராநோக்கி நிற்கின்றாயா. நான் இந்நகரை விட்டுக் காட்டுக்குப் போகும்போது உனக்குரைத்த உறுதிமொழிகள் உண்மையென இப்போது விளங்குகின்றனவா. நான் அவ்வளவு உனக்குப் புகட்டியும் அவற்றை இகழ்ந்து செல்வப்பேய்பிடித்து எப்போதும் உன்னத பதவியை அடைவதற்குப் போதுமான புண்ணியம் செய்யாத நீ அவ்வுன்னத பதவியை அடைந்தவுடன் தலைகால்தெரியாமல் என்னை விரும்பிப் பின்பற்றுவோரையும் எனக்காகப் பரிதவிப்போரையும் மரண தண்டனைக்கு ஆளாக்கினையே. இப்போது உன்னைப்பற்றி வருந்துபவர் ஒரு

லையுங் காணவில்லையோ. அதனாலே இக்குடிகள் உன்னிடத்தில்
எவ்வளவு பற்றுடையவராயிருக்கின்றன ரென்பதை நீயே தெரிந்
துகொள். குடிகளால் நேசிக்கப்பட்ட அரசனுக்குச் சேனையும்
வேண்டுமோ. அதனுக்குப்பழமொழியுமுண்டே.

மறமனத்தா னல்லாத மாநலத்த வேந்தன்
உறுமனத்த னாகி யொழுகின் —செறுமனத்தார்
பாயிரங் கூறிப் படைதொகுக்கா லென்செய்ப
ஆயிரம் காக்கைக்கோர் கல்.

அவன் செங்கோலுக்குட்படாச் சிலரும் உண்டோ. நீ என் குடி
களை நடத்தின விதத்தையும் அதனாலே நீ அடையும் பயனையும்
பிறராக்கு அறிவித்துப் பொங்குங்கானலையானது தன்னைக்
கைக்கொண்ட கப்பலைப்போல் முழுகும் என்பதை அவர்களுக்குப்
புகட்டி அதற்கு உதாரணமாக உன்னையே காண்பிக்கிறேன்.
சகோதரனே, எப்போதும் அன்பினாலே ஆகுங்காரியம் அதிகாரத்
தாலாகாது; கொடுமையாலாகுங்காரியம் நன்மையாலாகாது. இப்
போது யாரும் உதவிக்குத் துணையின்றி உன் உயிரும் உனக்குச்
சொந்தமில்லாமல் உடுத்த உடையோடு நிற்கின்ற உன்றன் உயிரை
நீக்கினாலும் அல்லது நீ எனக்குச் செய்ததைப்போல் நானும் உன்
னைக் காட்டிக்கொடுத்தாலும் உனக்காகப் பரிந்து பேசுவோரும்
உன்னைப் பின்பற்றுவோரும் யாராயினும் ஒருவருண்டோ. பிறகு
காட்டிலாவது வேறு நாட்டிலாவது உன் உயிரும் மானமும் அழி
யாமல் எப்போதாவது நீ காலங்கழிக்கமுடியுமா. நீ எனக்குச்
செய்ததற்குப் பிரதியாக நானும் அவ்விதமே உனக்குச் செய்தால்
என்னைக் குறை கூறுவாருமுண்டோ. இச்சமயம் நானே உன்னைக்
காவாவிடில் நீ உயிர்பிழைக்கமுடியுமா? நீ செய்த வஞ்சனையும்
உன்னுடைய குரூரத்தன்மையும் யாவருடைய மனத்தையும் புண்
படுத்தி உன்னைக் கொன்றாலும் பாபமில்லையென்று தீர்மானித்து
அக்காரியத்துக்குச் சமயம் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். நான்
அதை நன்றாகத் தெரிந்துகொண்டமையால் உன்னை அவர்களிடத்
தில் காட்டிக்கொடுக்க எனக்கு மனமில்லை. ஆகையால் நீ உன்னாட்

டையடைந்து பொறுமையை ஒழித்துச் செங்கோல்கொண்டு சீர்பெற ஆண்டுவருவாயாக'' என்றுகருணைக்கடலாகிய நளன் புட்கரனுடைய தீமை எல்லாம் மனத்திற்கொள்ளாமல் அவனுக்கு யாதொரு தீங்கும் நேரிடாதபடி தன் சேனையில் ஒருபகுதியை அவனுக்குத்துணையாக விடுத்து ஒரு சிற்றரசனுக்குரிய அரச அங்கத்தோடு அவனை அவனுடைய நாட்டுக்கனுப்பினான்.

புட்கரன் வெட்கித் தலைகுனிந்து தான்வந்த பழைய வழியைப் பார்த்துக்கொண்டே தன் நகருக்கேகினான்.

பின்பு நளன் தன் நகரில் பிரவேசிப்பதற்காகக் கணிதவல்லோரை அழைத்து நல்ல நேரம் பார்க்கச்செய்து அசுபதாரையில் மாவிந்த நகரத்துட் பிரவேசித்தான். அந்நகர மாந்தர் நளன் காட்டுக்குப்போன அந்நாள்முதல் தாயைப்பிரிந்த கன்று போல வாட்டமுற்று நளனைக் காணுங் காலத்தையே எதிர்பார்த்துக்கொண்டு அல்லும் பகலும் அவனையே நினைத்து ஏக்கமுற்றிருந்தமையால் இப்போது நளன் வெளிப்பட்டதையும் பட்டணப் பிரவேச காலத்தையும் அறிந்து குதூகலித்துத் தமமை அறியாது ஆடுவதும் பாடுவதுமாக எங்கணும் ஆனந்தமே மேலிட்டு அந்நகரை ஒப்புயாவில்லாதவாறு அலங்கரித்துத் தமது அரசன் வரவை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். நளன் மேருகிரிபோன்ற தன் தேரிலமர்ந்து நால்வகைச் சேனைகளும் மிகுந்த களிப்போடு தன்னைச் சூழ்ந்துவர அமைச்சர்கள் மலர்ந்த முகத்துடன் தேருக்கு முன்னே செல்ல அரமபையரையும் ஏவல் கொள்ளும் அழகுவாய்ந்த மாதர்கள் பூரண கும்பமேந்தி அன்னம் போல் முன்னே நடக்கக் கலியாகிய இருளை போக்கிக்கொண்டு வரும் சூரியனைப்போலத் தன் நகரில் இராஜவீதியில் பிரவேசித்தான்.

அந்நகரத்தார் அவ்விராஜவீதிகளில் கூடி எள் விழ இடமில்லாமல் நெருங்கித் தமது அருள் வள்ளலாகிய நளனைக் கண்டவுடன் சூரியனைக்கண்ட தாமரைபோல் முகமலர்ந்து "ஜயஜய விஜயீபவ'' என்றும், 'எங்கள் கலியை நீக்கவந்த கருணாகரனே !'

சத்தியம் நிலைத்தது; அசத்தியம் தொலைந்தது. தம்மைக் காணாத நாட்களெல்லாம் கடை நாட்களாயின. தம்மைக்கண்ட இந்நாளே எல்லாம் விண்டு ஏகபோகம் அனுபவிக்கும் நன்னாளாயிற்று. தாம் எழுந்தருளிய இன்றுதான் இந்நாடு எங்களுக்கு நாடாகத்தோற்று கிறது. நாங்கள் எல்லோரும் தமக்கே அடிமைகள். எம்மைக் காக்கும் கடன் இவரோடே எம்மைவிட்டு நீங்கியது. தாமில்லாத ஒவ்வொரு நாளையும் ஒவ்வொரு உகாந்தகாலமாகக் கழித்துப் பிழைத்தோம். எங்களுக்கு இனி நற்காலந்தான்'' என்று தமது ஆனந்தம் ஒருவிதமான சமநிலைமை அடையும்வரையில் நாவாரத் துதித்தார்கள்.

நளன், வெகுநாளைக்குமுன்னே தாய்தந்தையரை விட்டுப் பிரிய மனமில்லாத குழவிகளைப்போல தன்னைப் பின்தொடர்ந்து பின்பு கலியின் மாயையால் ஏமாற்றப்பட்ட தனது அன்புமிகுந்த குடிகளைத் தன் மக்களெனக் கொண்டு மகிழ்ச்சியடைந்து அவர்களுடைய மலர்முகங்கண்டு தானும் மலர்ந்து அகங்களித்து நகைமுகங்கொண்டு அவர்களுடைய துதிகளையும் தூய்மையான வார்த்தைகளையும் செவியாரக்கேட்டுக் கையமர்த்தியும், திருமுடியசைத்தும், புன்னகைகாட்டியும், கருணைமிகுந்த கடைக்கண்ணாற் பார்த்தும் அவர்களிடத்தில் தனக்குள்ள அன்பை வெளிப்படுத்திக் காண்பித்துக்கொண்டு தனது அலங்கரிக்கப்பட்ட அழகுவாய்ந்த அரண்மனைக்குள் தேவதுந்துமி போன்ற வாத்திய ஒலியோடும் வேதியர் ஆசியோடும், ஒரு முகூர்த்தம்வரையில் ஓயாதுகொட்டி ஆரவாரித்த தனது குடிகளின் கரவோசையுடனும் பிரவேசித்தான். அப்போது வேதியர்கள் மகா பாபியாகிய புட்கரன் வீற்றிருந்தமையால் புனிதம் நீங்கிய சிம்மாசனத்திற்குச் சாந்தி முதலியன செய்து மந்திரங்களால் அதைச் சபாமண்டபத்தில் ஸ்தாபித்து அதற்குத் தூபதீபங்காட்டி அதைத் தாமாசனமாக்கி அதன்பேரில் தர்மதேவதையாகிய நளனை வேதஒலியோடு அமரச் செய்து இரத்தினக்களஞ்சியமாகிய கிரீடத்தை அவன் முடியிலமைத்துக் கையிற் செங்கோலைக்கொடுத்தனர். அக்காலத்தில் சிற்றரசரும் மந்திரிமார்களும் நளனைச் சக்கரவர்த்தியென ஒப்

புக்கொள்வதற்குரிய நியமப்படி அவனுக்கு வந்தனம் அளித்து மகிழ்ந்திருந்தார்கள். அன்று முதல் அந்நகரமானது போகபூமி யெனவே விளங்கிற்று.

பின்பு நளன் தூதுவரை அனுப்பித் தமயந்தியை அழைத்துவரக் கட்டளையிட்டான். அத்தூதுவர் குண்டினபுரத்தை அடைந்து தமது சக்கரவர்த்தியின் கட்டளையைத் தெரிவித்தார். வீமராஜன் மிகக்களித்து அத்தூதர்களுக்கு வேண்டிய பொருளுதவி தன் புதல்வியையும் அவள் குழந்தைகளையும் ஆசீர்வதித்து ஏராளமான தனத்தோடும் இரதத்தினோடு சிவிகையில் அவர்களை அமர்த்தி நிடதநாட்டுக்கு நல்லவேளையில் பிரயாணப்படுத்தி அனுப்பினான்.

தமயந்தி அன்று மலர்ந்த செந்தாமரைபோல் முகமலர்ந்து மாவிந்த நகரத்தை அடைந்து தன்னை எதிர்கொண்டு அழைக்க வந்த நால்வகைச் சேனையும் உத்தம மந்திரிகளும் அனேக தோழிகளும் தன்னைச்சூழ்ந்துவர அரண்மனையை நோக்கிச் சென்றாள். தமயந்தியின் வருகையானது பலநாட்களுக்கு முன் அந்நகரை விட்டுப்போன இலக்குமி திரும்பவும் அங்குற்றதை ஒத்திருந்தது. அக்குடிகளும் தமயந்தியைக் கண்ட அளவில் தாயைக் கண்ட கன்றுபோலும், மழையைக்கண்ட பயிர்போலும், மேகத்தைக்கண்ட மயில்போலும், சந்திரனைக்கண்ட ஆம்பல்போலும் களித்துச் செழித்து மலர்முகங்கொண்டனர். தமயந்தி அம்மாந்தர் அன்பின்மிகுதியைக்கண்டு மனமகிழ்ந்து அரண்மனையை அடைந்து சிவிகைவிட்டிழிந்து தன் மக்களோடு ஒருமயிலானது ஒரு சிறந்த கற்பகக் காவைத்தேடிச் செல்வதுபோல் நளனிருக்கும் இடத்தையடைந்து அவன் செந்தாமரை போன்ற பாதங்களை வணங்கி நின்றாள்.

நளன் மனமுவந்து தன் தருமபத்தினியைத் தழுவித் தன் அருமை மக்களை எடுத்தணைத்து உச்சிமோந்து அன்புபாராட்டினான். பின்பு நளசக்கரவர்த்தி

ஆழிசூழ் புவிமுழுவது மாழி யோன்றருட்டி
வாழிநல்லறம் புரிந்தரு மகம்பல வாற்றிச்
சூழிமால்வரை பிடருறு சுமையொழித் தாறப்
பாழியம் புயத்துலகெலாம் பரித்தினி திருந்தான்.

புட்கரனால் கைவிடப்பட்ட முப்பத்திரண்டு தருமங்களையும் உயிர்ப்பித்து அநேக யாகங்களைச் செய்தான். அதனால் தேவர்கள் மகிழ மாதமும்மாரி தவறாமல் பெய்தது. பஞ்சம் ஒழிந்தது. வயல்களெல்லாம் பயிர் நிரம்பி வரப்புயர்ந்து தாமரையும் அல்லியும் களைகளாக மலருப்பட்டு நீர் நிறைந்திருந்தன. நாடு முழுதும் தாமரைத் தடாகங்களும் பொய்கைகளும் சிறந்த சோலைகளும் மிகுந்து இப்போது நாகலோகமாவது தேவலோகமாவது இப் பூவுலகுக்குச் சமமாகுமோ எனத் தாமரைத் தண்டுகள் நாகலோகத்துக்குச் சென்றும் சோலைகளிலுள்ள விருக்ஷங்கள் தேவலோகத்தை அடுத்தும் பார்த்தன. சோலைகளிலெல்லாம் மயில்களும் குயில்களும் ஆடிப்பாடின. குளங்களிலெல்லாம் அன்னப் பறவை குடிகொண்டன. எவ்விடத்திலும் எவ்வகைத் தானியங்களும் பலித்தன, வேதியர்கள் தமக்குரிய தொழில்களை மகிழ்ச்சியோடு செய்துவந்தனர். மற்றவர்களும் தமக்குரிய தருமங்குறையாது நடத்திவந்தனர். அதனால் அந்நாடானது விண்ணுலகென விளங்கிற்று. நளச்சக்கரவர்த்தி தனது ஆக்கினா சக்கரம் உலகத்தை யாளத் தான் செங்கோல்கொண்டு திக்குயானைகளாற் சுமக்கப்பட்ட இக்கடல் சூழ்ந்த பூமி முழுதும் தன் தோள்களிற் சுமந்து அவற்றின் பாரத்தைப் போக்கி அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கு புருஷார்த்தங்களையும் எவரும் எளிதில் அடையுமாறு தன்குடிகளை நல்வழிப்படுத்தித் தான் குடிகளுடைய நிலைமைக்கும் காலவேறுபாட்டுக்கும் தக்கபடி அவர்களிடத்திலிருந்து அரசிறைகொண்டு அதை அவர்களுடைய நன்மையின் பொருட்டே செலவிட்டுத் தமயந்தியுடனும் குழந்தைகளுடனும் சோலைகளிலும் செய்குன்றுகளிலும் விளையாடித் திவ்விய தடாகங்களில் புனலாடித் தேவபோகத்தினும் மே

லான பல இன்பங்களை அனுபவித்துப் பல நாள் நிடதநாட்டை அரசாண்டு வந்தான்.

“கேள் தர்மநந்தனே! சத்தியம் எப்போதும் அழிவுறாது. அசத்தியம் உலகத்தில் கொஞ்சமாவது தலையெடுக்காவிட்டால் அவ்விரண்டின் பெருமை சிறுமைகளும், காலபேதங்களும் பலாபலன்களும் வெளிப்படமாட்டா. ஆகையால் உனது பொறுமையையும் சத்தியத்தையும் உலகத்தில் யாவரும் நன்றாகத்தெரிந்து கொண்டு எவரும் நன்மையைக்கடைப்பிடிப்பதற்காகவே உனக்கு இக்காரியங்கள் சம்பவித்தன. இன்னும் கொஞ்சகாலத்துக்குள் நீயும் நளசக்கரவர்த்தியைப்போல், உனது பகையை ஒழித்து இப்பரதகண்ட முழுதும் ஒற்றைக்குடை நிழற்றச் செங்கோல் அஷ்டதிக்குகளிலும் செல்லப் பூமிதேவியின் பாரத்தைப்போக்கி பூமண்டலேசுவரனாக உனது அருமைத் தம்பிமார்களோடு திரௌபதையோடும் கீர்த்தியும் சத்தியநெறியும் அனேக நாள் வரையில் பூமியில் வேரூன்றும்படி அரசாள்வாய் என்பதற்கையமில்லை. உனக்கு ஒருகுறையும் வாராது. சகல மங்களமுமுண்டாகட்டும். நான் சென்று வருகிறேன். சுபம், சுபம், சுபம்” எனத் திருவாய்மலர்ந்தருளி வியாசமுனிவர் தமக்கிஷ்டமான இடத்துக்குச் சென்றனர்.

வாழி வாழியிம் மாக்கதை கேட்பவர்
வாழி வாழிநம் மன்னவன் றொல்புகழ்
வாழி வாழிநற் றீந்தமிழ் நாவலர்
வாழி வாழிநல் லோரறன் வாழியே.

முற்றிற்று.

---

# பிழை திருத்தம்.

| பக்கம் | பாரா | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| 3 | 3 | 5 | யோசனை (100 மைல்) | யோசனை (8மைல்) |
| 10 | 1 | 1 | செளிநதாறபோல | செளிந்தாற்போல |
| 23 | 1 | 2 | பிககவலலையோ | பிடிக்கவில்லையோ |
| 24 | 2 | 5 | கநதுருவனை | கந்தருவனை |
| 26 | 1 | 15 | பழமொழி | பழிமொழி |
| 27 | 2 | 2 | அசசம் யிர்ப்பு | அசசம் பயிர்ப்பு |
| 42 | 2 | 13 | தெரிவிததாரகள் | தெரிவித்தாள் |
| 46 | 1 | 16 | அவவாறடைநத | அவ்வாறடைந்த |
| 46 | 1 | 24 | கண்டரிவ | கண்டறிவ |
| 48 | 1 | 15 | கொடுக்கப்பட்ட இரண்டு ரூயமை | கொடுககப்பட்ட தூய்மை |
| 51 | 3 | 6 | அரசன் | அரசர்கள |
| 55 | 2 | 1 | வெள்ளைக்குதிரை | பசசைககுதிரை |
| 57 | 1 | 2 | விசையாக | வரிசையாக |
| 75 | 2 | 1 | தாதி | தூதி |
| 77 | 1 | 8 | மனவுறுதி | மனவுறுதியையுடைய |
| ,, | 1 | 15 | பினபு அளிக்கப்பட்ட | பின்பு தேவேந்திரனால் அளிக்கப்பட்ட |
| 94 | 4 | 1 | மயிலிற் | மயலிற் |
| 95 | 2 | 9 | சிதறிவிடும் | சிதறிவீழும் |
| 105 | 2 | 8 | தமையநதினிடததில் | தமயந்தியினிடத்தில் |
| ,, | ,, | | தூதாக | நளனைத் தூதாக |
| 109 | 4 | 2 | கணகளையுடையவளே | அழகியகண்களையுடையவளே |
| 117 | 3 | 8 | ஒலியுளள | ஒளியுள்ள |
| 122 | 1 | 7 | காரியத்தையும்சாதிக்க | காரியத்தையும் சாதித்ததுபோல் இனிசாதிக்க |

## பிழைதிருத்தம் (தொடர்ச்சி.)

| Page | Para. | Line | Error | Correction |
|---|---|---|---|---|
| 132 | 1 | 8 | கொடுத்து | கெடுத்து |
| ,, | | 20 | வஞ்சனையில் | வஞ்சனையால் |
| 132 | 1 | 23 | சொல்லுகிறேன் | செலலுகிறேன். |
| 133 | 1 | 18 | சதிபான | தகாத |
| 133 | 1 | 28 | கெட்டகதாழ்மை | கெட்டு, [illegible]ரமை |
| 136 | 5 | 3 | கடாக்கம | [illegible] |
| 136 | 5 | 9 | கரிய | களியால் |
| 162 | 1 | 26 | நுறையே | குறையே |
| 164 | 1 | 6 | பொயயையை | மெயயயை |
| 171 | 1 | 6 | அப்பொருளினற | அப்பொருளிலாமையால் |
| 175 | 1 | 27 | னினறேனும் | னின்றேனும |
| 200 | 1 | 1 | அவனே எல்லாம | அவ[illegible] எல்லாம் |
| 215 | 1 | 19 | நீராளன் | நீருளன் |
| 221 | 2 | 4 | காவாமொழின | காவாமொழியின் |
| 226 | 2 | 13 | சேர்ந்தேன் | சோநதான |
| 236 | செய | 2 | நீத்ததுணிவனரே | நீத்தறறுணிவனரே |